# குண்டலகேசி

வ. வேணுகோபாலன்



பதிவு]

கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் :: சென்னை

[விலை ரூ. 5/-

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழில் பழைய காலத்தில் இருந்த பல காவியங்கள் மறைந்தன. அவற்றில் ஒன்று குண்டலகேசி. சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்தும் பஞ்ச மகா காவியங்கள் என்று வழங்கும். அவற்றில் வளையாபதி குண்டலகேசி என்னும் இரண்டும் கிடைக்கவில்லை; இனிமேல் கிடைக்கும் என்று நம்புவதற்கும் இல்லை.

குண்டலகேசியைப் பற்றி நாம் தெரிந்துகொண்ட விஷயம் மிகவும் குறைவு. நீலகேசி உரையில், ஓடுகிற ஓட்டத்தில் இதன் கதைச் சுருக்கம் இருக்கிறது. இடையிடையே சில செய்யுட்கள் மேற்கோளாக வருகின்றன. அவற்றைக்கொண்டு குண்டலகேசி ஒருவனை மணந்து, அவன் தன்னைக் கொல்ல எண்ணியபொழுது அவனையே கொன்றவளென்று தெரிகிறது. வாழ்க்கையின் பிற்பகுதியில் அவள் பௌத்த பிக்ஷுணியாக மாறிப் பௌத்த நூல்களில் மிக்க தேர்ச்சி பெற்றுப் பல இடங்களிற் சென்று பிற சமயத்தோரை வாதுக்கழைத்து வந்தவரோடு வாதிட்டாளாம். ஆகவே புத்த மதத்தின் சிறப்பைச் சொல்ல வந்த வாதநூல் குண்டலகேசி என்றே தோன்றுகிறது. யாப்பருங்கல விருத்தியுரையில் குண்டல நீல பிங்கல அஞ்சன கேசிகள் என்று உரையாசிரியர் மூன்று நான்கு கேசிகளை அடுக்குகிறார். அவை யாவும் வாத நூல்களென்றே ஊகிக்கும்படி இருக்கின்றன. நீலகேசி என்னும் ஜைன நூலைக் கொண்டு குண்டலகேசியின் இயல்பை ஆராய்ந்தால் அது ஒரு வாதநூலென்றே முடிவு கட்டத் தோன்றும்.

இந்தப் புத்தகம் பழைய குண்டலகேசியோடு சம்பந்தம் இல்லாதது. பழைய புத்தகம் கிடைக்காதபோது அதன் கருத்தை எப்படிச் சொல்ல முடியும்? தற்கொல்லியை முற்கொன்ற கதைச் சுருக்கத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு கற்பனை செய்து உருவாக்கியது இது.

இதை எழுதியவர் என் நண்பர். பழந்தமிழ் நூல்களை உலகுக்குத் தந்து தமிழை வாழ்வித்த ஸ்ரீமத் மகா மகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்களின் மாணாக்கர். ஐயரவர்களுடைய சீவகசிந்தாமணியின் புதிய பதிப்பு நடந்து வந்தபொழுது உடனிருந்து உழைத்தவர். அதனால் பழங்காவிய கதியை உணரவும், அக்காலத்து நிகழ்ச்சிகளையும் பழக்க வழக்கங்களையும் தெரிந்துகொள்ளவும் இவருக்கு வாய்ப்பு உண்டாயிற்று. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காவியங்களிலே கண்ட செய்திகளை இந்தக் கதைப் பின்னலிலே இடமறிந்து இணைத்திருக்கிறார்.

வருணனைகள் பழங்காவிய கதியைப் பின்பற்றியவை; உணர்ச்சிச் சித்திரமும் கதையும் கற்பனையினால் வளர்ந்தவை; தமிழ் நடை பயிற்சியின் பயன். இத்தனையும் சேர்ந்தது குண்டலகேசி என்ற இந்தக் கதை.

இளைஞரும் ஊக்கம் மிக்கவருமாகிய ஸ்ரீ வேணுகோபாலன் இந்தத் துறையில் அழுந்தியிருக்கிறார். இதில் அவர் சேகேறி இன்னும் பல புத்தகங்களை எழுதவேண்டுமென்பதே என் அவா. வாழ்க!

மயிலாப்பூர்,
8 - 7 - 47.

கி. வா. ஜகந்

# நான் எழுதிய விதம்

நிசப்தமாக இருந்த நள்ளிரவில் முன்னுரை எழுத உட்கார்ந்தேன். என்ன எழுதுவது என்ற யோசனையிலேயே நீண்ட நேரம் ஆகிவிட்டது; எவ்வளவோ விஷயங்களைச் சிந்தனையில் தேக்கிக்கொண்டேன். ஒருவாறு எழுதத் துணிந்து பேனாவையும் கையில் எடுத்தேன்.

"என்ன எழுதப்போகிறாய்?" என்று ஒரு குரல் கம்
ரமாகக் கேட்டது. திடுக்கிட்டு நிமிர்ந்துபார்த்தேன்.
ன் அறையில் வேறு யாரும் இல்லாத நிலையில் இந்தக்
கேள்வி யாரால் கேட்கப்பட்டது என்று சுற்றுமுற்றும் பார்த்தேன்.

தூக்கக் கலக்கமா? - இல்லை. நன்றாகக் கண்களைத் துடைத்துக்கொண்டு பார்த்தேன்.

எனக்கு நேர்முகமாகவே ஒரு நங்கை நின்று கொண்டிருந்தாள்.

"நீ யார்?......" என்றேன் வியப்போடு.

"எனக்கு முன்னுரை எழுதப்போகிறாயா?" என்று அந்தப் பெண்கொடி கேட்டாள்.

சுரிகுழல் தோள்களிலும் கன்னங்களிலும் புரள,
ரு கருவிழிகளிலும் நீர் தேங்கித் துளும்ப, அதரங்கள்
க்க, வசீகரமான கண்டத் தொனியுடன் அந்தப்
மகள் கேட்ட கேள்வி என்னை அதிர்ச்சியடையச்
து.

ன் 'குண்டலகேசி' என்ற கதை எழுதினேன்.
ன்னுரை எழுதப் போகிறேன். நீ......சொல்
ல்லையே! நீ யார்?"

எழுதப் போகிறாய்? சொல். நான்
ன்பு சொல்லுகிறேன்" என்றாள் அந்தப்
ாள்.

எனக்கு வியப்புக்குமேல் வியப்பு உண்டாயிற்று.

" இருபது வரிகள்மட்டுமே கதைக்குறிப்புக் கிடைத்தது. 'குண்டலகேசி' என்ற காவியம் அகப்படவில்லை. சில பாடல்கள் கிடைத்துள்ளன. இவற்றைக்கொண்டு விரிவாக எப்படி எப்படியோ கதையை எழுதிவிட்டேன். இந்த உண்மையை வாசகர்களுக்குத் தெரிவிப்பது என் கடமை. இதைத்தான் எழுதப்போகிறேன்......" என்றேன் நான்.

இப்படி நான் சொல்லி முடித்தவுடன் அந்தப் பெண் கொடியாள் கோபமாக என்னைப் பார்த்துவிட்டுச் சொன்னாள்:

" நீ இப்படிப் பிதற்றிவிடுவாய்; அதை எழுதியும் விடுவாய் என்று தெரிந்துதான் நான் வந்திருக்கிறேன்" என்றாள்.

" நான் என்ன பிதற்றுகிறேன்?"

"கதையை நீயே விரிவாக எழுதிவிட்டதாக இறுமாப்பு அடையாதே! நீயா எழுதினாய்?"

"இருபது வரிகளில் கிடைத்த குறிப்பைக்கொண்டு எவ்வளவோ பக்கங்களாக நான்தான் எழுதினேன். இதில் சந்தேகம் என்ன?"

"பிதற்றாதே! நான்தான் உன் உள்ளத்திலிருந்து கொண்டு எழுதினேன். ஓர் எழுத்துக்கூட நீ எழுதவில்லை. நானே என் கதையை எழுதினால் நம்பமாட்டார்கள் என்றுதான் உன்னைக்கொண்டு எழுதினேன்" என்றாள்.

நான் மயக்கத்தால் தடுமாறினேன்.

"என்ன, நீ எழுதச்செய்தாயா?...நீ யார்?"

" நான்தான் 'குண்டலகேசி' என்ற பாவக்காரி; தற்கொல்லியை முற்கொன்றவள்!......"

" இன்னுமா உயிருடன் இருக்கிறாய்?" என்றேன் ஆச்சரியத்தால்.

"காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையில் எனக்கு ஜீவ ஸமாதி அல்லவா? கதையின் முடிவை மறந்துவிட்

டாயே!......இதிலிருந்தே 'கதை' யார் எழுதியது என்று தெரியவில்லையா?''

''அப்படியானால்......முன்னுரையும் நீயே எழுதி விடு'' என்றேன்.

''முன்னுரை நான் எழுதமாட்டேன்; நீயே எழுது. ஏதாவது பிதற்றலாக எழுதிவிடப் போகிறாயே என்று தான் இந்த நள்ளிரவில் ஓடிவந்தேன்......''

''என்ன எழுதுவது?......அதையாவது சொல்லி விடு!''

''நான் இப்போது வந்து சொன்னதை எழுதிவிடு; நீயாக ஒன்றும் பிதற்றிவிடாதே!......நான் போய் வருகிறேன்; இனி நிற்க மாட்டேன்'' என்று சொன்னாள்.

அப்போது அவள் முகத்தில் எங்கும் காணமுடியாத கவர்ச்சி நிறைந்த புன்னகையைக் கண்டேன். ஏதோ பேச முற்பட்டேன்.

இருண்ட வானிலே தோன்றி மறைந்த கொடி மின்னல்போல் அவள் சட்டென்று மறைந்தாள் நின்ற இடத்திலேயே.

மாயாலோகத்து மங்கையா!

வாசகர்களுக்கு இவ்வளவையும் தெரிவித்துவிட்டேன். முன்னுரை என்ற தலைப்புடன் நான் வேறு என்ன எழுதமுடியும்?

முதல்முதலாக, 'குண்டலகேசி' என்ற இந்தக் கதையைச் சுதேசமித்திரன் வாரப்பதிப்பில் வெளியிட்டு உதவிய சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீமான் ஸி. ஆர். ஸ்ரீநிவாசன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். புரட்சி நிறைந்த இந்நாளில் 'குண்டலகேசி' யைப் புஸ்தக உருவில் வெளியிட்ட கலைமகள் காரியாலயத்தாருக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக. இந்தப் புஸ்தகத்திற்கு மனமுவந்து மதிப்புரை அளித்த கலைமகள் ஆசிரியர் ஸ்ரீமான் கி. வா. ஜகந்நாதையர் அவர்களுக்கு என் நன்றி.

இங்ஙனம்

30-4-47 வ. வேணுகோபாலன்.

# குண்டலகேசி

## 1

### இந்திர விழா

சோழ நாட்டின் பழம் பெரும் தலைநகர் புகார்ப்பட்டினம். 'பூம்புகார்' என்று புலவர் புகழும் பெருமையை உடையது அது. அந்நகரில் சம்பாபதி என்னும் தெய்வம் வாழ்ந்தமையால் அதற்குச் சம்பாபதி என்ற பெயர் உண்டாயிற்று. ககந்தன் என்னும் அரசன் காத்தமையால் காகந்தி என்னும் பெயர் பெற்றது. காவிரியாறு கீழ்த்திசை வழியே ஒழுகி, கடலோடு கலக்கின்றமையால் காவிரிப்பூம் பட்டினம் எனச் சிறப்புற்றது. கடலொலி இடையறாது கேட்கும் கவினுடையது. கடல் வழி மரக்கலம் ஓட்டும் தமிழர்க்குத் தலை சிறந்த துறை முகம். அயல் நாட்டினர் கடல் வழி வந்து தமிழ் நாட்டில் வாணிகம் செய்வதற்குப் பிரதானத் துறை முகம். தமிழ் வேந்தர் மூவருள்ளும் சோழரது பெருமைக்கு இலக்காய்ச் 'சோழர்தம் குலக்கொடி' எனப் புகழப்பெற்ற காவிரியாற்றின் பெருமையால் அந்நகருக்குக் காவிரிப்பூம் பட்டினம் என்ற பெயரே நிலைபெற்றது. தமிழ் நாட்டின் பெருமைக்கும், சிறப்பாகச் சோழ நாட்டின் புகழுக்கும் அறிகுறியாக விளங்குவது. பலவகை மதத்தினரும் சிறப்பாக, ஜைன மதத்தினரும் பௌத்த மதத்தினரும் தங்கள் தங்கள் மதக் கோட்பாடுகளைத் தமிழ்நாட்டில் பரவச்செய்வதற்கு உரிய இடமாக எண்ணி அந்நகரில் வாழ்ந்தனர்.

காவிரிப்பூம் பட்டினத்தின் அகநகர், மருவூர்ப் பாக்கமென்றும், புறநகர், பட்டினப் பாக்கம் என்றும் புகழப் பெறும். மருவூர்ப் பாக்கத்தில் சித்திர மாடங்கள், வாயில் மாடங்கள், மாளிகைகள், கோபுரங்கள், வாயில் காவலராகிய யவனர் வாழும் வீதிகள், அயல் நாட்டிலிருந்து வந்த வணிகர் வாழும் வீதிகள் கைத்திறனுடையோராகிய காருகர் முதலியோர் வாழும் தெருக்கள் முதலியன விளங்கின. இவையன்றி உலகத்துப் பல்வகைப் பெருங்கடைகள் ஒருங்கே தோன்றினாற்போல் பலவிதப் பொருள்கள் விற்கப் பெறும் கடை வீதிகளும் விளங்கின.

பட்டினப்பாக்கத்தில் அரசர் வீதி, அந்தணர் வீதி வணிகர் வீதி, வேளாளர் வீதி முதலியன ஒருபுறமும் மந்திரியர், சேனாதிபதிகள் முதலியோர் வாழும் வீதி ஒரு பக்கமும், கொடித்தேர் வீதியும், பீடிகைத் தெருவும் மற்றோர் புறமும் விளங்கும். ஆயுள்வேதர், காலகணிதர், பலவகைக் கலையினர் வாழும் வீதிகள் ஒரு பகுதியிலும், மணிகள் செய்வோர் சங்கறுப்போர் முதலியோர் வாழும் வீதிகள் வேறு புறமும், சூதர், மாகதர், வேதாளிகர், நாட்டியம் பயிற்றுவோர், நாழிகைக் கணக்கர், நாட்டிய மங்கையர், பொது மகளிர் முதலியோர் வாழும் வீதிகள் மற்றோர் பக்கமும், பூக்கள் விற்போர், வாத்தியம் செய்வோர், ஏவல் மகளிர், காஞ்சுகியர் முதலியோர் வாழும் வீதிகள் வேறு புறமும், யானை, குதிரை, ஒட்டகம் முதலியவை நிற்கும் கொட்டில்கள் ஒருபுறமும், தேர்ப்பாகர், யானைப்பாகர், குதிரை பயிற்றுவோர், தறுகண் வீரர் முதலியோர் வாழும் வீதிகள் ஒருபுறமும் ஆக இவ்வாறு பலவகை வீதிகளும் விளங்கின.

மருவூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப் பாக்கத்திற்கும் இடையே நாளங்காடி என்ற பெருங்கடைத் தெரு ஒன்று விளங்கியது. மன்றம், பொதியில், சதுக்கம், இளமரச் சோலை, செய் குன்றுகள்,

பொய்கைகள் முதலியன அங்கங்கே காணப் பெற்றன. இந்திரன், திருமால், சிவபெருமான், திருமகள், கலை மகள் முதலிய தெய்வங்களின் கோயில்கள் ஒருபுறம் நிலை பெற்றிருந்தன. இந்திரனுல் புத்த தேவனுக்கு நிருமிக்கப்பட்ட இந்திர விகாரமும், ஜினலயமும் ஒரு புறம் விளங்கின. அருகர் பள்ளிகளும், பௌத்தர் பள்ளிகளும் ஒருபுறம் காணப்பெற்றன. நகரின் ஒரு புறத்தில் காவிரியாற்றின் கரையில் உவ வனம் என்ற அழகு மிக்க சோலை மிளிர்ந்தது. அதில் சோம குண்டம், சூரிய குண்டம் என்ற பொய்கை களும் பலவகை மன்றங்களும், புத்ததேவனது பாத பீடிகையும், சம்பாபதியின் கோயிலும் கற்பகக் கோயிலும் அமைந்திருந்தன. நகரின் எல்லைக்கு அப்பால், பல்வகைத் தெய்வங்கள் வாழ்வதும், சுடு காட்டை உடையதுமாகிய சக்கரவாளக் கோட்டம் தோன்றியது. கடலின் துறைமுகத்தில் நூற்றுக் கணக்கான மரக்கலங்களும் தோணிகளும் சோழ வேந்தனது புலிக்கொடியுடன் இயங்கின. சாவகர், சீனர், யவனர், துருக்கர் முதலிய அயல்நாட்டினரின் மரக்கலங்கள் பண்டப் பொதியுடன் போவதும் வருவதுமாக இருந்தன.

அந்நகரின் நடு நாயகமாய், நால்வகைப் படையின் காவலுடன் விளங்கியது சோழவேந்தனது அரண்மனை. பௌத்தர், ஜைனர், காபாலிகர், வைசேடிகர், சாங்கியர், ஆஜீவகர், வைதிகர் முதலிய பலவகை மதத்தினரும் அந்நகரில் வாழ்ந்தனர். பல வகைச் சமயங்களிலும் ஜைன சமயமும் பௌத்த சமயமுமே பெரும்பாலோரால் மேற்கொள்ளப் பட்டன. சிறப்பாகப் பௌத்த சமயமே உயர்நிலை அடைந்திருந்தது. அதனுல் பௌத்த சந்நியாசிகளும், பௌத்த பிக்ஷுணிகளும் அந்நகரில் நன்கு மதிக்கப் பெற்று நிறைந்திருந்தனர். சோழவேந்தனுகிய கிள்ளி வளவனும் பௌத்த மதத்தைப் பின்பற்றினுன்.

காஞ்சி முதலிய நகரங்களில் பௌத்த விகாரங்களைக் கட்டிச் சிறப்பித்தான். பௌத்த மதத்தைத் தமிழ் நாட்டில் பரவச் செய்வதற்குச் சோழவேந்தனே உற்ற காரணமாக விளங்கினன். நாடு முழுவதும் பௌத்த மதத்தைப் பரப்ப எண்ணிய பௌத்த சந்நியாசிகள், நாட்டின் தலைவனான சோழ வேந்தனையே பௌத்த மதத்தினன் ஆக்கி, அவனைக் கொண்டு தம் மதத்தைப் பரவச்செய்தனர். 'மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி' என்பதற்கு ஏற்பத் தமிழ் மக்களில் பெரும்பாலோர் பௌத்தராயினர். காவிரிப் பூம்பட்டினத்திலும், தமிழகத்தில் உள்ள பல நகரங் களிலும், பௌத்தப் பள்ளிகளும், புத்த விகாரங் களும் கட்டப்பெற்றன. அவ்வாறே ஜைன மதமும் சிறப்புற்றிருந்தது. பௌத்த மதப் பெரியோர்கள் புதிது புதிதாகத் தோன்றினர். பௌத்த மதப் பிரசாரமும் மிகுதியாயிற்று. சோழவேந்தனுக்குத் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினம், பௌத்த மதப் பிரசாரகர்களுக்கும் தலை நகராக விளங்கியது.

அந்நகரைப் பரம்பரையாக ஆண்டு வந்த சோழவேந்தர்களுள் தூங்கெயில் எறிந்த தொடித் தோட் செம்பியன் என்னும் சோழவேந்தன் காலம் முதல் ஒவ்வொரு சோழ அரசரும் வருஷந் தோறும் இருபத்தெட்டு நாட்கள் தொடர்ச்சியாக இந்திரனுக்குத் திருவிழாச் செய்வது மரபு. நகர் வளப்பம் அடைவதன் நிமித்தம் இந்திர விழாவை விடாமல் வருஷந்தோறும் செய்து வந்தனர். அம் மரபைப் பின்பற்றிச் சோழவேந்தன் கிள்ளி வளவனும் அவ்வருஷம் இந்திர விழாவை நிகழ்த்த எண்ணினன்.

முறைப்படி இந்திர விழாவைச் சிறப்புற நடத்த எண்ணிய சோழவேந்தன், அதைப் பற்றி எல்லோ ருடனும் ஆலோசிக்க எண்ணி, சமயவாதிகள் பலரையும் வணிகர்கள், பிரபுக்கள், பெரியோர்கள்

எண்பேராயத்தினர், ஐம்பெருங்குழுவினர் முதலியோரையும் அழைத்தான். அரசன் கட்டளைப்படி யாவரும் ஆலோசனை மண்டபத்தில் வந்து அமர்ந்தனர். புலி உருவம் பொறித்த அரசு கட்டிலில் சோழ வேந்தன் வீற்றிருந்தான். மந்திரிமார் புரோகிதர் ஏனாதிகள் முதலியோர் அருகில் இருந்து அரசன் ஏவும் காரியங்களைச் செய்துகொண்டிருந்தனர். ஆலோசனைக்கு வருதற்குரிய அறிஞர்கள் யாவரும் வந்துவிட்டனர். அதன்பின் சோழ வேந்தன் தன் கருத்தை வெளியிடலானான் :

"அறிஞர்களே, நகர் வளமுறும் பொருட்டு நம் முன்னோர்களால் வருஷந்தோறும் இந்திரனுக்குத் திருவிழாச் செய்யப்பெற்று வருகிறது. தொன்று தொட்டு அவர்களால் செய்யப் பெற்றுவந்த இந்திர விழாவை இவ் வருஷம் நாமும் நடத்த வேண்டும். அவ்விதம் செய்யாமல் தவறினால் 'நாடு வளம் குன்றி அழிவடையும் என்றும், இந்நகரைக் காவல் செய்யும் நாளங்காடிப் பூதமும் சதுக்கப் பூதமும் நம்மைத் துன்புறுத்தி இந்நகரை விட்டு நீங்கும் என்றும்' நம் முன்னோர் கூறியுள்ளனர். ஆதலால் இந்திர விழாவை இருபத்தெட்டு நாட்களும் சிறப்புறச் செய்யவேண்டும். அறிஞர்கள் யாவரும் இந்திர விழாக் காலத்தில் முறைப்படி செய்ய வேண்டியவற்றைச் செய்ய வேண்டுகிறேன். பெரியோர்கள் யாவரும் இவ் விழாவில் உவகையுடன் கலந்து, ஊக்கத்துடன் காரியங்களைச் செய்து சிறப்பிக்க வேண்டும். எல்லோருடைய முழு உடம்பாட்டின்படி இவ்விழாச் செய்தியை நகர மக்களும் அறியச் செய்வேன்."

சோழ வேந்தனுடைய வேண்டுகோளை யாவரும் கேட்டனர். அரசன் கருத்தும் தம் கருத்தும் ஒரு தன்மையாக இருந்தமை கண்டு உள்ளம் உவந்தனர். இந்திரவிழாச் செய்வதில் தமக்குள்ள உடம்

பாட்டையும், அதனால் தம் உள்ளத்தில் மிக்கெழுந்த உவகையையும் அரசன் உணரும்படி எழுந்து ஆர்வாரம் செய்தனர். "சோழவேந்தன் வாழ்க, புகார்நகர் வாழ்க. இந்திரன் வாழ்க" என்று வாழ்த்தினர். அரசன் அதைக் கேட்டு மகிழ்ந்து எழுந்து கைகுவித்து எல்லோரையும் அமரும்படி குறிப்பித்தான். யாவரும் தத்தம் இருக்கையில் அமர்ந்தனர். அங்கே அமர்ந்திருந்த எல்லோருக்கும் தக்கவாறு சிறப்புக்கள் செய்து விடைகொடுத்தான். யாவரும் உவகையுடன் மீண்டு சென்றனர்.

"மன்னர் மன்னவ, இப்போது நல்ல முகூர்த்த வேளை. இந்திரவிழா ஆரம்பமாவதை நகரத்தாருக்கு இப்போதே உணர்த்துவது நல்லது" என்றான் சோதிடன்.

சோதிடன் மொழியையே நற்சகுனமாக அரசன் எண்ணினான். உடனே இந்திரனை மனத்தால் நினைத்து, "நாடு மேன்மேலும் வளமுறவேண்டும்" என்று வேண்டி வணங்கினான். பின்னர் மந்திரிமாரை அழைத்து இந்திரவிழா ஆரம்பமாவதை நகரத்தாருக்கு அறிவிக்குமாறு பணித்தான். மந்திரிமார் விரைந்து சென்று முரசறைவானிடம் அரசன் கட்டளையை விளங்கக் கூறினர். அப்போது நாழிகை அறிவிப்போன் வந்து, "வேந்தே, அடிசில் அருந்தும் காலம் அணுகிவிட்டது" என்று கூறிச் சென்றான். மந்திரிமார், புரோகிதர், சோதிடர், ஏனைதிகள் முதலியவருக்குச் சொல்லுவனவற்றை மொழிந்தபின் அரசன் உணவருந்தச் சென்றான். மந்திரிமார் முதலியோர் அரசன் ஏவிய காரியங்களைச் செய்வதற்குத் தத்தம் இடங்களை அடைந்தனர்.

சோழ வேந்தனுடைய வெற்றி முரசம் இருக்கும் வச்சிரக் கோட்டத்தை அடைந்தான் முரசறைபவன். அடைந்தவுடன் அங்குள்ள

முரசத்தை வணங்கி எடுத்து, அலங்காரம் செய்த யானையின் மீது ஏற்றினன். முரசத்தை முன்னர் வைத்துத் தானும் ஏறிக்கொண்டு யானையைச் செலுத்தி முரசைக் குறுந்தடியால் கொட்டி அரசன் கட்டளையைக் கூறலானன் :

"காவிரி வளத்துடன் இந்நகர் வாழ்க. சோழ வேந்தன் வாழ்க. சோழ நாடு பகை, பிணி, மூப்பின்றிப் பொலிக. புலிக்கொடி வாழ்க. மழை பொழிக. செங்கோல் சிறக்க. இன்று முதல் இருபத் தெட்டு நாட்கள் இந்திர விழா நடத்தப்பெறும். இவ்விழாக் காலங்களில் தேவர் யாவரும் இந் நகரில் வந்து தங்குவர் என்பது பெரியோர் துணிபு. ஆதலால் எல்லா இடங்களையும் அலங்காரம் செய்யுங்கள். வீதிதோறும் பூரண கும்பங்கள், பொற் பாலிகைகள், பாவை விளக்குகள் முதலியன வைத்திடுங்கள். வாழை, கமுகு, மாதவிப் பூங்கொடி முதலியன கட்டுங்கள். வீதியிடமெல்லாம் பழமணல் மாற்றிப் புது மணல் பரப்புங்கள். கூடங்களிலும் மாடங்களிலும் கோபுரங்களிலும் கொடிகளை நிலை நாட்டுங்கள். ஆண் பெண் என்ற இருபாலாரும் பட்டாடை அணிந்து பாலன்னம் உண்டு களிப் படையுங்கள். முக்கண்ணன் முதல் சதுக்கத் தெய்வம் இறுதியாக உள்ள எல்லாத் தெய்வங் களுக்கும் சிறப்புச் செய்யுங்கள். ஆடவரும் மகளிரும் அகமகிழ்ச்சியுடன் நற்காரியங்களைச் செய்யுங்கள். நல்ல நீதிகளைக் கேளுங்கள். நல்வார்த்தைகளைப் பேசுங்கள். நல்ல நினைவுடன் இருங்கள். பழைய பகைகளை விட்டு நட்புடன் கூடிக் குலாவுங்கள். வேதியர் வேதம் ஓதுக. மங்கள வாத்தியங்கள் எங்கும் முழங்குக. அறிஞர்கள் அறவுரைகளைக் கூறுக. சமயவாதிகள் சமயவாதம் செய்க. மாலையில் கடற் காட்சிகளையும், சோலைக் காட்சிகளையும், வீதிக் காட்சிகளையும் கண்டு களிக்க. பொது இடங்

களில் யாவரும் கூடி மகிழ்க. இசைவாணர்கள் இசைப்பயிற்சி செய்வாராக. நாட்டியம் வல்லோர் அரங்கில் நடித்துக் களியூட்டுவாராக. அரசனுடைய மெய்காப்பாளர் அல்லாதார் காரணமின்றி ஆயுதம் கைக்கொள்ளாதொழிக. பசியும் பிணியும் பகையும் நீங்குக. மழையும் செல்வமும் சுரந்திடுக. இவை சோழ வேந்தனுடைய வேண்டுகோள்.''

முரசறைபவன், இவ்வாறு வீதிதோறும் சென்று நகரிடமெங்கும் அரசன் கட்டளையை முரசறைந்து மொழிந்தான்.

இந்திர விழா ஆரம்பமாயிற்று. நகரை எங்கும் அலங்கரித்தனர். நகரின் அகத்தும் புறத்தும் அகலமான பந்தர்களை அமைத்தனர். தத்தம் வாயில்கள் தோறும் தோரணங்கள் கட்டி விசித்திர மான அலங்காரங்கள் செய்தனர். சோதிடன் கூறிய நன் முகூர்த்தத்தில் அரண்மனையிலிருந்து அரசன் புறப்பட்டான். அவனுடன் மங்கலப் பொருள்களை ஏந்திக்கொண்டு ஐம்பெருங் குழு வினரும், எண்பேராயத்தாரும், உரிமைச் சுற்றத் தாரும், மற்ற ஆடவரும், மகளிரும் உடன் சென்றனர். தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை என்ற நாற்படைகளும் அணி வகுத்து அரசனைச் சூழ்ந்து சென்றன. சமயவாதிகள் முதலிய அறிஞர்கள், வயிரத்தால் அலங்கரித்த பட்டத்து யானையின்மேல் இந்திரனது பிரதிமையை ஏற்றிக்கொண்டு முன் சென்றனர். உள்ளக் களிப்பால் மிக்கெழுந்த ஆரவாரத்துடன் கூட்டம் கூட்டமாய்ச் சென்றனர் மக்கள் யாவரும். இந்திரன் பிரதிமையை எடுத்துச் சென்ற அறிஞர்கள் பலவகை வாழ்த்துக்களைக் கூறிக்கொண்டு காவிரிச் சங்கமத் துறையை அடைந்தனர். பின்னர் அரசன் பரிவாரத்துடன் அங்கே வந்து சேர்ந்தான். யாவரும் காவிரிச் சங்கமத்தில் மங்கள ஸ்நானம் செய்தனர்.

அதன்பின் புதிய ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டனர். இந்திர தேவனுக்குப் பொற் குடத்தில் நீரை ஏந்தித் திருமஞ்சனம் செய்தனர். பூக்களைத் தூவி அலங்கரித்தனர். நாடு வளமுறும்படி வேண்டி வணங்கினர். பின்னர் அவ்விடத்திலிருந்து இந்திரனை யானை மீது ஏற்றி அவன் கோயிலில் கொணர்ந்து அமர்வித்தனர். "சோழ வேந்தன் நீடூழி வாழ்க!" என்று மக்கள் வாழ்த்தினர். திருமால், சிவன், புத்தன், அருகன், பிரமன் முதலியவருடைய கோயில்களுக்குச் சென்று வணங்கினர். அரசன் நகர்க் காட்சியைக் கண்டு களித்தபடி பரிவாரத்துடன் அரண்மனையை அடைந்தான்.

பிறநாடுகளிலிருந்து வந்த ஆடவரும் மகளிரும் வணிகர்களும் இந்திர விழாவில் கலந்துகொண்டனர். இவ்விழாவைக் காண்பதற்குப் புதிதாகப் பலர் வந்து கொண்டிருந்தனர். நகர மக்கள் அளவில்லாத உவகையுடன் மனம் ஒன்றிக் களித்திருந்தனர். மகர தோரணங்களால் அலங்காரம் செய்த வீதிதோறும் மன்றங்கள் தோறும் பொது இடங்கள் தோறும் கூட்டம் கூட்டமாய் நின்று காட்சிகளைக் கண்டு களித்தனர். காவிரி கடலுடன் கலக்கும் காட்சி, தெருக்காட்சிகள். சோலைக் காட்சிகள், அரண்மனைக் காட்சிகள், அங்கங்கே நடக்கும் விநோத விளையாட்டுக் களின் காட்சிகள் முதலியவற்றைக் கண்டு இளைப் பின்றித் திரிந்தனர். அந்நகரில் உள்ள தெய்வத் தன்மை பொருந்திய பொய்கைகள், பலிபீடங்கள், தேவாலயங்கள் முதலியவற்றைக் கண்டு உலாவினர். கோயில்களிலும் மன்றங்களிலும் நாற்சந்திகளிலும் மாளிகைகளிலும் பலவகை வாத்தியங்களும் இடையறாது முழங்கின. அந்தணர்கள் அங்கங்கே வேதம் முதலியவற்றை ஓதினர். சமயவாதிகள் சமய வாதம் புரிந்தனர். அருகர் பள்ளியிலும் பௌத்தர் பள்ளியிலும் அறவுரை நிகழ்த்தினர்.

தவப்பள்ளிகளில் மாதவர் ஓமம் வளர்த்து அக்கினி காரியங்களைச் செய்தனர். இசையறி மண்டபங்களில் இசைவாணர் பாடினர். வேய்ங்குழல், வீணை, மத்தளம், முரசம், சங்கம் முதலிய வாத்தியங்கள் முழங்கின. நாட்டியம் வல்ல ஆடவரும் மகளிரும் நாட்டியம் பயின்றனர். பார்த்தவர் அதிசயிக்கும்படி அலங்காரம் செய்துகொண்டு ஆடவரும் மகளிரும் திரிந்தனர். தேர்கள், யானைகள், குதிரைகள், சித்திர வண்டிகள் முதலியன எள் விழற்கும் இடமில்லாமல் நகரெங்கும் இயங்கிக்கொண்டிருந்தன. வீதிதோறும் பலவகைப் பழங்கள், வெற்றிலை பாக்குகள், வாசனைப் பொருள் முதலியவற்றை அருகில் வைத்துக்கொண்டு வந்தோர்க்கு அளவின்றிக் கொடுத்தனர். அமுதை ஒத்த அறுசுவை அடிசில்களையும் நெய்யாலாக்கிய சிற்றுண்டிகளையும் எவர் எப்போது விரும்பினாலும் உடனே அளித்துக்கொண்டிருந்தனர்.

நாலுபுறத்தும் உள்ள வீதிகள்தோறும் வணிகர்கள் பெரும் பொருள்களைக் குறைந்த விலைக்கு மகிழ்ச்சியோடு கொடுத்துக்கொண்டிருந்தனர். வீதியிடமெல்லாம் முத்துக்களும் மலர்களும் குங்குமக் களியும் சிதறிக் கிடந்தன. அந்தணர் வீட்டு வாயில்களில் சமிதைகள் சிதறிக் கிடந்தன. வாசம் விற்போர் வீட்டு வாயில்களில் பஞ்ச வாசம் பரவிக் கிடந்தன. பெருஞ்செல்வர் வாழும் வீதிகளில் செம்பொற் கிண்கிணிகளும், முத்துமாலைகளும், மலர் மாலைகளும் பலவகையாகச் சிதறிக் கிடந்தன. மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் நிறைந்து பரவிய வீதிகளைப் பெற்று, வண்டும் தும்பியும் குயிலும் பாடும் பலவகைச் சோலைகளையும் கொண்டு அலங்கரிக்கப் பெற்ற அந்நகர், இந்திரன், தன் உரிமையோடும் நந்தவனத்தோடும் வந்து தங்கினாற் போன்று அழகுபெற்று விளங்கியது. சோழ வேந்தனுடைய தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினம் இந்திரவிழாச்

சிறப்பால், 'இந்திரன் வாழும் பொன்னகர் இது தானோ!' என்று கூறும்படி விளங்கித் தோன்றியது. சாவகர், சீனர், யவனர், துருக்கர், சிங்களவர், சிந்து தேசத்தார் முதலிய வணிகர் பலரும் இந்திர விழாவின் சிறப்பைக் கண்டு தமிழரின் நாகரிக உயர்வையும் தமிழகத்தின் பெருமையையும் எண்ணி வியப்புற்றனர். சோழ வேந்தனுடைய பேராண்மையையும் அந்நகரின் செல்வ மிகுதியையும் நன்னெறியையும் எண்ணி எண்ணி அதிசயம் அடைந்தனர்.

இந்திர விழாத் தொடங்கப் பெற்றுச் சில நாட்கள் கடந்தன. விழாத் தொடங்கப் பெற்ற நாளிலிருந்து ஒவ்வொரு நாளும் அதனைக் கொண்டாடுவதில் நகரமக்களுக்கு மிக்க ஊக்கமும் உற்சாகமும் அதிகமாகிக்கொண்டிருந்தன.

## 2

## மாலையில் மலர்ந்த நோய்

இந்திரவிழாக் கொண்டாட்டத்தின் இடையே ஒரு நாள் அந்திப்பொழுதின் காட்சி எழுதவொண்ணு ஓவியம் என விளங்கியது. வானம் செக்கச் செவேலெனத் தோன்றியது. செக்கர் வானின் செந்நிற ஒளியால், காவிரிப்பூம்பட்டினம் பொன்னலியன்ற நகர் எனப் பொலிந்தது. தீப்பிழம்பாய் விளங்கிய சூரியனைக் கண்டு அஞ்சி இருள் பரிவாமல் ஒளித்திருந்தது. அப்போது புதிய பொலிவுடன் தோற்றிய நகரின் காட்சியையும், கடற்காட்சியையும், காவிரிக் காட்சியையும், சோலை கோயில் முதலியவற்றின் காட்சியையும் கண்டு ஆடவரும் மகளிரும் களித்திருந்தனர்.

அரசர் வீதி தொடங்கி அடிமைகள் வாழும் வீதி இறுதியாக எல்லா வீதிகளிலும் எள்விழற்கும் இடமில்லாமல் மக்கள் இயங்கிக்கொண்டிருந்தனர். பெருஞ் செல்வர்களாகிய வணிகர்கள், தம் பெருமைக்கு ஏற்ப, குதிரை, தேர், சிவிகை, வண்டி முதலியவற்றில் ஏறிக்கொண்டு நகர்க் காட்சிகளைக் காண வெளிக் கிளம்பினர். அப்போது அவ் வீதியின் நடுவில் உள்ள மிக உயர்ந்த மாளிகை ஒன்றின் வாயிலில் முத்துச் சிவிகை ஒன்று வைக்கப் பெற்றிருந்தது. மெல்லிய பட்டுத்துணியால் அது மூடப் பெற்றிருந்தது. பலவகைச் சித்திர வேலைப்பாடுகள் அமைந்த அச்சிவிகை, பார்ப்பவர் கண்களைக் கவர்ந்தது. சிவிகையின் ஒரு புறத்தில் அதைத் தூக்கிச் செல்லும் மல்லர்களும், காவல் வீரர்களாகிய யவனர்களும் நின்றுகொண்டிருந்தனர். வீதியில் செல்பவர் அந்தச் சிவிகையைப் பார்த்த வண்ணம் போய்க்கொண்டிருந்தனர். இந்நிலையில், அம்மாளிகையின் ஒரு புறத்திலிருந்து இளமங்கையர் இருவர் விரைவாக வெளிவந்து சிவிகையின் பக்கம் சென்றனர். முதலில் வந்த நங்கை விரைவாகச் சிவிகையின் திரையை அகற்றினாள். அந்தச் செய்கையால், பின்னே நின்ற இளநங்கைக்கு, அவள் தோழி என்பது தெரிந்தது. ஆடையாபரணங்களாலும், அழகு தோற்றம் முதலியவற்றாலும், திரையை அகற்றியவள் அவள் தோழி என்பதை நன்கு அறியலாம். பின்னே நின்ற இளம்பெண் குனிந்த தலையுடன் கடைக்கண்களால் வீதியை நோக்கினாள். அப்போது அவள் கண்களில் புதிய ஒளி உண்டாயிற்று. உடனே தன் கூரிய விழிகளால் மீண்டும் அவ்விடத்தை நோக்கினாள். அப்போது அவள் தலை அவளை அறியாமலே நிமிர்ந்தது. சிவிகையை விட்டுச் சிறிது பின்னே நகர்ந்து நின்று நோக்கினாள். அந்த இளமங்கையின் கரிய விழிகளுக்குத் தப்பிப்

போக அவ்விளைஞனால் முடியவில்லை. வீதிவழியே செல்லும் அந்த இளைஞன் சிறிது மயங்கி நின்றான். அவ்விருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கி, மதம் கொண்ட, களிறும் பிடியும் மயங்கி, பாகர் களுக்கு அடங்காமல் ஒன்றை ஒன்று உற்று நோக்கி, இன்புற்றாற்போல இன்புற்றனர். ஒருவருள்ளத்தில் ஒருவர் மாறிப் புகுந்து நின்றனர்.

இளைஞனுக்கு இருபத்திரண்டு வயது இருக்கும். பெருஞ் செல்வம் படைத்த ஒரு வணிகனின் புதல்வன் அவன்; தகுந்த உயரமும் உயரத்திற்கு ஏற்ற பருமனும் உடையவன். இந்திரநீலமொத்து இருண்ட தலைமயிருடையவன்; தலையில் பொற் கயிறு ஒன்று கட்டியிருந்தான். அகன்ற நெற்றி; பரந்த முகம்; விரிந்த மார்பு; உருண்டு திரண்டு உயர்ந்த தோள்கள்; கூரிய மூக்கு; கருடனின் பார்வை போன்ற நோக்கு. அவன் முழங்கால்வரை நீண்ட காற் சட்டை ஒன்றை அணிந்திருந்தான். இடையில் செருகிய வாள் 'பள பள'வென்று ஒளி வீசியது.

அவனுடைய முகப் பொலிவும், ஆழ்ந்த பார்வை யும் பார்ப்பவரைக் கவரும் தன்மையவாய் அமைந்திருந்தன. இத்தகைய வடிவத்துடன், உயர்ந்த சாதிக் குதிரை யொன்றின் மேல் அமர்ந் திருந்த அவனை, ஓர் அரசிளங்குமரனுக்கு ஒப்பாகக் கூறுவதில் தவறு என்ன?

இளமங்கைக்குப் பதினேழு வயது இருக்கும். செல்வம் மிக்க ஒரு வணிகன் புதல்வி அவள். தன் அங்க லாவண்யத்தையும், பொன்னின் சோதி யையும் பூவின் நறுமணத்தையும் கொண்ட மேனியின் மென்மையையும், கண்களின் மருட்சியையும், பார்ப் பவரைப் பரிகசிக்கும் புன்னகையையும் நடையின் அழகையும் அளவு செய்து உவமை காட்ட இயலாத கட்டழகி அவள். ஆபரணங்களுக்கு ஒளியையும்

அழகையும் கொடுப்பது அவள் மேனியழகு என்றால் வேறு கூறவும் வேண்டுமா? அழகுக்கு அழகாக விளங்கிய அந்த இளமங்கையின் நோக்கததால், இளைஞன் மயங்கித் தயங்கியது ஓர் ஆச்சரியம் அல்ல. குலம், அழகு, செல்வம், இளமை முதலியவற்றால் ஒத்த பெருமையையும் ஒப்புமையையும் பெற்ற இருவரும் எதிர்பாராதபடி சந்தித்து மனம் ஒன்றியது தான் ஆச்சரியம். இதை ஊழ்வினை என்று கூறுவதல்லாமல் வேறு என்னவென்று சொல்லுவது?

இளைஞனுடைய கம்பீரமான பார்வையால், உள்ளம் நெகிழ்ந்த நங்கை, நாணித் தலை குனிந்து நிலத்தை நோக்கினாள். இளைஞனின் மேனியழகைக் காண உள்ளம் மிக்கு எழுதலால், மீண்டும் அவன் நோக்கிற்கு எதிராக நோக்கினாள். அவனும் அவளும் காதலால் உள்ளம் கலந்தனர். இருவரும் பழைய நிலையை அடைவதற்குச் சிறிது நேரம் ஆயிற்று. தங்கள் நிலைமையை யாராவது காண்பரோ என்ற நாணத்துடன் இருவரும் முகத்தைச் சிறிது திருப்பிக் கொண்டனர். அப்போது 'களுக்'கென்று யாரோ சிரிக்கும் ஒலி கேட்டது. உடனே திடுக்குற்றுச் சரேலெனத் தலை நிமிர்ந்து பார்த்தாள் இளம்பெண்.

"ஏன், திரையை அப்போதே அகற்றி விட்டேனே, நாழிகை ஆகவில்லையா?" என்று புன்முறுவலுடன் கூறினாள் அருகில் இருந்த தோழி. அவள் கண்களில் குறும்பும், புன்முறுவலில் பரிகாசமும் தலைப்பட்டன. தோழியின் வார்த்தைகளைக் கேட்ட இளம்பெண், வேல் நுனிபோல் கூரிய தன் விழிகளை ஒளி பெறக்காட்டி, கோபத்துடன் அவளைப் பார்த்தாள். சரேலென நகர்ந்து அன்பு கனிய இளைஞனை நோக்கிவிட்டுப் பல்லக்கில் புகுந்து உட்கார்ந்து கொண்டாள். தோழியும், புன்முறுவலுடன் இளைஞனைப் பார்த்தவண்ணம், சிறிதே

நின்றாள். பின்னர், சிவிகையில் புகுந்து திரையைத் தொங்கவிட்டு உட்கார்ந்துகொண்டாள்.

"காமன் கோட்டத்திற்குச் செல்லுங்கள்; விரைவில் திரும்ப வேண்டும்" என்று மல்லர்களுக்குக் கட்டளையிட்டாள் தோழி. உடனே மல்லர்கள் கணைத்துக் கொண்டு சிவிகையைத் தாங்கிச் சென்றனர். வாளை ஏந்திக் காவல் செய்து சென்றனர் யவன வீரர்கள். சிவிகை செல்வதைக் கண்ட இளைஞன், கடிவாளத்தை இழுத்துப் பிடித்துக் குதிரையை மிக வேகமாகச் செலுத்தினான். மல்லர்கள் ஓட்டமும் நடையுமாகச் சென்றனர். சிவிகை சிறிது தூரம் செல்வதற்குள் அந்த இளைஞனின் குதிரை அதை அணுகிவிட்டது. ஆட்கள் தூக்கிச் செல்லும் சிவிகைக்கும் குதிரையின் வேகத்திற்கும் ஒப்புக் கூற முடியுமா? சிவிகையின் பக்கம் குதிரை சென்றதும் கடிவாளத்தைச் சிறிது உதறி இழுத்தான். குதிரை சிறிது நேரம் முன்னங்கால்களைத் தூக்கி நின்றது. குதிரையின் காலடிச் சப்தத்தைக் கேட்டுத் திரையை ஒருபுறம் விலக்கி வெளியே நோக்கினாள் இளமங்கை. இளைஞன் அதைப் பார்த்ததும் பார்க்காததுமாகக் குதிரையைக் கொம்மை தட்டி ஓட்டினான். குதிரை மிக வேகத்துடன் சென்றது.

சிவிகையில் இருந்தபடி, சாளரத்தின் வழியாக, குதிரை மறையும் வரையில் பார்த்துக்கொண்டே இருந்தாள் இளம்பெண். நகைத்துக்கொண்டே சில வார்த்தைகளைக் கூறினாள் தோழி. கோபத்துடன் மறுமொழி கூறினாள் அவள்.

வழியில் யவனத் தச்சன் ஒருவனுடன் பேசிக் கொண்டிருந்தான் குதிரையில் வந்த இளைஞன். அதைப் பார்த்துக்கொண்டே சென்றாள் சிவிகையில் செல்லும் நங்கை. இளைஞன் சிவிகையை உற்றுப் பார்த்தான். அவள் முகம் அவ்வளவு நன்றாகத்

தெரியவில்லை. இரு பெண்களும் ஒருவருக்கொருவர் கோபமாகவும் பரிகாசமாகவும் பேசிக்கொள்வது மட்டும் அவன் காதில் விழுந்தது. "என்ன பேசுகிறார்கள்?" என்று ஆலோசிப்பதற்குள் சிவிகை சென்றுவிட்டது.

காமன் கோட்டத்தைச் சிவிகை அடைந்தது. அதற்கு அருகில் உள்ள சோலையில் சிவிகையை வைத்தனர் மல்லர்கள். இந்திரவிழாத் தொடங்கப் பெற்ற நாள் முதல் சிவிகை அந்த இடத்தில்தான் இறங்குவது வழக்கம். சிவிகை தங்கிய இடத்தில் ஒரு பெரிய புன்னைமரம் விரிந்த கிளைகளுடன் குளிர்ச்சியைத் தந்து விளங்கியது. தோழி, சிவிகையிலிருந்து கழிகளையும் கரிய நிறமுள்ள பெரிய திரைத் துணியையும் எடுத்து யவனர்கள் கையில் கொடுத்தாள். யவனவீரர்கள் கழிகளை நட்டு அதனைச் சுற்றி மரத்தை அளாவ, திரையையும் போர்த்திக் கட்டினர்.

கூடாரம் அமைத்தபின் சிவிகையிலிருந்து வெளி வந்தாள் இளமங்கை. காற்றின் இயக்கத்திற்காகக் கூடாரத்தின் ஒருபுறத்தில் திரையைச் சிறிது தள்ளி வைத்தாள் தோழி. புன்னை மரத்தின் கீழ், இருவரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர். கூடாரத்திற்கு வெளியில் இருந்து யவனவீரர்கள் காவல் செய்தனர். சோலையின் எல்லா இடங்களிலும் அங்கங்கே சில கூடாரங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. பெரும்பாலும் அந்தக் கூடாரங்களில் உள்ளவர்கள் மகளிரே. அவர்களில் கன்னி மகளிரே அதிகம் இருந்தனர். அம் மகளிர் பலரும் அங்கங்கே உலாவிக்கொண்டிருந்தனர். கணவரைப் பிரிந்த மங்கையரும், கன்னி மகளிரிற் பலரும் காமன் கோட்டத்திற்குச் சென்று காமதேவனை வணங்கிப் போய்க்கொண்டிருந்தனர். அருகில் காவிரி கடலுடன் கலக்கும் துறையில் பலர் மூழ்கிக்கொண்டிருந்தனர். பலர் மரங்களில் கட்டிய

ஊஞ்சலில் அமர்ந்து பூச்சூடி விளையாடினார்கள். கண வரும் மகளிருமாகச் சேர்ந்து நாவாய்களில் அமர்ந்து கடலில் சிறிது தூரம் ஊர்ந்து யாத்திரை செய்தனர் சிலர். காவிரிச் சங்கமத்திற்கு அருகில் உள்ள, சோம குண்டம், சூரிய குண்டம் என்ற தெய்வப் பொய்கைகளில் மூழ்கிப் பக்தியுடன் காமதேவனை வணங்கினர் பலர். காமன் கோட்டத்தைச் சுற்றிலும் இவ்வாறு கூட்டம் கூட்டமாக மகளிர் குதுகலித்துத் திரிந்தனர். சிறுபான்மை ஆடவர்களும் அங்கங்கே உலாவிக்கொண்டிருந்தனர். கடற்கரைச் சோலையில், அந்த மாலைக்காலத்தில் நெய்தல் மலரின் நறுமணத்தை நுகர்ந்து யாவரும் இன்புற்றிருந்தனர். பால் நிற ஆடைகளையும், ஆபரணங்களையும், பல நிறப் பூக்களை யும் அணிந்து அங்கங்கே ஆடி விளையாடுகின்ற மகளிர் தம் அழகைக் கண்டு, அங்கே உலாவிய ஆடவர் மனம் சலித்திருந்தார்கள்.

கருநிறத் திரையால் அமைத்த கூடாரத்தில் களிப் புடன் அந்த இரண்டு பெண்களும், ஒருவருக்கொருவர் பரிகசித்து உடல் குலுங்க நகைத்துக்கொண்டிருந் தனர். அவர்கள் சம்பாஷணையை எவரும் கேட்க வில்லை. திரைக்கு வெளியில் அமர்ந்து காவல் செய்யும் யவன வீரர் தமக்குள் ஏதோ யவன பாஷையில் பேசிக்கொண்டிருந்தார்கள். சிவிகையைத் தூக்கி வந்ததால் உண்டான சிரமம் நீங்கக் களைப்பாறிக் கொண்டு உட்கார்ந்திருந்தனர் மல்லர். சிறிது நேரத் திற்குப் பின், இரண்டு பெண்களும் கூடாரத்தை விட்டு வெளிவந்தனர். பூக்களையும் வாசனைப் பொருள் களையும் ஏந்திக்கொண்டு இளமங்கையின் பின் தோழி சென்றாள். முன்னே சென்ற பெண் கூடாரத்திற்கு வெளியே சற்று நின்று சுற்றிலும் பார்த்தாள். அவள் கண்களில் உள்ள கருமணிப் பாவை யாரையோ தேடியது. மணியை இழந்த நாகம் போல் அவள் கலங்கி நின்றாள். நிமிர்ந்த தலையுடன் ஒரு பெருமூச்சு

விட்டாள். உடனே தலை குனிந்து காமன் கோட்டத்தை நோக்கி நடந்தாள். விரைவாக இருவரும் காமன் கோட்டத்தை அடைந்தனர். காமதேவனை வணங்கி வழிபட்டார்கள்.

தோழியின் கையிலிருந்த பூக்களாலும், ஆபரணங்களாலும், வாசனைப் பொருள்களாலும் காமதேவனை அலங்கரித்தாள் அம்மங்கை. அவளுடைய பெருமையையும், மேனி யழகையும் கண்ட மற்ற மகளிரும் மனமயங்கி நின்றார்கள். அந்தப் பெண், மன ஒருமையுடன் காமதேவனை வணங்கலானாள். காமனுடைய பிரதிமைக்கு முன்னர் மண்டியிட்டுக் கைகுவித்துத் தொழுதாள். தன் உள்ளக் கவலையை அகற்றி அருளுமாறு மனத்தால் வேண்டிக் கொண்டாள். வாயிலிருந்து சொற்கள் வெளிவரவில்லை. அவள் உள்ளக் கருத்தை வெளியிடுவன போல் கண்கள் நீரைப் பெருக்கின. முத்துக்கள் உதிர்வனபோல், கண்களின் மையோடு கலந்து நீர்த் துளிகள் மார்பில் விழுந்து சிதறின. திருமாலைக் குறித்து மெய்ம்மறந்து தவம் செய்யும் வேகவதி என்னும் கன்னியைப்போல் அசைவற்று இருந்தாள் அவள். அவள் தோளிலிருந்து மேலாடை நழுவி விழுந்ததை அருகில் இருந்த தோழி எடுத்துப் போர்த்தினாள். அப்போதுதான் நங்கை தன் நிலையை உணர்ந்துகொண்டாள். அவள் தன்மையைக் கண்ட தோழியும் மனம் இரங்கி வாய்பேசாதிருந்தாள்.

பின்னர் அவ்விளமங்கை தோழியுடன் அவ்விடம் விட்டுக் காமன் கோட்டத்தை வலம் வந்தாள். சோர்வு கொண்ட மனத்துடன் அக்கோட்டத்தை விட்டுப் புறப்பட்டாள். கோயிலை விட்டு வெளிவந்ததும் மனத்தைச் சிறிது உறுதி செய்துகொண்டாள். அருகில் இருந்த தோழி அங்கங்கே நடக்கும் விநோதங்களையும் விளையாட்டுக்களையும் சுட்டிக் காட்டி அவள் மனத்திற்கு ஆறுதலைச் செய்ய முயன்றாள். அங்குள்ள

காட்சிகளில் எல்லாம் அவள் மனம் செல்லவில்லை. அவள் யாரையோ தேடினாள்! ஆடவர்க்கு இடம் கொடாத கன்னி உள்ளமுடையவளும், ஈன்ற தந்தையையும் தலைநிமிர்ந்து நோக்காத மனத் திண்மை உடையவளுமாகிய அந்த நங்கை, தன் மனத்தில் புகுந்து நிறைஎன்னும் அரிய காவலைத் தகர்த்தெறிந்த அந்தக் குதிரைவீரனைத்தான் தேடினாள். அவள் நிலையையும் குறிப்பையும் தோழி நன்கு உணர்ந்தாள். கன்னி மாடத்தில் இரவும் பகலும் இடைவிடாமல் உடனிருந்து வரும் அவள், தன் தலைவியின் மனப் போக்கை அறியாளா?

"பத்திரை, அதோ நம் கூடாரத்திற்கு அருகில் உள்ள மஞ்சத்தில் உட்காருவோம்; வா" என்றாள் தோழி. பத்திரையின் மனத்தை மாற்றும்பொருட்டே அவள் அவ்வாறு கூறினாள்.

"எனக்கும் களைப்பாகவே இருக்கிறது; காரணம் தெரியவில்லை" என்று கூறிக்கொண்டே நடந்தாள் பத்திரை. இருவரும் கூடாரத்துக்கு அருகில் உள்ள மஞ்சத்தில் உட்கார்ந்துகொண்டனர். காவிரிப்பூம் பட்டினத்தின் பெருமையைப்பற்றியும், அங்குள்ள பலவகை மதத்தினரைப்பற்றியும் ரஸமாக எடுத்துக் கூறினாள் தோழி. பத்திரையின் மனம் சிறிதும் தேறவில்லை.

"பத்திரை, இந்தக் காவிரிப்பூம் பட்டினத்தில் உள்ள மகளிர் யாவரும் கற்பு நெறி தவறாதவர்கள். கற்புடைய மங்கையராலேயே இந்த நகருக்குப் பெருமை வந்தது. அவர்கள் வரலாறுகளை உனக்கு நான் எடுத்துக் கூற வேண்டியதில்லை........." என்று கூறி முறுவல் செய்தாள் தோழி.

"வசந்தி, இந்த நகரத்தைப்பற்றி நான் அறியாததும் உண்டோ? கற்பின் பெருமையைப்பற்றி, நீ எடுத்துக் கூறவேண்டுமா? மீண்டும் என் மனத்தைப்

புண் செய்யாதே. ஒன்றுபட்ட உள்ளத்தைப் பிரிக்க முடியாது!" என்றாள் பத்திரை. அவள் வார்த்தைகளில் உள்ளத் தெளிவும், கபடற்ற தன்மையும், அவளுக்குள்ள மன உறுதியும் பிரதிபலித்தன. பத்திரையின் மன நிலையைத் தோழி வசந்தி நன்கு உணர்ந்தாள். 'இனிப் பேசுவதில் பயனில்லை' என்று எண்ணினாள்.

"பத்திரை, நான் சொன்னதற்கு வருந்தாதே; விளையாட்டாகப் பேசினேன்" என்றாள் வசந்தி. அப்போதுதான் பத்திரைக்குச் சிறிது உள்ளம் குளிர்ந்தது; நாணம் மறைந்தது.

"வசந்தி, அவரை நீ எப்போதாவது பார்த்ததுண்டா?"

"ஆம், நம் வீதியிலேயே பார்த்ததாக நினைவு வருகிறது. ஏன், பலமுறை பார்த்திருக்கிறேன்."

"யார் என்று தெரியுமா?"

"தெரியாது; அவரைப் பற்றிய செய்திகள் எனக்கு எப்படித் தெரியும்?"

"வசந்தி, நான் சொல்வதைக் கேள். இன்று வரையில் ஈன்ற தந்தையையும் எதிர் நோக்காத நான் அவரைப் பார்த்தேன்; என் உள்ளத்தையும் பறிகொடுத்தேன். கற்புக்குக் காவலாகிய நிறை, அவர் நோக்கத்தால் நிலைதளர்ந்து கெட்டது. அவருடைய அழகுத் தோற்றம் என் உள்ளத்தை விட்டு அகலவில்லை. அது ஏனோ?"

"பத்திரை, நீ சொல்வது உண்மையே; அதைத் தவறாக நான் எண்ணவில்லை. உன் போன்றோர் இவ்வாறு எண்ணுவதும் இயற்கையே. ஆடவர், மகளிர் மனத்தில் எளிதில் புகுவர். ஆனால் அவரை முழுவதும் நம்ப முடியுமா?"

"நீ கூறுவது பொருந்தாது. என் உள்ளம்போல் அவர் உள்ளமும் வருந்தாது, என்று எவ்வாறு கூற

முடியும்? ஊழ்வினையை யாரால் உணர முடியும்? 'கற்புடைய மகளிர் உள்ளம், ஆடவர் உள்ளத்தில், அவர் விரும்பாத நிலையில் புகாது. இருவர் உள்ளமும் ஒருங்கே, கலக்கும். இருவருள்ளமும் ஒருங்கே கலத்தல், அந்தப் பிறவியில் மட்டும் அல்ல. தொடர்ந்து பிறவி தோறும் அவர் உள்ளம் ஒன்றுபட்டே இருக்கும்' என்பது அறிஞர் கொள்கை. செம்மண் நிலத்தில் பெய்த மழை நீரைப்போல் அன்புடைய நெஞ்சம் தாமாகவே கலந்தால் பிரிக்க முடியுமா? அத்தகைய கற்புடையவர் வாழும் இந்நகரில் பிறந்த நான், நன்னெறியிலிருந்து வழுவேன்."

"பத்திரை, நீ கூறுவதெல்லாம் உண்மையே. அவரைப் பற்றி இன்னும் நன்றாக உணர்ந்து கொள்ளும் வரையில் மன உறுதியை இழக்கலாகாது. புத்த தேவன் அருளால், எல்லாம் நன்மையாக முடியும் என்றே நம்புகிறேன்."

"அவர் தோற்றத்திலேயே, உயர் குலத்தில் தோன்றியவர் என்பது புலப்படுகிறது. எல்லாம் ஊழ்வினையைப் பொறுத்தது."

"நான் உனக்கு ஏவல் செய்யும் தோழிதான். ஆனாலும் இளமையிலேயே தாயை இழந்த உனக்குத் தாய் போன்ற நிலையில் சில வார்த்தைகளைக் கூறினேன். அதைப் பொறுத்துக் கொள். உன்னுடைய அழகு, அறிவு, செல்வம் முதலியவற்றிற்கு ஏற்ற கணவன் வாய்க்க வேண்டும் என்றே போதிநாதனை நான் நாள்தோறும் வேண்டுகிறேன்."

வசந்தி கூறிய வார்த்தைகளை அவள் முழுவதும் கேட்கவில்லை. எங்கேயோ உற்று நோக்கிக்கொண்டிருந்தாள். வாடியிருந்த அவள் முகம் பொலிவுடன் காணப்பட்டது. "வசந்தி, அதோ பார்; அவர்...... நிற்கிறார்" என்று தோழியிடம் மென்குரலில் கூறினாள்.

"ஆம். குதிரைக்கு அருகில் நின்றுகொண்டிருக்கிறார்" என்று வசந்தி கூறினாள். இளைஞனைப் பார்த்துப் பத்திரை பரபரப்புற்றாள். அருகில் சென்று பேசிவிடலாமா என்றும் நினைத்தாள். இளைஞன் தன்னை நோக்குவதையும் உணர்ந்து உவகை கொண்டாள்.

இளைஞன், பத்திரையைப் பார்ப்பதற்கே அங்கு வந்தான். அவன் நோக்கம் முழுவதும் பத்திரையின் மேனி யழகில் ஈடுபட்டிருந்தது. ஜனங்களின் கூட்டத்தில் அவனை ஒருவரும் உற்றுப் பார்க்கவில்லை. 'ஆம்! வணிகர் வீதியில் நான் வரும்போது கண்ட மங்கைதான் இவள். மும்முடி நாய்கனுடைய மாளிகையல்லவா அது! ஆகவே மும்முடி நாய்கனின் மகளே இவள்! இன்று வரையில் இவளை நான் பார்த்ததில்லை. இவளோடு நான் எவ்வாறு பேசுவது? இவள் என்னை மருண்டு மருண்டு பார்ப்பதிலிருந்து, இவளது உள்ளக் கிடக்கையை நான் உணர்கிறேன். எத்தனையோ அழகுள்ள மகளிரை இந் நகரில் நான் பார்த்திருக்கிறேன்; இன்னும் பார்க்கிறேன். ஆனால், என் மனத்தை இவள் கவர்ந்ததுபோல் எவரும் கவரவில்லை. மேன் மேல் வளர்கின்ற வேட்கையை என் உள்ளத்தில் உண்டாக்கியது இந் நங்கையின் கண்கவர் தோற்றமே! இவள் அருகில் இருக்கும் மங்கையை எங்கோ பன்முறை பார்த்திருக்கிறேன். எவ்வாறேனும் இவளை யான் அடைவேன்' என்று எண்ணமிட்டான். இளைஞனின் உள்ளம், பத்திரையோடு பேச முற்பட்டது. மானம் என்னும் திரை அதைத் தடை செய்தது. சிறிது ஏங்கி நின்றான். பத்திரை வசந்தியுடன் பேசுவதும், இளைஞனைப் பார்ப்பதுமாக உட்கார்ந்திருந்தாள்.

மாலைக் காலத்தில் மலர்ந்த காதல் நோய் பத்திரையின் உள்ளத்தையும் இளைஞன் உள்ளத்

தையும் வருத்தியது. இளைஞன் அதிக நேரம் அங்கு நிற்கவில்லை. மன உறுதியோடு குதிரையின் மீது தாவி உட்கார்ந்தான். பத்திரையின் உள்ளம் ஏங்கியது. குதிரையைப் பத்திரை இருக்கும் இடத்தை நோக்கிச் செலுத்தினன். அப்போது பத்திரை சரேலென எழுந்து நின்ருள். கண் இமைப்பதற்கு முன், குதிரை வந்தது. பத்திரை இருந்த இடத்தைக் கடந்து, அவளுடைய கூடா ரத்தையும் சுற்றிக்கொண்டு சென்றது. வீரன் பத்திரை இருந்த இடத்தை அணுகியபோது அவளைப் பார்த்தான், அவளும் பார்த்தாள். அப்புறம் அவன் திரும்பிப் பார்க்கவில்லை. சிறிது நேரத்தில் குதிரை மறைந்துவிட்டது. அந்த ஜனக்கூட்டத்திலும் அவ்வளவு வேகமாகச் சென்றுவிட்டது அவ்வீரனின் குதிரை. பத்திரையின் கண்கள் பூத்துப் போயின. அவன் சென்ற திசையை அவ்வாறு நோக்கினுள்.

"வா, போவோம்" என்று கூறிவிட்டுக் கலக்கத் துடன் கூடாரத்திற்குள் புகுந்தாள் பத்திரை. ஏவல வீரர்கள் கூடாரத்தைக் கலைத்துக் கழிகளையும் திரையையும் சிவிகையில் வைத்தனர். பத்திரையும் வசந்தியும் சிவிகையில் உட்கார்ந்துகொண்டு மூடு திரையைத் தொங்கவிட்டனர். மல்லர்கள் சிவிகை யைத் தாங்கிச் சென்றனர். நகர் முழுவதும் தீப அலங்காரத்தால் பொலிவுடன் விளங்கியது.

அவரை மீண்டும் எப்படிக் காண்பேன் என்று ஏங்கினுள் பத்திரை. எனினும் 'அவரைக் காணச் செய்து காதல் மூட்டிய தெய்வம் மீண்டும் அவரைத் தரும்' என்று தானுகவே ஆறுதல் அடைந்தாள் அவள். பத்திரைக்கு எதிர்பாராது ஏற்பட்ட சம்பவத் தையும், அவள் உள்ளக் கிளர்ச்சியையும் வசந்தி நன்கு உணர்ந்தாள். கட்டிளங் காளையான வீரனைக் கண்டது முதல் அவளுக்கு மட்டும் நல்லெண்ணம்

தோன்றவில்லை. அவனைப் பற்றிப் பலவாறு சிந்தனை செய்தாள் அவள். எவ்வளவோ முயன்றும் பத்திரையின் மனம் மாருதது குறித்து வருந்தினுள்.

## 3

## கூட்டுக் கிளி

மாலைக் காலம்: வெயிலின் வெம்மை தணிந்து விட்டது. சூரியனின் ஒளி மங்கவில்லை. குளிர்ந்த தென்றல் காற்று வீசியது. காவிரிச் சங்கமத்திற்குச் செல்லும் சாலையில் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் போய்க்கொண்டிருந்தனர். சாலையின் இரு புறங்களிலும் பெரிய கடைகள் இருந்தன. தமிழ் வணிகர்களும் அயல்நாட்டு வணிகர்களும் வியாபாரம் செய்து கொண்டிருந்தனர். சாவகர், சீனர், யவனர், துருக்கர் முதலியோர் மிகுதியாக இருந்தனர். விந்த மலையிலிருந்து கொணர்ந்த யானைத் தந்தம், பொதிய மலைச் சந்தனம், இலங்கை ஈழத்துச் செப்பு, மேல்கடலில் பிறந்த கொடிப் பவளம், வடமலைப் பொன், கொற்கைத் துறை முத்தம், விஞ்சையம் பெருமலையின் வெள்ளி, இமயத்து வயிரம், கடாரத்து இரும்பு இவற்ருல் செய்த பொருள்களை விற்றுக் கொண்டிருந்தனர். யவனத் தச்சர், அவந்தி தேசத்துக் கொல்லர், மகத தேசத்து மணிகள் விற்போர், பாடலி புரத்துப் பொற்கொல்லர், கோசல தேசத்துச் சித்திரகாரர் முதலியோர் அங்கங்கே நின்ற வண்ணமும் இருந்த வண்ணமும் விலையுயர்ந்த பொருள்களை விற்றுக்கொண்டிருந்தனர். தமிழ் மக்கள் ஆவலோடு அப்பொருள்களை வாங்கிக்கொண்டிருந்தனர்.

அவ்விடத்தில் யவனத் தச்சன் ஒருவன், சில பிரதிமைகளை விற்றுக்கொண்டிருந்தான். யவனத்

தச்சர்களின் கலைத் திறமையைக் காட்டும் பிர திமைகள் அவை. பெருஞ் செல்வர்களாகிய வணிகர் களே அவற்றை விலை கொடுத்து வாங்க முடியும். திருவிழாக் காலங்களிலேயே அத்தகைய பிரதிமைகள் அதிகம் விற்கப் பெறும். பொன்னாலும் பவளத் தாலும் வயிரத்தாலும் விலையுயர்ந்த கற்களாலும் அழகு பொருந்தச் செய்த பிரதிமைகள். அவற்றிற்குத் தக்க விலை கொடுத்து வாங்க இயலாத ஆடவரும் மகளிரும், அப்புறம் செல்லமாட்டாமல் ஏக்கத்துடன் கண்ணால் கண்டு நின்றனர்.

அப்போது சரேலெனக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஒரு வீரன் அங்கே தோன்றினான். அவன் வருகையைக் கண்டு சிலர் விலகி நின்றனர். வியப் புடன் அவனுடைய முரட்டுத் தன்மையைக் கண்டு கோபத்தோடு நின்றனர் பலர். அவனைக் கண்டவுடன் எழுந்து வணக்கம் செய்தான் யவனத் தச்சன். அதைக் கண்டு அங்கு இருந்தவர்கள் வியப்புற்றது ஆச்சரியம் அல்லவா? அவனைப் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? நகரத்திற்குத் திருவிழாப் பார்க்கப் புதிதாக வந்தவர்கள், எவ்வாறு அவனைப் பற்றி அறிந்துகொள்ள முடியும்? வீரனுக்குப் பின்னே நின்ற குதிரை மிக வேகமாய்ப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தது. வாயின் இரு புறங்களிலும் நுரை ததும்பியிருந்தது. அதனால், குதிரையில் மிக வேகமாக ஏதோ ஒரு காரியத்திற்காக அவ்விடம் வந்திருக் கிறான் என்று சிலர் ஊகித்தனர். காரணம் தோன்றாமல் அவன் முகத்தையும் குதிரையையும் உற்று உற்றுப் பார்த்தனர் சிலர். புன்சிரிப்புடனும் பொறுமை யுடனும் அங்கு இருந்த பிரதிமை ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்த்தான் அவன். பளிங்குக் கூட்டில் பச்சை நிறக் கிளிப் பிரதிமை ஒன்று வைக்கப்பெற் றிருந்தது. அவன் மனத்தை அது கவர்ந்தது. அதைக் கையில் எடுத்து நீண்ட நேரம் அழகு பார்த்தான்.

சற்றுப் பெருமிதத்தோடு, "இது எதனால் செய்யப் பெற்றது?" என்றான்.

"ஸத்துகரே, இந்தக் கூடு பளிங்குக் கற்களால் செய்யப்பட்டது. உயர்ந்த பச்சைக் கற்களால் இக் கிளி செய்யப் பெற்றது. இதன் மூக்கும், கண்களும், கழுத்தின் கோடுகளும் பவளத்தாலும் வயிரத்தாலும் செய்யப்பட்டன. இதன் கால்கள் பொன்னால் இயன்றவை. தொடுவதற்குப் பஞ்சுபோல் மென்மை யுடையதாக இருக்கும்."

"அப்படியா? இதற்கு உயிர் இல்லாதது ஒன்று தான் குறை. யவனர்களின் கலைத் திறமையைக் காட்டுவதற்கு இந்தக் கிளி ஒன்றே போதும். ஆனால், இதன் விலை என்ன?"

"இருநூறு பொன்கள் மதிப்பு. தங்களுக்கு இதைப் பெற ஆவல் உண்டோ?"

"ஆம். ஏன்? உள்ள விலையைக் கொடுத்து விடுகிறேன்."

"வேண்டாம். நான் விலை கூறியது தங்களுக்கு அல்ல. தங்களிடம் இதை விலைக்குக் கொடுக்க, அவ்வளவு அறிவில்லாதவனா நான்? இந்தப் பட்டி னத்தில் தாங்கள் விரும்பும் எந்தப் பொருளையும் விலை கொடுத்து வாங்கவேண்டுமா? தாங்கள் விரும்பிய இந்தக் கிளியை, ஆயிரங்கோடி பொன் கொடுத் தாலும் பிறருக்குக் கொடேன். என் நினைவுக்கு அறிகுறியாக இந்தக் கிளியைக் கூட்டுடன் தங்க ளுக்குக் கொடுக்கிறேன்" என்று அதை எடுத்துத் தந்தான் யவனத் தச்சன்.

வணிகர் வீதியில் பத்திரையைக் காதலித்த இளைஞனேதான் அந்த வீரன். அவனுக்கு ஸத்துகன் என்று பெயர். பத்திரையைக் கண்டது முதல் ஆராக் காதல் கொண்டு அவளைக் காணலாம்

என்னும் ஆசையுடன் அன்று வந்தான். வழியில் அந்த யவனத் தச்சனைக் கண்டான். ஸத்துகனுக்கு அவன் நண்பன். அது மட்டும் அல்ல. ஸத்துகனிடம் யவனத் தச்சனுக்குப் பயமும் மதிப்பும் உண்டு. அந்த யவனத் தச்சன் மட்டும் அல்ல; அயல் நாட்டிலிருந்து வாணிகம் செய்யவந்த வணிகர் யாவரும் அந்த நகரில் உள்ள வணிகர்களில் பலரும் அவனிடம் அச்சம் உடையவர்கள். அவன் விருப்பத்திற்கு மாறாக நடவார். அதற்குப் பல காரணங்கள் இருந்தன. பெரும் புரட்சிக்காரன் அவன் என்று சொல்லலாம். அச்சம் என்பதையே அறியாதவன். தான் எண்ணியதையும் சொல்லியதையும் உடனுக்குடன் செய்து காட்டும் கொடுங்குணம் உடையவன். அஞ்சாமல் எந்தக் காரியத்தையும் துணிந்து செய்யும் வீரர் பலர் அவனுக்கு அடங்கியிருந்தனர். அவன் ஏவிய காரியத்தைச் சொல்லுமுன் செய்து முடிக்கும் தோழர் சிலர் இருந்தனர். அதிகம் கூறுவானேன்? தன்னோடு பழகியவர்களை எவ்வாறேனும் தன்வசம் ஆக்கிவிடுவான். மீறியவர்களை அச்சமுறுத்திக் காரியங்களை நிறைவேற்றிக்கொள்வான். தவிர, பெருஞ்செல்வம் படைத்த வணிகனின் புதல்வன் அவன். அத்தகைய அவன் விருப்பத்திற்கு மாறாக யவனத் தச்சன் செய்வானா? சிறிதும் கவலையின்றி இருநூறு பொன் விலை மதிப்புள்ள கிளியை அவனிடம் தந்துவிட்டான். கிளியை அவன் மதிக்கவில்லை. ஸத்துகனைத்தான் மதித்தான். அவனுக்கும் தனக்கும் உள்ள நட்பு பங்கப்படாதவாறு பாதுகாத்துக்கொண்டான்.

'இருநூறு பொன் விலை மதிப்புள்ள கிளியை ஸத்துகனுக்கு யவனத் தச்சன் கொடுத்துவிட்டானே!' என்று அங்கு இருந்தவர் ஆச்சரியம் அடைந்தனர். ஸத்துகனை நோக்கும் ஒவ்வொரு நிமிஷமும் அவர்களுக்கு வியப்பு அதிகரித்துக்கொண்டே இருந்தது.

அன்று அந்தக் கிளியை அவன் கொடுக்காவிட்டால், மறுநாள் அந்த யவனத் தச்சன் அங்கு இருக்க முடியுமா? — அதைப்பற்றி அங்கு இருந்தவர்களுக்கு என்ன தெரியும்? ஸத்துகனின் புன்னகையையும் பரந்த மார்பையும், பெருத்த தோள்களையும் கண்டு கூட்டத்தினர் வியப்புடன் நின்றனர்.

அந்த வழியே ஒரு சிவிகை அப்போது சென்றது. காற்றின் வேகத்தால், பல்லக்கின் திரை சிறிது விலகியது. உள்ளே இருந்த இளம் பெண் - பத்திரை முகத்தை வெளியே நீட்டிப் பார்த்தாள். ஸத்துகன் கண்களும் அப்போது எதிரே நோக்கின. சிவிகை செல்லும் வேகத்தில் ஒருவரை ஒருவர் நன்றாகப் பார்த்துக் கொள்ள முடியுமா?

''நல்லது, நான் போய் வருகிறேன். இந்தக் கிளி எனக்கு இன்பத்தைத் தரும் என்று எண்ணுகிறேன்'' என்று கூறிவிட்டுக் கிளியை எடுத்துக்கொண்டு குதிரைமீது தாவி உட்கார்ந்தான் ஸத்துகன். அப்படியே சிறிது நேரம் சிவிகை சென்ற திசையை நோக்கினான்.

'இவனிடம் இவ்வளவு பயமா? இருநூறு பொன் விலை மதிப்புள்ள கிளியை, இரக்கமின்றி, விலை கொடுக்காமல் எடுத்துச் செல்லும் இவன் யார்?' என்று வெறுப்பும் வியப்பும் அடைந்தனர் அங்கே இருந்தவர்கள். முகத்தில் வெறுப்புக் குறி தோன்றச் சிலர் பார்த்தனர். ஸத்துகன் அவர்களை மதிக்கவே இல்லை. தன் கொள்கைகளுக்கு வழி காட்டும் தெய்வமாகத் தான் கருதிய புத்த தேவனுக்கன்றி வேறு யாருக்குப் பயப்படுவான் அவன்?

கடிவாளத்தை இழுத்துப் பிடித்தான். குதிரை அம்பைப்போல் விரைந்து சென்றது. காமன் கோட்டத்திற்குச் செல்லும் சாலை வழியேதான் சென்றது. முன்னே சென்ற பல்லக்கை முந்தியது

ஸத்துகன் குதிரை. சிறிது நேரத்தில், சிவிகையும் காமன் கோட்டத்தை அடைந்தது. காமன் கோட்டத்திற்கு அருகில் குதிரையை நிறுத்திவிட்டு ஒரு மஞ்சத்தில் உட்கார்ந்துகொண்டு இளைப்பாறி இருந்தான் ஸத்துகன். மந்தமாருதம் மணந்து வீசுகின்ற மாலைக் காலத்தில் அவளை நினைந்து உள்ளம் உருகினான்.

வழக்கம்போல் காமன் கோட்டத்திற்கு அருகில் உள்ள சோலையில், தங்கியது சிவிகை. கறுப்புத் திரையால் முன்போல் கூடாரம் அமைக்கப் பெற்றது. வீரனைக் கண்டு குலாவவேண்டுமென்று துடித்தது பத்திரையின் உள்ளம். முதல் நாள் இரவும், சிவிகையில் வரும்பொழுதும் தன் எண்ணத்தை மாற்றும் முறையில் வசந்தி பேசியதை எண்ணி வருந்தியிருந்தாள். 'என்னுடைய நெஞ்சமே எனக்குத் துணை. அல்லாமல், வேறு யார் என் துன்பத்திற்குத் துணை செய்பவர்?' என்று ஆறுதல் அடைந்தாள். "வசந்தி, என்னுடைய காதல் மாசற்றது. ஆதலால் அந்த வீரனை அன்றி வேறு யாரையும் மனத்தாலும் நினையேன். இது உண்மை. போதி நாதன் அருள் புரிவான்" என்றாள். "உன் விருப்பம் போல் நடக்க வேண்டும் என்றே நானும் வேண்டுகிறேன்" என்றாள் வசந்தி. பத்திரை எழுந்து கூடாரத்தின் ஒரு புறத்துத் திரையை அகற்றிவிட்டு வியப்புடன் நின்றாள். அவள் யாரைக் காணும் ஆவலுடன் திரையை அகற்றினாளோ, அவனைக் கண்டாள். கூடாரத்திற்குச் சற்றுத் தூரத்தில் நேராக இருந்த மஞ்சத்தில் அமர்ந்திருந்தான் இளைஞன் ஸத்துகன். "தந்த தெய்வம் தந்தது" என்று உவகை மிகுதியால் கூறினாள் பத்திரை. வியப்பாக இருந்தது வசந்திக்கு.

"இதோ பார், அவர் வடிவத்தை! கருண்ட தலை மயிர், உயர்ந்த தோளில் விழுந்து புரள்கின்றது. கூரிய

மூக்கும் அகன்ற நெற்றியும் பரந்த அறிவுள்ளவர் அவர் என்பதைத் தெரிவிக்கின்றன. அவர் ஆழ்ந்த பார்வையில் பார்ப்பவரைக் கவரும் ஒளி இருக்கிறது. பரந்த மார்பமும் உயர்ந்து உருண்ட தோள்களும் போரில் பின்னடையாத வீரர் என்பதைப் புலப் படுத்துகின்றன. முழந்தாள் வரையில் நீண்டிருக் கின்றன அவர் கைகள்; அதனால் அவர் அரச குலத்துத் தோன்றலோ என்று எண்ணுகிறேன். உயர்குலத்துத் தோன்றிய உத்தமர் அவர் என்பதில் ஐயமில்லை. இவ்வளவு அழகுடைய அவர் நல்லொழுக் கத்தால் மேன்மை தங்கியவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அவரை நான் அடைந்தால் அது என் பாக்கியம் அல்லவா?"

"அழகும் அறிவும் மிக்க உன்னை அவர் காதலித் தால் அது தகுதியே; குறை எதுவும் இல்லை; ஆனால்..."

"என்ன சொல்கிறாய்?"

"அவரைப் பற்றிச் சொல்லியவை யாவும் பொருத்தமானவையே. அழகு மிக்கவர் அவர் என்பதும் உண்மையே; ஆனால், அதைக்கொண்டு ஒழுக்கத்தை முடிவு செய்து சொல்லுதல் நேர்மை யன்று."

"நீதான் சாமுத்திரிகா லக்ஷணம் அறிந்தவளா யிற்றே! அவரைப்பற்றி என்ன தோற்றுகிறது?"

"உன்னைவிட எனக்கு அதிகம் தெரியாது. அழகும் சீலமும் இயைவது அரிது என்பதுதான் என் முடிவு. ஆனால் இவரைக் குறிப்பிட்டுக் கூறவில்லை. சிலர் அந்த முடிவுக்குப் புறம்பாகவும் இருப்பார்கள். யார் அதை உள்ளபடி அறிய முடியும்? நமக்குக் கல்வி பயிற்றிய ஆசிரியரே அவ்வாறு கூறியிருக்கிறாரே!"

"அப்படியானால் அவரிடமும் அந்தக் குறை இருப்பதாகச் சொல்லுகிறாயா? அல்லது, பொதுவாக அழகுள்ள ஆடவர்களைப்பற்றிச் சொல்லுகிறாயா?"

பத்திரை இவ்வாறு கிளறிக் கேட்டதற்கு வசந்தி எவ்வாறு மறுமொழி கூறுவாள்?

"இவரைக் குறித்துச் சொல்லவில்லை" என்றாள்.

"எவ்விதம் இருந்தாலும், என்ன நேர்ந்தாலும் என் உள்ளம் அவரை விட்டு மீளாது. எல்லாம் அவரவர் ஊழ்வினையின்படியே நிகழும். அவரை நினைக்கும் போதும் காணும் போதும் என் உள்ளம் களிக்கின்றது."

"உனக்குத் தோன்றிய வேட்கையை நினைக்கும் போது எனக்கு வியப்பாகவே இருக்கிறது. காதல் உள்ளத்தின் தன்மையை யார்தாம் அறிவார்?"

"வசந்தி, வேட்கை என்பது நம்மைக் கேட்டுக் கொண்டு தோன்றுவதல்ல. தோன்றும் வேட்கையை மறைக்கவும் முடியாது. நமக்குத் தும்மல் வரும் பொழுது கேட்டுக்கொண்டா வருகிறது? தானே அல்லவா தோன்றிவிடுகிறது? அதைத் தடுக்க முடியுமா? அதுபோன்றதுதான்."

"ஆம், உண்மையே" என்று புன்னகையோடு கூறினாள் வசந்தி.

இவர்கள் பேசிக்கொள்வதை இன்னதென்று அறிய முடியாமற் போனாலும், ஏதோ பேசுகிறார்கள் என்பதை மட்டும் அறிந்தான் இளைஞன் ஸத்துகன். அவர்களின் வடிவத்தைப் பார்த்தும் பார்க்காததுமாக உட்கார்ந்திருந்தான். 'இப்பெண்ணோடு எவ்வாறு பேசுவது? இன்று எவ்வாறேனும் இவளுடன் வார்த்தையாடி என் வசம் ஆக்குவேன்' என்று ஆலோசித்து மஞ்சத்தில் அமர்ந்திருந்தான். 'வலியச் சென்று அவர் யார் என்பதை அறிந்து

கொள்ளலாமா? அவருடன் பேசுவதில் தவறு என்ன? என்னிடம் அவருக்கு விருப்பம் உண்டு என்பதை அவர் கண்களின் நோக்கத்தால் அறிந்து கொண்டேன். இனி அவரோடு பேசுவதால் தவறு எதுவும் இல்லை' என்று பத்திரை முடிவு செய்தாள். அப்போது அவள் கண்களுக்கு அவ்வீரனின் அருகில் மஞ்சத்தில் வைக்கப்பெற்றிருந்த பளிங்குக் கூட்டில் உள்ள கிளி புலப்பட்டது. உடனே ஓர் எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. 'கிளி காரணமாக அவரோடு பேசலாம்' என்பதுதான். "வசந்தி, அவருக்கு அருகில் இருக்கும் கிளியைப் பார்த்தாயா? அழகுள்ள அந்தக் கிளியை விலை கொடுத்து நாம் பெற்றுக்கொள்வோமா?" என்றாள்.

"நான் சென்று கேட்டு வருகிறேன். நீ இங்கேயே இரு" என்று கூறிப் புன்னகையோடு சென்றாள் வசந்தி. அவர் என்ன சொல்வாரோ என்று பத்திரை கவலையுற்றாள்.

பேச்சுத் திறமையும், முன்னறிவும் உடையவள் வசந்தி. அவளுக்கு இருபது வயது இருக்கும்; தவிர அவள் கைம்பெண். ஆடவர் போக்கையும் பெண்டிர் போக்கையும் அளந்து அறிந்தவள். பத்திரையின் உள்ளக் குறிப்பை உணர்ந்தேதான், ஸத்துகனிடம் சென்றாள். 'கிளி வேண்டுமென்றால் அதைப் போன்ற ஆயிரம் கிளிகள் கூடப் பெறலாம். ஆனால், ஸத்துகனைப் பெற முடியுமா?' என்று எண்ணியே அவனிடம் சென்றாள்.

வசந்தியின் வருகையை எதிர்பார்த்தே அங்கு அவன் உட்கார்ந்திருந்தான். ஸத்துகனின் கம்பீரத் தோற்றத்தைக் கண்டு வசந்திக்கு நாணம் மிகுதியாயிற்று. பெண் பிறப்பிற்கு நாணம் இயல்புதானே? எனினும் சிறிது தைரியத்துடன் அவனைக் கைகுவித்து வணங்கினாள். கிளியையும் அவனையும்

மருள மருளப் பார்த்தாள். உயிரற்ற கிளி என்பது தெரிந்ததும் அவளுக்கு வியப்பாகவே இருந்தது.

"இந்தக் கிளி உயிரற்றதா?"

"ஆம், உயிரில்லாதது ஒன்றே குறை."

"விலைக்குக் கொடுப்பதா?" என்று புன்னகையோடு மென்குரலில் கேட்டாள்.

"ஏன், இதைப் பெறுவதில் ஆவல் உண்டோ?"

"ஆம், என் தோழி அதோ கூடாரத்தில் இருக்கிறாள். அவள் விரும்புகிறாள்."

"அவ்விதமானால், இதோ தருகிறேன். அந் நங்கை பெயர் என்ன?"

"பத்திரை என்று சொல்லுவார்கள். ஏறுதி மும் முடிநாயகனுடைய புதல்வி; இளமையிலேயே தாயை இழந்தவள். கன்னிமாடத்தில் விரதம் கொண்டுள்ளாள். இந்திரவிழாவில் நாள்தோறும் காமன் கோட்டத்தில் காமனை வணங்க வந்து செல்கிறாள். நான் அவளுடைய தோழி. தாங்கள் கூடாரத்திற்கு வந்தால் இதற்குரிய விலையைக் கொடுத்துப் பெற்றுக்கொள்வாள்."

"அப்படியே வருகிறேன். நீ முன்னே போ" என்று கூறிவிட்டு எழுந்தான். நாணத்துடன் வசந்தி முன்னே சென்றாள். கூட்டுக்கிளியைக் கையில் எடுத்துக்கொண்டு பின்னே சென்றான் ஸத்துகன். ஸத்துகன் வரவைக் கண்டதும் கூடாரத்திற்குள் ஒதுங்கி நாணி நின்றாள் பத்திரை. வசந்தி முன்னே சென்று ஸத்துகன் வரவை அவளுக்குக் கூறிவிட்டு ஒதுங்கி நின்றாள். ஸத்துகன் கூடாரத்தில் புகுந்து முகப்பில் நின்று கொண்டான். வீரனைக் காண்பதிலும், பேசுவதிலும் அதிக ஆவல் கொண்டிருந்த அவள் எக்காரணத்தாலோ மெய் நடுங்கித் தலைகுனிந்து நின்றாள். அவனை மீறிய

வேட்கையால், அவள் கண்கள் அச்சமும் ஆர்வமும் நிறைந்து ஸத்துகனை மருண்டு மருண்டு நோக்கின. புன்னகையோடு ஸத்துகன் அவளை நோக்கினான். கண்ணோடு கண்ணிணை நோக்கு ஒத்தன. காதலர் உள்ளம் கலந்தனர். கிளியின்மீது தன் நோக்கத்தைச் செலுத்தினாள் பத்திரை. "இந்தக் கிளியை விரும்பினால் கொடுக்கிறேன். விலைக்கு வாங்காத பொருளை விலையில்லாமலே கொடுக்கிறேன்" என்று கூறி இரு கைகளாலும் அதை ஏந்தி நின்றான். அதற்குமேல் பத்திரைக்குத் தைரியம் உண்டாயிற்று.

"தாங்கள் இதை எங்கே பெற்றீர்கள்? இந்தக் கிளி, உயிரற்றதா?" என்றாள்.

"உயிரற்ற கிளிதான். எனக்கு இந்நகரில் உள்ள வணிகர்களெல்லாரும் நண்பர்கள். அயல் நாட்டிலிருந்து இங்கு வாணிகம் செய்ய வந்த யவனர், துருக்கர், சீனர், சாவகர் முதலியவர்களும் எனக்கு நண்பர்கள். அவர்களில் யவனத்தச்சன் ஒருவன். அவன் ஞாபகார்த்தமாக இதை எனக்கு அளித்தான். என் ஞாபகமாக இதை நான் அளிக்கிறேன்" என்று கிளியை நீட்டினான். அதை வாங்காமல் எப்படி இருக்க முடியும்? சிறிது நாணத்துடன் முன்னே நடந்து கைகளை நீட்டி வாங்கிக்கொண்டாள். அவன் கைவிரல்கள் சிறிது பட்டுவிட்டன. அப்போது அவள் உடல் சிலிர்த்தது. ஸத்துகனின் கைவிரல்களைச் சிறிது தொட்ட அளவிலேயே அவள் இன்பம் கண்டாள். அவனும் இன்பம் கண்டான். 'கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று, அறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள' என்பது உண்மையன்றோ? இருவர் உள்ளத்திலும் உணர்ச்சி வேகம் மிக்கது. சிறிது வாய் பேசாது நின்றனர்.

பலநிற வர்ணம் கொண்ட மெல்லிய ஆடை பத்திரையின் அங்கலாவண்யத்தை மிகவும் அழகு

செய்தது. மாலை இளந்தென்றல் வீசுதலால் அவள் மேனியில் அங்கங்கே திளைத்துக் கொண்டிருந்தன ஆடையும் அணிகளும். அந்தக் காட்சியைக் கண்டு நகையுடன் நின்றான் ஸத்துகன்.

"நாழிகை ஆகிவிட்டது" என்று சிறிது நகர்ந்தான ஸத்துகன். உடனே பத்திரை திடுக் கிட்டாள். சிறிது முன்னே வந்து நின்றாள்.

"தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்?"

"நான் வணிகர் வீதியில்தான் இருக்கிறேன். உங்கள் மாளிகையிலிருந்து அரைக் காதத்திற்கு அப்பால் என் மாளிகை இருக்கிறது. ஏனாதி பெருஞ்சாத்துவனுடைய புதல்வன் யான். ஸத்துகன் என்று என்னை அழைப்பார்கள்."

அப்போது சிறிது வியப்புடன் ஸத்துகனையும் பத்திரையையும் நோக்கினாள் வசந்தி. "என் ஞாபக மாக இந்த மோதிரத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டு கிறேன்" என்று தன் கை விரலாழியைக் கொடுத்தாள் பத்திரை. அருகில் சென்று அதை வாங்கிக் கொண்டான். அப்போது வசந்தி கூடாரத்திற்கு வெளியில் சென்று எங்கோ நோக்கி நின்றாள். ஸத்துகன் பத்திரையின் காதோடு ஏதோ கூறுவது போல் தோன்றியது. பத்திரையின் கண்களும் கன் னங்களும் சிவந்தன.

"நாளைக்கு மறுபடியும் சந்திக்கிறேன்" என்று கூறிவிட்டுக் கூடாரத்திற்கு வெளியே வந்தான் அவன். பத்திரை மருண்டு நோக்கினாள். ஸத்துகன் விரை வாகக் குதிரையிருக்குமிடம் சென்று அதன்மேல் உட் கார்ந்து கடிவாளத்தை இழுத்துப் பிடித்தான். குதிரையின் வேகம் பத்திரையையும் வசந்தியையும் திகைக்கச் செய்தது. அவன் சென்ற திசையையே நோக்கினாள் பத்திரை. அவனுருவம் கண்களுக்கு மறைந்தபின் தலை குனிந்தாள். அவள் கண்களி

லிருந்து இரண்டு நீர்த்துளிகள் நிலத்தில் விழுந்தன. கடலின் கொந்தளிப்பும், முல்லை மலரின் நறுமணமும், சுற்றிலும் கேட்கின்ற வீணையொலி, வேய்ங்குழலொலி, மதுரகானம் முதலியனவும், மெள்ள மெள்ள வீசுகின்ற மந்தமாருதமும் அவள் உள்ளத்தைக் கலக்கி உணர்ச்சி வேகத்தை எழுப்பின. அவை துணைபிரிந்த காதலருக்குத் துன்பம் தருவனவன்றோ?

நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு தோழியை நிமிர்ந்து பார்த்தாள் பத்திரை. நிகழ்ந்தனவெல்லாம் கனவு போலத் தோன்றின அவளுக்கு.

"வசந்தி, அவருடன் நான் இவ்வளவு தைரியத்துடன் பேசியதும், நடந்துகொண்டதும் எனக்கே வியப்பை அளிக்கிறது. அவரைக் கண்டவுடன் என் உள்ளம் அவர் வசமாகிறது. நீண்ட நாட்கள் பழகியவர்போல் அவரிடம் அன்பு மிகுதியாகிறது. அவரைக் காணாதபோது, எப்போது காண்பேன் என்று மனம் ஏங்குகிறது."

"பத்திரை, காதலுணர்ச்சி உடையவர் உள்ளம் இவ்வாறு கலங்குவது இயல்பே. அதிலும் பெண்டிர் உள்ளம் பெரிதும் கலங்கும். நாழிகை ஆகிவிட்டது. அவரும் சென்று விட்டார். காமன் கோட்டம் போய் மீளவேண்டும்" என்றாள். "ஆம், வா, போவோம்" என்று கூறிப் பத்திரை புறப்பட்டாள். வசந்தி, பூ முதலியவற்றை எடுத்துக்கொண்டு பத்திரையுடன் காமன் கோட்டம் சென்றாள். காமதேவனை வணங்கிவிட்டு விரைவில் திரும்பினர், இருவரும். நன்றாக இருள் பரவிவிட்டது. இருவரும் சிவிகையில் அமர்ந்தனர். யவன வீரர்கள் கூடாரத்தைக் கலைத்து அவற்றைச் சிவிகையில் வைத்தனர். மல்லர்கள் சிவிகையைத் தாங்கி விரைந்து சென்றனர்.

சிவிகை செல்லும்போதே, பத்திரையும், வசந்தியும் ஸத்துகனைப்பற்றிப் பேசிக்கொண்டு

சென்றனர். பத்திரையின் மனத்தை மாற்றும் முயற்சியைக் கைவிட்டாள் வசந்தி. அவள் பெண் பிறப்பினளாயினும், 'பெண்ணறிவு பெரும் பேதைமை உடையது' என்பதைப் பத்திரையால் அறிந்துகொண்டாள். ஸத்துகனைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருக்கும் பத்திரைக்கு அவள் மனப் போக்கறிந்து ஆறுதல் கூறினாள். பத்திரைக்கும் ஸத்துகனுக்கும் இவ்வளவு விரைவில் காதல் கிளைத்து உருக்கொண்டதுபற்றி அதிசயித்தாள்.

'மறுபடியும் சந்திக்கிறேன்' என்று கூறியபடி, மறுநாளும் சந்தித்தான் ஸத்துகன். ஏன், அன்று முதல் ஸத்துகன், பத்திரையைக் காணத் தவறுவதில்லை. பத்திரை, சிறிது முன்பாகவே காமன் கோட்டத்துச் சோலைக்கு வருவாள். ஸத்துகனும் வந்து விடுவான். இருவருக்கும் பிரிய மனம் வராது. மாளிகைக்குச் செல்லும்போதும் நேரமாகிவிடும். நீண்டநேரம் பேசியிருந்துவிட்டு இருவரும் பிரிந்து செல்வார்கள். இவர்களுக்கு இடையில் வசந்தி மிகவும் சிரமப்பட்டாள். சமயம் நேரும்போதெல்லாம் ஸத்துகனைப்பற்றி அறிய முயன்றாள் வசந்தி. அவள் முயற்சி வீணாகவில்லை.

## 4

## தலை தப்பியது

சூரியோதயம் ஆயிற்று. மெல்லிய சிவந்த கிரணங்கள், காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள மாளிகைகளில் அழைத்தும் அழையாமலும் உள்ளே புகுந்தன. கணிகையர் வீதியில் உள்ள மாளிகைகளில் அவர்கள் வரவேற்பு இல்லாமலே உட்புகுந்தன.

சூரிய கிரணங்கள், சாளரங்கள் வழியாக உள்ளே புகுந்து தம் மேனிகளில் தவழ்ந்த பின்பே கணிகை மகளிர் எழுந்திருப்பர். அன்றைத் தினம் அதற்கு மாருக, அவ்வீதியில் உள்ள உயர்ந்த மாளிகை ஒன்றின் மேல்மாடத்தில் சாளரக் கதவுகள் இளங் காலைப் போதிலேயே திறக்கப் பெற்றிருந்தன. அகன்ற அந்த மாளிகையில் சாளரங்கள் மிகுதியாக இருந்தன. மேல்மாடத்தின் நடுவில் விளங்கிய இரண்டு பெரிய சாளரக் கதவுகளும் நன்ருகத் திறந்திருந்தன. அதற்கு நேராக மாடத்தின் நடுவில் சித்திரப் பூங் கட்டிலில் இருவர் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். கட்டிலின் ஒரு பக்கத்தில் இளைய ஆண் சிங்கம் போன்ற ஓர் இளைஞன் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அருகில் அழகே வடிவெடுத்து வந்தாற் போன்ற ஓர் இளமங்கை அமர்ந்திருந்தாள். அரையில் கட்டிய வாளில் ஒரு கையையும், இள மங்கையின் வலது கையில் ஒரு கையையும் வைத்து உட்கார்ந் திருந்தான். புன்னகை பொலியத் தலை நிமிர்ந்து பேசினன் அவன். குறுமுறுவலுடன் தலை குனிந்து பேசினள் அவள். வெண்கலத்தால் செய்த மணியின் ஒலிபோல் கலகலவென்றிருந்தன அவன் வார்த்தை கள். ஒரு கிளியின் மழலைச் சின்மொழியாக இருந்தது அவள் பேச்சு. இடையிடையே இருவரும் மாறி மாறி நகைத்தது கிண்கிணியும் சிலம்பும் ஒலிப்பன போன்று இருந்தன. சிறிது நேரம் இரு வரும் பேச்சற்று மௌனமாக இருந்தனர். பேச்சின் தொடக்கத்திலேயே இளமங்கை ஒரு கேள்வி கேட்டாள்.

"இன்றைத் தினமும் காரியம் இருக்கிறதோ?"

எவ்வாறு அதற்கு மறுமொழி கூறுவது என்று ஆலோசித்தான் இளைஞன். சமயத்துக்குத் தக்க சாதுர்யப் பேச்சுப் பேசும் அவன், அடுத்த கணமே சொன்னன்.

"ஆம்; இன்னும் சில நாட்கள் அவர்களுடன் அலைய வேண்டி யிருக்கிறது. ஆனாலும் உன்னைப் பார்க்காமல் என்னால் இருக்கமுடியுமா?"

"அவர்கள் யார் என்று யான் அறியலாமோ?"

"துருக்க வணிகர்களே; நம் மரக்கலங்கள் ஐந்தும் பண்டங்களை ஏற்றிக் கொண்டு அயல்நாடு செல்லவேண்டும். நம் ஆட்களுடன் அவர்களையும் அனுப்பவேண்டும். எனக்கு மிகவும் அவர்கள் வேண்டியவர்கள்... அதனால் என்ன? எந்தக் காரியம் இருந்தாலும் இரவில் இங்கு வந்து விடுவேன். கவலைப்படாதே."

"தாங்கள் சொன்னபின், மறுமொழி நான் என்ன சொல்லுவேன்! என்னுடைய மன இயல்பைத் தாங்கள் அறியீர்களா? இந்திர விழா, தொடங்கிய சில நாட்களிலிருந்து தாங்கள் சோர் வடைந்திருக்கிறீர்கள். அதனால் என் மனம் மிகவும் வருந்துகிறது, ...... கேட்டேன்."

"வேறு காரணம் இல்லை என்றேனே! உன் மனம் வருந்தினால் என் மனம் வருந்தாதா? வருத்தம் வேண்டாம். நான் உன்னை அறியேனா? என்னை நீ அறியாயா? மனம் கலங்குவது எதற்காக? இன்பம் துன்பம் இரண்டையும் சமமாக எண்ணும் எனக்கு மனச்சோர்வே இல்லை.

"எத்தனையோ பல துன்பங்கள் அடைந்திருக்கிறேன். நீயும் அடைந்திருக்கிறாய். அந்தக் காலங்களிலெல்லாம் நாம் இன்பம் பெறவில்லையா? நம் இன்பத்திற்கு இடையூறு எக்காலும் உண்டாகாது. 'நீ, மாசற்றதும் மணம் மிக்கதும், வாடாததுமாகிய பாரிசாத மலர்! ஆடவராகிய பிற வண்டுகள் உன்மீது மொய்யா. எனக்கே உரியவள் நீ' என்று யான் அன்று கூறியது இன்றும் என் உள்ளத்தில் ஒலித்துக்

கொண்டிருக்கிறது. அந்நிகழ்ச்சியை யெல்லாம் நீ மறந்தாயா?"

"யான் மறக்கவில்லை. பெரு மழையால் தளிர்த்த மரம்போல் தங்கள் வார்த்தைகளால் என் உள்ளமும் உயிரும் தளிர்ப்புற்றது. அவ்வார்த்தைகள் எனக்கு இன்ப ஊற்றாக இருக்கின்றன. 'என் உயிர் உடல் இரண்டையும் புத்த தேவன் அறியத் தங்களுக்கே உரிமையாக்கி விட்டேன்' என்று அன்று யான் கூறியதையும் தாங்கள் உணர்வீர்கள். பழைய நிகழ்ச்சிகளை நினைக்க நினைக்க என் உள்ளம் குளிர்கின்றது. மாலைக்காலத்தில், இம்மாடத்திலிருந்து புத்த தேவருடைய அருட்செயல்களையும், அவர் அருளிய பொன் மொழிகளையும் தாங்கள் கூறி வந்தது எனக்குப் பேரின்பமாக இருந்தது. சில நாட்களாக அவ்வாறு கேட்கும் பாக்கியம் எனக்கு இல்லையே என்று வருந்துகிறேன்."

"ஆம். எனக்கும் அப்படித்தான். போதிநாதன் அருளால் நமக்குச் சிறிதும் குறைவு உண்டாகாது" என்றான். அப்போது அவன் முகத்தில் ஒருவிதச் சோர்வு இருப்பது நன்றாகப் புலப்பட்டது. அவள் அதை நன்றாக உணர்ந்துகொண்டாள்.

"தாங்கள் ஏதோ மனக்கவலை அடைந்திருக்கிறீர்கள். அதை அடியாளுக்கு வெளியிடக்கூடாது என்று மறைக்கிறீர்கள்."

"ஒன்றும் இல்லை. அப்படி இருப்பதாக நீ அறிந்துகொண்டது எவ்வாறு?"

"தங்கள் முகமே அறிவிக்கின்றது. அது மட்டுமல்ல. நேற்றிரவு, தாங்கள் தூங்குகையில் ஏதோ பிதற்றினீர்கள்."

"நானா? என்ன பிதற்றினேன்?"

"அது விளங்கவில்லை. அதனால்தான் கேட்கிறேன்."

"பிதற்றியிருப்பேன். அதற்குக் காரணம் அங்கும் இங்கும் அலைவதுதான்."

"அலைந்தால்?"

"உடலுக்கு அலைச்சல் ஏற்பட்டால் மனச்சோர்வு உண்டாகிறது. அதனால் ஏதாவது பிதற்றியிருப்பேன். வேறொன்றும் இல்லை."

"அவ்விதமானால், நான் கேட்கவில்லை. சிறிது இப்பழங்களை அருந்துங்கள்."

"ஆனால், இன்று பகலிலும் இங்கே தங்கவேண்டும் என்கிறாயா?" என்று கூறிக்கொண்டே சில பழங்களை அருந்தினான்.

"ஆம், இன்று மாலையில், காவிரிச் சங்கமத்திற்குப் போகலாம் என்றுதான்."

"நான் வேறு காரியமாகச் செல்லவேண்டுமே!"

"இந்திரவிழா முடிவதற்குச் சில தினங்களே இருக்கின்றன. தாங்கள் இல்லாமல் தனியே போகப் போவதில்லை."

"இல்லை; அதற்குள் ஒருநாள் போய் வருவோம்."

"தங்கள் விருப்பம்."

"இன்று மாலை வரையில் இங்கே இருந்து விட்டுப் போகிறேன் நிச்சயமாக ஒரு நாள் அழைத்துப் போகிறேன்" என்று கூறினான்.

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தனர். இளமங்கையின் பெயர், சயந்தி. அவளுடன் பேசிக்கொண்டிருந்த இளைஞன் ஸத்ருகன்தான். நாடகக் கணிகையர் குலத்தில் பிறந்தவள் சயந்தி. அவளுக்கு இருபது வயது இருக்கும். கணிகையர் வீதியில் உள்ள மகளிரில், அழகுக்குப் பேர் பெற்றவள் சயந்தி. நாட்டியம் ஆடுதலில் திறமை உடையவள்.

பதினாறும் வயதில் அரங்கில் ஏறி நாட்டியம் ஆடினாள். அன்று அவள் நாட்டியத்தைக் கண்ட யாவரும் வியந்து அவளைப் புகழ்ந்தனர். அன்று அவள் நாட்டியத்தைக் கண்டு மகிழ்ந்தவர்களில் ஸத்துகனும் ஒருவன். அன்று அவனைக் கண்டு காதல் கொண்டாள் சயந்தி. ஸத்துகனும் அவளைக் காதலித்தான். அதுமுதல் ஸத்துகனும் சயந்தியும் இணைபிரியாக் காதலராயினர். ஸத்துகனைக் காதல் நாயகனாகக் கொண்டபின், பொது இடங்களில் நாட்டியம் ஆடுவதை நிறுத்திவிட்டாள் அவள். அவளுடைய இளமைச் செவ்வியின் இன்பத்தில் மயங்கி இருந்தான் ஸத்துகன். இரவும் பகலும் அவளைப் பிரியாமல், உடனிருந்து வந்தான். அவளுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தான். ஸத்துகனும், சயந்தியும் இணைபிரியாக் காதலர் என்பதைப் பலரும் அறிவர். ஸத்துகன் இல்லாமல் தனியே எங்கும் அவள் செல்வதில்லை. அதனால் பிறர் அவளைக் காண்பதே அரிது. கணிகையர் குலத்தில் பிறந்தவளெனினும் சேற்றில் மலர்ந்த தாமரைபோல் பரிசுத்தமானவள். இணையற்ற அழகுடையவள். நற்குணம் உடையவள். பெண்களுக்குள் விளக்குப்போல் விளங்கினாள். புத்த தேவனிடம் அளவற்ற பக்தியுடையவள். ஸத்துகனிடம் அவளுக்குப் பிரேமை அதிகமாகிக் கொண்டே இருந்தது. அதற்குக் காரணம், புத்ததேவனைப் பற்றிய கதைகளையும், அவர் அருளிய பொன் மொழிகளையும் அவளுக்கு நாள்தோறும் கூறிவந்தான் அவன். அதைக் கேட்டு மனம் உருகுவாள் சயந்தி. ஸத்துகனுக்கு அவ்வாறு கூறுவதில் ஆவல் அதிகம்.

ஸத்துகனை அன்றி வேறோர் ஆண் மகனை நினையாள் அவள். தெய்வமாகவே அவனைக் கருதினாள். அவளைப்போல் அவனுக்கும் பிரேமை அதிகம். அக்கினி பூர்வமாகக் கல்யாணம் ஆகாததுதான் குறை. கணிகையர் கல்யாணத்தை, யார் மதிப்பார்கள்? அது

விதிக்கு விலக்கு என்றே கூறுவர். அதைக் குறையாக அவர்கள் கருதவில்லை. சயந்தி விரும்பும் எந்தப் பொருள்களையும் உடனுக்குடன் வாங்கிக் கொடுத்தான். பலவகை ஆபரணங்களை அவளுக்கு அணிவித்தான். அவர்களின் காதலுக்குப் பல இடையூறுகள் நேர்ந்தன. சயந்தியை விரும்பிய ஆடவர்களில் பலர் ஸத்துகன் வாளுக்கு இரையாயினர். சயந்தி ஒரே நிலையில் இருந்தாள். அதனால் பிற கணிகையர்களுக்குச் சயந்தியிடம் பொறாமையும் வெறுப்பும் இருந்து வந்தன. ஸத்துகனிடத்துள்ள அச்சத்தால், கணிகையர் வெளிப்படையாகச் சயந்தியைப் பகைக்கவில்லை. தங்களுக்குள் மறை முகமாகவே பேசிக் கொள்வர். சயந்தியும் அதை அறியாமல் இல்லை. கணிகையர் குலத்தையும், அவர்கள் செய்கையையும் வெளிப்படையாக அவள் வெறுத்தாள். ஸத்துகன் இருக்கையில் அவளுக்கு யாரிடம் பயம்? இவர்களுக்குக் காதல் முளைத்து வளர்ந்து மூன்று வருஷங்களுக்குமேல் ஆயின. அது வளர்ந்துகொண்டே இருந்தது. களங்கம் இல்லாத காதல்தான். இடையே அதற்குப் பங்கம் வந்துவிட்டது. அதற்குக் காரணம் யார்? ஸத்துகனா? சயந்தியா? ஸத்துகன்தான். கணிகையர் குலத்தில் பிறந்தவளாயினும் கற்புக் களஞ்சியமாக விளங்கினாள் சயந்தி.

சயந்தியின் உயிர்க் காதலனாகிய ஸத்துகன், அன்று ஒரு நாள் வணிகர் வீதியில் பத்திரையைக் கண்டது முதல் அவள் மோக வலையில் வீழ்ந்தான். சயந்தியை மறக்கலானான். ஆனால், அவ்விதம் மறக்க இயலவில்லை. உயிரோடு ஒன்றிய அந்தக் காதல் எளிதில் மறையுமா? ஸத்துகனின் வஞ்சனையைப் பேதை சயந்தி அறியாள். கள்ளம் கபடற்ற அவள் ஒன்றும் அறியாள். பத்திரையின் அழகுக்கும் குணங்களுக்கும் எந்த விதத்திலும் சயந்தி குறைந்தவள் அல்லள். உயர் குலத்துப் பிறந்தவள் பத்திரை.

கணிகையர் குலத்துப் பிறந்தவள் சயந்தி. — இதுவே இருவருக்கும் வேற்றுமை. உயர்குலத்தில் பிறந்த தற்கு ஏற்பப் பத்திரையின் முகத்தில் ஒரு பொலிவு இருந்தது. கல்வியறிவுமிக்க பத்திரையின் வதனம் வசீகரம் வாய்ந்ததுதான். எனினும் சயந்தியின் முகம் சிறிதும் கவர்ச்சிக் குறைவு உடையதல்ல. சயந்தியிடம் இல்லாத அழகும் இன்பமும் பத்திரையிடம் இருப்பதாக எண்ணி அவன் மயங்கினான். பத்திரையிடம் இளமைச் செவ்வியின் புதுநலம் மாந்தப் பேரவாக் கொண்டான். ஸத்துகனின் மாயம் ஒன்றையும் அவள் அறியவில்லை. காதல் என்பது இன்ன தன்மையது என்பதை அவன் உணர்ந்திருந்தால் அவ்வாறு செய்திருப்பானா?

ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் காதல் உண்டாயிருப்பதைச் சயந்தி உணர்ந்தால் அவள் உள்ளம் எவ்விதம் இருக்கும்? பத்திரையிடம் ஸத்துகன் காதல் கொண்டது முதல், கடந்த சில நாட்களாகச் சயந்தியின் மாளிகையில் முன்போல் தங்குவதில்லை. இரவில் மட்டும் வருவான். பகலில் சென்று விடுவான். முன்புபோல் சயந்தியுடன் இனிமையாகப் பேசுவதில்லை. முன்பிருந்த குதுகலமும், களிப்பும் இப்பொழுது இல்லை. அவன் மனம் கலங்கியிருந்தது. தன் மீது சயந்தி ஐயங்கொள்ளாதவாறு, சிறிது மன உறுதியுடன் அவளோடு பேசிவந்தான். அவன் தன் மனத்தில் உள்ளதை மறைத்தபோதிலும் அவன் உள்ளக் கலக்கத்தை எளிதில் சயந்தி உணர்ந்து கொண்டாள். உணர்ந்தும் என்ன? அவன் மனத்தைப் புண்படுத்திப் பலவந்தமாக அவன் உள்ளக்கிடக்கையைக் கிளறிவிட விருப்பவில்லை, அவள். தானாகவே உள்ளத்தில் உள்ளதைக் கூறுவான் என்று எதிர்பார்த்தாள். அவன் கூறவில்லை. ஓருயிரும் ஈருடலுமாய் இருந்து நேயமுடன் பழகும் தன்னிடம் சொல்லத்தகாத விஷயம் என்ன

என்று அவள் உள்ளம் ஏங்கியது. 'இந்திர விழாத் தொடங்கி இவ்வளவு நாட்கள் ஆகிவிட்டன. இன்னும் சில நாட்கள்தாம் முடிவதற்கு இருக்கின்றன. மாலைக்காலத்தில் நகர்க்காட்சியைக் கண்டு மகிழ் வதற்கு விருப்பம் இல்லை. இவ்வளவு நாட்கள் மன மொன்றி இருந்து என் விருப்பத்தை இன்புடன் நிறைவேற்றி வரும் இவர் சில நாட்களாக மனம் கலங்கியிருப்பதற்குக் காரணம் என்ன? யான் ஏதாவது பிழை செய்திருப்பேனோ?' என்று வருந்தினாள். வருத் தத்தை வெளிக்காட்டாமல் எப்பொழுதும் போல் அன்று அலர்ந்த புது மலர் என முகமலர்ச்சியுடன் இருந்தாள்.

தன்னுடைய நேர்மையற்ற செய்கையை எவ்வா றேனும் சயந்தி உணர்ந்தால் உயிர் துறப்பாளோ என்று எண்ணி இருதலைக் கொள்ளி எறும்புபோல் தவித்தான் ஸத்துகன். ஆனால் சயந்தியின் மெல்லிய உள்ளம் வருந்திப் பிளவுற்றபோதிலும் பத்திரையைப் பற்றிய சிந்தனையை அகற்ற அவன் துணியவில்லை. நேர்மைக்கும், மனந்தூய்மைக்கும் சான்றாக விளங்கிய சயந்தியைக் கண்டு பேசும்போதெல்லாம் அவனுக்கு ஒரு வித அச்சமும் இரக்கமும் உண்டாகும். எனினும் பத்திரையிடம் அவனுக்குத் தோன்றிய புதிய மோகம், அவன் அறிவை விழுங்கி விட்டது.

மாலையில் நகர்க்காட்சி காண்பதற்குச் சயந்தியை அழைத்துப் போக அவன் விரும்பவில்லை. பத்திரை யிடம் கொண்ட புதிய காதலும் அவளைக் காண வேண்டுமென்று மேன்மேல் எழுகின்ற ஆசையுமே அதற்குக் காரணம். ஆனாலும் சயந்தியின் விருப் பத்தை ஒருவாறு பூர்த்திசெய்ய எண்ணினான். அன்றைத்தினம் மாலைக்காலம் வரையில் சயந்தி யுடன் தங்கினான். அங்கேயே நீராடி உணவு அருந் தினான். அவளோடு இனிமையாகப் பேசிப் பொழுது போக்கினான். சயந்தியின் மனம் அமைதி அடையும்

பொருட்டு, புத்ததேவன் அருளிய பொன்மொழி களைக் கூறினான். புத்ததேவனிடம் சயந்திக்கு உள்ள அளவற்ற பக்தியை உணர்ந்தே அவன் அவ்வாறு கூறினான். ஆனாலும் தூய உள்ளம் படைத்த அவள் ஸத்துகன் கூறிய நீதிமொழிகளைக் கேட்டு ஆனந்தக் கண்ணீர் விட்டாள். ஸத்துகனிடம் கொண்ட ஐயத் தையும் மறந்தாள். அவள் உள்ளம் மகிழ்ந்ததைக் கண்டு ஸத்துகனும் மகிழ்ச்சி கொண்டான். இரு வரும் மகிழ்ந்திருக்கும் அச்சமயத்தில் சயந்தியின் சேடி, அங்கு வந்து வணங்கி நின்றாள். அவளை நிமிர்ந்து பார்த்தாள் சயந்தி.

"சயந்தி, யாரோ ஒருவர் வந்திருக்கிறார். சேனைத் தலைவர் என்று சொல்லுகிறார்" என்றாள் சேடி. கோவைப் பழம்போல் சிவந்தன சயந்தியின் கண்கள்.

"நாகவல்லி, யாரைப் பார்க்க அவர் வந்திருக் கிறார்? வந்த காரியம் என்ன என்று கேட்டு வா" என்று கோபத்துடன் கூறினாள் சயந்தி.

"யார், சேனைத் தலைவர்? அவருக்கு இங்கே என்ன காரியம்?" என்று கூறிக்கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தான் ஸத்துகன்.

மாளிகையின் வாயிலில் சேனைத் தலைவன் நின்றுகொண்டிருந்தான். மாளிகையின் முன் புறத்தில் குதிரை ஒன்று கட்டப்பெற்றிருந்தது. அதை முதலிலேயே அவன் கவனிக்கவில்லை. அந்தக் குதிரையின், அடையாளத்தால் ஸத்துகன் அங்கு இருப்பதை உணர்ந்துகொண்டான். உடனே அவன் உள்ளம் சிறிது பரபரப்புற்றது. மாளிகையை மேலும் கீழும் பார்த்த வண்ணம் ஏதோ ஆலோ சித்தான். அதற்குள்ளாக மேல் மாடத்திலிருந்து சயந்தியின் சேடியாகிய நாகவல்லி வந்துவிட்டாள்.

"வந்த காரியம் என்னவென்று சயந்தி கேட்டு வரச்சொன்னாள்; ஸத்துகரும் இங்கு இருக்கிறார்" என்றாள் நாகவல்லி.

"அப்படியா? நல்லது. ஸத்துகரைத் தேடித்தான் வந்தேன்" என்றான். நாகவல்லி மேல்மாடம் சென்றாள். சேனைத் தலைவன் கூறியதை ஸத்துகனிடம் சொன்னாள். அதைக் கேட்டதும் ஸத்துகனுக்குக் கோபம் மிகுதியாயிற்று. கட்டிலில் இருந்து நிலம் அதிரக் கீழே குதித்தான். வெகு வேகமாக மேல் மாடத்திலிருந்து கீழிறங்கலானான். அதைக் கண்ட சயந்தி என்ன நேரிடுமோ என்ற அச்சத்துடன் அவனோடு சென்றாள். ஸத்துகன் முன்புறத்தை அடைந்து நின்றான். ஸத்துகனைக் கண்டதும் குதிரையிலிருந்து குதித்தான் சேனைத் தலைவன்.

"இளந்தத்தனா? என்னைப் பார்க்க இங்கு வருவானேன்?"

"ஸத்துகா, உன்னுடைய மாளிகையில் நீ இல்லை என்பது தெரிந்தது."

"இங்கு இருப்பேன் என்று யார் சொன்னார்கள்?"

"பிறர் சொல்லவேண்டுமா? அது யான் அறிந்ததே."

"இனி அந்தப் பழக்கம் வேண்டாம். அதைச் சொல்லவே வந்தேன். நீ வந்த காரியம் என்ன?"

"கழார் என்ற இடத்தில் நேற்றும், சில தினங்களுக்கு முன்பும் களவுகள் நடந்திருக்கின்றன. தங்கள் ஆட்கள் அதைச் செய்திருக்கிறார்கள் என்று தெரிகிறது."

"ஆட்கள் பிடிபட்டிருக்கிறார்களா?"

"இல்லை. அவர்களைப்பற்றி அறிந்து போகத்தான் வந்தேன்."

"எனக்கு ஒன்றும் தெரியாது. நகரில் எத்தனையோ களவுகள் நடக்கின்றன. அதற்கெல்லாம் நான் பொறுப்பாளியா? என் ஆட்கள் அதைச் செய்யவில்லை. களவை நேர்முகமாகக் கண்டுபிடித்துக் கொள். எக்காரணத்தைக் கொண்டும் இனி இங்கு வருவதை விட்டு விடு" என்றான் ஸத்துகன். படபட வென்று கோபமுடன் ஸத்துகன் கூறும் வார்த்தை களைக் கேட்டுச் சேனைத் தலைவன் இளந்தத்தன் அஞ்சினான். உடனே மறுமொழி கூறாமல் குதிரை மீது ஏறி உட்கார்ந்து மிக வேகமாகச் சென்று விட்டான். அவன் உருவம் மறையும் வரையில் கோபமுடன் அங்கேயே நின்றான் ஸத்துகன். கணிகையர் வீதியைத் தாண்டிவிட்டது. இளந் தத்தனின் குதிரை. ஸத்துகன் புன்னகையோடு சயந்தியை அழைத்துக் கொண்டு மேல் மாடம் சென்றான். இளந்தத்தனின் தடுமாற்றத்தைப்பற்றி சயந்தியிடம் ஏளனமாகக் கூறிக்கொண்டிருந்தான் ஸத்துகன்.

சோழராஜனின் சேனைத் தலைவன் இளந் தத்தன். அவனுக்கு இருபத்தைந்து பிராயம் இருக்கும். ஸத்துகனுக்கு இளமை தொடங்கி நண்பனாக இருந்தவன். ஸத்துகனைப் பற்றி அவன் நன்கு அறிந்தவன். ஸத்துகனைப் பற்றிப் பிறருக்குத் தெரியாத சில உண்மைகள் அவனுக்குத் தெரியும். அவ்விருவருடைய நட்பும் நிலைத்து நிற்கவில்லை. சயந்தி காரணமாகவும் வேறு சில காரணங் களாலும் இருவருடைய நட்பும் குலைந்தது. சயந்தியை, ஸத்துகன் காதலித்த அன்று முதல் அவனுக்கும் இளந்தத்தனுக்கும் தீராப்பகை ஏற் பட்டுவிட்டது. சயந்தியிடம் தீராக் காதல்கொண் டிருந்தான் இளந்தத்தன். எவ்வாறேனும் அவளைத் தன் வயமாக்க வேண்டும் என்று எண்ணியிருந்தான். அதற்குச் சமயம் வாய்க்கவில்லை. பகலில் பெரும்

பாலும் சயந்தியின் மாளிகையில் ஸத்துகன் இருப்ப தில்லை என்பதை அவன் நன்கு உணர்ந்திருந்தான். அதனால் அன்று சயந்தியின் மாளிகைக்கு அவன் வந்தான். எதிர்பாராத விதமாய் ஸத்துகன் வந்திருப் பதை அறிந்துகொண்டான். உடனே, தக்கவாறு நடந்துகொண்டான். இளந்தத்தன் அங்கு வந்ததற்கு வேறு காரணம் கூறியதில் உண்மை இல்லாமல் இல்லை? கழார் என்ற இடத்தில் களவு நடந்தது உண்மையே. அக்களவுக்கும் ஸத்துகனுக்கும் தொடர்பு இருந்தது என்பதும் உண்மை. அது போன்ற களவுகள் அந்நகரில் நீண்ட நாட்களாக நடந்து வருகின்றன. அவற்றைக் கண்டுபிடிக்க முடியாததற்குப் பல காரணங்கள் உண்டு. அது விஷயமாய், இளந்தத்தன் செய்யும் முயற்சிகள் வீணாகி வந்தன.

ஆனால் அன்று அவன் வந்ததற்கு அந்தக் களவு காரணம் அல்ல. சயந்தியைக் காண்பதற்கே வந்தான். வந்தும் என்ன? ஸத்துகனைக் கண்டதும் 'தலை தப்பியது' என்று எண்ணி மீண்டு சென்றான். இளந்தத்தன் அங்கு எதற்காக வந்தான் என்பதை, ஸத்துகனும் சயந்தியும் உணர்ந்து கொண்டனர். ஸத்துகன் இல்லாதபோது, சில முறை, அங்கு அவன் வந்து சயந்தியைக் கண்டு பேசமுடியாமல் சென்றிருக் கிறான். அதைப்பற்றி ஸத்துகன் சிறிதும் அறியான். சயந்தி அவைகளைக் கூறாமல் இருந்ததற்குக் காரணம் இளந்தத்தனால் ஸத்துகனுக்குத் துன்பம் நேருமோ என்ற நினைவுதான். ஆனால் அன்றைத் தினம், பழைய விவரங்களை ஸத்துகனிடம் கூறிவிட்டாள் சயந்தி. இளந்தத்தன் மீது அவனுக்குக் கோபம் மிகுதி யாயிற்று. "இங்கு இனி அவன் வந்தால் வந்த அன்றே என்னிடம் சொல்லிவிடு. அவனை, என் வாளுக்கு விருந்திடுகிறேன்" என்று கூறினான்.

மாலைக்காலம் அணுகியது. ஸத்துகன் உள்ளமும் வேறு எங்கோ உலாவியது. சிறிது நேரம், அவளோடு இன்பமாகப் பேசியிருந்தான். "நாழிகை ஆகி விட்டது: சென்று விட்டு இரவில் வருகிறேன்" என்று எழுந்திருந்தான். "விரைவில் வந்து விடுங்கள்" என்றாள் சயந்தி, குனிந்து கொண்டே.

மேல் மாடத்திலிருந்து விரைவாக இறங்கினான். குதிரையைத் திருப்பி அதில் ஏறி உட்கார்ந்தான். மாளிகையின் வாயில் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள் நாகவல்லி. மேல் மாடத்தில் இருந்தபடி பார்த்துக்கொண்டிருந்தாள் சயந்தி. ஸத்துகன் மிக வேகமாகக் குதிரையைச் செலுத்திச் சென்றான். பத்திரையைப் பார்க்க அவன் செல்வது, சயந்திக்கு எவ்வாறு தெரியும் ?

## 5

### 'நம்ப வேண்டாம்'

"நீ செய்யும் காரியங்கள் சோழ ராஜனுக்கும் வெறுப்பைத் தருகின்றனவாம். எவரும் உண்மையாக உன்னிடம் அபிமானம் கொள்ளவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. நாளடைவில் பகைவர்களே உனக்கு மிகுதியாவார்கள். அதைப்பற்றி நீ சிறிதும் கவலைகொள்ளவில்லை. நாள்தோறும் நான் சொல்லிக் கொண்டே இருக்கிறேன்: 'கிழவன் ஏதோ பிதற்றுகிறான்' என்று இகழாதே. வயசு முதிர்ந்தவனெனினும் உனக்கு நான் தந்தை; அதனால் என் வார்த்தைகளை நம்பி, அதற்குத் தக்கவாறு நடந்து கொள்" என்றான் ஏனாதி பெருஞ் சாத்துவன்.

"சோழராஜன் என்னை வெறுத்தால் என்ன? விரும்பினால்தான் என்ன? யான் செய்யும் காரியங்கள் எல்லாம் புத்த தேவனுக்கு உரியவையே என்பதில்

ஐயம் இல்லை. புத்ததேவன் அருளிய பிடகத்திரயத்தை உணர்ந்தவர்கள் என்மீது குற்றம் கூறுர். சோழ ராஜனுக்கு அவை தெரியாதனவல்ல. சோழராஜன் என்னை வெறுப்பதாக உங்களிடம் சொல்லியது யார்?" என்ருன் மைந்தன் ஸத்துகன்.

"உன் இளமைப் பருவத்து நண்பன் இளந்தத்தனே அவ்வாறு கூறினுன். உனது பௌத்த சங்கத்தின் நன்மை தீமைகளைக் கவனிக்குமாறு அவனுக்கு அரசர் கட்டளையிட்டிருக்கிருராம். பௌத்த மதத்திற்கு உடன்பாடில்லாத பல காரியங்களை உன் ஸத்துக மந்திர பௌத்த சங்கத்தினர் செய்கின்றனராம்; இன்னும் ஏதேதோ சொன்னுன் அவன்" என்று கூறுவதற்குள் ஸத்துகனுக்குக் கோபம் மூண்டது.

"அவன் சொல்லுவதற்கு என்ன! நீங்கள் கேட்டுக் கொண்டிருந்தீர்களே! அதுதான் எனக்கு வியப்பாக இருக்கிறது. அரசன் கட்டளை எனக்குத் தெரியும். இளந்தத்தனின் வஞ்சகமும் தெரியும். உயிருள்ள வரையில் என் கொள்கையை யாருக்காகவும் மாற்றிக் கொள்ளமாட்டேன். என்னைப்பற்றி யாரும் கவலைப் படவேண்டாம்" என்று கூறிவிட்டுக் கொதித்து எழுந்தான் ஸத்துகன்.

"உன்னைப்பற்றி நான் கவலைப்படாமல் இருக்க முடியாது. நீ கோபம் கொள்வதில் பயனில்லை. உன் நன்மைக்காகச் சொல்லுகிறேன். இன்னும் ஒன்று: உன் பௌத்த சங்கத்தில் காளன் என்பவன் யார்? அவனைப்பற்றியும் சொன்னுன்; வேறு பலர்கூடச் சொன்னுர்கள். களவும் கொலையும் செய்து வருகிருன் அவன் என்று கூறுகிருர்கள். சில நாட்களுக்குமுன் யவனர் வீதியில் களவு செய்து, மூன்று யவன வீரர்களைக் கொலை செய்துவிட்டு ஓடிப் போனுன் என்றும் அவன் கூறினுன். உன்னிடம் சொல்லுவதற்கு

அஞ்சி என்னிடம் சொன்னான். காளன் என்பவனை நான் பார்த்ததில்லை என்று சொல்லிவிட்டேன்; அவன் யார்?" என்றான் பெருஞ்சாத்துவன்.

"அவனைப்பற்றித் தெரியவேண்டிய அவசியம் என்ன? அவன் குற்றம் அற்றவன். புத்த பக்தி மிக்கவன். புத்த தேவனுக்கன்றி வேறு எவருக்கும் தலை வணங்கான். பௌத்த சங்கத்தைப்பற்றிப் பழித்து, இழிவு படுத்திக் கூறுபவர்களை அவன் பழி வாங்குவதற்குப் பின்னடையான். காரணமின்றி எவருக்கும் துன்பம் செய்யான். பொருளையே மதித்துப் புத்தனை மறந்து இரவலர்க்கு ஈயாது பொழுதுபோக்கும் பாபிகளை அவன் துன்புறுத்திப் பொருள் கவர்ந்து பௌத்த சங்கத்திற்கு அவற்றை அளிக்கிறான். தன்னலம் என்பதே அவனுக்கு இல்லை. அவனைப்பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? கொலையாளி என்றும் கள்வன் என்றும் அவனைக் கடிந்து பழிமொழி கூறுவதால் குறை சிறிதும் அவனுக்கு இல்லை" என்று கூறிவிட்டு மேல் மாடத்தி லிருந்து விரைந்து கீழே இறங்கினான்.

ஸத்துகன் தந்தை ஏனாதி பெருஞ்சாத்துவனுக்கு எண்பது வயசுக்குமேல் ஆகிவிட்டது. பன்முறை ஸத்துகனுக்கு அவன் புத்தி கூறியும் பயன் இல்லை. அன்றைத் தினம் கடைசி முறையாகக் கூறினான். தன் ஒரே புதல்வனானமையால் ஸத்துகன் மீது அவனுக்குக் கோபம் உண்டாகவில்லை. எனினும் உள்ளூற வருத்தந்தான். பெருஞ்சாத்துவன் வார்த் தையை எப்போதும் ஸத்துகன் கேட்பதில்லை. எனினும் புதல்வனைக் குறித்துத் தந்தைக்குக் கவலை அதிகமாகிக்கொண்டே இருந்தது. 'எந்த விநாடியில் ஸத்துகனுக்குத் துன்பம் வந்துவிடுமோ?' என்ற பயம் அவனுக்கு. அதைப்பற்றிய சிந்தனையே இல்லை ஸத்துகனுக்கு. தந்தை என்ற அளவுக்கே கௌரவம் அளித்தான் ஸத்துகன். புதல்வனிடமுள்ள பாசத்தால்

அன்று கடைசி முறையாகக் கூறினான் சாத்துவன்; அவ்வளவுதான்; அன்று தொடங்கி ஸத்துகனுக்குப் புத்தி கூறுவதையே விட்டுவிட்டான்.

தன் தந்தையிடம் கோள் கூறிய இளந்தத்தனைத் தக்கவாறு தண்டிக்க வேண்டுமென்று எண்ணிய வனாய்க் கீழே இறங்கினான் ஸத்துகன். அவன் மனம் பலவாறு ஊசலாடியது. மாளிகையின் உட்புறத்தி லுள்ள அறையில் புகுந்து அமர்ந்தான். அப்போது ஸத்துகனைக் கண்டு பேசுவதற்குச் சமயம் பார்த் திருந்த பாலகன் என்னும் நண்பன் ஸத்துகன் முன்பு வந்து வாய் புதைத்து நின்றான். அவனைக் கண்டதும் ஸத்துகனுக்குக் கோபம் மிகுதியாயிற்று.

"பாலகா, நான் முன்பே சொன்னேன். இப்போது எல்லாம் கெட்டு விடும்போல் இருக்கிறது. நம் காரியங்களைத் தடுப்பதற்கு வேண்டிய முயற்சிகள் நடக்கின்றன. சேனாபதி இளந்தத்தனுக்குத் தக்கவாறு புத்தி புகட்டவேண்டும். என்னுடன் இளமையில் பழகியவனாதலால் என்னிடமே அவன் வன்மையைக் காட்டுகிறான். நமது பௌத்த சங்கத்தைப் பற்றி அரசனிடம் கோள் கூறியிருக்கிறான். ஆதலால் நாம் கவனமுடன் இருக்கவேண்டும். காளனை அடக்கு வதற்கு வழி தேடுகிறான். நீ அவனைப்பற்றிக் கவன முடன் இரு. நான் பத்திரையைப் பார்க்கப் போக வேண்டும்; நீ போய் வா" என்றான்.

"அப்படியா? சோழராஜன், ஒற்றறியும் கூட்டத் திற்கு இளந்தத்தனைத் தலைவனாக்கி யிருக்கிறான்; அதனால்தான் இத்தகைய மாறுபாடுகள். இருக் கட்டும்! இளந்தத்தன் வன்மையை நான் அடக்கி விடுகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான் பாலகன்.

ஸத்துகன் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. பகற்பொழுதின் பிற்பகுதியாகையால் பகலவனின் வெம்மை தணிந்திருந்தது. சாளரங்களின் வழியாக

வேகமாகத் தென்றல் காற்று வீசியது. வருத்தத்தில் ஆழ்ந்திருந்த ஸத்துகனுக்குப் பல பாம்புகள் ஒருங்கே சீறுவன போன்று இருந்தது அத்தென்றல் காற்று. வேறு வருத்தம் இல்லை; பத்திரையை நினைந்துதான். பத்திரையின் வடிவத்திலே அவன் மனம் ஒன்றியிருந்தது. அன்றைக்கு முதல் நாள் மாலையில் பத்திரை கூறிய வார்த்தைகள் அவன் செவிகளில் ஒலித்த வண்ணமாயிருந்தன. அதை எண்ணிக் காமன் கோட்டம் போவதற்கு ஒருப்பட்டது அவன் மனம். ஆனால் அதற்கு முதல்நாள் இரவு சயந்தி கூறிய, பொருள் செறிந்த, உணர்ச்சி நிறைந்த அவ்வார்த்தைகள் ஸத்துகனின் உள்ளத்தைத் துன்புறுத்தின. கண்களில் நீர் ததும்ப அவள் பார்த்த பார்வை இடையிடையே அவன் மனக்கண்ணின்முன் தோன்றி வருத்தும். ஆனால் பத்திரையின் இன்பம் நிறைந்த மோகப் பார்வையில் அவன் உள்ளம் மூழ்கி மூழ்கி எழுந்தது. அதனால் அரைக்கணங்கூட அவனுக்கு இருப்புக்கொள்ளவில்லை. விரைந்து எழுந்து குதிரைக் கொட்டிலுக்குச் சென்றான். குதிரையைத் திருப்பிக் குதூகலத்துடன் அதன்மீது உட்கார்ந்தான். அவ்வளவில் குதிரை வீதி வழியே புறப்பட்டது.

அவன் மனம் பத்திரையைப்பற்றிக் கற்பனை செய்துகொண்டிருந்தது. அப்போது என்றைக்கும் இல்லாதவாறு அரச வீதி வழியாகச் சென்றது அவன் குதிரை. குதிரை எந்த வழியாகச் செல்கிறது என்பதைக்கூட அவன் கவனிக்கவில்லை. சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் அவன் மனம் குதிரை மந்தகதியாகச் செல்வதைக் கூட உணரவில்லை. ஸத்துகனின் மனத் திரையில் இரண்டு முகங்கள் தோற்றம் அளித்தன. புன்னகை ததும்பும் முகமொன்று; கண்ணீர் ததும்பும் முகம் ஒன்று. பத்திரையின் புன்னகை ததும்பும் முகம், அவனது உள்ளத்தில் உணர்ச்சியை நிரப்பிப் புதுமை இன்பத்தை அளித்தது. காதற்கணிகையான

சயந்தியின் கண்ணீர் ததும்பிய முகம் அவனுக்கு வெம்மையை அளித்து உள்ளத்தில் துன்ப அலையை எழுப்பியது. அவ்விரண்டு முகங்களில் ஒன்றை மறப்பதற்கு அவனுக்கு வன்மை இல்லை; மனத் திண்மையும் இல்லை. அரச வீதி வழியே மந்த மாருதமெனச் செல்லும் குதிரைமீது இறுமாந்து வானவெளியை நோக்கியவண்ணம் அமர்ந்திருந்தான். அவன் உள்ளம் மனோமய உலகில் சஞ்சரித்தது.

மாலைக் காலம். ஆதலால் வீதியில் ஜனங்களின் கூட்டம் மிகுதியாகவே இருந்தது. இளம் பெண்கள் பல்வகை அலங்காரங்களுடன் அவ்வழியே இயங்கிக் கொண்டிருந்தனர். ஸத்துகனின் வடிவத்தைக் கண்டு இரங்கி உள்ளம் உருகினர். வனப்பும் வன்மையும் இளமையும் ஒருங்கே கொண்ட இளைஞன் ஸத்து கனின் வடிவம் மடமங்கையரின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டாலும், அவன் அவர்களைச் சிறிதும் நோக்கவில்லை. 'நம் தலைவிதி யாரையோ மணந்து கொள்ளும்படி ஆயிற்றே! இந்தச் சுந்தரமேனியனை மணந்துகொள்ளும் பாக்கியம் பெற்றவள் யாரோ?' என்று எண்ணி அவன் வடிவத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டே மணமடந்தையர் சென்றனர். சில மகளிர் மயங்கித் தயங்கி நின்றனர். தன்னை நோக்கித் தயங்கி நிற்கும் அம்மட மங்கை யரை அவன் சிறிதும் நோக்கவில்லை. அம் மடமங்கை யரது அழகு கண்டு மயங்கி நிற்கும் இளைஞர்களையும் அவன் பார்க்கவில்லை. ஆடவரும் மகளிரும் விநோத மாகப் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் சென்றனர். அவர்கள் பேச்சு அவன் காதில் சிறிதும் விழவில்லை. அங்கும் இங்குமாகப் பறவைகள் கூவிப் பறந்துகொண்டிருந்தன. கிளிகள் கொஞ்சிக்கொண் டிருந்தன. வழியிடையேயுள்ள மரங்கள்மீது மிக அழகாகக் கூவிக்கொண்டிருந்தது குயில். பெண் அன்றில் ஆண் அன்றிலை அழைக்கிறது. அவை ஏன்

அவன் காதில் விழும்? மிகுந்த கவலையில் அவன் மனம் ஆழ்ந்திருந்தது. விழித்திருந்தும் நோக்காருய், செவியிருந்தும் கேளாருய்ப் பிரதிமைபோல் அசையாமல் அமர்ந்திருந்தான்.

அரச வீதியைக் கடந்துகொண்டிருந்தது குதிரை. அப்போதுதான் ஸத்துகனுக்குத் தான் செல்லும் வழியைப்பற்றிய ஞாபகம் வந்தது. உடனே அங்கிருந்தபடியே குதிரையைக் காமன் கோட்டத்திற்கு விரைவாகச் செலுத்திஞன். அப்போது அரச வீதியின் எல்லையில் ஒரு மாளிகையின் வாசலில் சிலர் பேசிக்கொண்டிருந்தனர். அவர்களின் பார்வை, அவ்வழியே குதிரைமீது செல்லும் ஸத்துகன்மீது விழுந்தது. அவன் அதைக் கவனிக்கவில்லை.

பேசிக்கொண்டிருந்தவர்கள் இளந்தத்தனும் அவன் நண்பர்களுமே; 'இவ்வளவு விரைவாக, இவ் வீதி வழியே ஸத்துகன் போவதற்குக் காரணம் என்ன? இவன் எங்கே போகிருன்?' என்று ஆலோசித்தான் இளந்தத்தன். உடனே தன் நண்பர்களுக்கு விடை கொடுத்துவிட்டுத் தன் குதிரைமீது ஏறிப் பின் தொடர்ந்தான் இளந்தத்தன். ஸத்துகனை நெருங்காமலும், அகலாமலும் மறைந்து சென்றது அவன் குதிரை. 'நாம் பின்னே தொடர்வது அவனுக்குத் தெரிந்து விடுமோ?' என்ற பயம் இருந்தது அவனுக்கு. ஆனுல், ஸத்துகன் போகும் இடத்தை அறிய ஆவலும் இருந்தது. பத்திரையின் அழகிலே உள்ளத்தைப் பறி கொடுத்த அவனுக்குத் தன்னைப் பின் தொடரும் இளந்தத்தனைப்பற்றி அறியச் சிந்தனை இருக்குமா?

வளைந்து வளைந்து செல்லும் பாம்பின் போக்கை ஒத்திருந்தது, இளந்தத்தன் மறைந்து செல்வது. இவன் இவ்வாறு பதுங்கிச் செல்வதைக் கண்டு சிலர்

வியப்பும் ஐயமும் கொண்டு சென்றனர். காமன் கோட்டத்திற்குள் புகுந்தது ஸத்துகனின் குதிரை.

வழக்கம்போல், பத்திரை தங்கியிருக்கும் கூடாரத்திற்கு முன்புதான் குதிரை நின்றது. மிகுந்த ஆவலோடு குதிரையிலிருந்து குதித்துக் கூடாரத்துக்குள் புகுந்தான் ஸத்துகன். ஆனால் உள்ளே புகுந்ததும் அவன் மனம் ஏமாற்றம் அடைந்தது. பத்திரையோ, வசந்தியோ யாரும் இல்லை அதனுள். உடனே வெளியில் வந்து யவன வீரர்களைக் கேட்டான். காமன் கோட்டத்திற்குள் போயிருப்பதை அவ்வீரர் கூறினர். அப்போதுதான் ஸத்துகனுக்கு ஆறுதலுண்டாயிற்று; மனத்தில் அமைதி நிலவியது.

அருகில் இருந்த மஞ்சத்தில் உட்கார்ந்தான். குளிர்ந்த காற்று வீசியது. அன்றைக்கு மறுநாளோடு இந்திர விழா முடிந்துவிடுகிறது. ஆகையால் மக்களின் கூட்டம் அங்கே மிகுதியாகக் காணப்பட்டது. அல்லாமல், காமன் கோட்டத்தைச் சூழ்ந்திருந்த அந்தச் சோலையில் மகளிரே மிகுதியாக இயங்கிக் கொண்டிருந்தனர். பேதைமுதல் பேரிளம் பெண் இறுதியாக உள்ள ஏழுவகைப் பருவத்து மகளிரும் குதூகலத்துடன் அங்கு உலாவிக்கொண்டிருந்தனர். விநோதங்கள் பல நிகழ்ந்துகொண்டிருந்தன. அவை யாவும், ஸத்துகன் மனத்துக்கு வெறுப்பாக இருந்தன. தன் வாழ்க்கையில் அன்று வரை அவன் புரிந்த ஒவ்வொரு செயலும் அலைமேல் அலையாக அவன் மனக் கண்முன் தோன்றின. தான் செய்யும் காரியங்கள் ஒவ்வொன்றையும் சீர் தூக்கிப் பார்த்தான். அவை அவனுக்கு மனக்கலக்கத்தை அளித்தன. தன்மீது தனக்கே அவநம்பிக்கை உதயமாயிற்று. அப்போது அவனது இருண்ட மனத்திற்கும் கண்களுக்கும் ஒளி கொடுத்தாற்போல் எதிரில் தோன்றினாள் பத்திரை. பத்திரையின் மதி

வதனத்தைக் கண்டதும் ஸத்துகனுடைய மனக் கலக்கம் மறைந்தது. அவனைக் கண்டு பூங்கொடி போல் ஒல்கிக் குறுநகை புரிந்து நின்றாள் அவள். ஸத்துகன் விரைந்து எழுந்து அவளது தளிர்க் கரத்தைப் பிடித்துக்கொண்டு, "பத்திரை, இவ்வளவு விரைவில் வந்து விட்டாயே. என்ன காரணம்? என் நிமித்தமாகவா?" என்றான் குதூகலத்துடன்.

முத்துநிரையை நிகர்த்த பற்களின் ஒளியழகு, இலவின் மலரன்ன இதழ்களிரண்டின் இடையே பொலிவுடன் தோன்றப் புன்னகை புரிந்தாள். அவ்வளவில் அவள் இரு கன்னங்களும் தாமரையின் பேரிதழ்போல் சிவந்தன. பிறையென விளங்கிய அவள் நெற்றியில் வேர்வை துளித்தது. கருவிழியில் தீட்டிய மையுடன் கலந்து கரைந்து உதிர்ந்தன நீர்த்துளிகள். விம்முறும் மார்பில் வீழ்ந்த அக் கண்ணீர்த் துளிகள் பலவாறு சிதறி விழுந்தன. குனிந்த தலையுடன், ஸத்துகனது கரமலரைப் பற்றிய வண்ணம் கூடாரத்திற்குள் புகுந்தாள். இதைக் கண்டு வசந்திக்கு வியப்பு உண்டாகவில்லை. நாள்தோறும் இந்நிகழ்ச்சிகளைப் பார்ப்பவள்தானே! அவள் இதில் செய்யக்கூடியது என்ன? நேருக்கு நேர் இரண்டு கடல் சந்திக்கின்றன; உப்புக்கடலல்ல; இன்பத் திரைக் காதற்கடல்! இதற்கிடையே அணைபோட்டுத் தடுக்க யாரால் இயலும்?

'காமன் பூசனை முடிந்தது; காமன் காட்சியும் கிடைத்து விட்டது!' என்று தனக்குள் வசந்தி கூறிக் கொண்டே அங்கிருந்த மஞ்சத்தில் உட்கார்ந்தாள்.

காதலர் இருவரும் கூடாரத்திற்குள் அமைதியாகப் பேசிக்கொண்டிருந்தனர். பெண்மைக்குள்ள பெரும் வன்மையால், தன் மனத்தில் எழுந்த உணர்ச்சியை அடக்கிவிட்டாள் பத்திரை. ஆடவர்க்கு அகத்தில் உள்ளது முகத்தில் தெரிந்துவிடும்; அதுவும்

கண்களிலிருந்து மிக எளிதாக உணர்ந்து கொள்ள லாம்; ஆனால் அறிவுக் கூர்மையுடையவரே அதை அறிய இயலும். 'நுண்ணியம் என்பார் அளக்குங் கோல் காணுங்கால், கண்ணல்லது இல்லை பிற' 'பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும்' என்பன பொய்யா மொழியன்றோ? கண்ணைவிடச் சிறந்த உறுப்பு வேறில்லை.

"உங்கள் கண்களைப் பார்க்கும்போது ஏதோ கவலைப்படுவதாகத் தெரிகிறது. என்னவென்று சொல்லக்கூடாதா?" என்றாள் பத்திரை.

"எனக்கு என்ன கவலை? உன் மதிவதனத்தைக் கண்டபின் கவலை என்ன எனக்கு? உன் கண்களில் நீர் துளும்பியிருப்பதால் கவலை உனக்குத்தான் என்று அறிகிறேன்; அதனால் எனக்குக் கவலை ஏற்படுகிறது" என்று புன்னகையுடன் மொழிந்தான்.

அவன் வார்த்தைகளைக் கேட்டவுடன், அவள் கண்களில் நீரூற்று மீண்டும் சுரந்தது.

"இல்லை"

"ஏன் வார்த்தைகளை விழுங்கினாய்? என்னிடம் சொல்ல விருப்பம் இல்லையா? நீ இவ்வாறு எரிவாய்ப் பட்ட வெண்ணெயைப்போல் உருகி வெதும்புவது எனக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுக்கிறது"

"உங்களிடம் கூறாமல் இதை யாரிடம் கூறுவது? நாளையோடு இந்திரவிழா முடிகிறது. என் விரதமும் இன்றுடன் முடிகிறது. நான் இங்கே இனி எவ் வாறு......" என்று குனிந்துகொண்டே நீரைச் சொரிந்தாள் கண்களினின்றும். உள்ளம் கலங்கிய வளாய்ச் சிறிது நாழிகைக்கு ஒருதரம் நீண்ட பெரு மூச்சு விட்டு விம்மியிருந்தாள்.

"பேதாய், இதற்குத்தான் இவ்வளவு கவலையா? இந்தக் கலக்கமா? உன் விருப்பம்போல் நான்

நடக்கிறேன். நம்மைக் கூட்டிவைத்த போதிசத்துவன் பிரித்து வைப்பானா? இடையறாத இன்பத்தை நமக்கு அவனே அளிப்பான். நம் காதல் வினையின் விளைவு; ஆதலால் கவலையுறாதே” என்றான் ஸத்துகன்.

“நான் உங்களை ஒன்று கேட்டுக்கொள்கிறேன். அதற்கு ஒப்புவீர்களா?”

“உன் வார்த்தைகளுக்கு மாறு சொல்பவன் அல்ல நான்; இவ்வளவு ஐயம் ஏன்?” என்று அவள் நெற்றியில் விழுந்த மயிரை ஒதுக்கினான்.

“தாங்கள் என் கன்னிமாடத்திற்கு இன்று முதல் வரவேண்டும். இரவில் எவ்வளவு நாழிகை ஆயினும் தங்களுக்காகக் காத்திருப்பேன்”

“அவ்விதமே வருகிறேன்; என்றால் சிறிதும் தடை ஏற்படாது”

“வேறு தடை இராது; அது என் பொறுப்பு. கன்னிமாடத்தின் வாசலில் வசந்தி காத்திருப்பாள்.”

“நான் வருகிறேன், கவலையின்றிக் கன்னிமாடம் செல்”

“தங்கள் வார்த்தைகளை நம்பி நான் செல்கிறேன்.”

“என்னிடம் இவ்வளவு நம்பிக்கைக் குறைவா? பொழுது போய்விட்டது விரைவில் போ” என்றான் ஸத்துகன்.

பத்திரைக்கு அப்போதுதான் அமைதி உண்டாயிற்று. எனினும் சிறிது நாணமேதான்; ‘அவ்வளவு தீவிரமாகப் பேசி விட்டேனே! காதல் எல்லாவற்றையும் மறைத்து விடுகிறது. இந்தக் காதற் பசிக்கு ஆறுதலே கிடையாது போலும்!’ என்று எண்ணினாள். உடனே ஸத்துகன் பிடியை விட்டு விலகி வெளியே சென்றாள். பத்திரையின் முகக்குறிப்பை உணர்ந்து சிவிகை புறப்படுவதற்கு வேண்டியவற்றைச்

செய்தாள், வசந்தி. புறப்படுவதற்குச் சித்தமாயிருந்தது சிவிகை. 'ஸத்துகர் வருவாரா? அல்லது மறந்துவிடுவாரா?' என்று ஏங்கியவண்ணம் அவனைப் பன்முறை மனமுருக நோக்கிவிட்டுச் சிவிகைக்குள் புகுந்தாள். வசந்தியும் உட்கார்ந்தாள். சிவிகை விரைந்து வணிகர் வீதியை நோக்கிச் சென்றது.

முன்போல் மஞ்சத்தில் உட்கார்ந்தான் ஸத்துகன். பத்திரையின் மாளிகைக்குச் செல்வது பற்றி அவன் மனம் குதூகலம் கொண்டது. பின் விளையப்போகும் பெருங்கேடுகள் அவன் அறிவுக்குப் புலப்படவில்லை.

அதுவரையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மறைவில் பதுங்கியிருந்து கவனித்த இளந்தத்தன் பரபரப்புக் கொண்டான். 'சிவிகை எங்கே செல்கிறது? இவ்விள மங்கை யார்? இவர்கள் காதல் எப்படி ஏற்பட்டது?' என்று ஆராய்ந்தான். உண்மையை அறிய ஆவல் கொண்டு தன் குதிரையை விரையச் செலுத்திச் சிவிகையைப் பின் தொடர்ந்தான். நிலவு புறப்படுவதற்குச் சிறிது நாழிகை இருந்தது. ஆனாலும் தீபங்கள் ஆங்காங்கே விளங்கின. 'பாவி ஸத்துகா! அழகு மிகுந்த இளமங்கையாம் இவள் யாரோ? பாவம்! உன் வலையில் வீழ்ந்து மடியப்போகிறாள்' என்று எண்ணிச் சென்றான். சிவிகையை அணுகிக் கொண்டிருந்தது குதிரை. பத்திரையும் வசந்தியும் பேசிக்கொண் டிருந்தனர். அவர்கள் பேசியது ஸத்துகனைப்பற்றியே. அவ்வார்த்தைகள் இளந்தத்தனுக்கு நன்றாகப் புலப்படவில்லை. குதிரையின் நடையொலியைக் கேட்டு ஸத்துகனோ என்று திரையை அகற்றிப் பார்த்தாள். தக்க சமயம் என்று இளந்தத்தன் முன்சென்றான். முகத்தை உத்தரியத்தால் போர்த்திக் கொண்டவனாய் "ஸத்துகனை நம்பவேண்டாம் அவன் பெரும் வஞ்சகன், திருடன்; கொலையாளி" என்றான்.

உடனே வசந்தி "நீ யார்?" என்ருள் கோபத்துடன்.

"உங்கள் நன்மையை நாடுபவன்" என்று கூறி விட்டு வேறுபுறமாகச் செலுத்தினுன் குதிரையை. எனினும் மறைவாகச் சிவிகையையே பின்தொடர்ந்தது அக்குதிரை.

இளந்தத்தன் கூறிச் சென்ற அவ் வார்த்தைகள், குதூகலத்துடன் பேசிக்கொண்டிருந்த பத்திரைக்கு இடி விழுந்தாற்போன்று இருந்தன. இருவருக்கும் வியப்பும் அச்சமும் உண்டாயின. 'இவ் வார்த்தைகளைக் கூறிய இவன் யார்? என்னை இவன் எவ்வாறு அறிந்தான்? ஸத்துகருக்கு இவன் பகைவனே? என்ன அதிசயம்!' என்று யோசித்தாள் பத்திரை. "இது என்ன ஒன்றும் புரியவில்லையே! இவன் யார்?" என்று கூறினுள் வசந்தி.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லை; இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது; அவருக்கு இவன் பகைவனுக இருப்பான். இல்லாவிட்டால்........" என்ருள் பத்திரை.

"பத்திரை, மறந்து விடு இதை. போகப் போகத் தெரிகிறது" என்ருள் வசந்தி.

சிவிகை மாளிகை வாயிலை அடைந்தது. பத்திரையும் வசந்தியும் கீழிறங்கிக் கன்னி மாடத்துக்குள்ளே புகுந்தனர். ஆனுல் பத்திரை மட்டும், வழியில் பயமுறுத்திய மனிதனை நினைத்து வீதியைப் பார்த்து விட்டு உள்ளே சென்ருள்: அவள் கண்களுக்கு அவன் அகப்படுவானு?

காமன் கோட்டத்துச் சோலையில் அமர்ந்திருந்த ஸத்துகன், 'பத்திரையிடம், இன்றிரவு வருவதாகச் சொல்லி விட்டோமே! சயந்தி இதை உணர்ந்தால் மிகவும் வருந்துவாளே! நான் செல்லாவிட்டால் பத்திரை வருந்துவாள். ஒரு நாளேனும் இரவு

பிரிந்திராத சயந்தி இன்று இரவு முழுதும் வருந்தியிருப்பாள்' என்று எண்ணியிருந்தான். சயந்தியைப் பற்றிய சிந்தனை ஒரு புறம் இருந்தாலும், பத்திரையைக் கண்டு மகிழ்வதற்கு அவன் மனம் ஆவல் கொண்டிருந்தது; ஏங்கியிருந்தது என்றே சொல்லலாம்.

வில்லைப்போல் வளைந்த சந்திரன் சோலையில் மரங்களின் ஊடே, குளிர் வெண்ணிலவை வீசினான். பால் பரந்தன்ன அவ்வெண்ணிலவில் அச் சோலையில் மலர்ந்த பல நிறப் பூக்களும் மந்த மாருதத்தால் ஆடிக்கொண்டு ஒன்றை ஒன்று எள்ளி நகை செய்து விளங்கின. குளிர்ந்த நிலவு, பரந்த சோலை; நிறைந்த இன்பம். ஆ! என்ன ரமணீயமான காட்சி! ஆங்காங்கே பூங்கொடி போல மகளிர் ஓடி விளையாடிக் கொண்டிருந்தனர். பொய்கையில் தாமரை மலர்கள் சந்திரனைக் கண்டதும், பிற ஆடவரைக் கண்டு முகத்தைக் கவிழ்க்கும் கற்புடை மகளிர் போல் முகங் கவிந்தன. இளம் பெண்கள் மருண்டு மருண்டு நோக்குவதுபோல், செங்கழு நீர் மலர்கள் இதழ்க் கண்கள் திறந்து ஸத்துகனை நோக்கின. கட்டவிழ்ந்த அரும்புகளின் மணத்தைத் தென்றல் எடுத்துச் சோலை முழுதும் பரப்பியது. மரங்கள், மலர் விழி திறந்து கம்பீரமாய் ஆடி அசைந்து கொண்டிருந்தன.

• அக் காட்சிகள் யாவும் ஸத்துகன் மனத்திற்கு இன்பத்தை அளிக்கவில்லை. நாழிகை ஆகிவிட்டதை உணர்ந்தான். பத்திரையைச் சந்திப்பதற்கு விரைந்து எழுந்தான். குதிரை மீது தாவி அமர்ந்து வணிகர் வீதியின் பக்கம் செலுத்தினான். பரந்த வெண்ணிலவிலே பறவைபோல் சென்றது குதிரை. பத்திரையின் மாளிகையை அணுகியதும் குதிரையை மெல்லச் செலுத்தினான். கன்னி மாடத்தை அடைந்ததும் குதிரையை ஒரு புறம் நிறுத்தி விட்டு இறங்கி உள்ளே புகுந்தான். தீபம், மின்மினிப் பூச்சிபோல் விளங்

கியது. எதிரில் வசந்தி வந்து ஸத்துகனை உள்ளே அழைத்துச் சென்றாள்.

கன்னி மாடத்தில் பூவணைமீது பொற்கொடி போல் பத்திரை அமர்ந்திருந்தாள். கையில் மாசில் வீணையைத் தாங்கி அதன் நரம்பை மெல்ல வருடிக் கொண்டிருந்தாள். அதிலிருந்து எழும் நாத அலைகள் அவள் உள்ளத்தில் இன்ப அலையை எழுப்பின. அறை எங்கும் அகிற் புகை மணம். சாளரங்களின் வழியே நிலவின் இனிய கிரணங்கள் புகுந்தன. ஸத்துகன் குதூகுலத்துடன் உள்ளே புகுந்ததும் பத்திரை உவகையுடன் உடல் பூரித்து எழுந்து அவனைப் பூவணையில் அமர்த்தி உபசரித்தாள்.

ஸத்துகன் அங்கு அமர்ந்ததும் அவன் இடத் தோள் துடித்தது. பத்திரையின் வலது மார்பும் துடித்தது. இருவரும் ஒருங்கே மயங்கிக் கலங்கினர். பேச இயலாது பெருமூச்செறிந்தனர். அப்போது அறையில் ஒருபுறம் நின்று எரிந்த மங்கள தீபம் அணைந்தது. அது கண்டு திடுக்குற்ற வசந்தி விளக்கை ஏற்றச் சென்றாள். "அணைந்ததை ஏற்றாதே. நிலவின் ஒளி போதும்" என்றாள் பத்திரை. 'காமுகருக்குப் பகுத்தறிவு ஏது?' என்று எண்ணியவளாய் அப்புறம் சென்றாள் அவள். காம விருந்தினர்களாகிய அவ்விருவருக்கும் அவ்விபரீத சகுனங்களைக் குறித்த சிந்தனையே இல்லை. இருவரும் குதூகலித்து இருந்தனர். தாழம்பூவில் நாகம் உறைவதுபோல் பத்திரையுடன் தங்கியிருந்தான் ஸத்துகன்.

ஸத்துகன் கன்னி மாடத்தை விட்டு வெளியேறும்போது நடு இரவு. அவன் வெளியேறுவதை உணர்ந்தாலும் அவன் எங்கே செல்கிறான் என்பதைப் பத்திரை உணரவில்லை.

## ௬

**'காதற்கணிகைதானே!'**

விடியற் காலத்து இருளிலேயே, ஸத்துகன் தன் மாளிகைக்கு வந்து விட்டான். பொழுது விடியச் சிறிது நாழிகை இருந்தது. இணைபிரியாக் காதலியாகிய சயந்தியின் வடிவம் அவன் உள்ளத்தை விட்டு அகலவில்லை. 'பத்திரையை நீ காதலித்தது பெரும் பாதகமன்றோ? பேதை, கள்ளங் கபடற்ற அவளை வஞ்சித்துவிட்டாயே! பின்னால் விளையப்போகும் பெருந்துன்பங்களை நீ அறியாய். காதற்கணிகை தானே என்று என்னை எண்ணிவிட்டாயா? இது நியாயமா?' என்று சயந்தி தன்னைக் கேட்பதுபோல் தோன்றிற்று அவனுக்கு.

அறையில் அமர்ந்தவண்ணம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பொழுது புலர்ந்து நீண்ட நாழிகை ஆகிவிட்டதைக் கூட அவன் அறியவில்லை. சயந்தியை வஞ்சித்துச் செய்யத் தகாத காரியத்தைத் தான் செய்து விட்டதாக எண்ணி அவன் மனம் கலங்கியது. ஆனால், பத்திரையைப் பற்றி அவன் நினைக்கும்போது 'அவளது மோகப் பார்வை, அன்பு நிறை இன்ப மொழி, மாந்தளிர் மேனி, பிடியின்மென்னடை, இளமையின் வளமிகும் இன்பம்! ஆ! அந்தப் புன்னகையில் பட்டமரம் கூடத் தளிர்க்குமே! கடைக்கண் நோக்கில் உலகமெல்லாம் மயங்குமே! ஆம், அவளது, மலரினும் மெல்லிய தளிர்க் கரங்களைத் தீண்டுமளவில் தோன்றும் உணர்ச்சியின்பமே இன்பம்! அந்தப் புன்னகை மென்மொழியாள், எளிதில் ஒருவனுக்குக் கிட்டுதற்கு உரியவளா? அவள் என்னை விரும்பியது நான் செய்த புண்ணியப் பயனே! அவளை நான் மணந்து கொள்வதில் தவறு என்ன? உயர்குலத்து உதித்தவள்; குணநிறை செல்வம்;

அவள் அழகைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அவள் தந்தை உடம்படவேண்டியதுதானே இனி ஆகவேண்டியது? அதைப் பெற என்னால் ஆகாதா? நான் பத்திரையை மணந்து கொள்வதால் சயந்திக்கு என்ன குறைவு? அவள் ஒரு காதற் கணிகைதானே? பத்திரையை மணந்தால் உலகம் பழி கூறாது' என்று இவ்வாறு ஆலோசித்தான்.

ஆனால் அடுத்த கணம், அவன் மனத்திரையில் சயந்தியின் சுந்தர வடிவம் தோன்றியது. அன்றொரு நாள் நாடக அரங்கில், ஆடவர் மயங்கிப் பேதுறும்படி நடனமாடிய சயந்தி, தன்னைக் கண்டு காதலித்த அத் தோற்றம்! அவளது நடனத்தையும் எழில் நிறை வதனத்தையும் கண்டு தான் ஏங்கிய அக்காட்சி; அன்று தொடங்கி, கற்பகமும் காமவல்லியும்போல் காதலராய்த் திகழ்ந்த தன்மை; ஊடலும் கூடலும் கலந்து உயரின்பம் அளித்த நாட்கள்; உள்ளம் மாறாதிருந்த நிலை. இருவரும் இடையறாது நுகர்ந்த இன்பத்தின் பயனாய்ப் புத்தன் பிறந்த புண்ணிய தினத்தில் தோன்றிய இளங்குழந்தையின் மதி வதனம்!— இவ்வாறு அவன் அகக்கண்முன் ஒவ்வொன்றாகத் தோற்றமளித்தன, பழைய நிகழ்ச்சிகள். 'ஆம், அந்தக் குழந்தையின் எழில்நிறை வதனமும், அருள் பொழி கண்களும் காணுந்தோறும், காண நினைக்குந்தோறும் இன்பம் அளிப்பன! சயந்திக்கும் எனக்கும் மகிழ்வூட்ட வந்த இன்பக்கனி அல்லவா அக்குழந்தை? அவ்வின்பக்கனி இருக்கையில் சயந்தியின் தொடர்பு, உயிரோடொன்றிய காதல், எளிதில் அற்றுவிடுமா? அந்தக் கிளிமொழியாளைத்தான் பார்க்காதிருக்க என்னால் இயலுமா? எழு பிறப்புந் தொடர்ந்த காதலுடையாளை யான் எழுபிறப்பும் மறவேன்! மறவேன்!' என்று உறுதி கூறியது அவன் மனம். ஒருபுறம் பத்திரை, ஒருபுறம் சயந்தி — இவ்வாறு அவன் மனம் ஊசலாடியது.

இளமயிற் சாயலாளாகிய பத்திரை மீது காதல் வளர்ந்துகொண்டே யிருந்தது ஒருபுறம். காதற் கணிகையாகிய சயந்தியின் அன்புப் பிணைப்பு மேன் மேலும் வலிவுற்றுக்கொண்டே இருந்தது மற்ெறாரு புறம். ஆனால் அது அற்றுவிடுமோ என்ற பயமும் இருந்தது. காதலின் தன்மையை, தத்துவத்தை, உண ராதவன்தானே ஸத்துகன்? பகுத்தறிவுடையவன் இவ் வாறு நடந்துகொள்வானா? உண்மை! பாவம் இருக்கு மிடத்தில் பகுத்தறிவு எங்கே இருக்கும்? ஆனால் ஸத்துகன் பகுத்தறிவுடையவன்தான்; பாவமும் அவ னிடம் குடிகொண்டிருந்தது என்று சொல்வதற்கில்லை. இருக்கலாம்; இவ்வாறு அவன் நடந்துகொண்டதை ஊழ்வினையின் செயல் என்றே கூறவேண்டும்; அவ் வாறின்றேல் பத்திரையின் காதல் வலுவில் அவனுக்கு ஏற்படுமா? பின்னே நிகழப்போவதை முன்னே அறிந்திருந்தால், அவன் பத்திரையைக் காதலித் திரான். அவளும் காதல் கொள்ளாள். இனி அதைப் பற்றி நினைத்து என்ன பயன்? துன்பத்திற்கு விதை விதைத்தாயிற்று. விதியை வெல்லும் மதியுடைய வனாய் இருந்தால் பின்னே நிகழப்போகும் துன்பத்தை விலக்கிக் கொள்ளலாம். ஆனால் அவ்வாறு நிகழ வில்லையே!

இந்நிலையில் ஸத்துகனின் மாளிகை வாயிலில் பெரும் ஆரவாரம் கேட்டது. துக்கத்தில் ஆழ்ந் திருந்த ஸத்துகன் அமைதியாக எழுந்து கீழே பார்த்தான் "ஓம் நமோ புத்தாய! புத்தம் சரணம் கச்சாமி!" என்ற கோஷம் உண்டாயிற்று. உடனே விரைவாக மேல் மாடத்திலிருந்து கீழிறங்கினான். வாசலில் நூற்றுக்கணக்கான பௌத்த பிக்ஷுக்கள் நின்றனர். 'அவர்கள் துறவுக் கோலத்துடன் விளங் கினர். கழுத்திலிருந்து பாதம் வரை மூடிய ஆடை, கைகளில் கமண்டலமும், தாமரை மணிமாலையும் பாதங்களில் பாதரக்ஷைக் கட்டைகளுமாக அமைந்த

வடிவத்துடன் புத்த ஸ்மரணம் செய்தவண்ணம் நின்றனர். ஸத்துகன் அவர்களை அழைத்து உள்ளே உட்காரச் செய்து உபசரித்தான். பிறகு பாலக பிக்ஷுவைத் தனியே அழைத்துக் குறிப்புச் செய்தான். உடனே பாலகன் விருப்பப்படி யாவரும் புத்த ஸ்மரணம் செய்துகொண்டு பௌத்த சங்கத்தை நோக்கிச் சென்றனர். பாலகபிக்ஷு மட்டிலும் ஸத்துகனுடன் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தான்.

இளம் பிக்ஷு ஸத்துகனின் உயிர்த்துணைவனை பாலகன் என்பவனே. அங்கே வந்த பிக்ஷுக்கள் யாவரும் ஸத்துகனுடைய அன்பிற்குரியவர்களே. அல்லாமல் அவன் ஆதரவில் இருப்பவர்கள். அவன் 'ஸத்துகமந்திரம்' என்னும் பெயரால் பௌத்த சங்கம் ஒன்றை நிறுவினான். அதில் இருப்பவர்களே அங்கு வந்த பிக்ஷுக்கள். அவர்கள் யாவரும் அவனுடைய பௌத்தக்கொள்கைகளைப் பின்பற்றியவர்கள். அந்தப் பௌத்த சங்கத்தில், புத்த மித்திர அடிகள் என்னும் மஹா பிக்ஷு இருந்தார். அவர் நாள்தோறும் பௌத்த மதத்தைப் பற்றிய அறவுரைகளைக் கூறுவார். அவர் ஸத்துகமந்திரத்திலிருக்கும் பிக்ஷுக்களுக்குக் குரு. பிக்ஷுக்கள் யாவரும் நகர்வலம் செய்கையில் ஸத்துகன் மாளிகைக்குச் சென்று அவனைப் பார்த்துப் போவார். அவ்வாறே அன்றும் அவர்கள் வந்து சென்றார்கள்.

பௌத்த சங்கத்து நிகழ்ச்சிகளைப்பற்றிப் பாலகன் ஸத்துகனிடம் கூறினான். ஒவ்வொரு விஷயத்தையும் உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தான் ஸத்துகன்.

"பாலகா, இளந்தத்தனைக் கவனித்தாயா?"

"நாள் தோறும் கவனித்து வருகிறேன். நேற்றுப் புத்தமித்திர அடிகளின் தருமோபதேசத்திற்கு இளந்தத்தனும் அவன் நண்பன் அச்சனும் இன்னும் பலரும்

வந்திருந்தனர். அரசனுடைய பரிவாரத்தினர் பலரும் வந்திருந்தார்கள்."

"எதற்கு? ஒற்றறிவதற்கா?"

"ஆம்; நான் கவனித்தேன். இளந்தத்தனும் அச்சனும் மறைந்து நின்று ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். ஒற்றறியவே வந்தனர். நான் அதற்குத் தக்கவாறு ஏற்பாடு செய்து விட்டேன். தருமவுரை முடிந்தவுடன் அவர்கள் சென்றுவிட்டார்கள்."

"புத்தமித்திரர் எதைப்பற்றிக் கூறினர்?"

"ஸர்வம் துக்கம் என்னும் விஷயத்தைப்பற்றித் தான். அவர் மொழிகளைக் கேட்டு யாவரும் மெய் மறந்திருந்தனர். எல்லோரும் அமைதியாகக் கேட்டு விட்டுப் புத்தமித்திரரைப் போற்றிப் பணிந்து சென்றனர். ஆனால் இளந்தத்தன் மட்டிலும் நமது சங்கத்தின் இடங்களையும், பிக்ஷுக்களையும், பிக்ஷுணிகளையும் உற்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான்."

"இனி, அவன் வந்தால் சங்கத்துக்குள் புகாதபடி தடை செய்து விடு; அவனை வரவிட்டால், பல விபரீதங்கள் உண்டாகும். அவனைப்பற்றி மிகவும் கவனம் செலுத்தவேண்டும்."

"அப்படியே செய்கிறேன். அவனை அடக்கிவிடுவதற்கும் வழி தேடுகிறேன்."

"வழி என்ன? 'காளன் யார்?' என்பதைப்பற்றி அவன் ஏன் ஒற்றறிகிறான்? காளன் பெரிய கொலையாளியாம்.—இவ்வாறு என் தந்தை செவிக்கும் ஓதியிருக்கிறான். பௌத்த சங்கத்தைப்பற்றிப் பலவாறு கோள் கூறியிருக்கிறான். ஆதலால், நாம் எப்போதும் செய்யும் வழியை இவனுக்கும் செய்துவிடவேண்டும். நம் சங்கத்தார்களையும், தாபசப் பெண்களையும் தக்கவாறு நடந்துகொள்ளும்படி செய்துவிடு. என் கருத்தைப் புத்தமித்திர அடிகளுக்கும் கூறிவிடு."

"அவ்விதமே செய்கிறேன்; ஒன்று கேட்டுக் கொள்கிறேன்"

"என்ன?"

"தாங்கள் பத்திரை விஷயமாக என்ன முடிவு செய்தீர்கள்?"

"ஏன்? அவள் தந்தையின் உடம்பாடு பெற்று மணம் புரிந்துகொள்வதென்றே உறுதி செய்தேன்."

"அப்படியானால்..."

"என்ன?"

"சயந்தியின் கதி?"

"அவளைப்பற்றி என்ன? காதற்கணிகை தானே அவள்? எப்போதும்போல் என் ஆதரவு அவளுக்கு இருக்கும். தவிர, பத்திரையின் மணத்தைப்பற்றி அவளிடம் கூறப் போவதும் இல்லை."

"அவள் உணர்ந்தால்?"

"உணர்ந்தால் என்ன? உண்மையை ஒப்புக் கொள்வதில் தவறு உண்டா?"

"சயந்தியின் அன்பையும் மன நிலையையும் உணர்ந்த தாங்கள் இவ்வாறு செய்வது நியாயமா? அவள் மனம் வருந்தினால்......"

"பாலகா, அதை மறந்துவிடு. என் மனம் பத்திரை வசம் பறிபோய் விட்டது. எவ்வாறேனும் அவளை மணந்தே கொள்வேன். இனிமேல் நடப் பதைக் கவனி."

"அப்படியே! நான் சென்று நாளைக்கு வருகிறேன்."

ஸத்துகனிடம் விடை பெற்றுச் சென்றான் பாலக பிக்ஷு. ஏவலாளர் ஸத்துகனுக்குப் பணிவிடை செய்வதற்கு ஆயத்தமா யிருந்தனர். ஸத்துகன்

விரைவில் எழுந்து நீராடிப் புத்தனைத் தொழுதான். உணவருந்திய பின் சிறிது நாழிகை அமைதியாக அமர்ந்திருந்தான்.

அப்போது கதிரவன் வானப்பரப்பின் நடுநிலைக்கு வந்து விட்டான். படை பதைக்கும் வெயில். ஸத்துகனுடைய நேர்மைக்கு மாறான கொள்கைகளையும் செயல்களையும் கண்டு கொதித்து வெம்புகின்றவனைப் போல் தோன்றினன் சூரியன். கனற்பொறி பறப்பன போன்று இருந்தது வெயிலின் வெம்மை. கண்கண்ட தெய்வமாக விளங்கும் அவனைக்கூட அவ்வேளையில் கண்கொண்டு பார்க்க இயலாது. அவ்வேளையில் ஸத்துகன் குதிரை மீது உலாப் புறப்பட்டான். விண்ணை அளாவ, உயர்ந்து அகன்ற கொடிநெடு மாடங்களும், மாளிகைகளும் இருபுறமும் விளங்கும் வீதியில் வேகத்துடன் சென்றது ஸத்துகன் குதிரை. வீதியில் இயங்குபவர் குதிரையின் வாயுகதியைக் கண்டு பிரமிப்புற்றனர். கனற்பொறி பொழியும் வஜ்ரக்குடம் போல் சூரியன் விளங்கியமையால் மாந்தரின் கூட்டம் சிறிது குறைவாகவே இருந்தது. அவரவர் ஆங்காங்கே உணவருந்திக் களைப்பாறி யிருந்தனர். வெயிலின் வெம்மை ஸத்துகனுக்கு வெம்மையாகத் தோற்றவில்லை. அதை அவன் பொருட்படுத்தவில்லை. ஆனால் அவன் மனத்தில் சயந்தியின் பிரிவு என்னும் கனற்பொறி கொதித்து நாலு புறமும் புகைந்துகொண்டிருந்தது. வேறொருபுறம் பத்திரை மீது கொண்ட ஆராக் காதலின் வெம்மை கனிந்து கொண்டிருந்தது; அதனால் அவன் தீவிரவேகத்துடன் புறப்பட்டுச் சென்றான். தான் புறப்பட்டுப் போகும் இடத்தைப்பற்றி முதலில் அவனுக்குத் துளிக்கூடச் சிந்தை யில்லை. புறத்து உலாவும் உயிராகிய சயந்தியின் அன்புப்பிணை அவனை அவளிடம் இழுத்துச் சென்றது.

அவன் உள்ளக் கிளர்ச்சியையும், அவனுக்கும் சயந்திக்கும் உள்ள அன்புப்பிணைப்பையும் அவன் குதிரைகூட அறிந்திருந்தது போலும்! அவ்விதம் இல்லையேல் அவன் மனோவேகத்திற்குச் சமமாக, சயந்தியின் மாளிகையை நோக்கி அது செல்லுமா? சில விநாடிகளில் பல வீதியைக் கடந்தாயிற்று. 'எவ்வளவு விரைவு! எவ்வளவு விரைவு! இது என் மனத்தின் வேகமா? குதிரையின் நடை வேகமா?' என்று ஸத்துகனே திகைப்புக் கொண்டான். குதிரை நின்றதுதான் அவனுக்குத் தெரியும். அவன் கண்களை அவனாலேயே நம்பமுடியவில்லை. கணிகையர் வீதியில், சயந்தியின் மாளிகையில் அவன் நிற்கிறான் என்பதை மேகத்தின் சிறு நிழல் அம்மாளிகைமீது படர்ந்த போதுதான் அவனால் அறிய முடிந்தது. விரைவில் கீழிறங்கி மாளிகை வாயிலை அடைந்து கதவைத் தட்டினான். தானாகவே கொட்டகைக்குள் சென்று மெல்ல மெல்ல மூச்சு வாங்கியது குதிரை. அப்போது தாழ்ப்பாளை அகற்றிக் கதவைத் திறந்து நின்று காட்சியளித்தவள் யார் தெரியுமா? 'காதற் கணிகைதானே!' என்று ஸத்துகனால் இகழப்பட்ட காதலி சயந்தியே! ஸத்துகனைக் கண்டதும் பிரமித்து நின்றாள் அவள்.

"உள்ளே வாருங்கள்; இந்தக் கொடும் வெயிலில் ஏழையேன் வீட்டிற்கு வர, இவ்வளவு கருணையா? வாருங்கள் உள்ளே" என்று கூறி அவன் கரங்களைப் பிடித்து அழைத்துச் சென்றாள். ஸத்துகன் வாய் திறவாமல் மௌனம் கொண்டான். 'களைப்பு நீங்கட்டும்' என்று எண்ணி அவனுக்கு வேண்டிய உபசரணைகளைச் செய்தாள். பூவால் ஆக்கிய மதுவைப் பொன் கிண்ணத்தில் ஊற்றித் தன் தளிர்க்கரத்தால் அளித்தாள். அதை அருந்தியவுடன் உள்ளம் குழைந்தது ஸத்துகனுக்கு; 'என்ன இன்பம்! என்ன அன்பு!' என்று எண்ணிக்

குளிர்ந்தது அவன் மனம். ஆறுதல் அடைந்தவளாய்ப் பெருமூச்சு விட்டாள் சயந்தி. உள்ளத்தில் வெம்மை மறைந்து குளிர் நிறை இன்பம் துளும்புவதுபோல் இருந்தது அவனுக்கு.

"முகம் கறுத்து விட்டதே! ஆ! எவ்வளவு வேர்வை! ஏன் இவ்வளவு கொதிப்பு? இந்தக் கொடும் வெயிலில் ஏன் சிரமம்?" என்று கூறிக் கொண்டே, குளிர்காற்று அளிக்கும் சந்தன ஆல வட்டத்தால் மெல்ல வீசினாள்.

"ஆம்; வெயிலின் கொதிப்புத்தான்" என்று கூறிப் பூவணைமீது அப்படியே சாய்ந்தான். உண்மையில் அவனுக்குக் களைப்புத்தான். அறிவு கூடச் சோர்வுற்றிருந்தது.

"வெயிலுக்கு முன்பே வந்து விடக் கூடாதா? ஏன் நேற்று முழுதும்..." என்று கூறிக்கொண்டே ஸத்துகன் பாதங்களை மெல்ல வருடிக்கொண்டிருந்தாள். அப்போதுதான் அவள் வதனத்தை ஸத்துகன் நோக்கினான்; உடனே சரேலென்று எழுந்து உட்கார்ந்தான். அவன் கண்களில் விறுவிறுப்புத் தோன்றியது. துணுக்குற்றவனாய், "சயந்தி, ஏன் இந்த அலங்கோலம்? உன் முகம் இவ்வளவு வாட்டமுறக் காரணம் என்ன? ஒரு நாள் இரவு நான் இல்லாவிட்டால் இத்துணை வருத்தமா? பனியால் கருகிய தாமரை மலர்போல் உன் முகம் வாடி விட்டதே!"

"ஆம்; சூரியன் இல்லாமல் பனி மிகுதியானால் தாமரை கருகி வாடாதா? ஆனால் சூரியன் தோன்றியவுடன் பனியும் மறையும்; மலரின் வாட்டமும் நீங்கும்."

"நான் சூரியனைப்போல் வெம்மை அளிப்பவனா? அப்படியானால்......"

"தாமரையை மலரச் செய்யும்போது, தாங்கள் எப்படி வெம்மையைத் தருபவர் ஆவீர்கள்? அல்லாமல், சூரியனின் வெம்மையையும் தாமரை தாங்கிக் கொள்ளும். அது கருகி வாடாது. ஆனால் சூரியன் இன்றேல் அது வாடிவிடும். முகம் குவியும்."

"சயந்தி, நீ மிகவும் படிக்கா விட்டாலும் அறிவு மிகுதியாக உடையவள். உன் உள்ளம் கவிஞரின் உள்ளம் போன்றது. சிறிய வயசில் பேரறிவு படைத்துள்ளாய். உன்னை அரைக்கணமும் பிரியவிரும்பேன்."

"அப்படியானால், நேற்று முழுதும் அடியேனை மறந்திருந்தது ஏனோ? தாங்கள் இல்லையேல் நானும் இங்கு இல்லாதவள் போலத்தான்; என் உடல் மட்டுமே இங்கு இயங்கும்."

அவள் வார்த்தைகளால் ஸத்துகனின் மனம் புழுங்கியது. சயந்தியின் வாடிய வதனத்தையும் அவள் கண்களில் நீரூற்று எழுவதையும், வருத்தத்தை மறைக்க அவள் குறு நகை புரிவதையும் கண்டு அவன் மனம் இளகியது. அவள் உள்ளத்தைப் புண்படுத்தும் வார்த்தைகளை அவளிடம் கூற அவனுக்கு மனம் இல்லை. 'உன்னையே நம்பியிருக்கும் எளிய பேதையாகிய சயந்தியின் மனம் புண்படும்படி செய்தாயேல், எழுபிறப்பும் அத்தீவினை தொடர்ந்து, உன்னை வருத்தும்' என்று அறிவென்னும் அமைச்சன் அவனுக்குக் கூறினான்.

"சயந்தி, சில நாட்களாக வேலை மிகுதியாக இருக்கிறது. சில முக்கியமான காரியங்களில் கவலை கொண்டிருக்கிறேன். அதனால் இரவில் கூட வருவதற்கில்லை. ஆனால், உன்னை மறவேன்."

"என்ன? இன்று இரவும் வேலையா?" என்று அவள் கேட்டுப் பெருமூச்சு விட்டாள்.

அப்போது அவள் கையில் இருந்த செங்கழுநீர் மலர் கருகி வாடியது. ஸத்துகன் அதைப் பார்த்து

வியப்புற்றான். உடனே அதைத் தன் கையில் வாங்கி, "சயந்தி, உன் பெருமூச்சின் வெம்மை தாங்காமல், தளிருடன் கூடிய இச்செங்கழுநீர்மலர் கருகி விட்டதே! ஆ! என்ன வெம்மை உன் மனத்தில்!"

"அதற்குக் காரணம் யான் அல்லவே! தங்கள் பிரிவின் வெம்மையல்லவா அது!" என்று கூறிக் கண்ணீரைக் 'கள கள' வென்று சொரிந்தாள். அப்போது ஸத்துகன் கண்களிலும் நீர் துளித்தது.

"சயந்தி, வருந்தாதே! எவ்வளவு நாழிகை ஆயினும் இரவில் இங்கு வருகிறேன்; உன்னை மறந்திருப்பது என்னை மறந்திருப்பதுபோல் ஆகும்; இதை நீ நம்பவேண்டும். நம் இன்பக்கனி எங்கே? உறங்குகிறானா?"

அப்போது துன்பம் மறைந்து இன்பம் நிறைந்தது, சயந்தியின் மனத்தில். அவள் வதனமும் மலர்ந்தது. விரைந்து அப்புறம் சென்றாள். மலரணையில் மயங்கி உறங்கிய மைந்தனை எடுத்துக் கொணர்ந்து ஸத்துகன் மடிமீது வைத்தாள். மலர் விழி திறந்து குறுநகை புரிந்தான், புதல்வன். ஸத்துகனின் வஞ்சம் நிறைந்த மனத்தை எள்ளி இகழ்வது போலத் தோன்றியது. கைகால்களால் அடித்தும் உதைத்தும் ஆரவாரம் செய்தான் ஸத்துகனை. இன்பக் கனியாம் மைந்தனைக் காணுந்தோறும் அவன் உவகைக் கடலில் மூழ்கி எழுந்தான். அவ்விள மைந்தனின் சிவந்த கன்னங்களை முத்தமிட்டு மேலும் சிவக்கச் செய்தனர் சயந்தியும் ஸத்துகனும். செவ்வாய் திறந்து சிறு சொல் மிழற்றினான் மைந்தன். இளங் குழவியின் மழலை மொழியால் இருவரும் ஒருங்கே மன மகிழ்ந்தனர்.

குழந்தையின் விளையாட்டிலே இருவரும் சிறிது நாழிகை மகிழ்ந்திருந்தனர். அவ்வளவில், சூரியனின் வெம்மை குறைந்தது. குளிர்ந்த காற்று, சாளரங்கள்

வழியே வீசியது. அப்போது வீதியில், மகளிர் குதூகலத்துடன் கூடிப் பேசிக்கொண்டு செல்லும் ஆரவாரம் கேட்டது. மேல்மாடத்திலிருந்து பார்த்தாள் சயந்தி. இந்திரவிழாவின் கடைசி நாள் என்ற நினைவு அப்போதுதான் வந்தது. ஆனால், ஸத்துகனுடைய காரியங்களுக்கு இடையூறு செய்ய அவள் விரும்பவில்லை. அவ்வாறு இருந்தும் அவள் ஆவல் தணியவில்லை; "இன்று இந்திர விழாவின் கடைசி நாள்; ஆனால் தங்கள் காரியத்திற்கு இடையூறு இல்லாமல் இருந்தால்..." என்று வார்த்தையை இழுத்தாள். அதைக் கேட்டவுடன் ஸத்துகன் தன்னை நொந்து கொண்டான்.

"ஏன், நான் வரா விட்டாலும் நீ போய்ப் பார்த்து வரலாமே! நாகவல்லியையும் உடன் அழைத்துப்போ. வேண்டுமானல் பாலகனை அனுப்புகிறேன்" என்ருன்.

"வேண்டாம்; அப்படி அவசியம் இல்லை. முன்பு பார்த்தவையே அவைகள். தாங்கள் இல்லாமல் இம்மாளிகையை விட்டு அகல்வதில்லை என்பது என் விரதம்" என்ருள்.

சயந்தியின் மன இயல்பையும் அன்பையும் அறிந்து ஸத்துகன் மனம் இரங்கினன். 'இவளை நான் வஞ்சிப்பது எவ்வாறு தகும்?' என்று அவன் மனம் கலங்கியது. சயந்திக்கு மனம் குளிரும்படி வார்த்தைகளைக் கூறினன்.

புத்ததேவர் அருளிய பிடகத்திரயங்களிலிருந்து பல அரிய கருத்துக்களை எடுத்துக் கூறினன். பரோபகார நிமித்தமாக, புத்ததேவன், தனது உடல் முதலியவற்றைத் தியாகம் செய்த பல வரலாறுகளையும் கூறினன். அவற்றைக் கேட்டுச் சயந்தி மனம் குளிர்ந்திருந்தாள். இவ்வாறு இனிமையாகப் பேசிக்கொண்டே அஸ்தமனம் வரை அங்கு இருந்தான். கதிரவன் மறைந்தவுடன் நிலவு பரவியது. ஆனால்

ஸத்துகன் மனத்தே அஞ்ஞான இருள் கவிழ்ந் திருந்தது.

"நான் போய்விட்டு, இரவில் எவ்வளவு நாழிகை சென்றாலும் வந்துவிடுகிறேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டான். மறு மொழி கூறுவதற்கு அஞ்சினாள் சயந்தி. எனினும் துணிவுடன், "தங்களைக் கண்ட பின்பே என் மனம் ஆறுதலுறும்" என்றாள். ஸத்துகன் விரைவாகக் கீழிறங்கி, குதிரைமீது ஏறிக் கொண்டான். ஸத்துகன் சென்றவுடன் கதவைத் தாழிட்டுக் கொண்டாள் நாகவல்லி.

சயந்தியை ஏமாற்றிவிட்டதாக எண்ணிக் குதூ கலத்துடன் சென்றான். நேராகக் காவிரிச் சங்க மத்துக்குக் குதிரையைச் செலுத்தினான். வழியில் விநோதம் நிறைந்த பலவகைக் காட்சி களைக் கண்டான். பத்திரையைக் கண்டு இன் புறலாம் என்று அவன் மனம் குதூகலத்துடன் கொந் தளித்தது. கடலோரமாக நீண்ட நாழிகை குதிரை மீது ஏறியவண்ணம் உலாவினான். மனத்தில் பத்திரையைப் பற்றிய சிந்தனை அதிகமாயிற்று. வானத்தை நிமிர்ந்து பார்த்தான். அமுத கிரணங்களை அள்ளிப் பொழியும் சந்திரனைக் கண்டான். நாழிகை ஆகி விட்டதை உணர்ந்து, 'பத்திரையின் மாளிகைக்கு விரைந்து செலுத்தினான் குதிரையை. வணிகர் வீதியில் ஜனக் கூட்டத்தின் ஊடே விரைந்து சென்றான். சிலகணத்தில் பத்திரையின் மாளிகையை அடைந்தான். மாளிகையின் ஒருபுறத்தில் குதிரையை நிறுத்தி விட்டு, உள்ளே சென்றான். பசி மிகுந்தவர் உணவைக் கண்டது போல், ஸத்துகனைக் கண்டதும் பத்திரைக்கு ஆனந்தம் பொங்கியது. காதலும் ஒருவகைப் பசிதானே! அகிற் புகையின் நறுமணம், தீப ஒளி, பூக்களின் அலங் காரம் ஆகிய இவற்றால் கன்னிமாடம் மங்களகர மாகத் தோன்றியது. அழகுக்கு அழகு செய்ததென

அலங்கரித்துக் கொண்டிருந்தாள் பத்திரை. ஸத்துகன் அவளுடன் கட்டிலில் அமர்ந்தான். உணவு வகைகளும், மதுபானமும் அவன்முன் கொணர்ந்து வைத்தாள் வசந்தி.

கட்டிலில் உட்கார்ந்த சில கணத்திற்கெல்லாம் அவன் இருதயம் எதனாலோ துடித்தது. மனத்தில் கலக்கம் மூண்டது. அச்சம் ஒரு புறம், ஆவல் மற்றொரு புறம். அதை அவன் மறைத்துக்கொண்டாலும் அவள் முகத்தில் குதூகலம் குறைந்தது நன்கு தெரிந்தது. தான் ஆலோசித்த விஷயத்தை வெளியிடத் தருணம் இதுதானென்று அவனுக்குத் தோன்றியது.

"பத்திரை, ஒன்று கூறுகிறேன் கேள்; என் அதீனத்தில் 'ஸத்துக மந்திரம்' என்னும் பௌத்த சங்கம் ஒன்று இந்திர விகாரத்துக்குப் போகும் வழியில் இருக்கிறது. அதில் நாள் தோறும் புத்தமித்திர அடிகள் என்னும் முனிவரால் தருமவுரை நடைபெறும். பிக்ஷுக்கள் பிக்ஷுணிகள் இருக்கிறார்கள். ஆடவரும் மகளிரும் அங்கு வந்து தருமவுரை கேட்டுச் செல்வார்கள். ஆதலால், நீ மாலையில் அங்கு வசந்தியுடன் வந்து நாள்தோறும் தருமவுரை கேட்டுச் செல்லலாம். நான் அங்கே இருப்பேன். இதனால் நான் உன் தந்தையுடன் பழகுவதற்கு எளிதாக இருக்கும். இங்கு வந்து போவதற்கும் எனக்கு எளிது" என்றான். பத்திரை அதற்கு உடம்படாமல் என் செய்வது?

ஸத்துகன் விஷயமாக எந்தக் காரியத்தையும் செய்ய ஆயத்தமாயிருந்தாள் பத்திரை. காதலின் புது மலர்ச்சி அவளது அறிவை மழுங்கச் செய்தது. உடனே உவப்புடன், "தாங்கள் சொல்லியபடியே செய்கிறேன். இதனால் எனக்கு மிகவும் சந்தோஷமே" என்றாள். ஸத்துக மந்திரத்திற்கு வரும் வழியை

வசந்திக்குச் சொன்னான். அதைக் கேட்டவுடன் வசந்தியின் உள்ளம் துணுக்குற்றது. 'இதென்ன விபரீதம்! இவ்வறிகுறி பின்னே நேரப்போகும் பெரும் துன்பத்திற்குத் தானே!' என்று கலங்கினாள்.

சூரியன்போல் ஒளியைத் தந்தாலும் வெம்மையளிக்காமல் குளிர்ச்சியையே அளித்தான் சந்திரன். ஆனால் துணை பிரிந்த காதலருக்கு வெம்மையையே தந்தது அந்நிலா. இரவின் பிற்பகுதி. ஸத்துகன் பத்திரையிடம் விடை பெற்றுப் புறப்பட்டான். முன்பு உறக்கத்திலிருந்து பத்திரை விழித்துக்கொண்டாள். சயந்தியிடம் ஸத்துகன் போகிறான் என்பதை அவள் அறியவில்லை. பூனைபோல் பதுங்கியிருந்து புலிபோல் விரைவில் வெளியேறினான். வசந்திக்கு மட்டிலும் ஸத்துகன் அவன் மாளிகைக்குச் செல்லவில்லை என்பது தெரியும்.

## 7

### 'சர்வம் நாசம்'

"இரண்டு நாட்களாகப் பார்த்து வருகிறேன். அவன் அந்த இளம்பெண்ணின் கன்னிமாடத்துக்குள் இரவில் போகிறான். நடு இரவில் ஒருவரும் அறியாமல் வெளியேறுகிறான்; அப்போதே நேராகச் சயந்தியிடம் செல்லுகிறான்" என்றான் இளந்தத்தன்.

"ஓரிரவில் இரண்டு காதலிகள்! அதிசயமாக இருக்கிறது! ஆமாம், அவள் யார் என்பது தெரியுமா?" என்றான அவன் நண்பன் அச்சன்.

"அறிந்து தான் சொல்லுகிறேன். அவள் எனாதி மும்முடிநாய்கனுடைய பெண். நாய்கன் மிகவும் வயசு சென்றவன். இதைப்பற்றி அவனுக்குத் தெரியாது. அந்த மாளிகையில் கன்னிமாடம் ஒரு புறம் இருக்

கிறது. நாய்கன் இருக்குமிடம் வேறொருபுறம் இருக்கிறது. அல்லாமல் அந்தப் பெண்ணே அம்மாளிகைக்குத் தலைவி. தாய் இறந்துவிட்டா ளென்றும் தெரிகிறது. அந்தப் பெண்ணின் பெயர் பத்திரையாம். அவளுக்குத் தோழி ஒருத்தி இருக் கிறாள். மிகவும் அழகுள்ளவள் அவள்; ஆனால் கைம்பெண். பத்திரையின் காதல் இவனுக்கு எவ்வாறு ஏற்பட்டது என்று எனக்கு விளங்க வில்லை. ஸத்துகனை அவள் தீவிரமாகக் காதலித்து விட்டாள் என்றே தெரிகிறது.''

''இளந்தத்தரே, நீர் சொல்வதைப் பார்த்தால் அவர்களுக்குக் காதல் ஏற்பட்டுச் சில நாட்களே ஆகியிருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. பாவி! வஞ்சகன்; இதுபோல் எத்தனை மகளிரை அவன் கெடுக்கப் போகிறானோ? இவனை அடக்க நம் சோழ வேந்தனால் முடியவில்லையா? கடந்த சில தினங்களாகப் பௌத்த சங்கத்தில் அவனை நான் பார்ப்பதில்லை. காரணம் இந்தப் புதிய காதல் போலும்! அந்தப் புத்தமித்திரர் ஏதோ உபதேசம் செய்துகொண்டிருக்கிறார். அவரிடங்கூட எனக்குச் சந்தேகந்தான். அங்கே இருக்கும் பௌத்த பிக்ஷுணிகளில் நேர்மையாய் நடந்துகொள்பவர் யார் இருக்கிறார்கள்? அந்த ஸத்துக மந்திர பௌத்த சங்கத்தில் சேர்ந்த பெண்களில் எவ்வளவு பேர் கெட்டுவிட்டார்கள்! பாவம், விளக்கில் சென்று விழும் விட்டிற் பூச்சிகள்போல் மாயப்போகிறார்கள்! இந்த ஸத்துகனின் பௌத்த சங்கத்தால் உலகம் புகழும் பௌத்தமஹா சங்கத்திற்குக்கூடப் பழி விளையப்போகிறது!''

''அச்சா, நான் முன்பே எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். இப்போதுதான் அரசனுக்குத் தெரிகிறது. ஸத்துக மந்திரத்தின் நிகழ்ச்சிகள் யாவும் அரசனுக்கும் தெரியும். அதைக் கவனிப்பது நம் பொறுப்புத்தான்.

ஸத்துக்ன் பல வழியிலும் பௌத்தமதத்திற்கு உடம் படாத செய்கைகளையே செய்கிருன். நாம் எவ்வா றேனும் அவனை அடக்கிவிட வேண்டும். அதுவிஷய மாகவே உன்னை இங்கே அழைத்தேன்."

"இளந்தத்தரே, அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம்; சந்தர்ப்பம் வருகிறது. அவனை அடக்கி விடலாம்."

"நான் சொல்வதைக் கேள்; அதுதான் அவனை அடக்குவதற்கு நல்ல உபாயம்; ஸத்துகன் பெரிய வஞ்சகன். நாமும் அவனை வஞ்சகம் புரிந்தே அடக்க வேண்டும். இல்லாவிடில் அவனை அடக்கமுடியாது. இதோ பார், இந்த முத்துமாலைகளை! இவை உயர்ந்த முத்துக்கள். அரண்மனையைச் சேர்ந்தவை. இவற் றைக்கொண்டு காரியத்தை முடித்து விடுவதாக ஜயதுங்கன் சொல்லிவிட்டான்—"

"இவனு?"

"சொல்வதைக் கேள்; ஜயதுங்கன் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவன்; இந்த நகருக்குப் புதியவன். ஒற்றறிவதில் நிபுணன். இவனை இந்நகரில் எவரும் அறியார். உனக்கும்,இவன் உதவி மிகவும் இன்றி யமையாதது" என்று கூறிவிட்டு, ஜயதுங்கனை அருகில் அழைத்தான்.

ஜயதுங்கன் அருகில் வந்து நின்றுன். அவன் புதியவனுயினும் அவனிடத்தில் அச்சனுக்கு அன்பும் மதிப்பும் அதிகம் உண்டு. தான் செய்யப்போகும் காரியத்தைப்பற்றி ஜயதுங்கன் அவனிடம் கூறினுன். "அது நல்ல உபாயந்தான்; மற்றவற்றைப் பின்பு பார்த்துக்கொள்வோம்" என்றுன் அச்சன். உடனே ஓர் ஐயம் உண்டாயிற்று அவனுக்கு; "நீ ஸத்துகனைப் பார்த்திருக்கிருயா?" என்றுன்.

"நான் பார்த்திருக்கிறேன்; அவனைப்பற்றி நன்ருக எனக்குத் தெரியும். 'நானும் சொல்வி

யிருக்கிறேன் ; ஆனால், அவனுக்கு இவனைத் தெரியாது" என்றான் இளந்தத்தன்.

"என் விடுதிக்குச் சென்றபின், காரியத்தைக் கவனிக்கிறேன்" என்று சொல்லி, முத்துக்கள் வைத்த பெட்டியை எடுத்துக்கொண்டுசென்றான் ஜயதுங்கன்.

"சயந்தியைப்பற்றி உன்னிடம் நான் சொன்னது ஞாபகம் இருக்கிறதா?" என்றான் இளந்தத்தன்.

"அதைப்பற்றி உமக்குக் கவலைவேண்டாம்; நான் முடித்துவிடுகிறேன்."

"மற்றொன்று; - நாம் இப்போது ஸத்துகனைப் பற்றிக் கவனிக்காவிட்டால் பெருந்துன்பம் நமக்கே வரும். அல்லாமல், அந்தக் கானனைப் பிடித்து விட வேண்டும். அரசனுக்கு அப்போதுதான் மன அமைதி ஏற்படும். அவனைப் பிடித்து விட்டால் ஸத்துகனின் வன்மையும் முறியும்."

"காளனைப் பிடிப்பதற்கு வேண்டிய வழிகளை நான் தேடுகிறேன். சில நாட்களில் பிடித்துவிடுகிறேன். அதற்குள், எத்தனை களவுகள், கொலைகள் நடக்கின்றனவோ?"

"அவனைப் பிடித்துவிட்டால் எல்லாக் களவுகளும் கொலைகளும் ஸத்துக மந்திரத்தின் உண்மைகளும் வெளியாகிவிடும்."

"அதற்கென்ன ஐயம்?"

"அது விஷயமாக இன்று அரசனிடம் பேச வேண்டும்; நீயும் என்னுடன் வா" என்றான். இருவரும் பேசிக்கொண்டே அரண்மனையை நோக்கிச் சென்றனர்.

ஸத்துகன் கூறிச் சென்ற அன்றைக்கே பத்திரை ஸத்துக மந்திரம் போய்வந்தாள். வசந்தியும் உடன் சென்று வந்தாள். பௌத்த சங்கத்தைப் பார்த்து

வந்ததுமுதல் அங்கே கண்ட காட்சிகள், பத்திரையின் மனத்தைவிட்டு அகலவில்லை. அதைப்பற்றி நினைக்குந் தோறும் அவளுக்கு வியப்பும் அச்சமும் உண்டாயின. அவ்விடத்தை விட்டு வந்ததுமுதல் அதே நினைவாக இருந்தாள்.

"வசந்தி, எவ்வளவு பெரிய சங்கம் அது! பௌத்த மஹாசங்கத்தை நான் பார்த்திருக்கிறேன்; ஆனால் இந்தச் சங்கத்திற்கும் அதற்கும் எவ்வளவோ வேறுபாடு இருக்கிறது!"

"ஆம்; பெரிய சங்கமே அது. அங்கே சென்றவுடன் என் உள்ளத்தில் ஒருவித அச்சமும் தூய்மையும் உண்டாகிவிட்டன. அங்கே எவ்வளவு பெண்கள் பிக்ஷுணிகளாக இருக்கின்றனர் பார்த்தாயா?"

"ஆம், பௌத்த மஹாசங்கத்தில் இன்னும் அதிகம். இந்தப் பௌத்த சங்கத்தில் உள்ள பிக்ஷுக்கள் யாவரும் இளம் வயசினர்; பழங்காலத்து முனிவர்களின் தோற்றம் இவர்களைப்போன்றுதான் இருக்கும்போலும். பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் யாவரும் கழுத்திலிருந்து பாதம் வரையில் ஆடையால் போர்த்தியிருக்கும் தோற்றம் எவ்வளவு அழகு தருகிறது பார்த்தாயா?"

"நிறைந்த அழகுதான்; ஆனால் அவ்விதம் இருப்பதன் காரணம்?"

"பௌத்த மதப் பிக்ஷுக்களும், பிக்ஷுணிகளும் அவ்வாறு இருப்பது இயல்பு; தங்கள் மேனியைப் பிறர் பார்க்காதவாறு அவ்விதம் போர்த்திக் கொள்கின்றனர்."

"ஸத்துகரும் பிக்ஷுவின் தோற்றத்தில் காட்சி அளித்தாரே! அவர் வடிவம்...."

"அவர் வடிவம் புத்ததேவரது வடிவத்தை எனக்கு ஞாபக மூட்டுகிறது. ஏன், அவரது பரந்த முகம்,

கருணையும் ஆழமும் கொண்ட பார்வை, தலைநிறைந்த மயிர் முடி, கழுத்து முதல் பாதம் வரையில் ஆடையால் போர்த்திய தோற்றம், மலர்க்கரம் இரண்டையும் மடிமீது வைத்துத் தியானம் செய்யும் நிலை - ஆ! அவர் மகா புருஷர் என்பதில் ஐயமே இல்லை."

"பத்திரை, நீ சொல்வது முற்றும் உண்மை. அவர் புத்த தேவரது அம்சம் என்று கூட நான் எண்ணுகிறேன். ஏனென்றால், அந்தப் பௌத்த சங்கத்திற்கு அவரே தலைவர். தவிர, அவரிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறார்கள், அந்தப் பௌத்த மஹாபிக்ஷுக்கள்! புத்தமித்திர அடிகளும் ஸத்துகரிடம் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறார்" என்று கூறி விட்டுத் தன் மனத்துக்குள், 'நாசத்திற்கு விதை விதைத்தாயிற்று. இனி என்ன? தலைக்குமேல் போய் விட்டது. ஸத்துகன் பத்திரை கூறுகிறபடி மஹா புருஷன்தான். ஆனால் எந்த விதத்தில்? போகப் போகத் தெரியும்...... அவன் தோற்றம், எனக்கு என்னவோ அச்சத்தையே உண்டாக்குகிறது! அது கிடக்கட்டும். அந்தச் சங்கத்தில் என்னைப் பார்த்து ஒரு பிக்ஷு மருண்டு நின்றார்; காதல் மருட்சிதான்! அவர் யார் என்பதை அறிய என்மனம் ஆவல் கொண்டது; ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் இல்லாமல் போயிற்று. அதனால் என்ன? ஸத்துக சிரேஷ்டியின் பக்கத்தில்தானே அவர் திரிந்துகொண்டிருந்தார்? இருக்கட்டும், கைக்குள் இருப்பது எங்கே போய் விடும்' என்று எண்ணிச் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

"வசந்தி, என்ன ஆலோசனை செய்கிறாய்? என் மனம், ஸத்துக மந்திரத்திலேயே ஒன்றிவிட்டது. மறுபடியும் எப்போது போகலாம் என்று ஏங்குகிறது என் மனம். துறவு பூண்ட பௌத்த பிக்ஷுக்களின் தோற்றமும் பிக்ஷுணிகளின் காட்சியும், எவ்வளவு கம்பீரமும் பொலிவும் வாய்ந்து விளங்கின!

தவிர, அந்த மஹா பிக்ஷு, புத்த மித்திரர் 'சர்வம் நாசம்' என்பதைப் பற்றிப் பேசினரே! அதில் எவ்வளவு விஷயங்கள் நிரம்பியிருந்தன!"

"ஆம், அந்த மஹா பிக்ஷு, பௌத்தமதக் கருத்துக்களை மிக அழகாக எடுத்துக் கூறினர். அவர் மொழிந்த தருமவுரை என் செவிகளுக்கு அமுதூற்றைப்போல் இருந்தது" என்று சொல்லிவிட்டு, 'நல்ல பிக்ஷுதான் அவர். உயர்ந்த கருத்துக்களை மிக எளிதாகச் சொன்னர். அதுவன்றி, அவர் முக்காலங்களையும் உணர்ந்தவர் போலும்! இல்லையேல், நான் பத்திரையுடன் சென்றதும், அவர், சர்வம் நாசம் என்று அபசகுனம்போல் சொல்வாரா? அவர்மீது குற்றம் இல்லை. அவர் சொல்லும்போது நாம் சென்ரும். ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் ஏற்பட்ட காதலால், 'சர்வம் நாசம்' என்பதே, அதன் கருத்து!' என்று தனக்குள் எண்ணமிட்டாள்.

"வசந்தி, பிக்ஷுக்களிடம் அவ்வளவு பிக்ஷுணிகளும் மிகுந்த வணக்கத்துடன் நடந்துகொள்கிறார்கள். அவ்விளம் பெண்களைப் பார்க்கும்போது இரக்கமாக இருக்கிறது."

"ஆம். பெண்களின் வாழ்க்கை எந்த விதத்திலும் வணக்கத்துடனேயே இருக்கவேண்டும் என்பது இறைவன் கட்டளை போலும்!"

"ஆனல் அவர்களுக்கு என்ன குறை? முக மலர்ச்சியுடன் இருக்கிறார்களே!"

"'புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி' என்று அவர்கள் சொல்லிய வண்ணம் வணங்குவது எனக்கு மிக இன்பமாக இருந்தது."

"ஆம்; அந்தப் பெண்களும் நம்மைப்போன்றவர்களே! ஆனல், அங்கிருப்பவர்களில் பெரும்பாலோர்,

கைம்பெண்களே. பாவம், அவர்களுக்குத்தான் வேறு வழி இல்லை. அந்த இளம் பெண்களில் எத்தனையோ கன்னிகைகளும் உள்ளனர்."

"பத்திரை, எனக்கு இப்போதுதான் ஞாபகம் வந்தது. கைம்பெண்ணாகிய நான்கூட அதில் சேர்ந்து கொண்டால்......அடிகளிடம் அறவுரை கேட்டுத் தூய்மை பெறலாம்."

"உனக்கென்ன? நாள்தோறும் என்னுடன் வருகிறாயே! அதில் சேர்ந்துகொண்டாலும் இங்கேயே நீ தங்கவேண்டும்; நீ என்னுடன் இல்லாமற்போனால் எனக்குப் பொழுது போகாது. இங்கிருக்கும் சேடியர் உன்னைப்போல் ஆவார்களா?"

"ஆம், உன்னைப் பிரிந்திருக்க என்னாலும் ஆகாதுதான்."

"இதோ பார், வசந்தி, உன்னிடம் ஒன்று கூறுகிறேன்.....எனக்கு அதைச் சொல்வதற்குக்கூடச் சக்தி இல்லை."

"பத்திரை, மனத்தில் இருப்பதைச் சொல்லிவிட்டால் அமைதி ஏற்படும்; ஏன் கலங்குகிறாய்?"

"மாலைக்காலம் தோன்றியவுடன் அது ஞாபகம் வந்தது ; ஆனால்..."

"என்னிடம் சொல்வதற்குக்கூட வெட்கமா? உன் இன்பதுன்பங்களை நானும் சேர்ந்து அநுபவிப்பவள்தானே!"

"நேற்று அவர் சென்றபோது நான் உறக்கத்தினின்றும் நன்றாகத் தெளிவு பெறவில்லை ; ஞாபகமும் சிறிது இருந்தது. அது விடியற்காலந்தானே?"

"அவர் போகும்போது விடியற்காலந்தான்."

"என்னவோ, கனவு ; அது கனவென்று கூடச் சொல்வதற்கில்லை."

"அப்படியானால் என்ன?"

"இல்லை............கனவுதான்; எனக்கு ஞாபகம் இருந்ததோ, என்னவோ?"

"என்ன கனவு என்று சொல்லக் கூடாதா?"

"அந்தக் கொடிய கனவை நான் சொல்லத் துணிவேனு? ஒரு கொலை நிகழ்கிறது."

"என்ன? - கொலையா?" என்று கூறி அவள் அச்சமும் ஆச்சரியமும் கொண்டாள். அவள் தன் இரு காதுகளையும் கைகளால் பொத்திக்கொண்டாள்.

"வசந்தி, நீ அதை மறந்துவிடு. இனி அதைப் பற்றிக் கேட்காதே. பின்பு சொல்லுகிறேன்" என்று அச்சத்துடன் சொன்னுள்.

"பத்திரை, அது உன் கலக்கந்தான். உண்மையில்லாத கனவு. இதற்கா, இவ்வளவு பயம்? இதைப் போல் எத்தனையோ கனவுகளைக் கண்டிருக்கிறேன் நானும்" என்று கூறிவிட்டு, 'என்ன விபரீதங்கள் இனி நிகழப்போகின்றனவோ? யார் கண்டார்கள்? நான் நினைத்ததற்கும் நடப்பதற்கும் பொருத்தமாகவே இருக்கிறது; ஏதோ பெருந்துன்பம் விளையப் போகிறது என்றே தோன்றுகிறது. இந்தக் கனவு, 'சர்வம் நாசம்' என்பதற்குத்தான் அறிகுறி. யாருக்கு என்ன நாசமோ? விளையப்போகும் நாசத்தை என் கண்கொண்டு பார்க்கவேண்டும் போலும்!' என்று தனக்குள் கூறிக்கொண்டாள்.

கன்னிமாடத்தின் உள்ளே இவர்கள் இருவரும் உட்கார்ந்திருந்தனர். இவர்களை, வீதியில் இருந்தபடியே ஒருவன் உற்றுப் பார்த்தான். அவன் பார்த்ததை வசந்தி குறிப்பாக அறிந்தாள். உடனே விரைந்து வெளியே சென்று வீதியில் நிற்பவன் யார் என்று பார்த்தாள். தலையில் நீண்ட பட்டுத் துணி ஒன்றைச் சுற்றித் தலைப்பாகை கட்டியிருந்தான். விநோதமான சட்டை ஒன்றையும் போட்டிருந்தான். கையில் ஒரு பெட்டி இருந்தது. வசந்தி அவனைக்

கண்டவுடன் "யார்" என்று கேட்டாள். அவன் மிகவும் பணிவுடன், "அம்மே, தாங்கள் இம்மாளிகையின் தலைவிதானே?" என்றான்.

"இல்லை; உள்ளே இருக்கிறாள் என் தலைவி. நீ யார்?"

"நான் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவன்..." என்று கூறிக்கொண்டிருக்கையில் பத்திரை அங்கே வந்து சேர்ந்தாள். பத்திரையைக் கண்டவுடன் மிகப் பணிவுடன், "அம்மே, தாங்கள் இம் மாளிகையின் தலைவியா?" என்றான்.

"ஆம், நீ, யார்? எதற்குக் கேட்கிறாய்?"

"நான் பாண்டிய நாட்டில் இருப்பவன். கொற்கைத் துறைமுகத்திலிருந்து வருகிறேன். முத்து வியாபாரி நான்."

"முத்து வியாபாரியா? கொற்கைத் துறை. முத்துக்கள் இருக்கின்றனவா?"

"இருக்கின்றன; இந்தப் பெட்டியில் உள்ளவை அவைதாம்" என்று கூறிக்கொண்டே பெட்டியைக் கீழே இறக்கினான். அவன் பெட்டியைத் திறந்த போது, சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுப் பின்பே திறந்தான். அதிலிருந்து அவன் எடுத்த முத்து மாலைகள்! ஆ! எத்தனை ஒளியுடையன! உலகம் புகழும் கொற்கைத் துறையில் விளைந்த முத்துக்கள் அல்லவா அவை? அவற்றைக் கண்டவுடன் ஆவலோடு முத்துமாலை ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்த்து வியந்தனர் பத்திரையும் வசந்தியும்.

"அம்மே, இந்த முத்துமாலைகள் உயர்ந்தவை. இந்த நகரில் என் தந்தை ஆண்டு தோறும் முத்து மாலைகள் விற்றுப் போவது உண்டு. அவர் சென்ற வருஷத்தில் இறந்தார். அதனால் நான் விற்கத் தொடங்கினேன். அரச வீதியில் பல மாலைகளை விற்று

விட்டேன். இவைதாம் எஞ்சின. இந்த முத்துக்கள் கொற்கைத் துறையிலன்றி வேறு எங்கும் அகப்படா. உலகத்திலேயே சிறந்த முத்துக்கள் இவைதாம் என்று அறிஞர் கூறுவர். நீங்களும் அறிந்திருப்பீர்கள். இம்மாலைகள் ஒவ்வொன்றின் நடுவிலும், பச்சைக் கற்கள் பதிக்கப் பெற்றிருக்கின்றன...'' என்று முத்துக்களின் பெருமையைக் கூறிக்கொண்டே இருந்தான்.

''ஆனால், இந்த முத்துமாலைகளை விலைக்குக் கொடுப்பாயா?''

''விலைக்குக் கொடுக்கிறேன். ஆனால் ஒன்று: இருட்டிவிட்டது; எனக்கும் காரியம் இருக்கிறது. இவ்வூரில் கள்வர் பயம் உண்டென்று கேள்வி; அதனால் இவை தங்களிடமே இன்றிரவு இருக்கட்டும். விடியற்காலையில் இங்கே வந்து விலையைப் பெற்றுக்கொள்கிறேன். தங்களை நம்புவது போல் வேறு யாரையும் நம்பேன்'' என்றான். அவன் மீது மதிப்பும் இரக்கமும் ஏற்பட்டன இருவருக்கும். அவன் முகத்தில் சிறிதும் களங்கம் இல்லை. பாண்டிய நாட்டாரின் பேச்சாகவே இருந்தது அவன் பேச்சு.

''அப்படியே செய்; மாலைகளை எண்ணிக்கொள்'' என்றாள் வசந்தி.

''பெரிய மாலைகளில், மூன்றும், சிறிய மாலைகளில் ஐந்தும் இருக்கின்றன. காலையில் வருகிறேன்'' என்று கூறிவிட்டு மறைந்தான் பாண்டியநாட்டு முத்து வியாபாரி. முத்து மாலைகளைப் பெட்டியில் வைத்து எடுத்துக்கொண்டு உள்ளே சென்றனர் இருவரும். முத்து வியாபாரி எந்தப் பக்கம் சென்றான் என்பதை அவர்கள் அறியவில்லை; அந்தக் கவலை அவர்களுக்கு ஏன்?

சிறிது நாழிகைக்கெல்லாம் ஸத்துகன் வந்து சேர்ந்தான். அவனைக் கண்டவுடன் பத்திரையின் உள்ளத்தில் இருந்த கலக்கம், சூரியனைக் கண்ட பனி போல் மறைந்தது. அப்போது வசந்தி, 'நமக்கு இங்கே என்ன காரியம்?' என்று எண்ணியவளாய் அப்புறம் சென்றாள்; ஸத்துகனும் பத்திரையும் விநோதமாகப் பேசிக்கொண்டிருந்தனர். ஸத்துகனைப்பற்றி நினைக்குந்தோறும் திகில் உண்டாயிற்று வசந்திக்கு. கார்மேகத்தைக் கண்ட மயில் போல் ஸத்துகனைக் கண்டதும் குதூகலித்தாள் பத்திரை. ஸத்துகனுக்குச் சமமாக உலகில் வனப்பும் வன்மையும் ஒருங்கே பெற்ற ஆண்மகன் எவனும் இல்லை என்று எண்ணினாள் பத்திரை. அவனுடைய கம்பீரத் தோற்றத்திலும், பேச்சிலும், தன் மனத்தைப் பறிகொடுத்தாள். பலவாறு மனக் கோட்டை கட்டி மயங்கினாள். அவளுடைய இன்பம் நிறைந்த மோகப் பார்வையில் அவனும் மயங்கினான். இருவரும் உள்ளம் ஒன்றிய காதலர் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஊழ்வினை இவர்கள் காதலை என்றும் நிலை உள்ளதாக ஏன் செய்யக்கூடாது? விநோதமாக இருவரும் பேசிக்கொண்டு கட்டிலில் இருந்தனர். அப்போது வசந்தி மிகுந்த நாணத்துடன் முத்துமாலைகளைக் கொணர்ந்து, "இவை கொற்கைத் துறை முத்துக்களாம்; நம் பத்திரைக்கு இன்று எதிர்பாராதவிதமாய்க் கிடைத்தன காலையில்..." என்று கூறிக்கொண்டிருந்த போதே அவற்றைக் கண்டு ஸத்துகன் துணுக்குற்றான்.

"இந்த மாலைகள், இங்கே வந்த காரணம் என்ன? சோழவேந்தனுடைய அரண்மனையைச் சேர்ந்த முத்து மாலைகள் இவை; இதோ புலி இலச்சினைகூட உள்ளதே!"

"என்ன, சோழவேந்தனுடைய பொருளா?" என்று கேட்டுத் திடுக்கிட்டாள் பத்திரை.

"ஆம். அதில் ஐயமே இல்லை. இங்கே இவை எவ்வாறு வந்தன?"

ஸத்துகனுக்கு உவகையைத் தரும் என்று எண்ணி மாலைகளைக் கொணர்ந்து வைத்தாள் வசந்தி; ஆனால் அதற்கு மாருகப் பெரிய விபத்து நேர்ந்து விட்டது.

"பாண்டிய நாட்டு வியாபாரி ஒருவன் கள்வர் பயத்திற்காக இரவு இங்கே இருக்கட்டும் என்று சொல்லி வைத்துச் சென்ருன். காலையில் வந்தவுடன் விலைக்குத் தருவதாகவும் சொன்னுன். இப்போதுதான் அவன் சென்ருன்."

"என்ன? இது பெரிய வஞ்சகம்! சோழமன்னனுடைய புலி இலச்சினை பொறித்த மாலைகள் இங்கே வருவதற்கு என்ன காரணம்? இவை இங்கே இருந்தால் உங்களுக்கே பெருந் துன்பம் விளையும்; இவற்றை நான் எடுத்துச் செல்கிறேன். ஆனால் என்னிடம் இருப்பது வேறு யாருக்கும் தெரியக் கூடாது."

"காலையில் வியாபாரி வந்து கேட்டால்?"

"வியாபாரியா? அவன் இனி இங்கே வர மாட்டான்? வந்தால் என்னிடம் அனுப்பிவிடு."

"அவ்விதமானல் இது வஞ்சகம் என்று சொல்லுகிறீர்கள்?"

"சந்தேகம் என்ன? ஏதோ காரணம் இருக்கிறது. ஆனல் என்னிடம் இது இருக்கும் வரையில் பயமில்லை. நான் பார்த்துக்கொள்கிறேன்."

அம்மொழிகளைக் கேட்ட பின்பே பத்திரைக்கு மன அமைதி உண்டாயிற்று. "தூண்டிலில் மீன் அகப்பட்டது!" என்று தனக்குள் கூறிக்கொண்டே மறைவில் பதுங்கியிருந்த ஜயதுங்கன் வேறு வழியாக வெளியே சென்ருன்.

இடிமேல் இடி விழுந்தது போல் இருந்தது வசந்திக்கு; 'சர்வம் நாசம்' என்பது புத்தனுடைய வேதவாக்கியம். ஆகையால் எல்லாம் உண்மையாகிறது. நாசத்திற்கு அறிகுறி தோன்றுகிறது! - என்று எண்ணினாள் அவள். அப்போதுதான் பாண்டியநாட்டு முத்து வியாபாரியின்மீது வசந்திக்குச் சந்தேகம் மூண்டது. எனினும் இளந்தத்தனுடைய ஒற்றன் ஜயதுங்கன் என்பவனே, பாண்டிய நாட்டு முத்து வியாபாரியாக வந்தவன் என்பதை அவள் எவ்வாறு உணர்வாள்? ஆனால் 'சர்வம் நாசம்' என்ற புத்த வாக்கியம் மட்டும் அவள் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டே இருந்தது.

பலநாட்கள் கடந்தன. ஸத்துகனும் பத்திரையும் மிக மிக நெருங்கிய காதலராயினர். பத்திரையின் தந்தை மும்முடி நாயகனைக்கூட ஸத்துகன் தன் வசப்படுத்தி விட்டான். அதனால் அச்சமின்றிப் பத்திரையுடன் பழகுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. ஆனால் வசந்தி எண்ணியபடி விபரீதங்கள் ஒன்றும் நிகழவில்லை அதுவரையில்.

## 8

### 'இந்திர விஹாரம்'

'காரியம் இவ்வளவு விரைவில் மிஞ்சிப் போய் விடும்' என்று நான் கருதவில்லை. இந்திர விழாவுக்கு முன்பு, இவைபோன்ற சம்பவங்கள் நிகழும் என்பதை நான் கற்பனைகூடச் செய்யவில்லை. ஆனால், இனிமேல் என்ன என்ன நடக்கப்போகிறது என்பதை எளிதில் கற்பனை செய்துவிடுவேன்; ஏன்? இதுவரையில் நான் எண்ணியபடியே எல்லாம் நிகழவில்லையா? ஒரு வேளை, என்னை அறியாமல் எனக்

குள் ஒரு தெய்வம் இருந்து எல்லாவற்றையும் தெரிவிக்கின்றதுபோலும்! ஸத்துகள் இங்கு வந்து போகத் தொடங்கிய நாள் முதல் இன்றுவரையில் எதிர்பாராத பல சம்பவங்கள் நடந்துவிட்டன. ஆனால் பாவம்! காதல் மயக்கம் கொண்ட ஸத்து கனும் பத்திரையும் என்ன செய்வார்கள்?

காதல் ஏற்படுவதும் இயல்புதான்; எனக்கு ஏற்படவில்லையா? ஆனால் இவ்வளவு விரைவில், எதிர்பாராமலேயே தோன்றிக் கொண்டிருக்கும் இவ்விபரீதங்கள், அபசகுனங்கள், தீக்கனவுகள், பழி தீர்க்கும் - வஞ்சகம் - இவ்வளவுதாமா? இன்னும் நடக்கப்போவன என்னவோ? ஆனால் இத்தகைய சம்பவங்களில் எனக்கும் பங்கு இருந்தால் நான் என்ன செய்வேன்? தவிர இவ்வளவு விபரீதங்களை என் கண் கொண்டு பார்க்க என்னால் இயலாது. எனக்கு என்ன? பௌத்த சங்கத்தில் உபதேசம் கேட்கும் நான், ஒரு பிக்ஷுணி அல்லவா? அந்தப் பிக்ஷுணிகளைவிட நான் எவ்விதத்தில் குறைந் தவள்? பிக்ஷுணிகளின் கூட்டத்தில் நானும் ஒருத்தி யாக நடிக்கப்போகிறேன். அப்போது பத்திரையின் காதல் நாடகத்தைக் கண்டு களிக்கலாம். ஆனால், என்னைக் கண்டு நகைப்பவர் யாரோ?

'ஓர் அதிசயம்! அந்தப் பிக்ஷுணிகள் என்னிடம் அவ்வளவு அன்புடன் இருப்பதற்குக் காரணம் என்ன?—நான் ஸத்துக சிரேஷ்டியின் காதலிக்குத் தோழி என்னும் கௌரவத்திற்கா? அல்லது என் அழகுக்கா? பிக்ஷுணிக் கோலம் பூண்டதற்கா?—எப்படியிருந்தால் என்ன? பிக்ஷுணிகள் என்றால் இந்த நகரில் அதிகம் மதிப்பு இருக்கிறது. ஆனால், ஒன்று: நான் அந்தச் சங்கத்திற்குள் புகுந்ததும் என் கண்கள் கள்ளத்துடன் ஒரு வடிவத்தைப் பார்த்து உள்ளத்திற்குக் கலக்கத்தை உண்டாக்குகின்றன.

அது ஏன்? என் கண்களின் குற்றமா அது? அல்ல! அந்தக் கள்ள விழியுடையான், தன் பார்வைகொண்டு என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டான். ஆனால் அவன் ஒரு பிக்ஷுவே! ஒரு பிக்ஷுணியிடம் நாணமின்றி அந்தப் பிக்ஷுவைப் பற்றிக் கேட்டேன். 'பாலகபிக்ஷு!' என்றாள் அவள். 'பாலகபிக்ஷு!' நல்ல பொருத்தமான பெயர். அவர் முகத்தில் என்ன வசீகரம்! பத்திரையைப்பற்றி முதலில் நான் பரிகசித்தேனே! இப்போது என்னைப் பரிகசிப்பவர் யார்? என்னை நானே பரிகசித்துக்கொள்கிறேன். கைம் பெண்ணாகிய நான் இவ்வாறு காதல் கொண்டு கலங்குவதா? ஏன்? எனக்குக் கல்யாணம் ஆன விஷயம் எனக்கே தெரியாது. என் கணவர் எவ்வாறு இருந்தார்? கணவர் என்ன? என் அறியாப் பருவத்தில் என் தாய் தந்தையர் எனக்குப் 'பொம்மை'க் கல்யாணம் செய்வித்தால் அதற்கு நான் என்ன செய்வேன்? கல்யாணம் நடந்ததாம்—கணவர் இறந்து விட்டாராம்—கைம்பெண் ஆகிவிட்டேன் நான்—என் அறியாப் பருவத்திலேயே இவ்வளவு நாடகமும். ஏதோ, என் தலைவிதி, தாய் தந்தையரை இழந்து, இந்தப் பத்திரைக்கு உயிர்த் தோழியாக வந்து சேர்ந்தேன்! பாலகபிக்ஷுவின் சந்திப்பு ஏற்பட்டிருக்கையில் என் தலை விதியைப்பற்றி இகழ்வதா? முற்றும் விதியைப் போற்றுவேன் யான்!

'ஸத்துக சிரேஷ்டிக்கு மதிமந்திரியாக விளங்கும் அவர் எங்கே போய்விடுவார்? நான் அவரைக் காதலிப்பதால் பத்திரைக்கு வருத்தம் உண்டாகுமா? சந்தோஷம் உண்டாகுமா? சீ! என் அறிவு மிகவும் மழுங்கிவிட்டதே! இனி மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். பத்திரைக்கு இது தெரிந்தால் என்ன நேரும் தெரியுமா?

'அந்தப் புத்தமித்திர அடிகள் இருக்கிறாரே!—அவர்—'சர்வம் துக்கம்!' 'சர்வம் நாசம்' 'சர்வம்

க்ஷணிகம்' 'மோக்ஷம் சர்வசூன்யம்'—என்று இவ்வாறு ஒவ்வொன்ருக நாள் தவருமல் உபதேசம் செய்து கொண்டிருக்கிருர். ஆழ்ந்து யோசனை செய்தால் சில விஷயங்கள் உண்மை என்றே புலப்படுகின்றன. எல்லோரும் மெய்ம்மறந்து கேட்கிருர்கள். ஏன்? நான் கூட மெய்ம்மறந்து கேட்டேன். எல்லாம் அநுபவத்திற்கு வருமாயின்—பூமி மோக்ஷலோகமாகிவிடாதா? மோக்ஷத்தைக்கூடச் சூன்யம் என்று அல்லவா சொல்கிருர்? அது கிடக்கட்டும். நாம் செய்யும் பாபங்கள் கூட க்ஷணிகத்தில் நாசமுறும் என்று க்ஷணிக பக்ஷம் கூறுகிருரே! சர்வம் க்ஷணத்தில் நாசம் என்ருல் எல்லோரும் நாள்தோறும் நாசமாகிக்கொண்டே இருக்கிருர்களா? ஆம்;—வாழ்க்கை முழுவதும் நாளுக்கு நாள், க்ஷணிகத்துக்கு க்ஷணிகம் நாசமடைந்துகொண்டுதானே வருகிறது! இப்போதுள்ள நிலையில் சர்வம் நாசம் என்பது எனக்கு நன்ருகப் புலப்படுகிறது' என்று இவ்வாறு எண்ணிய வண்ணம் கன்னிமாடத்தின் ஒருபுறத்தில் உட்கார்ந்திருந்தாள் வசந்தி.

வசந்தியின் மனம் சில நாட்களில் பலவாறு கலங்கிவிட்டது. அவள் கைம்பெண்ணுயினும் குற்றமற்றவள்; அறிவு மிக்கவள். மனத்தூய்மையுடனேயே இருந்தாள். எத்தனையோ இளைஞர்களை அவள் பார்த்திருக்கிருள். எனினும் தன் மனத்தைச் சிறிதும் கலங்கவிடாள். மனத்தை எல்லைமீறிச் செல்லாதவாறு ஒரு வழிப்படுத்தி நேர்மையான முறையில் நடந்து வந்தாள். ஆனல் அவள் பௌத்த சங்கத்திற்குள் புகுந்த அன்று முதல் பாலகபிக்ஷுவின் வசமானுள். பத்திரையை நல்வழிப்படுத்த வேண்டும், அவளுக்கு வரும் துன்பங்களை முன்னர் அறிந்து அகற்றவேண்டும் என்று எண்ணிப் பத்திரையுடன் பல சமயங்களிலும் வாதம் புரிந்த வசந்தி, பாலகபிக்ஷுவின் பார்வையில் மயங்கித்

தானும் தீய நெறியில் செல்லத் தலைப்பட்டாள்! பத்திரைக்குப் பலவாறு உபதேசம் புரிந்தாள். அவளைவிட இழிவான நிலையில் தான் போவதை அவள் உணராமல் இல்லை. உணர்ந்தும் என்ன? 'காதலைவிட இன்பம் தருவது உலகத்துள் வேறு இல்லை. ஆனால் அது அறிவை விழுங்கி விடுகிறது. உலகத்தில் இது இயல்புதான். பிறருக்கு எளிதில் உபதேசம் செய்யலாம்.' ஆனால் அந்த உபதேசப்படி நடப்பதென்பது இயலாது' என்று தனக்குள் கூறிக் கொண்டாள். தன் நெஞ்சத்திற்குத் தானே சமாதானம் சொன்னாள்.

'வேதாந்தத்தை எடுத்துப் பேசி விவாதம் புரியலாம். ஆனால் அநுபவத்திற்கு அவற்றை ஓரளவேனும் கொணர்ந்தவர் உண்டா? அநுபவத்திற்குக் கொணர இயலாதவையும், மனத்தால் மட்டும் கற்பனை செய்யக்கூடியவையும் ஆகிய விஷயங்களையே மதிக்கத்தக்க நூல்களில் கூறியிருக்கிறார்கள். கற்பு, காதல் என்பவற்றைப்பற்றி வானளாவ எழுதி விடலாம். அவற்றின் உண்மைகளை அநுபவத்துக்குக் கொணர்ந்தவர் எவ்வளவு பேர்? காதலைக் காட்டிலும் அரியது ஒன்றுமே இல்லை' என்று வசந்தி எண்ணி விட்டாள்.

அவள் மனத்தில் மற்றொரு விஷயம் ஞாபகம் வந்தது: 'பத்திரையிடம் ஸத்துகன் நாள்தோறும் வந்து செல்வதை மும்முடிநாய்கர் உணராமல் இல்லை, அவ்வளவு நன்றாகவும் உணரவில்லை. ஆனாலும் பத்திரையின் வேறுபாட்டை அவர் உணர்ந்து கொண்டார். ஸத்துகனிடம் அவர் மிகவும் மதிப்பு வைத்திருக்கிறார்; ஆனால் அதற்குச் சமமாகச் சந்தேகமும் அச்சமும் கொள்கிறார். இல்லையேல் அன்றைத் தினம் என்னை அழைத்து அவனைப்பற்றிக் கேட்பானேன்? பத்திரைக்குத்தான் புத்தி கூறு

வானேன்? அல்லாமல் நானும் பத்திரையும் ஸத்துக மந்திரம் போய் வருவது அவருக்குத் தெரிந்திருந்தும், ஸத்துகனைப்பற்றி மிகவும் அளந்து வார்த்தைகளைச் சொன்னாரே! அவரும் என்னைப்போல் ஸம்சயவாதி போலும்! ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் உள்ள காதலை அவர் நன்கு அறிவார். இல்லையேல் இன்னும் சில நாட்களில் அறிந்துகொள்வார். ஆனால், பாவம்! எழுந்திருக்கக்கூட வன்மை இல்லை. வயசும் ஆகி விட்டது. இந்த முதுமைப் பருவத்தில் பெண்ணின் நிமித்தமாக வருத்தமில்லாமல் அவர் மோக்ஷிக்க வேண்டுமே! யோசனை இல்லாமல், தடை இல்லாமல், தடை சொல்லாமல் ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் மணம் செய்து விட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? யாரை விட்டது விதி? உற்பாதத்திற்கு முன் தோன்று கின்ற இவ்வறிகுறிகள் யாரை, எவ்விதம் கொண்டு போய் விடுகின்றனவோ? எதைப்பற்றியும் எனக்குக் கவலை இல்லை. என் மனக்கோட்டை எவ்வாறாகும் என்பதுதான் எனக்குக் கவலை' — இவ்வாறு, வசந்தியின் மனம், காற்றால் கலங்கி ஓடும் மேகம் போல் கவலையால் கலங்கியது; பலவாறு சுழன்றது. அப்போது, "வசந்தி" என்று அழைத்துக்கொண்டே பத்திரை, மாடத்திலிருந்து கீழிறங்கினாள். அப்போது தான் மனம் ஒரு வழியாக நிலைத்தது வசந்திக்கு. பத்திரை முகவாட்டத்துடன் வந்து வசந்தியின் அருகில் உட்கார்ந்தாள்.

"பத்திரை, என்ன செய்தாய் இவ்வளவு நாழிகை?"

"வசந்தி, மனக்கலக்கம் நீங்குவதற்காக, புத்த தேவரது வடிவத்தின் முன் அமர்ந்து அமைதியாக இருந்தேன்; பொறுமைக்கு இருப்பிடம் புத்ததேவ ரல்லவா?"

"அப்படி என்ன கலக்கம்? அந்தக் கனவிலிருந்து நீ கலங்கி யிருக்கிறாய்! கனவை யாரேனும் நம்பு

வார்களா? அந்தக் கனவு நனவானாலும் நாம் என்ன செய்ய இயலும்?"

"கடைசியில் நானும் அந்த முடிவுக்குத்தான் வந்திருக்கிறேன். ஆனால், அன்றொருநாள் நாம் சிவிகையில் வந்தபோது 'அவரை நம்பவேண்டாம்' என்று ஒருவன் கூறியதும், உற்பாதமாக விளக்கு அணைந்ததும், முத்து வியாபாரியின் பழிவாங்கும் வஞ்சகமும், யான் கண்ட கொலைக் கனவும் என்னை மிகவும் கலக்கமுறச் செய்கின்றன. நான் ஏதோ தவறான வழியில் செல்வதாக என் மனம் சஞ்சலம் அடைகிறது. எது தவறு என்பது மட்டும் விளங்க வில்லை. அது மட்டுமா? தந்தை வேறு, அடிக்கடி புத்தி கூறுவதுபோல் ஏதேதோ சொல்கிறார். 'நான் பிறந்தவுடன் என் ஜாதகத்தைப் பார்த்தார்களாம்; கெடுதல் ஏதோ இருப்பதாகச் சொன்னார்களாம். சோதிடர்கள் கல்யாணம் ஆகும் வரையில் எந்த ஆண் மகனோடும் வார்த்தையாடலாகாது என்றும் சொன்னார் களாம். அதனால் நான் ஸத்துகரோடு வார்த்தை யாடுதல் தவறு என்பது என் தந்தையின் எண்ணம். வெளிப்படையாகக் கூறுவதற்கு அஞ்சுகிறார்! முதிர்ந்த அறிவும் வயசுமுடைய என் தந்தைக்கு என் உள் ளத்தை உணரும் வன்மை இல்லை. ஸத்துகரைக் காணும்போது மிகுந்த மதிப்புடன் நடந்துகொள் கிறார். 'நீ, குழந்தை. உலக நிலை உனக்குத் தெரியாது. நம் குல வழக்கம் மணமரபு முதலிய வற்றை நீ அறியாய்' என்கிறார் ஒரு சமயம்.

"ஆடவர்களுக்குத் தன்னலமே எப்போதும் நோக்கம். பெண்களின் நிலையைப்பற்றி அவர்கள் சிறிதும் எண்ணுவதில்லை. அடங்கி வாழ்வதே பெண் களுக்கு மேன்மையைத் தரும் என்பர்; ஆனால் அதற்கும் எல்லை உண்டல்லவா? பெண்கள் தாமாக ஓர் இளைஞனை மணம் புரிந்து கொள்வதில் என்ன தவறு?" என்று கேட்டாள் வசந்தி.

"நான் அதைப்பற்றிப் பேசத் தொடங்கியபோது அவர் அதற்கு என்ன கோபம் கொண்டார் தெரியுமா? 'அதனால் பல தீமைகள் விளையும். அதை நீ உணராமல் பேசுகிறாய்?' என்றார். உடனே நான் திரும்பி விட்டேன்."

"ஸத்துகரைப் பற்றி அவர் நோக்கம் என்னவோ?"

"அவர் நோக்கம் எதுவாயிருந்தாலும் எனக்கு லக்ஷ்யம் இல்லை; போதிநாதன் அருள் செய்வான்."

"பத்திரை, நாழிகை ஆகிவிட்டதே! இன்றைக் காவது இந்திரவிஹாரம் போய் வருவோம்; போதி விருக்ஷத்தை வலம் வந்தால் மனத்துயர் போகும்."

"ஆம்; இந்திரவிஹாரம் போய்விட்டு வரும்போது பௌத்த சங்கத்திற்கும் போய் வரலாம். அவர் காத்திருப்பார்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள்.

முத்துச்சிவிகையில் ஏறிக்கொண்டு இருவரும் இந்திரவிஹாரத்திற்குச் சென்றனர்.

புத்த தேவனுக்கென்று இந்திரனால் நிருமிக்கப் பெற்ற கோயில் இந்திர விஹாரம். அங்கே பௌத்த பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் எப்போதும் தரும வுரைகளைக் கேட்ட வண்ணம் இருப்பர். சிவிகை அக்கோயிலை அடைந்தது. உடனே அதை வெளியில் நிறுத்திவிட்டு இருவரும் கோயிலுக்குள் சென்றனர். எங்கும் அமைதியாக விளங்கும் அக்கோயிலைக் கண்டவுடன் பத்திரை, வசந்தி இருவருள்ளங்களிலும் அமைதி நிலவியது. தூய்மையால் பொலிவு பெற்று விளங்கிய அக்கோயிலில் புகுந்தவுடன் இவர்கள் மனங்களும் தூய்மை எய்தின. புத்தாலயத்தின் வனப்பைக் கண்டவண்ணம், உள்ளே சென்று புத்ததேவரை வணங்கினர். கம்பீரம் நிறைந்த வடிவத்துடன் சுகாசனத்தில் அமர்ந்திருக்கும் புத்த தேவரது பிரதிமை

பார்க்கப் பார்க்க வியப்பையும் பக்தியையும் அளித்தது. சாந்தம் நிறைந்த அவருடைய மதிவதனமும், கருணை பொழியும் கண்மலர்களும், மனங் குளிர்விக்கும் புன்னகையும், தன்னை நோக்கி நிற்கும் தியான நிலையும் உள்ளத்தில் ஒருவிதச் சக்தியை உண்டாக்கின. பரந்த முகம், கூரிய மூக்கு, நீண்டு தொங்கிய காதுகள், ஆஜானுபாகுவான தோற்றம் - இவை அவர் மஹா புருஷர் என்பதை யாவரும் அறியச் செய்தன. இத்தகைய அறிவனை உள்ளம் நிறைந்த சாந்தத்துடன் வணங்கி வலம் வந்தனர் இருவரும்.

'சித்திரத்தில் எழுதிய தெய்வ வடிவங்களோ! கல்லில் செதுக்கிய பிரதிமைகளோ!' என்று கூறும்படி ஆங்காங்கே சுற்றிலும் பிக்ஷுக்கள் ஒருபுறமும் பிக்ஷுணிகள் ஒருபுறமும் அமர்ந்து தியானம் செய்திருந்தனர். மலர் விழி திறவாத அவர்கள், தத்தம் வதனங்களைத் தவிர, மேனி முழுவதும் மறையச் சீவரத்தால் போர்த்து விளங்கினர். அவர்களுடைய தியான நிலையைக் கண்டதால், தூய்மை நிறைந்த மனத்துடன் போதி விருக்ஷத்தைத் தொழுது வலம் வந்தனர் இருவரும். 'புத்தனுக்கு ஞானோதயம் அளிக்கச் செய்த போதி விருக்ஷமே என் மனத்துயர் அகற்றி இன்பம் தரச்செய்வாய்! ஸத்துகரது வாழ்க்கைத் துணைவியாக யான் விளங்கும்படி கருணை புரிவாய்; புண்ணிய மனத்தினர் புகழ்ந்து வலம் வரும் போதி விருக்ஷமே! அருள் புரிந்து அடியேனுக்கு அகம் நிறைந்த இன்பம் அளிப்பாய்' என்று தன் மனத்துக்குள் வேண்டிய வண்ணம் வலம் வந்தாள் பத்திரை. அப்போது வயசு முதிர்ந்த பௌத்த பிக்ஷு ஒருவர் அங்கே வந்துகொண்டிருந்தார். அவர் கைகளில் கமண்டலுவும், மணிமாலையும் இருந்தன. மந்திரங்களை ஜபித்துக்கொண்டே போதி விருக்ஷத்தை வணங்கிவிட்டு அதன்கீழ் அமர்ந்தார். பத்திரையும் வசந்தியும் அந்தப் பிக்ஷுவைக் கண்டு அன்புடன் வணங்கினர்.

பௌத்த பிக்ஷு புன்னகையோடு கைகவித்து ஆசி கூறினார். "சுகதன் உங்களுக்கு அருள் செய்வான்; 'புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி' என்னும் மும்மணிகளை நினைந்து வணங்கி யிருங்கள்" என்றார்.

உடனே பத்திரையின் வதனத்தைக் கூர்ந்து பார்த்து வியப்புடன், "குழந்தாய், உனக்குப் போதி நாதன் அருள் நிரம்ப உண்டு. உனக்கு அறிவு கொளுத்தும் ஆசாரியன் விரைவில் கிடைப்பான். ஆனால் அதற்குள் உன் மனத்தைப் பலவாறு இயங்க விடாதே" என்றார். அதைக் கேட்ட பத்திரை திடுக்கிட்டவளாய், "அடிகளே, என் மனம் கவலை மிகுந்திருக்கிறது. அதைத் தாங்கள் அறிந்து ஆசி கூற வேண்டும்" என்றாள்.

"குழந்தாய், உன் முகத்தைக் கண்டே நான் அறிந்து விட்டேன். உன் மனப் போக்கே உனக்குத் துன்பத்தை அளிக்கிறது. அதுவும் முற் பிறப்பின் பயன்; ஆனால் பின்னர் இன்பம் பெறுவாய். 'சர்வம் துக்கம்' என்பதை நினைந்து பொறுத்துக்கொள். 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்; பிறவார் உறுவது பெரும் பேரின்பம்' என்னும் பொன் மொழிகளை நினைந்து ஆறுதல் பெறுவாயாக" என்று கூறிப் பிக்ஷுக்களின் குழுவை அடைந்தார் அவர். 'இந்திர விஹாரம் வந்தும் இந்தத் துக்கம் விட வில்லையே' என்று ஏங்கினாள் வசந்தி.

'முன்னே துன்பம் என்றாலும் பின்னே இன்பம் இருக்கிறது. துன்பத்தைப் பொறுத்துக்கொள்வேன். அப்படி என்ன துன்பம் விளையப்போகிறது? ஸத்துகரை நான் மணந்து கொள்வதைப் போன்ற இன்பம் வேறு என்ன இருக்கிறது? நல்ல வேளை. முதலில் இன்பமும் பின்பு துன்பமுமாய் இருந்தால் என் கதி, என்னவது? வாழ்க்கை முழுவதும் வருந்தி

வேண்டியதுதான்?" என்று எண்ணிக் கொண்டே வெளி வந்தாள் பத்திரை.

"இப்போது நேராகப் பௌத்த சங்கம் போய் விட்டுப் பின்பு மாளிகைக்குப் போவோம்" என்றாள் வசந்தி; இல்லையேல் அவள் பாலக பிக்ஷுவுடன் எவ்வாறு பேச முடியும்?

"ஆம்" என்று கூறிக் கொண்டே சிவிகையில் ஏறினாள் பத்திரை. உள்ளூற இருவருக்கும், பௌத்த சங்கத்துக்குப் போவதைப்பற்றி அளவில்லாத சந்தோஷம் இருந்தது.

"வசந்தி, எந்த விஷயத்தையும் எனக்குத் தெரிவிக்காமல் ஸத்துகரிடம் நீ கூறி விடாதே!" என்றாள்.

"நான் கூறுவேனா?" என்றாள் வசந்தி. உடனே அவளும் சிவிகைக்குள் புகுந்தாள்.

சிவிகை ஸத்துக மந்திரத்தை நோக்கிச் சென்றது.

## ௭

### காதலி அழுத கண்ணீர்!

காதற் கணிகையும், மாதர்க் கணிகலமும், கற்புக்கு உறையுளும் ஆகிய இளமங்கை சயந்தி, ஸத்துகன் பிரிவால் இடையறாத வருத்தமுற்று ஏங்கியிருந்தாள். அவளது வருத்தத்தை உணர்ந்து ஆறுதல் செய்பவன் போல் குறு குறு நடந்து, சிறுகை நீட்டி, செவ்வாய் திறந்து, சிறு சொல் மிழற்றி, பேரின்பம் அளித்தான் இளஞ் சிறுவன். தன், இள மைந்தனை நோக்கும்போது ஸத்துகனைக் காண்பது போல் எண்ணிப் பிரிவை மறந்து இருக்க முற்படுவாள் சயந்தி. ஆனால், பிரிவுத் துயர், இடையிடையே அவளை வருத்தும். 'எப்போது வருவார் எப்போது வருவார்' என்று ஏங்கியிருந்தது அவள் உள்ளம். சிறிது நாழிகைக் கொருமுறை வீதிவழியை உற்று நோக்குவாள். எவ்வளவு முறை நோக்கினும் அவள் ஆவல் தணிய

வில்லை; வளர்ந்து கொண்டே இருந்தது. விழிகள் பூத்துப்போயின. உள்ளத்திலோ துன்பஅலைகள் மேன் மேலும் எழுந்து மோதி அலைத்துக் கொண்டிருந்தன. என் செய்வாள் பாவம்! சேற்றில் மலர்ந்த தாமரை போல் பரிமளமும், தூய்மையுமுடைய அவள் உள்ளப் பண்பை, பாவி ஸத்துகன் நன்கு உணரவில்லை. மலரி னும், மெல்லிய அவளுடைய இதயத்தை ஊடுருவிச் சென்றது, ஸத்துகனின் பிரிவுத்துயர். ஒரு நாள் — இரண்டு நாள் — அவள் வருந்தவில்லை; நாட்கள் பல வாயின. துயர் வெள்ளம் பெருகலாயிற்று அவள் மனத்தில். இவள் விரும்பி எதிர் பார்க்கும் காலத்தில் அவன் வருவதில்லை. இரவில் வந்தாலும் சில நாழிகை இருந்து விட்டு உடனே செல்வான். உள்ளத்தில் வன்மை இல்லை; முன்பு போல் இன்பமொழிப் பேச் சில்லை. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உணர்ச்சி நிறைந்த பார்வை இல்லை; பச்சை இளங் குழவியிடம் முன்பிருந்த பாசம் இல்லை. இந்நிலையில் அன்றொரு நாள் அவள் கண்ட கனவொன்று அவள் உள்ளத்தை அச் சுறுத்தியது. அது தொடங்கி ஒரே கவலை அவளுக்கு. பாவம்! உள்ளத்தில் இன்பவூற்று வற்றியது. எலை எண்ணி ஏங்கிப்போனுள். 'ஸத்துகனின் எதிர்பாராத இந்த வேறுபாட்டுக்கு என்ன காரணம்?' என்று அவள் மனம் ஆராய்ந்தது.

'இவ்வருஷம் இந்திர விழாத் தொடங்ியதி லிருந்தே அவர் வேறு பட்டிருக்கிருர்! அதற்குக் காரணம் என்னுல் அறிய முடியவில்லை. சென்ற வருஷம் இந்திர விழாவில் எத்துணையோ இன்பங்களை அவருடன் சென்று அநுபவித்தேன். விழாவின் முடிவில் காவிரிச் சங்கமத்தில் அவருடன் சென்று நீராடி வந்தேன். தேவாலயங்களுக்குச் சென்று வணங்கி வந்தேன். ஆனுல் இந்த வருஷம்! - இந்திர விழா என் மாளிகையோடு நின்று விட்டது. அவர் மீது நான் குற்றம் சொல்லவில்லை. அப்படி ஒன்றும்

வெறுப்புடன் அவர் இல்லை. இங்கே வரும்போது அன்புடனேயே இருக்கிறார். முன்பிருந்த குதூகலம் இல்லையே! அவர் முகத்தில் பொலிவு இல்லையே! காரணம்? ஏதோ உள்ளக் கவலை! அதை என்னிடம் சொல்வதற்கு விரும்பவில்லை. அது நன்றாகத் தெரிகிறது. பௌத்த சங்கத்தில் ஏதாவது மன வருத்தமோ? அல்லது தந்தையிடம் வருத்தமோ?

'நான் அறிவதற்கில்லை. அவரைப் பார்க்கும் போதும், பழைய நிகழ்ச்சிகளை நினைக்கும்போதும் என் உள்ளம் வெயில் வாய்ப்பட்ட புழுப்போல் துடிக்கின்றது. பிரிவுத் துயரால் அல்ல. அவர் மனத்தில் உள்ள கவலை, என் உள்ளத்தையும் துளைத்துப் புரை கொண்டு விட்டது. 'காதற் கணிகையாகிய எனக்கு இவர் நாயகராகக் கிடைத்தது பெரும் பாக்கியம் என்று எண்ணித் தருக்கி யிருந்தேன். என் எண்ணத்தில் இடி விழும்போல் இருக்கிறதே! என் நினைவு கனவாகி விட்டதே; பகற் கனவாகி விட்டதே!

'ஆ! முன்பு எவ்வளவு பொலிவுடன் அவர் முகம் இருந்தது! இப்போது வாடிவிட்டது. அவர் பார்வையிலும் பேச்சிலும் ஆழ்ந்த கவலை அவருக்கு இருப்பதாகத் தெரிகிறது. அந்தக் கவலையை நான் உணரக் கூடாதா? என்னிடம் எப்போதும் குதூகலத்துடனும், சாதுரியத்துடனும் பேசும் அவர் இப்போது, ஒரு குற்றவாளியைப்போல் அடங்கி ஒடுங்கிப் பேசுகிறார். அவர் உள்ளக் கவலையை என்னால் அறிய முடியவில்லையே! நான் என் செய்வேன்? இம் மாளிகையில் அவரைக் குறித்து இன்று முதல் விரதம் பூண்டு என் உடலை மாய்த்துக்கொள்கிறேன்; போதி நாதனே அவர் உள்ளத்தின் கவலையை அகற்றி முன்பு போல் அவரைச் சுக புருஷராகச் செய்வாராக' என்று கலங்கி உள்ளம் அழிந்திருந்தாள். அப்போது அவள் தோழி நாகவல்லி அவளுக்குப் பலவாறு, ஆறுதல் கூறினாள்.

"அம்மா, தாங்கள் ஏன் இவ்வளவு கவலைப்படுகிறீர்கள். இரவில்கூட நீங்கள் புத்தி தவறிவிடுகிறீர்கள்!" என்றாள் நாகவல்லி.

"அப்படி என்ன செய்தேன்?" என்று வியப்புடன் கேட்டாள் சயந்தி.

"அன்று கனவு கண்டு எழுந்து ஓடவில்லையா?"

"ஆம்; அந்தக் கனவை மறக்க முடியவில்லையே! அதனால் தான் இவ்வளவு கலக்கம்! நாகவல்லி, பெண் பேய், ஒன்று தலைவிரிகோலமாய் என்முன் ஓடி வந்து 'கொலை, கொலை' என்று கூக்குரலிட்டுவிட்டு மறைந்தது. நான் கண்களைப் பொத்தி அஞ்சியவளாய், எழுந்து ஓடி வந்தேன்! அதுமுதல் — இரவில் தூக்கமே இல்லை!"

"அப்படியானால் கனவின் பயனை யாரிடமாவது கேட்டுத் தெரிந்து கொள்ளலாமா?"

"ஏதோ தீய கனவுதான் அது. அதைத் தெரிந்து கொள்வதில் என்ன பயன்; வருத்தமே அதிகமாகும்; நடப்பது நடக்கட்டும்; எல்லாம் விதியின் செயல்."

அந்தக் கனவின் பயனைப்பற்றி எண்ணும்போது சயந்திக்கு அறிவு சோர்ந்துவிட்டது. அப்படியே கட்டிலில் சாய்ந்துவிட்டாள். நாகல்லி, மெள்ள, அவளைக் கட்டிலில் படுக்க வைத்தாள். மூர்ச்சை தெளிவதற்கு வேண்டிய உபசரணைகள் செய்தாள். வேறு சேடியர் இருவர் இருபுறமும் விசிறிக்கொண்டிருந்தனர்.

அப்போது ஸத்துகன் எதிர்பாராத விதமாய் அங்கே வந்தான். சயந்தியின் நிலையைக் கண்டு திடுக்கிட்டான். உடனே அவள் அருகில் அமர்ந்து நெற்றியில் சந்தனத்தால் தெளித்து மெள்ளத் தடவினான். "சயந்தியின் மூர்ச்சைக்குக் காரணம் என்ன?" என்று நாகவல்லியைக் கேட்டான். அவள்

சயந்திகண்ட கனவைப்பற்றிக் கூறினாள். அதைக் கேட்டவுடன் ஸத்துகன் துணுக்குற்றுக் கலங்கினான். 'பெண் பேய், தலைவிரி கோலமாய்க் கொலை கொலை என்று கூக்குரலிட்டது!' என்று தனக்குள் பன்முறை கூறிக்கொண்டான். மனக் கலக்கத்தால் நீண்ட பெருமூச்சுவிட்டான். அப்போதுதான் சயந்தி அறிவு பெற்றாள். கண் மலர் திறந்து ஸத்துகனைக் கண்டாள். உள்ளம் குளிர்ந்தது அவளுக்கு. உடனே விரைந்து எழுந்து, "என் மீது இவ்வளவு கருணையா?" என்று சொல்லி அவன் பாதங்களில் கண்ணீரைச் சொரிந்து கழுவி அவனை வணங்கினாள். சயந்தியின் நிலையைக்கண்ட அவன் தன்னை நொந்து கொண்டான். காதலி அழுத கண்ணீரால், கல் நெஞ்சம் படைத்த ஸத்துகனின் உள்ளமும் இளகிக் கரைந்து விட்டது.

## 10

### ஸத்துக மந்திரம்

காவிரிப்பூம் பட்டினத்தில் பல பௌத்த சங்கங்கள் இருந்தன. ஜைன சங்கங்களும் மிகுதியாக இருந்தன. இரண்டு சங்கங்களுக்கும் மதிப்பு அதிகம் இருந்தது. பௌத்த சங்கங்களுள் இந்திர விஹாரத்தைச் சார்ந்த பௌத்த மஹா சங்கமே பெரியது. அந்தச் சங்கத்தில் பௌத்தமதப் பெரியார்கள் பலர் இருந்தனர். அவர்களுக்குப் புத்த சத்துவ முனிவர் என்பவர் குருவாக விளங்கினார். அந்தப் பௌத்த மஹா சங்கத்தைப் பின் பற்றிப் பல பௌத்த சங்கங்கள் ஆங்காங்கே இருந்தன. அவற்றில் இருந்த பௌத்த பிக்ஷுக்கள் பலருக்கும் புத்த சத்துவரே தலைவராக விளங்கினார்.

அந்தப் பௌத்த மஹா சங்கத்திற்கு முற்றும் மாறான கொள்கையை உடையதாய், ஸத்துக

மந்திரம் என்னும் பௌத்த சங்கம் விளங்கியது. ஸத்துக மந்திரம் என்பது, ஸத்துகனுல் ஸ்தாபிக்கப் பட்ட பௌத்த சங்கம். அதில் பௌத்த பிக்ஷுக்கள் மிகுதியாக இருந்தனர். ஆனுல் அந்தப் பௌத்த பிக்ஷுக்களுக்கும் பௌத்த மஹா சங்கத்துப் பௌத்த பிக்ஷுக்களுக்கும் கொள்கையில் பெரிதும் வேறுபாடு இருந்தது.

புத்த தேவனுடைய கொள்கையைப் பின்பற்று பவர்களில் மூன்று வகை உண்டு. அவர்கள் சிராவக யானத்தார், மஹா யானத்தார், மந்திரயானத்தார் என்று கூறப்பெறுவர். அம்மூன்று வகையிலும் வேறுபாடு அதிகம் இருந்தது. சிராவக யானத்தைச் சேர்ந்தவர்கள் மாமிசம் உண்ணல், மதுபானம் செய்தல், வெற்றிலை தின்னல் முதலியவற்றை விலக் கியவர்கள். மஹாயான, மந்திரயானத்தைச் சேர்ந்த வர்கள் மாமிசம் உண்ணுதலும் மதுபானம் செய் தலும் வெற்றிலை முதலிய போகப் பொருள்களை நுகர்தலும் உண்டு. இன்னும் பலவகையிலும் சிராவக யானத்தாருக்கும், மஹாயான மந்திரயானத் தாருக்கும் வேறுபாடு இருந்தது.

இந்திர விஹாரத்தைச் சார்ந்த பௌத்த மஹா சங்கத்தினரும் அவரைப் பின்பற்றியவர்களும் சிராவக யானத்தைச் சேர்ந்தவர்கள். ஸத்துக மந்திர பௌத்த சங்கத்தினர் மட்டுமே மஹா யானத்தைச் சேர்ந்தவர்கள். இந்தத் தன்மையால் ஸத்துக மந்திர சங்கத்திற்கும் பௌத்த மஹா சங்கத் திற்கும் விரோதம் இருந்தது. பௌத்த மதத்தைப் பின் பற்றிய சோழவேந்தனும் சிராவகயானத்தைச் சேர்ந்தவன். அதனுல் அவன் ஸத்துக மந்திரத்தின் மீது உள்ளூற வெறுப்புக்கொண்டிருந்தான். அதைத் தவிர ஸத்துகமந்திரத்தில் நடந்துவரும் பல அநீதங் களும் அவன் வெறுப்பிற்கும் கோபத்திற்கும் காரண

மாக இருந்தன. ஸத்துக மந்திரத்தின் நேர்மையற்ற கொள்கைகளையும் காரியங்களையும் ஒழிப்பதற்கு வழி தேடினன். ஸத்துகனையும் அந்தச் சங்கத்தின் குரு வாகிய புத்த மித்திர அடிகளையும் அழைத்துப் பன்முறை, குற்றங்களை எடுத்துக் கூறி நல்வழியில் நேர்மையுடன் நடக்க வேண்டும் என்று கூறியுள் ளான். ஆனால் ஸத்துகன் அரசன் மொழியை மதிப்பதே இல்லை. மதுபான மயக்கத்தில் களிப்புடன் பல குற்றங்களைச் செய்து வந்தனர் அந்தச் சங்கத் தினர். நாளடைவில் கொலை, களவு, காமம் முதலிய பாவங்களை மிகுதியாகச் செய்தனர். ஸத்துகனுக்கு மிக நெருங்கிய அன்பர்களே அந்தக் காரியங்களில் தலைமை வகித்தனர். பஞ்ச மஹா பாவங்களும் அந்தச் சங்கத்தில் தலையெடுத்து வளர்ந்தன. அவற்றை வளர்ப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தனர் ஸத்துகன் கூட்டத்தினர்.

அந்தச் சங்கத்தில் பிக்ஷுக்களைப்போல் பிக்ஷுணி களும் மிகுதியாக இருந்தனர். ஸத்துகன் ஆணைப்படி நடக்கும் பல வீரர்கள் அந்தச் சங்கத்தில் உபாஸகர் களாக இருந்தனர். உபாஸினிகளான பெண்களும் உண்டு. பாலகன் என்பவன் உபாஸகனாகவும் சில சமயங்களில் பிக்ஷுவாகவும் இருப்பான். காரியமுறை களில் ஸத்துகனோடு ஒத்துழைக்க நேரும்போது பாலகன் பிக்ஷுவேஷத்தைக் களைந்து வீர வேஷம் கொள்வான். வீரர்களே உபாஸகர்களாக விளங்கினர். ஸத்துக மந்திரத்தில் எந்தக் காரியங்களும் அவர்களா லேயே நடைபெறும். ஸத்துகன் வெளியில் உபாஸகனாக இருப்பினும் சமயங்களில் பிக்ஷுவாகவும் தோற்றமளிப்பான். இந்த உபாஸகர்களாலேயே கொலை, களவு முதலியன நடைபெற்றன. உபாஸகர் களுக்குத் தலைவன் காளன் என்பவன். அவனைப் பிடிப்பதற்குச் சோழ வேந்தன் எத்துணையோ முயற்சிகள் செய்தும் பயனிலவாயின. நகரில்

அவனால் செய்யப்படும் கொலை, களவுகள் கணக்கில் அடங்கா. காளன் என்றால் அந்நகரில் எவரும் மனங் கலங்குவர். களவாடிய பொருள்கள் யாவும் பௌத்த சங்கத்தில் மதுபானத்திற்கும் மாமிசவுணவிற்கும் உபயோகமாகி வந்தன. மாமிசம் உண்ணுதலும் மதுபானம் செய்தலும் பாவம் என்றால், 'விலை கொடுத்து வாங்கிய மாமிசத்தை உண்ணலாம்' என்பது புத்தவாக்கியம் என்பார்கள். அவர்கள் செய்யும் தீய செயல்கள் ஒவ்வொன்றிற்கும், புத்த வாக்கியங்களை எடுத்துக் கூறிச் சமாதானம் சொல்லுவர். அந்தச் சங்கத்தில் வந்துசேரும் பௌத்த பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் பலர், அங்கே நடக்கும் குற்றங்களைக் கண்டு, அதற்கு மனஞ் சகியாமல் ஓடிவிடுவதும் உண்டு. அவ்விதம் ஓடுபவர்களால் சங்கத்திற்குக் கேடு உண்டாகும் என்று தோன்றினால், அவர்களை அந்தரங்கமாய்க் கொன்று விடுவதே வழக்கம்.

மஹா பிக்ஷுவாகிய புத்தமித்திர அடிகள் நாள் தோறும் கேட்பவர் உள்ளம் மகிழும்படி, பௌத்த தர்ம விஷயங்களை எடுத்துக் கூறுவார். யாவரும் மெய்ம்மறந்து கேட்பார்கள். ஸத்துகன் தொடர்பு ஏற்பட்டது முதல் பத்திரையும் வசந்தியும் நாள் தோறும் அங்கே வரத் தவறுவதில்லை. தொடக்கத்தில் அறவுரை கேட்கும் காரணத்துடனும், ஆவலுடனும் வந்தனர். இப்போதோ, பத்திரை, ஸத்துகனுடன் குலாவி மகிழ்வதற்கு வருகிறாள். பாலக பிக்ஷுவுடன் கூடிக் குலாவுதற்கு வசந்தி வருகிறாள். வசந்தி பாலகனுடன் தொடர்பு கொண்டிருப்பதைப் பத்திரையும் ஸத்துகனும் அறியாமலில்லை. 'தன்னைப்போன்ற ஓர் இளமங்கைதானே அவள்!' என்று எண்ணி இருந்து விட்டாள் பத்திரை. 'கைம்பெண்ணாகிய நானும் சங்கத்தில் அறவுரை கேட்கச் சேர்ந்து கொள்கிறேனே' என்று வசந்தி அன்று கூறியதற்குக்

காரணம் அவள் பாலகனிடம் கொண்ட காதலே என்பது நாளடைவில் பத்திரைக்குப் புலப்பட்டது. அது குறித்து வசந்தியைப் பத்திரை பரிகாசம் செய்வதும் உண்டு. 'காதலுக்குக் கண்ணுண்டா?' என்று தனக்குள் தானே கூறிச் சமாதானம் செய்து கொள்வாள் பத்திரை.

ஸத்துக மந்திரத்தின் தீய செயல்களை மதிக்காமலே பத்திரை பழகிவந்தாள். ஆனால் அந்தப் பௌத்த சங்கத்தினரின் தீய கொள்கைகளை உண்மையில் பத்திரை மிகவும் வெறுத்தாள். பௌத்த மதத்தின் உண்மை என்ன என்பதை அறிவதற்கு அவள் ஆவல் கொண்டிருந்தாள். ஆனால் அதைப் பற்றி அறிவுறுத்தத் தகுதிவாய்ந்தவர் எவரும் அங்கே இல்லை. அந்தச் சங்கத்தைப்பற்றி அவளுக்கு உள்ளூற வெறுப்பிருந்தாலும், ஸத்துகனிடம் கொண்ட தீவிரக் காதலால் அவை அவள் மனத்தை வருத்தவில்லை. பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும், கள் குடித்தலையும், மாமிசம் உண்ணுதலையும் காணும்போது முற்றும் அவள் வெறுப்புக் கொள்வாள். தன் தந்தை மும்முடி நாய்கன் அவ்வப்போது கூறிய வார்த்தைகள் அவள் ஞாபகத்திற்கு வரும். அப்போது மனம் வருந்துவாள்; ஸத்துகனை நினைக்கும்போது மனம் குளிரும். 'தன்னூண் பெருக்கற்குத் தான் பிறிதூண் உண்பான், எங்ஙனம் ஆளும் அருள்?' 'ஊன் தின்பவர்க்கு அருளாட்சி இல்லை' என்பன பொய்யா மொழிகளன்றோ! மும்முடி நாய்கன் ஸத்துக சங்கத்தைப் பற்றிக் கோள் கூறும்போது, பத்திரை மனம் ஒவ்வாமல் ஸத்துக சங்கத்தின் சார்பாகவே பேசுவாள். பன்முறை ஸத்துகனும், மும்முடி நாய்கனுக்குத் தக்க சமாதானம் சொல்வான்.

"விலைக்குப் பெற்ற மாமிசத்தை உண்ணலாம் என்று புத்தபகவானே கூறியுள்ளார்" என்று ஒருநாள் ஸத்துகன் சொன்னான்.

"தின்னுதற் பொருட்டுக் கொலை செய்யாராயின், விலைப்பொருட்டு மாமிசம் தருவாரும் இல்லை" என்று கூறினான் மும்முடி நாயகன். அதற்கு மறுமொழி கூருமலே சென்று விட்டான் ஸத்துகன்.

பல பெண்கொலைகளைக் காளன் செய்துள்ளான்; பல இடங்களில் களவுகள் செய்திருக்கிறான்; அவனாலேயே ஸத்துக மந்திரத்தில் தீய காரியங்கள் பல மிகுதியாயின. அவற்றை ஒழிப்பதற்கும், காளனைப் பிடித்துச் சிறை செய்வதற்குமே, இளந்தத்தன் ஒற்றர் தலைவனாக அரசனால் நியமிக்கப்பட்டான். அவனுக்கு உதவியாக அச்சனும், பாண்டிய நாட்டிலிருந்து புதிதாக வந்த ஜயதுங்கனும் நியமிக்கப் பெற்றனர். அவர்கள் பலவாறு முயன்றும் காளனைப் பிடிக்க முடியவில்லை. ஸத்துக சங்கத்தின் உள் நிகழ்ச்சிகளையும் அறிய இயலவில்லை. ஸத்துகனின் முன்னறிவே அவர்கள் முயற்சி வீணாகிவந்ததற்குக் காரணம். எனினும், முற்றும் அவர்கள் முயற்சி வீணாகவில்லை. ஸத்துக மந்திரத்தில் நிகழும் இவ்வொரு நிகழ்ச்சியையும் அறிய முடியாமற் போயினும் உபாயத்தால் சில நிகழ்ச்சிகளை அறிந்து கொண்டான் இளந்தத்தன். பத்திரையின் தொடர்பு ஸத்துகனுக்கு ஏற்பட்ட பின்பு அணிமையில் நிகழ்ந்த இரண்டு சம்பவங்களை எளிதில் அறிந்து அரசனிடம் உணர்த்தினான்.

ஒருநாள் அந்தச் சங்கத்தில் உள்ள 'லோகபந்து' என்ற பௌத்தபிக்ஷு ஒருவர் பிக்ஷுணிகளுள் ஒருத்தியாகிய சந்திரகலா என்பவளைக் கண்டு காதல் கொண்டார். அப்போது அந்தப் பிக்ஷுணி தனிமையில் புத்த தேவனைக் குறித்துத் தியானஞ் செய்திருந்தாள். லோகபந்து காதல் மிக்கவராய்ச் சந்திரகலாவிடம் அணுகிக் காதல் மொழிகளைக் கூறினார். அதைக் கேட்டு உள்ளம் துணுக்குற்றுக் கலங்கினாள் பிக்ஷுணி.

"அடிகளே! போதிநாதன் ஆலயத்தில் இவ்வாறு துறவியாகிய தாங்கள் பேசலாமா? இவ்வாறு நடந்து கொள்வது தகுதியா? அடியேன் பேசியதற்கு மன்னிக்கவும்" என்று கூறி அகன்று நின்றாள். லோகபந்து புன்னகையுடன் அவள் அருகில் சென்று, "பேதாய், பௌத்தத் துறவிகளுக்குக் காதல் உண்டாதல் அரிது. ஆதலால் அவர்களுக்கு எவ்விடத்தும் எப்போதும் இது நிகழலாம்; அதில் குற்றம் சிறிதும் இல்லை" என்றார்.

பிக்ஷுணியான—சந்திரகலா மனங்கலங்கி வேறு புறம் ஓடினாள். லோகபந்துவும் அவளைப் பின் தொடர்ந்து ஓடினார். முடிவில் மஹா பிக்ஷுவாகிய புத்த மித்திரரிடம் சென்று, இருவரும் நிகழ்ந்ததைக் கூறினர். அவர், பிக்ஷுவை அவமதித்ததற்காகச் சந்திரகலாவுக்குத் தண்டனை விதித்தார். அதைக் கேட்டுக் கோபம் கொண்ட பிக்ஷுணி எதிர்வாதம் செய்து அவருடைய கொள்கையை மறுத்தாள். உடனே புத்தமித்திரர் கோபம் கொண்டு, "இவளை இருட்டறையில் அடைத்து வைத்து இரவில் காளனைக் கொண்டு தக்கவாறு தண்டிக்கச் சொல்லுங்கள்" என்று உபாஸகர்களிடம் கூறினார். உடனே அவள் இருட்டறைக்குக் கொண்டுபோகப் பட்டாள்.

அன்றிரவு பௌத்த சங்கத்தின் உட்புறத்தில் நிலவறையில் காளன் முன் நிறுத்தப்பட்டாள் சந்திரகலா. அவளைக் காளன் விசாரித்தான். காளனைக் கண்டவுடன் உயிரற்றவள் போல் ஆனாள் பிக்ஷுணி.

"பிக்ஷுணிகள் யாரேனும் குற்றம் செய்தால் நமது உபவனத்தில் இரவு முழுவதும் தண்ணீர் இறைக்க வேண்டும்; பகலில் மணல் சுமக்க வேண்டும். ஆதலால் இந்தத் துஷ்டையையும் அவ்வாறு தண்டியுங்கள்; தண்ணீர் இறைக்கத் தவறினால், படுகுழியில் தள்ளிச் சமாதி செய்யுங்கள்" என்று கட்டளை இட்டான்.

உடனே வீரர்கள் அவளை அழைத்துச் சென்று மதில் சூழ்ந்த, பெரிய அந்த உபவனத்திற்குத் தண்ணீர் இறைக்குமாறு துன்புறுத்தினர். சந்திரகலா தன்னால் இயன்றவரையில் நீர் இறைத்து விட்டுச் சோர்வுற்றாள். வீரர்கள் வைதும் அடித்தும் துன்புறுத்தினர். அதைக்கண்டு மனம் பொறுக்காதவளாய் உயிரைவிடத் துணிந்து, "நான் இனிமேல் தண்ணீர் இறையேன்; என் உயிரை மாய்த்து விடுங்கள்" என்று கூறிக் கீழேவிழுந்து மூர்ச்சையானாள். இரக்கமற்ற அவ்வீரர்கள் அவளைத் தூக்கிச் சென்று படுகுழியில் போட்டு மேலே மணல் கொண்டு மூடிவிட்டனர். உடனே அதைக் காளனிடம் அறிவித்தனர். அதைக்கேட்டுக் காளன் சிறிதும் வருந்தி இரக்கம் கொள்ளவில்லை. பல கொலைகளைச் செய்து அவன் மனம் கல்லாகியிருந்தது. இந்தப் பெண் கொலை நிகழ்ச்சி இளந்தத்தனுக்கு எவ்வாறோ எட்டிவிட்டது. மேன்மேலும் ஒற்றறிவதற்கு அவன் முயற்சி எடுத்துக் கொண்டான்.

மற்றொருநாள் அதே போன்ற சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அணிமையில், அந்தச் சங்கத்திற்குப் புதிதாக மாகதி என்ற கைம்பெண் ஒருத்தி வந்து சேர்ந்தாள். அவள் மிக்க அழகுடையவள். அவள் மஹாபிக்ஷுவான புத்தமித்திரரிடம் உபதேசம் பெற்றுப் பிக்ஷுணியானாள். அந்த மாகதியைக் கண்டு காதல் கொண்டான் அமிர்தசந்திரன் என்ற பௌத்தபிக்ஷு. புத்தமித்திரருடைய மாணவர்களில் அவன் முதன்மையானவன். அவன் மாகதியிடம் காதல் கொண்டு நடு இரவில், அந்தப் பிக்ஷுணியிருக்கும் அறைக்குத் தனியே சென்று அவளிடம் தன் வேட்கையை உணர்த்தினான். அவன் தன்மையைக் கண்ட மாகதி ஆச்சரியமும் அச்சமும் கொண்டாள்.

"அடிகளே, கொலை, களவு, கள், காமம், பொய் என்பன ஆகா என்று புத்தபகவான் கூறியுள்ளாரே!

தாங்கள் இத்தகைய தீச்செயலுக்கு உட்படலாமா? நீண்ட நாட்களாகத் தாங்கள் துறவியாக விளங்குகிறீர்கள்! நானும் துறவொழுக்கம் கொண்டுள்ளேன்; ஆதலால் தங்கள் செய்கை பாவத்தைத் தரும்" என்றாள்.

"நங்காய், நீ இந்தச் சங்கத்திற்குப் புதியவள்; ஆதலால், புத்தர் அருளிய வினயபிடகத்தின் உண்மையை நீ உணராய்!"

"அடிகளே! வினயபிடகத்தின் உண்மையை உணரேன்; எனினும் பொதுவாகப் பௌத்த தருமங்களை அறிவேன்."

"நீ உண்மை அறியாமல் பேசுகிறாய்; நான், கூறுவதைக் கேள்."

"அடிகளே, தாங்கள் கூறும் அறவுரையைக் கேட்க ஆயத்தமாக இருக்கிறேன். ஆனால் பாவம் செய்யத் துணியேன்."

"வினயம் என்பது உலகவர்ஜியம், பிரஜ்ஞப்தி வர்ஜியம் என இரு வகை. உலக வியவகாரத்திற்கு உலகம் நீக்கியவற்றை நீக்குதலே உலக வர்ஜியம். கடவுள் தம் திவ்ய ஞானத்தால் குற்றமுண்டு என்று நீக்கியவற்றை நீக்குதலே பிரஜ்ஞப்தி வர்ஜியம். ஆகவே, கொலை, களவு, காமம், கள், பொய் என்பன உலக வர்ஜியமே; அவை பகவானால் குற்றம் உடையவை என்று கூறப்படவில்லை. ஆதலால் காமம் குற்றமுடையதல்ல."

"என்ன? காமம் குற்றம் உடையதல்லவா? தாங்கள் கூறுவது அதிசயம்!"

"பேதாய், இன்னும் கேள்; 'எட்காய் நீளம் காமமாம்' என்பது புத்த வாக்கியம் அன்றோ? அல்லாமல், மதுபானம் செய்யும் சங்கத்தார் காமம் அடக்கி இருப்பரோ?"

"அடிகளே, தாங்கள் உண்மை கூறினாலும், காமத்தால் பாவம் சம்பவிக்கும் என்பது வெளிப் படையன்றோ?"

"கிளி மொழியாய், கேள்! பொருள்கள் எல்லாம் க்ஷணந்தோறும் கெடுகின்றன என்பது புத்தர் வாக் கியம் அல்லவா? ஆதலால், காமம் ஆடினாலும், அந்த க்ஷணத்திலேயே பாவம் முற்றும் கெடும். ஆகவே, காமம் ஆடியவர் கர்மபந்தராதலும், அவருக்குப் பலாநுபவமும் இல்லை என்பது வெளிப்படை!"

"அவ்வாறென்றால், கொலை முதலியனவும் குற்றம் இல்லை என்று சொல்லுகிறீர்கள்?"

"ஐயம் என்ன? கொலை முதலியன பரமார்த்த வகையால் குற்றம் இல்லை என்பதனாலேயே, உலக வர்ஜியம் என்று வியவகாரத்தால் கொள்ளப்பட்டது. ஆதலின் காமத்தால் உண்டாகும் பாவம் கணத்தில் கெடும்" என்றான்.

அவன் பேச்சால் மாகதி மயங்கினாள்.

இவ்வாறு அமிர்தசந்திரபிக்ஷு தனது புத்தி சக்தியால் பல நியாயங்களை எடுத்துக் காட்டி மாகதியைத் தன் வசமாக்கினார். இளமங்கையாகிய அவளும் பிக்ஷுவிடம் மோகம் கொண்டு அவர் கூறிய நியாயங்களை ஏற்றுக்கொண்டாள். பின்னர் இருவரும் காதல் மிக்கவராய் உபவனத்திற்குள் சென்றனர். இந்த நிகழ்ச்சியையும் எவ்வாறோ அறிந்து கொண் டான் இளந்தத்தன்.

இவ்வாறு பௌத்த மதத்திற்கே, பெரும் பழியைத் தருவனவாகிய தீச் செயல்களை ஸத்துக மந்திரத்தில் செய்து வந்தனர். பௌத்தமஹா சங்கத்தில், இவைபோன்ற செயல்கள் சிறிதும் நிகழ்வதில்லை. உயர்ந்த கொள்கைகளை யுடையவர் களாயிருந்தனர் அவர்கள். வாய்மை நான்கையும் சீலம் ஐந்தையும் தாங்கிய பெருந்துறவிகளே பௌத்த மஹா சங்கத்தில் இருந்தனர். பௌத்தமஹா சங்கத்

திற்கும், ஸத்துகசங்கத்திற்கும் சிறிதும் கொள்கை களில் ஒற்றுமையே இல்லை. பௌத்தமத வழிகளில் சிராவகயானம் ஒன்றே மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அளிப்பது. அதுவே பகவான் புத்த தேவரால் உலகில் வெளியிடப்பட்டதாகும்.

ஸத்துக மந்திரத்தில் நடக்கும் நேர்மையற்ற காரியங்களை • அவ்வப்போது காண, பத்திரைக்கு வெறுப்பு அதிகமாயிற்று. பௌத்த மதத்தின்மீதே சந்தேகம் உண்டாயிற்று அவளுக்கு. ஆனால், ஸத்துக னுடைய இன்பத்திலே மூழ்கி எல்லாவற்றையும் மறந்திருந்தாள் அவள். பத்திரையைக் காட்டிலும் பன்மடங்கு சந்தேகம் கொண்டிருந்தாள் வசந்தி. அவளும் அந்தப் பாலக பிக்ஷுவின் இளமை யின்பத்தில் மூழ்கி எல்லாவற்றையும் மறந்திருந்தாள். எனினும் சமயம் நேர்ந்தபோதெல்லாம் விழித்துத் தன் நிலையை உணர்ந்து கொள்வாள்.

ஸத்துகன், பத்திரையின் மாளிகைக்குச் செல் வதும், பத்திரை ஸத்துக சங்கம் வருவதும் இப் போது மிகவும் சாதாரணமாகி விட்டன. வணிகர் வீதியில் உள்ள பலர், ஸத்துகனுக்கும், பத்திரைக்கும் ஏற்பட்ட தொடர்பை அறிந்து பலவாறு உயர் வாகவும், இழிவாகவும் பேசிக்கொண்டனர். ஸத்துக னிடம் உள்ள அச்சத்தால் எவரும் வெளிப்படை யாகப் பேசியதில்லை. மும்முடி நாயகனும் ஸத்துக னிடம் விரோதம் கொள்வதற்கு அஞ்சி அவன் விருப்பம்போல் நடந்துகொண்டான்.

வழக்கம்போல் ஸத்துக மந்திரத்திற்குப் பத் திரையும் வசந்தியும் அன்று வந்தனர். அன்று சங்கத்தில், 'சர்வம் அநாத்மகம்' என்னும் விஷயத் தைப்பற்றி உபந்நியாசம் செய்தார் புத்தமித்திர அடிகள். பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் அவர் கூறு வனவற்றைப் பக்தியோடு கேட்டிருந்தனர். ஆனால்

ஸத்துகன் மட்டிலும் பத்திரையுடன் விநோதமாகப் பேசியவண்ணம் வேறு புறம் சென்று கொண்டிருந்தான். பாலகன் வசந்தியுடன் பேசிக்கொண்டு அவர்கள் பின்னே போனான்.

உபதேசம் கேட்கும் பிக்ஷுக்களின் கூட்டத்தில் உள்ள ஒரு பிக்ஷு மட்டிலும், ஸத்துகன் முதலியவர் போகும் இடத்தை உற்று அடிக்கடி கவனித்தான். அன்று போல் கடந்த சில நாட்களாகவே ஸத்துகனைப் பற்றிக் கவனித்து வருகிறான் அந்தப் பிக்ஷு. புதிதாகப் பௌத்த சங்கத்தில் சேர்ந்தவன் அவன். அந்த நாட்டிற்கே அவன் புதியவன் என்று தெரிந்ததால் அவன் விஷயத்தில் ஸத்துகன் அதிகக் கவனம் செலுத்தவில்லை. அந்தப் பிக்ஷுவை அங்குள்ளவர் 'ஸுமங்களன்' என்று அழைத்து வந்தனர். ஆனால் அந்த ஸுமங்கள பிக்ஷுவைப் பார்க்கும்போதெல்லாம் வசந்திக்கு மட்டிலும் ஐயம் உண்டாகும். அடிக்கடி அவன், தன்னையும், பத்திரையையும் உற்றுப் பார்ப்பதை அவள் உணர்ந்துகொண்டாள். ஸத்துகனையும் பாலகனையும் அவன் ஒவ்வொரு கணமும் கவனிப்பதை எளிதில் உணர்ந்து சந்தேகம் கொண்டாள். அவையல்லாமல், அவன் முகமும், வேறு எங்கோ பார்த்த முகமாய் இருக்கிறதே என்று அவளுக்கு அடிக்கடி தோன்றும். ஆனால், தன் மனத்தில் எழுந்த ஐயத்தை அவள் வெளியிடவில்லை. வசந்தி அவனை உற்று நோக்கும்போது அவன் வேறு பக்கம் திரும்பிக்கொள்வான். அதன் காரணம் என்னவோ?

இந்நிலையில், ஸத்துக மந்திரத்தின் வாயில் காவலன் ஓடோடியும் வந்து ஸத்துகனை வணங்கி நின்றான். ஸத்துகனும் பத்திரையும் பாலகன் முதலியவர்களும் துணுக்குற்றனர்.

"ஸத்துகரே, சோழவேந்தன் அரண்மனையைச் சேர்ந்த முத்துமாலைகள் எட்டும், பொன்னறை

யிலிருந்து களவு போயினவாம். அவற்றில் புலி மூத்திரை உள்ளனவாம். அந்த முத்து மாலைகள் யாரிடம் காணப்பட்டாலும் உடனே அவரைச் சிறை செய்யுமாறு அரசன் கட்டளையிட்டிருக்கிறான். அதோடு காளன் என்னும் கள்வனைக் கண்டு பிடித்து அரசனிடம் அவனை ஒப்பிப்பவர்க்குத் தகுந்த சம்மானம் அளிப்பானும் அரசன். இவ்வாறு வீதியில் முரசறைத்து மொழிந்து போகிறான் வள்ளுவன். நம் வாசலில் சிறிது நேரம் நின்று கூறிச் சென்றான்" என்று அவன் கூறி விட்டுத் திரும்பிப் போனான்.

அதைக்கேட்டு ஸத்துகன் முதலியவர் திடுக்கிட்டார்கள். இடி இடிப்பதுபோல் வெடி நகை செய்தான் ஸத்துகன். அதைக்கேட்டு மருண்டு நின்றனர் பத்திரை முதலியவர்கள். அடுத்த கணத்தில் ஸத்துகன் கண்களில் தீப்பொறிகள் பறந்து உடனே அடங்கின. கோபத்தை மறைத்துச் சிறிது புன்னகை செய்தான் அவன், பத்திரையை நோக்கி. நிகழ்ந்த நிகழ்ச்சியைக்கண்டு பிக்ஷுக்கள் யாவரும் மனங் கலங்கினர். அந்தப் புதிய பிக்ஷு ஸுமங்களன் மட்டிலும் ஸத்துகனைப் பார்ப்பதற்கு அஞ்சி, மிகவும் நடுங்கி நின்றான். அவன் நடுங்கிப் பயந்து சாவதை வசந்தி குறிப்பாகக் கண்டுகொண்டாள். அவளுடைய சந்தேகம் உறுதிபெற்றது. அவன் யார்?

## 11

### ஸுமங்கள பிக்ஷு

சோழவேந்தன் கிள்ளிவளவன், ஆலோசனை மண்டபத்தில் அமர்ந்திருந்தான். ஏனாதி இளந்தத்தனும், அச்சன் முதலிய ஒற்றர்களும் அவனுக்கு முன்பு அமர்ந்திருந்தனர். அன்று ஒரு முக்கியமான காரியத்தைப்பற்றி அவர்களுடன் ஆலோசனை செய்தான் சோழ மன்னன்.

அரசன் ஆலோசனையைப் பிறர் அறியாதவாறு மண்டபத்தைச் சூழ்ந்து வாளேந்திய வீரர்கள் காவல் காத்து நின்றனர். இளந்தத்தன் கூறும் ஒவ்வொரு விஷயத்தையும் கவனமாகக் கேட்டான் அரசன். பல ரகசியங்களை வெளியிட்டான் அவன். ரகசியம் என்ன என்று சொல்லவேண்டுமா? அவன் வெளியிட்ட ரகசியங்கள் யாவும் ஸத்துக மந்திர பௌத்த சங்கத்தைப் பற்றியவையே. தான் சொல்லியவற்றைக் கேட்டு அரசன் மனம் மகிழ்வான் என்று இளந்தத்தன் எதிர்பார்த்தது வீணாயிற்று. அதுகாறும், அரசன் உள்ளத்தில் அடங்கியிருந்த கோபம் அப்போது வெளிப்பட்டது. கண்கள் கோபக் கனலைச் சிந்தின.

"என்னுடைய அரசாட்சியில் இவ்விதக் கொடுஞ் செயல்கள் நடக்கின்றனவா? என்னுடைய ஆட்சியில், களங்கம் இருப்பதாக நீ கூறும்படி ஆயிற்று?" என்றான் அரசன் வெஞ்சினத்துடன்.

"வேந்தே, தங்கள் ஆட்சியில் குறை கூற முடியுமா? கோள் நிலை திரியினும் கோடாத செங் கோல் செலுத்தும் 'தங்களைக் குறை கூறுவாரும் இப்பூவுலகில் உண்டோ? தங்கள் குலப்பெருமையை உலகம் அறியாதா?" என்று பணிந்து பேசினான் இளந்தத்தன்.

"அவ்விதமானால், இந்தத் தீச்செயல்கள் ஏன் நிகழ்கின்றன? அதற்குக் காரணம் யார்? என் கட்டளையை மீறியே அவர்கள் செய்கின்றனர் என்பதில் ஐயம் என்ன இருக்கிறது?"

"உண்மைதான்; ஆனால் அதற்கு முடிவு காலம் நெருங்கிவிட்டது. நான் அதை..."

"இளந்தத்தா, இவ்வளவு நாட்கள் வரையில் இந்தக் கொலை, களவு முதலியவற்றை என்னிடம்

ஏன் சொல்லவில்லை; அதற்குக் காரணம் என்ன?" என்றான் வேந்தன்.

"மன்னவ, அவற்றை அறிந்து சில நாட்களே ஆகின்றன. அதுவும், உயிரையும் மதிக்காத ஊழியரைக் கொண்டு அறிந்தேன்; இல்லையேல் அறிய முடியுமா?"

"இதற்கு முன் எத்தனை கொலை, களவுகள் நடந்திருக்கின்றனவோ? இவ்வளவு தூரம் காரியம் மிஞ்சிப்போகுமென்று நான் முன்பே அறியவில்லை. ஆ! அந்த ஸத்துகனுக்கு எவ்வளவு முறை புத்தி கூறுவது? பார்த்தால் அவன் களங்கமற்ற பார்வையுடன் தோன்றுகிறான்; ஆனால், அவனுடைய ஆள், காளன் கொலைகாரன், வஞ்சகன், கள்வன்......"

"மன்னவ, இவ்விஷயமாகப் பலமுறை தங்களிடம் தெரிவித்திருக்கிறேன். அந்தக் காளனின் கொடுமை சகிக்க முடியாதது; அதற்குக் காரணம் ஸத்துகனேதான். கையும் களவுமாகப் பிடிக்க முன்பு சமயம் வாய்க்கவில்லை......"

"அப்படியானால் இப்போது..........."

"இல்லை. இனி அவர்கள் பிடிபட்டதுபோல் தான்."

"என்ன? - அது எப்படி?"

"தங்கள் தேவியாரது முத்துமாலைகள் இருக்கும் இடம் தெரிந்துவிட்டது."

அந்த வார்த்தையைக் கேட்டவுடன் அரசனுக்குக் கோபம் மிகுதியாயிற்று. கையோடு கையைப் புடைத்துப் பல்லை நெறுநெறெனக் கடித்தான்.

"இளந்தத்தா, அந்த முத்து மாலைகள் யாரிடம் இருக்கின்றன? அந்தக் கள்வனை உடனே..."

"மன்னவ, கோபம் வேண்டாம். அந்த ஸத்துக மந்திரத்திலேயே உள்ளன."

"திருடியது யார்?"

"அவை, ரகசியமாக வைக்கப்பெற்றுள்ளன; இன்னும் சில தினங்களில் அதைத் திருடிய கள்வனைப் பிடித்துவிடலாம்."

"இளந்தத்தா, என் அரண்மனையில் புகுந்து அந்தப்புரத்தில் நுழைந்து பொன்னறையிலிருக்கும் முத்துமாலைகளைக் களவு செய்த கள்வன் யார்? உன்னுடைய கவனக்குறைவே இதற்குக் காரணம்!"

"மன்னவ, பொறுக்க வேண்டும்; ஸத்துக சிரேஷ்டியின் ஏவலால் அந்தக் காளனே, களவு செய்திருக்கிருன்."

"ஸத்துகன் ஏவல்!"

"ஆம்; இப்போது அந்த முத்துமாலைகள் ஸத்துகன் வசமே இருக்கின்றன. ஸத்துக மந்திரத்தில் உள்ளன. ஆனால் அவனையும் காளனையும் பிடிக்கச் சிறிது நாட்கள் ஆகும்."

"இளந்தத்தா, இனி எந்தக் காரணத்திற்காகவும் நீ தாமதம் செய்ய வேண்டாம். தேவியின் முத்து மாலைகளுடன், அந்தக் காளனையும் ஸத்துகனையும் கையும் களவுமாக என் முன் கொணரவேண்டும்; இன்னும் பதினைந்து நாட்களில் இதைச் செய்ய வேண்டும்..."

"வேந்தே, அவர்களைச் சிறைசெய்து, முத்து மாலைகளைக் கொணராமற் போனால், தாங்கள் விதிக்கும் எவ்விதத் தண்டனைக்கும் நான் உட்படுவேன்."

"ஸத்துகன் விஷயத்தில் எனக்கு நேர்மையான தண்டனையை விதிக்கத் தெரியும்; ஆனால், அந்தக் காளனைச் சித்திரவதை செய்தாலும் பாவம் இல்லை. அவர்கள் இருவரும் பிடிபட்டால், நகருக்கே பெரிய நன்மை; அல்லாமல், இனி, அந்த ஸத்துக மந்திரத்தில்

நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் எனக்கு அவ்வப் போது அறிவிக்கவேண்டும்" என்றான் மன்னன்.

அரசனுடைய ஆக்ஞையைக் கேட்டு அகமகிழ்ந் தான் இளந்தத்தன். தன்னுடைய சூழ்ச்சி பயன் பெறும் என்று குதூகலம் கொண்டான். உடனே ஓர் ரகசியத்தை வெளிப்படுத்துவதற்கு எழுந்து நின்றான்.

"தங்கள் ஆக்ஞைப்படியே எல்லாம் நடக்கும்; ஸத்துக மந்திரத்தின் உண்மைகளைக் கண் டறிந்தவன் அதோ, நிற்கும் பௌத்த பிக்ஷுவே!" என்றான். அரசன் வியப்புடன் அங்கே பார்த்தான். அப்போது தூண் மறைவிலிருந்து வெளிவந்தான் அந்தப் பௌத்த பிக்ஷு. அவனைக் கண்டவுடன் துணுக்குற்றான் சோழ மன்னன்.

"இதென்ன, வேஷம்! நீ பாண்டிய நாட்டு ஜயதுங்கன் அல்லவா?" என்று அரசன் வினவினான்.

"அதில் சந்தேகம் என்ன? ஜயதுங்கன் இல்லையேல் ஸத்துகனைப்பற்றியும், ஸத்துக மந்தி ரத்தைப்பற்றியும் நாம் எவ்வாறு தெரிந்துகொள்ள முடியும்? இந்த வேஷம் இல்லாமற் போனால், அவற்றை வேறு வழியில் அறிய முடியாது!" என்றான் அச்சன்.

அரசனுக்கு வியப்பும் உவகையும் உண்டாயின. "ஜயதுங்கா, பாண்டிய நாட்டுவீரர்கள், தந்திரமும், சாதுர்ய புத்தியும் உடையவர்கள்; இதற்கு நீயே உதாரணம்! களனைச் சிறைப்பிடிக்கத் தகுதி வாய்ந் தவன் நீயே! அவனைப் பிடித்துவிட்டால் இந்நகரம் முழுதும் உன்னைப் புகழும்; உன்னைக் கொண்டே இளந்தத்தன் காரியத்தை நன்கு முடிப்பான்" என்று அரசன் மொழிந்தான். இளந்தத்தன் அவ னுக்குக் குறிப்புச் செய்தான். உடனே ஜயதுங்கன் பிக்ஷு வடிவத்துடன் அரசன் முன்பு வந்து வணங்கி, "வேந்தே, விஷயம் தெரிவிக்கவே இங்கு இப்போது

வந்தேன்; இன்னும் சில கணங்களில் ஸத்துக மந்திரம் போகவேண்டும் நான்; காரியத்தை முடிக்காமல் திரும்பேன்; போய் வருகிறேன்" என்று கூறி விட்டு வெளியேறினான்.

"இன்னும் பதினைந்து நாட்களில் ஜயதுங்கனைக் கொண்டே காரியத்தை முடிக்கிறேன்; கவலை வேண்டாம்" என்றான் இளந்தத்தன்.

அப்போது உணவருந்தும் காலம் அணுகிவிட்டதை நாழிகைக் கணக்கர் சொல்லிச் சென்றனர். இளந்தத்தன் முதலியவர்களுக்கு விடை கொடுத்து விட்டு அந்தப்புரம் சென்றான் அரசன்.

ஒற்றறியும் வீரர்கள் யாவருக்கும் விடை கொடுத்து அனுப்பிவிட்டு அச்சனும், இளந்தத்தனுமாக வேறுபுறம் தனியே பேசிக்கொண்டிருந்தனர். ஸத்துகனை அகப்படுத்துவதற்கு வேண்டிய காரியங்கள் செய்தாயின என்று அவன் கவலையற்றுப் பேசினான். ஸத்துகன் செய்யும் செயலில் மட்டும் அவனுக்கு வெறுப்பில்லை; இன்னும் பல காரணங்கள் இருந்தன. இல்லையேல், பொன்னறையிலிருக்கும் முத்துமாலைகளை எடுத்து ஜயதுங்கனிடம் கொடுத்து இவ்விதம் சூழ்ச்சி செய்வானா? அரசனுடைய முத்து மாலைகளை வஞ்சகமாக ஜயதுங்கன் விற்க வந்திருக்கிறான் என்பது பத்திரைக்குத் தெரிந்திருந்தால், வாங்கியிருப்பாளா? இவ்விதம் இளந்தத்தன் சூழ்ச்சி செய்ததற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது; சயந்தியை அடையவேண்டும் என்பதே அது. ஸத்துகனைச் சிறைசெய்து விட்டால் அப்புறம் அவளை எளிதில் அடையலாம் அல்லவா?

விண்ணிலிருந்து விழும் மேகத் துளியை எதிர் நோக்கியிருக்கும் சாதகப் பறவைபோல் இளந்தத்தன் உள்ளம், சயந்தியின் இன்பத்தை நுகர எதிர் பார்த்துக் கொண்டிருந்தது. அவளை மறப்பதற்கு அவனால்

முடியவில்லை. ஸத்துகன் காதலிப்பதற்கு முன்பே அவன் அவளைக் காதலித்தான்; ஆனால் அவள் ஸத்துகனைக் காதலித்தாள்; இளந்தத்தனை வெறுத்தாள். இலவு காத்த கிளிபோல் ஏங்கிப் போனான் இளந்தத்தன். அவன் அவளைத் தீவிரமாகக் காதலித்தான். ஸத்துகன்மேல் அவனுக்குக் கோபம் உண்டானதற்குக் காரணம் அதுவே. இணைபிரியா நண்பர்களாகிய இளந்தத்தனும் ஸத்துகனும் பகைமை கொண்டதற்குக் காரணம் சயந்தியேதான். அந்தப் பகைத் தீ வளர்ந்து கனிந்து விட்டது. இப்போது, அரசனுடைய முழு ஆதரவையும் பெற்றதால் இளந்தத்தனுக்கு ஸத்துகனிடம் பயம் இல்லை. அவ்வப்போது ஸத்துகனைப்பற்றிப் பலவாறு கோள் சொல்லி, அவனிடம் அரசனுக்கு இருந்த சிறு பற்றையும் அறுத்து விட்டான் அவன்.

இந்தச் சந்தர்ப்பத்தில், பாண்டிய நாட்டு வீரனான ஜயதுங்கன் இளந்தத்தனுக்குப் பெரிதும் உதவி புரிந்தான். அரிய சந்தர்ப்பம் வாய்த்திருக்கையில் சயந்தியின் காதலைத் தடையில்லாமல் பெறலாம் என்பது அவன் எண்ணம். அது விஷயமாகவே அச்சனுடன் அவன் பேசினான். ஸத்துகனுக்கும் சயந்திக்கும் உள்ள காதலை எவ்வகையிலும் அறுக்கமுடியாது என்பதும், சயந்திக்கு இளந்தத்தன்மீது வெறுப்புண்டு என்பதும் அச்சனுக்குத் தெரியும். எனினும் இளந்தத்தனுடைய வற்புறுத்தலால் சயந்தியைப் பற்றி அவன் கவனிக்கவேண்டியதாயிற்று.

"அவள் காதற்கணிகை என்றாலும் கற்புடையவள் என்றே எண்ணுகிறேன்; அவளை நீர் மறந்து விட முடியாதா?" என்றான் அச்சன்.

"அச்சா, அவளைப் பற்றி உனக்கு நன்றாகத் தெரியாது. அவள் தாய் சுமதி என்னிடம் மிகவும் அன்புடையவள். பாவம்; என் துரதிருஷ்டவசமாக

அவள், பல வருஷங்களுக்கு முன் நடந்த நீர் விழாவில், காவிரிச் சங்கமத்தில் நீராடுகையில் மறைந்தாள்; இறந்து விட்டாள் என்றே சொல்லலாம். எவ்வாறு தேடியும் அவள் கிடைக்கவில்லை. என் துரதிருஷ்டத்தால் கடல் அவளை விழுங்கிவிட்டது என்றே எண்ணுகிறேன். அவள் இப்போது இருந்தால் சயந்தி என்னுடன் சுகமாக இருப்பாள்; என்றைக்கோ அவளை அடைந்திருப்பேன்."

"அவள் தாய் இருக்கும்போதே, ஸத்துகனைச் சயந்தி காதலிக்க வில்லையா?"

"அப்போதே மறைவில் அவர்களுடைய காதல் முளைத்தது என்பதை நான் அறியேன். சுமதி, ஸத்துகனுக்குப் பயந்திருந்தாள் என்றாலும், சயந்தியை எனக்கு அளிப்பதாக அவள் வாக்குறுதி தந்திருந்தாள். சயந்தியை ஸத்துகன் விரும்புவதற்கு முன் நான் அவள் தாயிடம் என் விருப்பத்தைச் சொல்லியிருந்தேன். ஸத்துகன், எவ்வாறோ சயந்தியை மயக்கி விட்டான். அவள் காரணமாகவே எனக்கும் ஸத்துகனுக்கும் பகை உண்டாயிற்று. அவன் என்னை வஞ்சித்தான். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் அவனை வஞ்சித்து விடுகிறேன். அதற்கு உன் உதவி இல்லையேல் முடியாது!"

"இளந்தத்தரே, அவன் நம் கையில் அகப்பட்டிருக்கையில் தாங்கள் கவலைப்படுவானேன்? அவனோ, இப்போது புதிய காதலியைத் தேடுகிறான். சயந்தியிடம் வெறுப்புக்கூட இருக்கும் இப்போது. பாவி! இன்னும் எத்தனை மகளிரைக் கெடுத்து வீணாக்கப் போகிறானோ? பேதை மங்கையரை வஞ்சித்து அவர்கள் வாழ்க்கையைக் கெடுக்கும் அந்தப் பாதகனைப் பழி தீர்க்கவேண்டும். அந்தப் பெண், மும்முடி நாய்கனின் புதல்வி பத்திரையே என்று ஜயதுங்கன் சொன்னபோது என் மனம் துடித்தது. உயர் குலப்

பெண்களைக் கெடுக்கும் பெருந் துரோகியைப் பழி தீர்ப்பதற்கு நான் முழு உதவியும் உமக்குச் செய்கிறேன்."

"அதைப் பற்றி நீ உடனே கவனிக்கவேண்டும். சமயம் தவறியபின் காரியம் நிறைவேறாது. ஸத்துகன் எப்போதும் முன்னறிவோடு நடந்து கொள்வான்; மாயாவி! இந்த முத்து மாலை விஷயத்தில் ஜயதுங்கன் சூழ்ச்சியால்தான் ஏமாந்து போனான்."

"அப்படியானால் முத்துமாலைகள் ஸத்துகனிடமே உள்ளனவா?"

"ஆம்; ஸத்துக மந்திரத்தின் பொக்கிஷ அறையில் இருக்கின்றன!"

"இளந்தத்தரே, நான் இதில் மிகவும் ஊக்கம் எடுத்துக் கொள்கிறேன். ஸத்துகன், காளன் இருவரையும் சிறைசெய்து விடலாம்; அதற்கு எந்தச் சமயத்திலும் நீர் ஆயத்தமாய் இருக்க வேண்டும்."

"அச்சா, அவர்களை அகப்படுத்தியபின், ஸத்துக மந்திரத்தின் கதி, அவ்வளவுதான்! அந்தப் பாலகனும், புத்தமித்திரரும் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிடுவர். பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் யாவரையும் சிறை செய்து அவர்களைக் கொண்டே அந்த ஸத்துகனை அவமானம் செய்யவேண்டும்; அதன் பின், இந்நகரில், மகாயான, மந்திரயான மார்க்கமே அழிந்துவிடும்!"

"ஆம். இப்போது அரசனுக்குங்கூட ஸத்துகன் மீது வெறுப்பு அதிகமாகிவிட்டது."

"எல்லாம், முத்துமாலைகளின் பெருமையால் தான்; ஜயதுங்கனின் தந்திரம்! அது கிடக்கட்டும்; நீ முதலில் கவனிக்க வேண்டியது என்ன தெரியுமா?"

"அது......தங்கள் உள்ளத்தில் தாண்டவமாடும் நாட்டிய மங்கை—சயந்தியைப் பற்றியதுதானே? இனிமேல், சிந்தனை செய்ய வேண்டாம். நாழிகையும்

ஆகிவிட்டது ; போவோம்'' என்று கூறிக்கொண்டே அச்சனும் இளந்தத்தனும் அரண்மனையை விட்டு வெளியேறினர்.

ஸத்துகமந்திரத்தின் பௌத்த சங்கம், அன்று மிகவும் அமைதியுடன் விளங்கியது. முன்பு இருந்த ஆரவாரம் சிறிதும் அன்று இல்லை. அதற்குக் காரணம் சோழ வேந்தனுடைய ஆக்ஞையேதான். காளனைப் பிடிக்குமாறு அரசன் கட்டளையிட்டதால் ஸத்துகமந்திரத்தில் கலக்கம் உண்டாயிற்று. ஸத்துக மந்திரத்தைச் சூழ்ந்து, வீரர்கள் கவனத்துடன் காவல் காத்தனர். பிக்ஷுக்கள் பிக்ஷுணிகள் யாவரும், மிகவும் முன்னறிவோடு நடந்துகொண்டனர். அன்றைத் தினம் பௌத்த சங்கம் மிகவும் அமைதியோடு விளங்கியதற்குக் காரணம் காளனின் மந்திராலோசனை நிகழ்ச்சியேதான் என்று குறிப்பிட வேண்டுமா?

ஸத்துக மந்திரத்தின் பின்புறத்தில் உள்ள நில வறையில் அமைக்கப்பட்ட பளிக்கறையில், காளன், அவன் ஏவல் வீரர்களுடன் ஆலோசனை செய்தான்; அந்தப் பளிக்கறையின் உள்ளே இருப்பவர்களைப் பிறர் பார்க்கமுடியாது; அதனுள் இருந்து எவ்வாறு பேசினாலும் பிறரால் அதைக் கேட்கவும் முடியாது. அந்தப் பளிக்கறையின் இயல்பு அது; பளிக் கறையில்தான், ஸத்துக சிரேஷ்டியின் ஆலோசனை— காளனின் மந்திராலோசனை நடைபெறும். வழக்கம் போல் அன்றைக்கும், காளனின் மந்திராலோசனை நடந்தது. ஒன்றன்மேல் ஒன்றாகக் கடுகி வரும் பழி களும், அரசனுடைய கட்டளைகளும், இளந்தத்தனின் சூழ்ச்சிகளும் அவனைத் தீராத ஆலோசனையில் ஆழ்த்தி விட்டன. தன் உயிர் நண்பர்களுடன் அதைப் பற்றி நீண்டநேரம் அவன் ஆலோசனை செய்தான். ஒருபுறம் வீரர்களும் மற்றொரு புறம் சில புதிய பிக்ஷுக்களும் இருந்தனர். காளனுடைய வடிவத்தையும், கோபத்

தையும் கண்டு அந்தப் புதிய பிக்ஷுக்கள் உள்ளம் கலங்கி உயிரற்றவர்போல் இருந்தனர். தலையிலிருந்து பாதம்வரையில் ஒருவித இரும்புக் கவசம் தரித்திருந்தான் அவன். ஊசி நுழையவும் இடமில்லை அந்தக் கவசத்தில். முகத்தில், கண்கள், காதுகள், மூக்கு, வாய் என்ற இடங்களில் மட்டும் சிறிய சிறிய உள் துளைகள் இருந்தன. எவ்வித ஆயுதத்திற்கும் அந்தக் கவசம் பிளவுபடாதது. காளனை எப்போதும் அந்த உடையில்தான் பார்க்க முடியும். அவனுடன் எப்போதும் பழகும் வீரர்களுங்கூட அவனைக் காணும்போது மனம் கலங்குவர் என்றால் அந்தப் புதிய பிக்ஷுக்கள் அவனைக் கண்டு அஞ்சி நடுங்கியது ஓர் ஆச்சரியமா? அந்த அறையில் ஒரு சிறு விளக்கு மின்மினிபோல் எரிந்துகொண்டிருந்தது. அந்த விளக்கு இருளை எடுத்துக் காட்டியது. காளனைக் காணும் கணந்தோறும் அவர்கள் நடுங்கியிருந்தனர்.

நீண்டநேரம் ஆலோசனை செய்தபின், கடைசியாகச் சில வார்த்தைகள் சொன்னான் காளன்: "இளந்தத்தன் ஒற்றறியும் தலைவனாகி விட்டதால், என்னை என்ன செய்யமுடியும்? இவ்வளவு வருஷங்களாக ஏமாற்றம் அடைந்து வருபவன் இனி, என்னை அறிந்து சிறைசெய்யப் போகிறானோ! மூடன்! இந்தக் காளன் கையில் அகப்பட்டு உயிர்விடப் போகிறான். சோழ வேந்தனுடைய ஆக்ஞையும், வன்மையும் இந்தக் காளனிடம் என்ன செய்யும்? இனி, பகைவர் என்பவரே இல்லாதவாறு ஒழித்துவிடுகிறேன். அந்த இளந்தத்தனையும் அச்சனையும் என் கைவாள் கொண்டு வெட்டி வீழ்த்தாமற்போனால், நான் காளன் அல்ல. ஆம்; நாளைக்கே அந்தக் கசடர்களுக்குச் சவக்குழி வெட்டுகிறேன்...

"என்ன அதிசயம்! இவ்வளவு நாட்கள்வரையில் இல்லாமல், இப்போது சில நாட்களாக, ஸத்துக மந்திர நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும், யார் வழி

யாகவோ, இளந்தத்தனுக்கும் அரசனுக்கும் உணர்த்தப்படுகின்றன என்பது தெளிவாகத் தெரிகிறது. இவ்விதம் வஞ்சகம் செய்யும் பேதை, யார் என்று தெரிந்தால் இதோ என் கூரிய வாளால் இரண்டு துண்டாக வெட்டி வீழ்த்துவேன். அந்த வஞ்சக நெஞ்சு படைத்தவன் எவன்? இங்கே யாரேனும் அறிவீர்களா? இங்கே யாரேனும் உண்டா?" என்று கூறி இருக்கையினின்றும் கீழே குதித்தான். உடனே யாவரும் எழுந்து விலகி நின்று மௌனம் சாதித்தனர். சிறிது நாழிகைக்கெல்லாம், "அறியோம்" என்ற விடை வந்தது. காளன் வாளை ஏந்திய கையுடன், ஒவ்வொரு வீரனையும் உற்று நோக்கிய வண்ணம் அறை முழுதும் சுற்றினன். பின்னர், மற்றொரு புறத்தே நின்ற சில பிக்ஷுக்களிடம் சென்று அவர்களை உற்றுப் பார்த்தான். அந்தப் பிக்ஷுக்கள் புதிதாகச் சங்கத்தில் சேர்க்கப்பட்டவராதலால், சந்தேகம் கொண்டு அவர்களை அங்கே வருவித்திருந்தான் காளன். அருகில் அவன் வந்தவுடன், பிக்ஷுக்களின் உடல்கள் நடுங்கின. அவர்களுள் அதிகமாக அஞ்சி நடுங்கியவன் ஸுமங்கள பிக்ஷுவே. காளன் அவனை உற்றுப் பார்த்ததும் ஸுமங்கள பிக்ஷுவுக்குக் கண்கள் இருண்டன; அறிவு சோர்ந்தது. எனினும் சிறிது தைரியத்துடன் நின்றான். 'நான், இளந்தத்தனின் ஒற்றன் ஜயதுங்கன் என்பதை உணர்ந்துவிடுவானோ?' என்று அவன் இதயம் பதைபதைத்தது. அவனுடைய அதிருஷ்ட வசமாக, காளன் அவன் மீது சந்தேகம் கொள்ளாமல் அப்புறம் போனான். ஜயதுங்கன் அந்நகரத்திற்கு மிகப் புதியவனானமையால் அவன்மீது காளன் சந்தேகம் கொள்ளவில்லை.

அங்குள்ளவர் மீது சந்தேகம் நீங்கியவனாய் ஆசனத்தில் அமர்ந்தான். அப்போதுதான் ஸுமங்கள பிக்ஷுவின் உள்ளம் அமைதி பெற்றது. உடனே

ஏதோ நினைவுகொண்டவனாய்க் காளன் ஓர் ஆக்ஞை யிட்டான்: "புதிதாகச் சங்கத்தில் சேர்ந்த எவரும் என் உத்தரவோ, ஸத்துகன் உத்தரவோ இல்லாமல் வெளியே செல்லக்கூடாது; நீங்கள் உங்களிடத் திற்குப் போகலாம்."

அந்த ஆக்ஞையைக் கேட்டவுடன், பிக்ஷுக்கள், "அப்படியே ' செய்கிறோம்" என்று கூறிவிட்டுச் சென்றனர். ஸுமங்கள பிக்ஷுவுக்கு மட்டும், இடி விழுந்தாற்போல் இருந்தன அவ் வார்த்தைகள். எனினும், மெல்ல, அந்தப் பிக்ஷுக்களுடன். அவ்விடத்தை விட்டுத் தியான மண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்தான். புதிய பிக்ஷுக்கள் பலரும் அவ ரவர் இடத்தில் அமர்ந்தனர்.

'உண்மையை உணர்ந்தேன்; இனி அரைக் கணமும் இங்கே இருத்தல் கூடாது' என்று முடிவு செய்தான் ஸுமங்களன். காளனின் மந்திரா லோசனை முடிவதற்குள் வெளியேறி விடவேண்டும் என்று உறுதி கொண்டான் அவன். நன்றாக இருள் பரவிவிட்டது அப்போது. பிக்ஷுக்கோலத்துடன், மிக விரைவாக, ஒருவரும் அறியாமல் ஸத்துக மந்திரத்தை விட்டு வெளியேறினான் ஸுமங்கள பிக்ஷு. போகும் போது வாயிற் காவலன், "எங்கே?" என்று வாய் புதைத்துக் கேட்டான்; மிகத் துணிவுடன், "ஸத்துக சிரேஷ்டியின் ஆக்ஞைப்படி செல்கிறேன். என் பெயர் ஸுமங்கள பிக்ஷு!" என்று கூறிவிட்டு மறைந் தான். ஸுமங்கள பிக்ஷுவைப்பற்றி அவன் ஒன்றுமே அறியாதவனாயிற்றே!

## 12

## பழிக்குப் பழி

"உண்மை தெரிந்ததா, இல்லையா?"

"இல்லையே; இரண்டு நாட்களாக முயன்று வருகிறேன். ஆனால், நினைத்தபடியே நடந்திருக்கிறது!"

"நடந்தால் என்ன? அவனைப் பழிக்குப் பழி தீர்க்காமல் விடேன்! இன்னும் எட்டு நாட்களில் என் திறமையைப் பார்!"

"ஸத்துகரே, இன்னும் ஒரு விஷயம்? பதினைந்து நாட்களில் ஸத்துகனையும், காளனையும் முத்துமாலைகளுடன் பிடித்துவிட வேண்டும் என்று அரசன் கட்டளையிட்டிருக்கிறானும். இப்போது ஏழுநாட்கள் ஆகிவிட்டன. அதைத் தங்களுக்கு ஞாபகப் படுத்தினேன். அந்த ஸுமங்களனே, நம் சங்கத்தைப் பற்றியும் தங்களைப்பற்றியும் அரசனிடம் கோள் கூறியிருக்கிறான்; ஒற்றறியவே அவன் நம் சங்கத்தில் பௌத்த பிக்ஷுவாக நடித்திருக்கிறான்!"

"அமிர்த சந்திரா, இது என்ன அதிசயம்! நம் சங்கத்திற்குள் புகுந்து பௌத்த பிக்ஷுவாக நடித்து நம்மை ஏமாற்றிச் சென்று விட்டானே! அவன் இந்நாட்டிற்கே புதியவன் என்று எண்ணி இருந்து விட்டேன். இளந்தத்தனின் ஒற்றன் அவன் என்பதைச் சிறிதும் நான் முன்பு உணரவில்லை. ஆனால் செக்கில் அகப்பட்ட எள் தப்பிவிடுமா? எவ்வாறேனும் அவனைப் பிடித்தே தீரவேண்டும்."

"ஸத்துகரே, முதலிலேயே நான் அவனைச் சந்தேகித்தேன். அன்று, காளனின் மந்திராலோசனை முடியும் தருவாயில் சமயம் பார்த்துத் தப்பி விட்டான். வாயிற்காவலனிடம் ஏதோ சொல்லிவிட்டு ஓடிவிட்டான்!"

"அமிர்த சந்திரா, அவனிடம் சந்தேகம்கொண்டு, பத்திரையின் தோழி வசந்தி என்னிடம் ஒரு நாள் குறிப்பாக ஏதோ தெரிவித்தாள்; நான் அவள் வார்த்தைகளை மதிக்கவில்லை. இவ்விதம் நடக்கும் என்று எனக்கு முன்பே தெரிந்திருந்தால்—அது இருக்கட்டும்; நமது பொன் அறையிலிருக்கும் முத்து மாலைகளை அவன் எவ்வாறு பார்த்தான்? வியப்பாக வன்றோ இருக்கிறது? பத்திரையிடம் முத்து மாலைகளை வஞ்சகமாய் விற்றவன் அவனே என்பதில் ஐயமில்லை. இளந்தத்தனின் வஞ்சனையே எல்லாம்!"

"அந்த ஸுமங்களன், இளந்தத்தனின் ஒற்றுள் என்பதில் சந்தேகமில்லை. அவனைப் பழி தீர்க்கும் செயலைப் பாலகனிடம் ஒப்படைத்து விடுங்கள்; தங்களுக்கு ஏன் வீண் கவலை?"

"ஆம்; அவ்விதமே இவ்விஷயத்தைப் பாலகனிடம் நீ சொல்லிவிடு. எவ்வாறேனும் அந்த ஸுமங்களனை இன்னும் எட்டு நாட்களில் பழி தீர்த்து விடும்படி நான் கூறியதாகச் சொல்."

"அவ்விதமே சொல்லிக் காரியத்தை முடித்து விடுகிறேன்."

"அதோ பார்; மேல் வானத்திலிருந்து விழுகிறது...எவ்வளவு பெரிய விண் மீன் அது!"

"அதோ, கடலில் மூழ்கிவிட்டதே! ஸத்துகரே, இவ்விதம் விழுவது பெரிய உற்பாதத்தைக் காட்டுகிறது. இதனால் இந்நகருக்கே பெரிய துன்பம் ஏதோ நிகழும் என்று தோன்றுகிறது!"

"என்ன உற்பாதம்? ஸுமங்களனுக்கும் இளந்தத்தனுக்கும் நேரப்போகும் கொலைகளுக்கு முன் அறிவிப்பு!"

"நான் போய் வருகிறேன்" என்று நகைத்த வண்ணம் ஸத்துக மந்திரத்தை நோக்கிச் சென்றான் அமிர்த சந்திரன்.

இவ்வாறு பேசிவிட்டு அமிர்த சந்திரன் அகன்றதும், ஸத்துகன் மாளிகையின் மேல்மாடத்தில் உலாவிக் கொண்டிருந்தான். புத்தமித்திர அடிகளின் பிரதம சிஷ்யன் அமிர்தசந்திரன். அவன், ஸோமங்களைப் பிடிப்பதற்குப் பலவாறு முயன்றும் முடியவில்லை. அதை ஸத்துகனிடம் தெரிவித்துவிட்டு அவன் சென்றான். அது விஷயமாக ஸத்துகன் மிகுந்த மனக் கலக்கத்தை அடைந்தான். காவிரிப்பூம்பட்டினத்தில், ஸத்துக மந்திரத்தில் அதுகாறும் தனியரசன் போல் ஆட்சி செய்த ஸத்துகனின் வாழ்வுக்குப் பெருத்த சோதனை உண்டாயிற்று. அவனுடைய மிடுக்கு நிறைந்த போக்கிற்குத் தடை ஏற்பட்டது. 'காளன் என்ற மாத்திரத்தில் கலங்கி நடுங்கும் இந்நகரில் காளனைச் சிறைப்பிடிக்க எந்த வீரன் முன் வருவான்? பார்ப்போம்' என்று தனக்குள் கூறிக்கொண்டான். இளந்தத்தனையும் ஸோமங்களையும் நினைத்தபோது ஸத்துகன் மனம் பொருமியது. கண்கள் சிவந்தன. கைகளைப் பிசைந்து கொண்டான்; 'அடே இளந்தத்தா, உன் வாழ்க்கை மரத்தை என் வாள் கொண்டு வெட்டி வீழ்த்தும் காலம் நெருங்கிவிட்டது; சில நாட்கள் பொறுத்திரு. அதற்குள் எவ்வளவு விரைவில் உன் திறமையை என்னிடம் காட்டுகிறாயோ, அவ்விதமே காட்டிக் கொள். ஸத்துகன் மனம் வைத்தால் இந்நகரைக் கொள்ளையிட்டு வெற்றி முரசு கொட்டுவான் தெரியுமா? என் திறமையை நீ அறியாதவனா?" என்று தன் உள்ளத்தில் அறைகூவிக் கொண்டான்.

ஸத்துகனைப் போலவே, ஸத்துக மந்திரத்தில் உள்ள யாவருக்கும் மிகுந்த பயம் உண்டாகியிருந்தது. நகரெங்கும் ஸத்துக மந்திரத்தைப் பற்றிய பேச்சே அதிகமாயிற்று. அரசன் கட்டளைப்படி, காளனைப் பிடிப்பதற்கு எவரும் முன் வரவில்லை.

ஸத்துகனின் எண்ணம்போலவே யாவரும் அஞ்சியிருந்தனர்.

மேல் மாடத்தில் உலாவிய வண்ணம், நகர்த் தோற்றத்தை நோக்கியவனாய் ஆலோசித்திருந்தான், ஸத்துகன். பூர்ணசந்திரன், விளக்கமாக வானப் பரப்பில் இயங்கினான் எனினும், தீபாலங்காரத்தால் ஜாஜ்வல்யமாக விளங்கியது அந்நகர். வெள்ளிக் குடத்திலிருந்து பால் வெள்ளம் பெருகிச் சொரிவதுபோல் இருந்தது, வெண்கிரணங்களை மதி பொழிந்த தன்மை. பாலைச் சொரிந்த அவ்வெண்ணிலவின் இன்பக் கிரணங்கள், ஸத்துகனின் உள்ளத்திலிருந்து உணர்ச்சி வேகத்தைத் தட்டி எழுப்பின. அவன் மனம் இடையறாத இன்பவூற்றைத் திளைக்க நாடியது. நிலவின் இன்ப வசீகரத்தால் இழுக்கப்பட்டு, அவன் புலன்கள் துன்பம் யாவும் மறந்து இன்ப நிலை எய்தின.

மேல் மாடத்திலிருந்து இறங்கி, விரைவில் குதிரை மீது ஏறி உலாவப் புறப்பட்டான். பகல் போல் ஒளி வீசும் வெண்ணிலவில் கருநிறக் குதிரையில் செல்லும் அவன் அரையில் பளபளவென்று மின்னியது வயிர வாள். கம்பீரம் நிறைந்த அவன் வடிவத்தையும் அந்தக் குதிரையின் நடை வேகத்தையும் கண்டு யாவரும் அவன் ஸத்துகன் என்பதை அறிந்து கொண்டனர். ரகசியமாகத் தமக்குள் அவனைப் பற்றிப் பேசிக்கொண்டனர், ஆங்காங்கே. ஸத்துகன் உள்ளம் வேறிடத்தில் ஒன்றியிருந்ததால், அவர்கள் பேச்சை அவன் அறியவில்லை. அவன் மனம் முற்றும் பத்திரையை நாடியிருந்தது. யாருடைய இன்பத்திற்காகவும், காட்சிக்காகவும் அவன் உள்ளம் ஏங்கித் தவித்துத் தன் மற்றக் கவலைகளையெல்லாம் மறந்து விரைந்து எழுந்ததோ - அந்த இன்ப மங்கை - பத்திரையின் மாளிகை வாயிலில் நின்றது குதிரை; அத்துடன் அவன் மனக் குதிரையின் ஓட்டமும்

நின்றது. குதிரையை அப்புறம் நிறுத்திவிட்டுக் கன்னி மாடத்தின் வாயிலை அடைந்தான் அவன்.

என்றும் இல்லாமல் அன்று கன்னிமாடத்தின் வாயிற் கதவு மூடப் பெற்றிருந்தது, ஸத்துகனுக்கு வியப்பைத் தந்தது. சற்று ஆலோசனையுடன் நின்றான். அங்கே வசந்தியோ, பத்திரையோ, மற்றத் தோழிகளோ எவரும் இல்லாமல் அமைதியாக இருந்தது. 'ஒரு வேளை, பூந்தோட்டத்தின் பக்கம் நிலவுக்காகப் போயிருக்கிறார்களோ?' என்று எண்ணமிட்டான் அவன். உடனே, கன்னி மாடத்தின் சுவர்ப்புறம் சென்று சாளரங்கள் வழியே எட்டிப்பார்த்தான். நிலவின் வெள்ளிய கிரணங்கள் உள்ளே தவழ்ந்து திளைத்துக் கொண்டிருந்தன. எனினும் இருளின் துணுக்குகள் இடையிடையே தங்கியிருந்தன. ஒரு பக்கத்தில் அணையும் தருவாயில் எரிந்து கொண்டிருந்தது தீபம் ஒன்று. கடலில் மூழ்கி, இறக்கும் தருவாயிலிருந்த ஒருவனைச் சுறுமீன் அவன் காலைப்பற்றி இழுத்து முழுகச் செய்வதுபோல் அணையும் தீபத்தின் திரியை ஒரு தளிர்க்கரத்தின் விரல் இழுத்து அணைத்தது. அந்தத் தளிர்க்கரத்தின் அடையாளத்தால் தீபத்தை அணைத்தது ஒரு பெண் என்பது மட்டும் ஸத்துகனுக்குத் தெரிந்தது. பெண்ணின் முழு உருவமும் புலப்படவில்லை.

அடுத்த கணத்தில் ஸத்துகன் கண்ட காட்சி, அவன் உள்ளத்தை நடுங்கச் செய்தது. அவன் கண்களை அவனாலேயே நம்ப முடியவில்லை. மீண்டும் நோக்கினான். தான் என்றும் அமர்ந்திருக்கும் அந்தப் பூங் கட்டிலில் ஓர் இளைஞன் இருந்தான்; அவன் அருகில் அந்தப் பெண் அமர்ந்தாள். அவ்விருவரும் காதல் விளையாட்டிலே மெல்லிய குரலில் ஏதோ பேசுவதும் ஸத்துகனுக்குக் கேட்டது. அந்த இளைஞன், பார்ப்பதற்கு இளந்தத்தன் போல் ஸத்துகன் கண்களுக்குத் தெரிந்தது. ஏன் - அவன் மனத்திலும் உறுதியாயிற்று.

அது போலவே அருகில் இருக்கும் நங்கை யாராக இருக்க முடியும் என்பதில் ஸத்துகனுக்குச் சந்தேகமும், அதிசயமும், அவநம்பிக்கையும் உண்டாயின. அந்த நங்கை—பத்திரையின் சாயலாகவே ஸத்துகன் கண்களுக்குப் புலப்பட்டாள்; பத்திரைதான் என்பது உறுதியாயிற்று! அப்போது ஸத்துகனுக்கு ஏற்பட்ட நிலைமையைச் சொல்லவும் வேண்டுமோ? அவன் அமைதி கொள்ளவில்லை. கைகால்கள் உணர்ச்சியற்று நடுங்கின; கண்கள் இருண்டு சுழன்றன. சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டான். மீண்டும் பார்த்தான். பூந்தோட்டத்தின் வாயிற் கதவு திறந்திருந்தது தெரிந்தது. அதற்கு மேல் அங்கே அவனால் நிற்க முடியவில்லை. வீதியின் பக்கம் திரும்பினான்; வீதியில் ஓரிருவர் போய்க் கொண்டிருந்தனர்.

தான் கண்ட காட்சியை அவனால் நினைத்துப் பார்க்கவும் முடியவில்லை. 'பத்திரையும்—இளந்தத் தனுமா அவர்கள்?' என்று நினைப்பதற்கு அவனுக்கு மனத்தில் வன்மையில்லை. ஒரு விதப் பரபரப்பு ஏற்பட்டது அவனுக்கு. வேறு புறமாகத் தோட்டத் திற்குள் புகுந்தான். கன்னிமாடத்தின் உள்ளிருந்து தோட்டத்திற்குச் செல்லும் வாயிலில், கொல்லைப் புறமாக வந்து புகுந்தான். அவன் அணுகிய அவ்வளவில், ஸத்துகனைக் கண்டோ, காணாமலோ அந்தக் காதலர் இருவரும் ஒருவரை ஒருவர் முன்னும் பின்னுமாக இழுத்துக்கொண்டு கன்னிமாடத்தின் அறையின் உட்புறம் ஓடினர். காதலி முன்னும், காதலன் பின்னுமாகச் சென்ற அந்தக் காட்சியை ஸத்துகன் கண்டு திகைத்துப் போனான். அவர்களை உற்றுக் கவனிக்கவில்லை ஸத்துகன். ஆனால், ஸத்துகன் உள்ளத்தில் எழுந்த சந்தேகம் மட்டும் உறுதியாயிற்று. சிலருக்குச் சந்தேகம் மூண்டு விட்டால் நீங்குவது மட்டிலும், எளிதில் இயலாத

காரியம்! 'இனி, நமக்கு இங்கே என்ன காரியம்? திரும்பவேண்டியது தானே?' என்று எண்ணினான். அடுத்த கணத்தில் அவனுடைய ஏக்கம், கவலை, சந்தேகம் யாவும் கோபமாகப் பொங்கி எழுந்தன.

அவனுடைய கைகள் எதையோ தேடின. மிக விரைவில் அரையில் கட்டிய உறையிலிருந்து வாளை உருவினான். பளபளவென்று மின்னிய அந்த வயிர வாளை வலது கையில் தாங்கி அந்தக் காதலர்களைப் பின்தொடர்ந்தான். அற்ப சந்தேகம் பெரிய ஆபத்தை உண்டாக்கிவிட்டது! விதி யென்னும் வீரன் அவனைப் பிடர் பிடித்துத் தள்ளினான். குகையில் நுழையும் இளஞ் சிங்கம் போல் அந்த அறைக்குள் புகுந்தான் அவன். காதலியின் தோள்மீது கரம் வைத்துச் செல்லும் அந்த இளைஞன், தன் பின்னே வரும் ஸத்துகனை நோக்கவில்லை. பாவம்! நோக்கியிருந்தால்?—

ஸத்துகன் பாம்பு போல் சீறிச் சென்று தன் கையிலுள்ள வயிரவாளை வீசினான், 'ஆ' என்ற கூக்குரலுடன் அந்த இளைஞனின் அழகிய சிரம், பூமியில் உருண்டது. கூக்குரல் கேட்ட இளநங்கை திரும்பிப் பார்த்துத் திகைத்தாள்; அடியற்ற மரம் போல் சாய்ந்து, வெட்டுண்டு வீழ்ந்த இளைஞனின் மேனியில் புரண்டாள். அந்த மங்கையைக் கண்டான் ஸத்துகன்; கீழே வெட்டுண்டு வீழ்ந்த இளைஞனின் தலையையும் மேனியையும் பார்த்தான்; உடனே அவன் உடலில் நடுக்கம் ஏற்பட்டது. அவனால் நிற்க முடியவில்லை. தன் நினைவு தப்பியவனாய், அருகில் இருந்த மஞ்சத்தில் மெல்லச் சாய்ந்தான். அவன் கையிலிருந்த வாள் தடாலென்று கீழே வீழ்ந்தது!

"வசந்தி, என்ன கூக்குரல்?" என்று கூறிக் கொண்டே மேல் மாடத்திலிருந்து விரைவாகக் கீழிறங்கி வந்தாள் பத்திரை. இருளும் நிலவும் கலந்திருந்த அவ்விடத்தில் பத்திரைக்கு ஒன்றும் புரியவில்லை. வசந்தியின் பொருமலும் அழுகையும் மட்டுமே

கேட்டன. விரைந்து போய், விளக்கை ஏற்றி வந்தாள். மஞ்சத்தில் திகைப்புடன் சாய்ந்திருந்த ஸத்துகனையும், தலை வேறு உடல் வேறாகக் கிடக்கும் பாலகனின் சவத்தையும், அதன்மேல் விழுந்து புரளும் வசந்தியையும் கண்டாள். உடல் வியர்த்துக் கண்கள் சுழன்றன. பார்க்கச் சகியாத அந்தக் கோரக் காட்சியைக் கண்டு துணுக்குற்றுக் கண்களைப் பொத்திக் கொண்டாள் அவள். இளைஞனின், ரத்தம் பெருகும் உடலில் தலை வைத்துக் குமுறி அழுதுகொண்டிருந்தாள் வசந்தி. பெருமூச்சு விட்ட வண்ணம் பத்திரை, "வசந்தி, என்ன இந்த அலங்கோலம்? பாலகன் செய்த பிழை என்ன?" என்று கூறிக்கொண்டே வசந்தியைத் தொட்டு எழுப்பினாள். அந்த இளைஞன் - பாலகனின் - மேனியை விட்டு நிலத்தில் சாய்ந்தாள் வசந்தி. அந்தச் சோகக் காட்சியைக் கண்ட பத்திரை கண்ணீர் ததும்ப, ஸத்துகனின் கால்களின் அடியில் முகத்தைக் கவிழ்த்து உட்கார்ந்து கொண்டாள். ஸத்துகன் கண்களிலிருந்து மளமளவென்று நீரூற்றுப் பெருகியது. அதன் துளிகள், பத்திரையின் முகத்தில் துளித்தன. பத்திரை அப்போதுதான் ஸத்துகனின் முகத்தைப் பார்த்தாள். என்ன சொல்லுவதென்று ஸத்துகனுக்குத் தோன்றவில்லை. தான் பத்திரையைப் பற்றிச் சந்தேகித்ததை அவன், அவளிடம் எப்படிக் கூறுவான்?

மஞ்சத்தை விட்டு எழுந்து, வெட்டுண்டு வீழ்ந்த பாலகனின் தலையைக் கையால் எடுத்து, மார்புடன் தழுவிக் கொண்டான்; "அன்பா, மகாபாவியான நான் உன்னை அறியாமல் என் பகைவனென்று எண்ணித் தவறிக் கொன்று விட்டேன்! என் உயிரே! உன்னை இனி எங்கே காண்பேன்? என் வாழ்வினையின் பயன் இதுவே? என் உயிர்த்துணைவனாகிய உன்னை என் கைவாள் கொண்டு வெட்டினேனே! உயிர் துடிக்கின்றதே! என் செய்வேன்? மறு பிறவி

யிலேனும் உன்னை நான் கண்டு என் குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டுவேன். என்ன நினைந்து என்ன செய்தேன்! அந்தோ!'' என்று கண்ணீர் பெருக்கிப் புலம்பினான். பின்னர், மனம் உடைந்தவனாய், வசந்தியின் அருகில் சென்று, "வசந்தி, என்னை மன்னித்துவிடு. உன்னைக் காட்டிலும் என் உயிர் புழுப்போல் துடிக்கின்றது. அறியாமல் என் ஆருயிர் நண்பனைக் கொன்றேன்! முற்பிறப்பில் செய்த தீவினையால் இவ்வாறு நடந்துவிட்டது. வினையின் விளைவிற்கு நாம் வருந்தி என் செய்வது? மறு பிறவியில் உன் கணவனை நீ நிச்சயம் அடைவாய். வருந்தாதே'' என்று ஆறுதல் கூறினான். எரியும் தீயில் நெய் ஊற்றினாற்போல் இருந்தன அவ் வார்த்தைகள். எனினும் தன் வருத்தத்தை மறக்க முயன்றாள் வசந்தி. அறிவும், மனத்திண்மையும் உடைய அவள் ஒருவாறு வருத்தத்தை அடக்கிக் கொண்டாள். 'உயிர் நண்பன் என்று உணர்ந்திருந்தால் இவன் கொன்றிருப்பானா? விதியின் விளைவால் கொன்று விட்டான்; நான் அதற்கு வருந்தி என்ன செய்வது? என் காதலின் தொடர்பினால் இவருக்கு உயிர் நாசம் என்பது விதியின் கட்டளை போலும்! இவ்வளவு விரைவில் என் காதல்மலர் கருகிவிட வேண்டுமா? மலர்ந்த அளவிலேயே வாடிவிட்டதே என் காதல் மணமலர்! நெறி வழுவிய எனக்குக் கடவுள் நேர்மையான தண்டனையை விதித்து விட்டார்' என்று ஆறுதல்கொண்டாள்.

"ஸத்துகரே, நான் செய்த வினை இது! தாங்கள் அறியாது செய்த செயலுக்கு நான் எப்படி வருந்த முடியும்? என்னை விடத் தங்களுக்கே துயர் அதிகம்! விதியின் விளைவிற்கு யார் என்ன செய்ய முடியும்? இனி, தாமதம் வேண்டாம்: விரைவில் செய்ய வேண்டியதைச் செய்யுங்கள். பிறர் அறிந்தால் பெருந் துன்பம் உண்டாகும்'' என்று கூறிவிட்டுப் பத்திரையிடம் சென்றாள்.

பத்திரைக்கு இதயம் பட படவென்று அடித்துக்கொண்டது; 'அந்தோ! இந்தக் கோரக் காட்சியை யாரேனும் கண்டால் ஸத்துகரின் நிலை என்ன ஆகும்? என் செய்வது?' என்று தவித்தாள்; "விரைவில் அப்புறப்படுத்துங்கள்; எழுந்திருங்கள்! எழுந்திருங்கள்" என்றார்கள் வசந்தியும் பத்திரையும்.

ஸத்துகன் வேகமாகச் சென்று பாலகனின் சவத்தை எடுத்துக்கொண்டு தோட்டத்திற்குள் சென்றான். அங்கே, பவழ மல்லிகை மரத்தின் கீழுள்ள ஒரு படுகுழியைக் காட்டினாள் பத்திரை. பாலகனின் சவத்தை அதில் அடக்கம் செய்தான் ஸத்துகன். அதன்மேல் இலை தழை முதலியவற்றால் மூடி மண்ணைப் பரப்பினான். பவழ மல்லிகை மரம். தனது மணமலர்களை அந்தச் சமாதியின் மீது சொரிந்தது. அந்தச் சமாதியோடு தன் வருத்தத்தை மறந்தாள் வசந்தி. வருத்தத்தை மறந்தாலும் அந்தக் கோரக் காட்சி அவள் மனத்தை விட்டு அகலவில்லை.

மூவரும் கன்னிமாடத்திற்குள் வந்தனர். தான் தவறிக் கொன்றதைப்பற்றி ஸத்துகன் பலவாறு கூறினான். பத்திரை, வசந்திக்கும் ஸத்துகனுக்கும் ஆறுதல் சொன்னாள். யாருக்கு யார் ஆறுதல் கூற முடியும்?

"பத்திரை, என் வாழ்க்கையில், என் அறியாப் பருவத்தில் நான் அறிந்து நேசிக்காத கணவனை இழந்தேன்; இப்போது அறிந்து காதலித்த காதலனையும் இழந்தேன். என் விதியின் பயன் இது; இதற்கு நான் வருந்தவில்லை" என்றாள் வசந்தி.

"பத்திரை, நமது சங்கத்தில் ஒற்றறிந்து ஓடிய ஸோமங்களன் இதுவரையில் அகப்படவில்லை. அவனைப் பிடிப்பதற்குத் தகுதியுடையவன் பாலகன்தான் என்று எண்ணினேன். அவனைப் பழி தீர்க்கும் காரியமாகப் பாலகனிடம் சொல்லும்படி அமிர்த

சந்திரனை அனுப்பினேன். அப்போது மேல்வானி லிருந்து பெரிய விண்மீன் ஒன்று கடலில் விழக் கண்டேன். அந்த உற்பாதத்தின் பயன் என்னவோ, என்று என் மனம் கலங்கியது. பாலகன் வாழ்வுக்கு நான் யமனாகியதுதான் அதன் பயனாயிற்று!'' என்றான் ஸத்துகன்.

"ஸத்துகரே, ஸ்வப்னங்களைப்பற்றி நான் சொல் லியவை உண்மையாகிவிட்டனவா?'' என்றாள் வசந்தி வியப்புடன்.

"வசந்தி, அவ்விதமே ஆயிற்று. அது இருக் கட்டும். உன் வருத்தத்தை மறைக்கிறாய். பாலகன் இந்த வேளையில் இங்கே வந்தது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. என் விஷக் கண்களுக்கு அவன், இளந் தத்தன் போல் தோன்றினான்! இல்லையேல் இவ் வாறு நேருமா?''

"பாலகரின் வாழ்வுக்கு, தங்கள் கைவாள், இன்று முடிவு கட்ட இருக்கையில் அவர் எவ்விதம் வராமல் இருக்க முடியும்? அதைப்பற்றி இனித் தாங்கள் கேட்கவேண்டாம்.''

"இன்று யான் செய்த கொடிய செயலை என்றும் மறவேன்! போதிநாதன் என்னை மன்னிப்பாராக'' என்று இரங்கிக் கூறினான் ஸத்துகன்.

"சர்வம் நாசம்'' என்பது என் உள்ளத்தில் ஒலித்துக்கொண்டிருக்கும் மூல மந்திரம் அல்லவா? அந்த மந்திரத்தை நான் நாள்தோறும் உரு ஏற்றி யதன் பயன் இன்று கிடைத்துவிட்டது; ஆனால், பயன், இதுமட்டுமல்ல. இதுபோல் இன்னும் என்ன என்ன நிகழவேண்டும் தெரியுமா? அவ்விதம் நிகழா மற்போனால், என்ன? அன்பனின் ஆருயிரை மாய்த்த ஸத்துகனை, அந்தத் தீவினை எளிதில் விடுமோ? தீவினை மறந்தாலும் நான் மறவேன். தீவினைக்கு என் மூல மந்திரத்தின் முழு வன்மையையும் அளித்துப்

பழிக்குப் பழி தீர்ப்பேன்; சீ! என் ஆருயிர்த் தோழி, என்னையே நம்பியிருக்கும் பேதை பத்திரைக்கு மனம் வருந்தும் காரியத்தைச் செய்ய என் உள்ளம் துணிவு கொள்ளுமா? ஒருநாளும் அவ்விதம் செய்யேன்! ஆனால்—" இவ்வாறு அவள் சிந்தனை வேகமாக ஓடித் தடைப் பட்டது.

"நமக்குப் பகை, பாவம், அச்சம் மூன்றும் அகலும்படி போதி சத்துவனை வணங்குவோம்" என்றாள் பத்திரை. மூவரும் எழுந்து வணங்கினர்.

"போதிநாதனைப் போற்றுவம் நாளும்" என்று துதித்தனர். வசந்தியின் உள்ளத்தில் மட்டும், 'பழிக்குப் பழி' என்பது ஒலித்துக்கொண்டே யிருந்தது. அது நிறைவேறிற்றா?

## 13

## என் தெய்வம்

வசந்தியை எந்த வகையில் குறைகூற முடியும்? அவள், யாருக்கும், எவ்விதத் தீங்கையும் செய்ய வில்லையே! ஆரம்பத்திலேயே பத்திரை, ஸத்துகன் மீது காதல் கொண்ட அன்றே, பத்திரையின் நன்மையைக் கருதி அவள் மனத்தை மாற்ற வசந்தி முயலவில்லையா? வசந்தியின் வார்த்தைகளுக்குப் பத்திரை இணங்காமற் போனால், அதற்கு அவள் என்ன செய்வாள்? அந்நிலையில்கூட, பத்திரை விஷயத்தில் மிகுந்த கவலையுடன் அவளை நல்வழிப் படுத்த முயன்றவள் வசந்தியல்லவா? ஆதலால் பத்திரைக்கு வசந்தி தீங்கு செய்தாள் என்று யாரும் சொல்ல முடியாது. அவ்விதம் இருக்க, வசந்தியின் மீது பத்திரையின் தந்தை ஏனாதி மும்முடி நாய்கன், 'பத்திரையின் நிலைமைக்கு வசந்தியே காரணம்' என்று எண்ணிக் கோபம் கொண்டான்.

கைம்பெண்ணாகிய வசந்தி, பாலக பிக்ஷுவைக் காதலித்து அவனுடன் திரிகிறாள் என்பதும் அவன் எண்ணம். தான் கெட்டது போலவே, பத்திரையையும் கெடுத்து விட்டாள் என்று எண்ணி வருத்தம் அடைந்தான் அவன். 'அறிவு மிகுதியும், மனவுறுதியும், பிறரை நல்வழிப்படுத்தும் திறமையும் வசந்திக்கு அமைந்திருத்தலால் பத்திரையின் நல்வாழ்வுக்கு இவள் உற்ற துணையாவாள்' என்று நாய்கன் எண்ணியிருந்தது, வீணாயிற்று. இளமையிலேயே, தாயிழந்த பத்திரைக்குத் தாயைக் காட்டிலும் வசந்தி, சிறந்தவள் என்று முன்பு எண்ணியிருந்தான். இப்போது அதற்கு நேர்மாறான அபிப்பிராயம் அவன் மனத்தில் தோன்றிவிட்டது. ஆனால், பாலக பிக்ஷு மாண்டுபோன விஷயம் அவனுக்குத் தெரியாது. எப்படி அவன் தெரிந்துகொள்ள முடியும்? பாலகன் வெட்டுண்டு வீழ்த்தப்பட்ட மறுகணமே, அவன் உடலைக் கொல்லைப் புறத்தில் புதைத்துவிட்டதையும், அவன் பிரிவால் ஏற்பட்ட துக்கத்தைக்கூட அம் மூவரும் அடக்கிக்கொண்டு அமைதியுடன் இருந்ததையும் எவ்வாறு நாய்கன் அறிந்து கொள்வான்?—அல்லது வேறு யாருக்குத்தான் தெரியும்? அதுவும் ஆடவர் புகாத அருங்கடி வரைப்பாகிய, கன்னி மாடத்தின் உட்புறத்தில் நிகழ்ந்த சம்பவத்தை யாரால், அறியமுடியும்? ஆதலால் கன்னிமாடத்துச் சம்பவங்கள் எவையும் நாய்கனுக்குத் தெரிவதற்கு வழியே இல்லை. ஆனால், அவ்வப்போது கன்னி மாடத்து நிகழ்ச்சிகள், சேடிகள் மூலமாக, நாய்கனுக்கு எட்டுவதும் உண்டு; அன்றைச் சம்பவம் மட்டும், யாரும் இல்லாத சமயத்தில் அல்லவா நிகழ்ந்தது?

மும்முடி நாய்கன், பத்திரை, வசந்தி இருவர் விஷயத்திலும் மிகுந்த கவலை கொண்டான். ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் ஏற்பட்ட காதலை அகற்ற

முடியாது என்பதை அவன் நன்கு உணர்வான். எனினும் பன்முறை, பத்திரைக்குப் புத்திகூறத் தவறவில்லை அவன். அதைப் பத்திரை, மதிக்கவே இல்லை. நாய்கனும், தன் முயற்சி பயன்பெறவில்லை என்பதை உணர்ந்து பேசாமல் இருந்துவிட்டான். இந்நிலையில், ஸத்துகனைப் பற்றிய விஷயங்கள், அவ்வப்போது இளந்தத்தனால் நாய்கனுக்கு உணர்த்தப் பட்டு வந்தன. அந்த விஷயம் வசந்திக்கு அரை குறையாகத் தெரிந்திருந்தாலும், பத்திரைக்கு முற்றும் தெரியாது.

நாளடைவில், பல காரணங்களைக் கொண்டு, ஸத்துகன்மீது பெரிதும் சந்தேகம் உண்டாயிற்று நாய்கனுக்கு; அதனால், தன் பெண் பத்திரையைப் பற்றிய கவலையும் அதிகரித்தது. எனினும், ஸத்துகன், தன்னைக் காண வரும் சமயங்களில் அவனை மிகுந்த அன்புடனும் அச்சத்துடனும், வர வேற்றுப்பேசி அனுப்புவான் அவன். ஸத்துகனுடைய வசீகரத் தோற்றத்திலும், அவனுடைய பேச்சுத் திறமையிலும் மயங்கியே, நாய்கன் அவ்விதம் நடந்து கொண்டான்: அதுமட்டுமன்றி; தன் பெண் பத்திரைக்காகவும் அவன், அவ்வாறு தன்போக்கை - மன நிலையை மாற்றிக்கொண்டான் என்று சொல்ல லாம்.

ஸத்துகனிடம் முன்பே நாய்கன் சந்தேகம் கொண்டதற்கேற்ப, அதன் பின், சில நிகழ்ச்சிகள் நிகழ்ந்துவிட்டன: சோழ மன்னன் தன் தேவியின் முத்துமாலைகள் களவுபோன விஷயமாய்க் காளனைப் பிடிக்கும்படி கட்டளையிட் டிருப்பது, ஸத்துக மந்திரத்தில் நடந்து வரும் பல கோர சம்பவங்களைப் பற்றி ஜனங்கள் பலவாறு பேசிக்கொள்வது, பத்திரை, ஸத்துகன், இருவர்களைப்பற்றியும் வணிகர் வீதியிலுள்ள பெண்கள் பேசிக்கொள்ளும் பழி மொழிகள், ஆகிய யாவும் நாய்கனுக்கு உணர்த்தப்

பட்டன. அதனால், நாய்கன் கவலைகொண்டு சிந்தனையில் ஆழ்ந்தான்.

வருத்தம் மேலிட்ட நாய்கன், அன்றைத் தினம் ஒரு முடிவு செய்து பத்திரையிடம் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்பினான். பத்திரையைத் தன் மாளிகைக்கு வந்து போகுமாறு, சொல்லும்படி ஒரு சேடியை அனுப்பினான். அவள் கன்னிமாடம் சென்று நாய்கன் கட்டளையைத் தெரிவித்தாள்.

வீணை வித்தகியான, பத்திரை, வீணையின் இன்ப ஒலியிலே மனம் ஒன்றி மெய்ம்மறந்து இருந்தாள் கன்னி மாடத்தில். அந்நிலையில், தந்தை அழைத்ததைக் கேட்டவுடன், சட்டென்று எழுந்து சென்றாள். தந்தையைக் கண்டதும் அவள் நிலை மாறிவிட்டது. நாய்கனை வணங்கிவிட்டு அருகில் அமர்ந்தாள். முதுமைப் பருவத்தில் இயல்பாகவே மெலிந்திருந்த அவன் உள்ளம் பத்திரையைப் பற்றிய கவலையால் மிகவும் புண்ணுற்றிருந்தது.—அப்போது பத்திரையைக் கண்டதும், அவன் உள்ளத்தில் குமுறிக்கொண்டிருந்த துன்ப அலைகள் பொங்கிப் பெருகிவிட்டன. கண்களில் நீர் பெருகப் பேசலானான்.

"பத்திரை, நான் சொல்லுகிறேன் என்று வருந்தாதே; உன்னுடைய நிலைக்குத் தகுந்தவாறு நடக்கவேண்டும்; எனக்கோ எழுந்திருக்கவும் சக்தி இல்லை. உன் பொருட்டே, நான் உலகில் உயிர் வாழ்கிறேன். தகுந்த கணவனை நீ அடையவேண்டும் என்பதே என் ஆவல். அதிகமாக உனக்கு நான் சொல்ல விரும்பவில்லை. இப்போது கடைசியாக உன்னிடம் ஒன்று கேட்கிறேன்! அது..."

"தாங்கள் இவ்வளவு சிரமம் ஏன் எடுத்துக் கொள்கிறீர்கள்? நேர்மையான வழியிலேயே நான் செல்கிறேன். தாங்கள் எதைப்பற்றிக் கேட்டாலும் மறுமொழி கூறுகிறேன். தாங்கள் இவ்வளவு

வருத்தம் கொள்ளும்படி, என்ன செய்து விட்டேன் நான் ?" என்று கூறும்போதே அவள் குரல் தழுதழுத்தது. தந்தையின் பாதங்களைப் பற்றிக் கொண்டே குனிந்து கண்ணீர் சொரிந்தாள். நாய்கனின் நிலையைக் கண்டு அவள் மனம் இளகிப் பொருமியது. அவளை அறியாமல், பெருந்துக்கம், அவள் மனத்தில் பாரமாக அழுத்தியது. அந்தத் துக்கச் சுமையை யாராவது அகற்றுவார்களா என்று அவள் மனம் ஏங்கியது. வார்த்தைகளால் வெளியிட முடியாத நிலையில் அந்தத் துக்கத்தைப் பொறுத்துப் பொருமினாள். அவள் தன்மையைக் கண்டு நாய்கன் உள்ளம் சோர்ந்தான். முதுமையின் பலக் குறைவும் சேர்ந்து அவன் உள்ளம் தளர்ந்து கண்ணீர் ததும்ப, பத்திரையின் உதவியற்ற நிலையைப் பார்க்கச் சகியாதவனாய் வருந்தினான். உள்ளத்தில் எழுந்த துயரத்தின் பேரலைகள் ஓய்ந்து அடங்கும் வரையில் இருவரும் பேச்சவிந்து இருந்தனர்.

நீண்ட நேரத்திற்குப் பிறகு இருவருடைய உள்ளங்களும் அமைதி பெற்றன. ஒருவாறு மனவுறுதியுடன், "பத்திரை! பத்திரை! ஸத்துகனை நீ மறந்து விட முடியாதா? நான் உன்னுடைய வருங்காலத்தில் நல்ல வாழ்வைக் கருதி இதைக் கூறுகிறேன் ............இல்லையேல்" என்றதும் பத்திரையின் உடல் முழுதும் குலுங்கியது; துணுக்குற்றாள். "அதை மட்டும் தாங்கள் மறந்துவிட வேண்டுகிறேன். முடியாத காரியம் அது! அவரை, என் மனத்தாலும் வாக்காலும், காயத்தாலும் என் வாழ்க்கைத் தெய்வமாகக் காதலித்துவிட்டேன். அவரை மறப்பதைவிட என் உயிரையே மறப்பது நல்லது."

"பத்திரை அதைப்பற்றி நான், இனிமேல், பேசவில்லை. தோற்றியதைச் சொன்னேன். நீ—"

"இல்லை, இல்லை—என்னை மன்னித்து விடுங்கள். இந்த விஷயத்தில் மட்டுமன்றி, தங்களுடைய மன

விருப்பத்திற்குத் தகுந்தவாறு வேறு எதையும் செய்யச் சித்தமாயிருக்கிறேன்!"

"பத்திரை, எனக்கு வேறு என்ன வேண்டும்? எவ்வித ஆவலும் எனக்கு இல்லை. எல்லாம் உன் பொருட்டுத்தான். உன்னுடைய வாழ்க்கை தூய்மையுடனும் இன்பத்துடனும் பொலிவுடனும் இருக்க வேண்டும் என்பதே என் ஆவல்! ஆனால், ஸத்துகன் விஷயத்தில் என் மனம் என்னவோ, சஞ்சலம் உடையதாகவே இருந்து வருகிறது! அதனால்தான் நான் இதைச் சொல்லும்படி நேர்ந்தது."

"அவர் விஷயத்தில் தாங்கள் கவலைப்பட வேண்டாம்; நான் அவரைத் தங்கள், விருப்பத்திற்கு ஏற்றவாறு நடந்துகொள்ளச் செய்வேன்" என்று சொல்லியவண்ணம் தந்தையின் வதனத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

"இன்னும் ஒன்று. வசந்தி தான் கைம்பெண் என்பதைக் கூட மறந்துவிட்டாளே! உலகத்தவர் சொல்லும் பழிமொழிக்கு அஞ்சி நடக்கவேண்டாமா?" என்று கூறியபோது நாய்கனின் முகம் சிறிது குவிந்தது. வசந்தியைப்பற்றிக் குறிப்பாக, நாய்கன் பேசியதைக் கேட்டு, பத்திரை திடுக்கிட்டாள். அதற்கு ஒன்றும் மறுமொழி கூறமுடியாமல் தலை குனிந்தாள். அப்போது, "ஸத்துகர் வந்திருக்கிறார்" என்று ஒரு சேடி வந்து கூறினாள். உடனே பத்திரை எழுந்து நின்று, தப்புவதற்கு இதுதான் சமயம் என்று எண்ணி, "நான் போய்விட்டு வருகிறேன்" என்று பரபரப்புடன் சொன்னபோது, "நீ போய் வா" என்று கூறிவிட்டான் நாய்கன்.

பூங்கொடி, ஒன்று ஒசிந்து அசைந்து ஓடுவது போல் பத்திரை கன்னிமாடத்திற்கு மிக விரைவாக ஓடினாள். புன்னகையுடன் கன்னிமாடத்தில் ஒருபுறம் உலாவிக்கொண் டிருந்தான் ஸத்துகன். இருவரும்

கண்குளிரப் பார்த்துக் கொண்டார்கள். பத்திரையின் முகம் சிறிது வாடியிருப்பதைக் கண்டு மீண்டும் அவள் முகத்தை உற்றுப் பார்த்தான். ஸத்துகனைக் கண்டதும், கார் கண்ட மயில் போல் களித்துப் பெரு மகிழ்ச்சி கொண்டாள் பத்திரை. ஸத்துகனை வணங்கினாள்.

"பத்திரை, உன் முகம் ஏதோ வாடியிருக்கிறதே! எங்கே போயிருந்தாய்? தந்தை ஏதேனும் கடிந்து கொண்டாரா?"

"ஒன்றும் இல்லை......தாங்கள் இப்போதுதானே வந்தீர்கள்? ஏன்—இங்கே உட்காருங்கள்!" என்று கட்டிலுக்கு அருகில் சென்றாள்.

"இல்லை; நாழிகை ஆகிவிட்டது! உனக்கு ஞாபகம் இல்லையா? அதோ பார், வீதியை!" என்று சுட்டிக் காட்டினான்.

"அங்கே என்ன? எங்கே செல்கிறார்கள் இப்படிக் கூட்டம், கூட்டமாய்?" என்று வியப்புடன் புருவத்தை வளைத்துப் பார்த்தாள்.

"இன்னும் தெரியவில்லையா? இன்று காவிரிப் புதுப்புனல் விழா! காவிரிக்குத்தான் எல்லாரும் போகிறார்கள்; நீயும் வருகிறாயா, இல்லையா? விரைவில் போகவேண்டும்; புறப்படு."

ஸத்துகனுடன் போவதற்குப் பத்திரை ஆவல் கொண்டாள்; "இதோ வந்துவிட்டேன்" என்று மலர விழித்துவிட்டுத் தோட்டத்தின் புறம் ஓடினாள், வசந்தியைக் கூப்பிட்ட வண்ணம். ஸத்துகனும் மெள்ள அவளைப் பின் தொடர்ந்தான்; "வசந்தி, வசந்தி, நீ எங்கே இருக்கிறாய்?" என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடினாள் பத்திரை. தோட்டத்திற்குள் புகுந்ததும் துணுக்குற்று நின்றாள். 'சல சல' வென்று அந்தப் பவழமல்லிகை மரம் ஆடியது. மரத்தின்

கீழுள்ள மேடையில் மணம் நிறைந்த மல்லிகை மலர்கள் உதிர்ந்தன. 'கம்' மென்று எங்கும் வாசனை வீசியது. சற்று வியப்புடன், "என்ன வசந்தி, என்ன செய்கிறாய்?" என்றாள் பத்திரை. மரத்தின் பின் நின்றுகொண்டிருந்த வசந்தி புன்னகையுடன், வெளிப் பட்டு, "பூக்களை உதிர்க்கிறேன்" என்றாள்.

"எதற்கு" என்று கூறிக்கொண்டே மெள்ள அவளருகில் சென்றாள் பத்திரை.

"என் தெய்வம் இங்கே குடிகொண்டிருக்கிறதே, அதற்குத்தான்" என்று பாலகபிக்ஷுவின் சமாதியைச் சுட்டிக் காட்டினாள் வசந்தி.

அப்போதுதான், பத்திரைக்கு வசந்தியின் எண்ணமும் செய்கையும் புலப்பட்டன. மறுமொழி கூற முடியாமல் பேச்சவிந்து நின்றாள் சிறிது நாழிகை அவள். அதற்குள்ளாக ஸத்துகனும் அங்கே வந்து சேர்ந்தான். வசந்தி அவனைக் கண்டதும் இருதயத் துடிப்புடன் சிறிது தலைகுனிந்தாள். மரத்தின் கீழ் உதிர்ந்து கிடந்த மலர்களை அவன் கண்டான். அவள் பத்திரையிடம் கூறியதையும் நினைத்துப் பார்த்தான். 'நன்றி கெட்ட ஸத்துகா, உன் உதவிகளைப் பெற முடியாமல், என்னைக் கொன்றாயே! உனக்கு இனி வரப் போகும் துன்பங்களை யார் அகற்றப் போகிறார்கள்?' என்று பாலகன் அறைகூவி அழைப்பதுபோல் ஸத்து கன் காதுகளில் ஒலித்தன. ஸத்துகன் அங்கே நிற்க முடியாமல், "நாழிகை ஆயிற்று. பத்திரை, வசந்தி யையும் அழைத்துக்கொண்டு, வா; நான் மாடத்தின் முன்புறம் நிற்கிறேன்" என்று கூறிவிட்டு விரைந்து திரும்பிச் சென்றான்.

வசந்தி, பத்திரையை அணைத்துக்கொண்டு, "ஏன் பிரமை பிடித்து நிற்கிறாய்? அவர் எங்கே அழைக் கிறார்? வா போகலாம்" என்றாள்.

"காவிரிப் புதுப்புனல் விழா இன்றைக்கு; போவோமா?" என்று அன்பு கனியக் கேட்டாள் பத்திரை.

"பத்திரை, உனக்கு எது விருப்பமோ, அது எனக்கும் விருப்பம் என்று நான் சொல்ல வேண்டுமா? நான் உனக்கு உயிர்த் தோழியல்லவா? ஏன், இப்படி நயந்து பேசுகிறாய்?" என்று சொல்லிக்கொண்டே நடந்தாள் வசந்தி.

அறிவு மிக்க பத்திரைக்கு, வசந்தியின் மனப் போக்கும், தந்திரமும் எளிதில் விளங்கின. இருவரும் உள்ளே சென்று அலங்கரித்துக்கொண்டு புறப் பட்டனர்.

"நீங்கள், சிவிகையில் வாருங்கள்; நான் குதிரையில் ஊர்ந்து உடன் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக், குதிரை மீது ஏறிக்கொண்டான் ஸத்துகன்.

சிவிகை புறப்பட்டது. அதைப் பின் தொடர்ந்து சென்றான் ஸத்துகன். மூவரும் காவிரிச் சங்கமுகத் துறைக்குச் சென்றனர். ஆடவர் மகளிர், சிறுவர்கள், சிறுமிகள், முதியவர்கள் யாவரும் அங்கே திரிந்த வண்ணம் காவிரியின் புது நீர்ப் பெருக்கைக் கண்டு களித்திருந்தனர். ஆங்காங்கே, விளையாட்டு, விநோ தங்கள் - பற்பல காட்சிகள் - ஆகியவற்றைக் கண் டனர். காவிரியில் நீந்துபவர்கள், நாவாயில் ஊர்ந்து விளையாடுபவர்கள், மூழ்கி விளையாடுபவர்கள், பூக்கள் சூடி ஆடுபவர்கள், தெப்பம் கட்டித் தழுவி விளையாடு பவர்கள் ஆகிய பலருடைய காட்சிகளைக் கண்ட வண்ணம் மூவரும் திரிந்தனர். அரசன், தன் பரிவாரத் துடன் வந்து அந்தக் காட்சிகளைக் கண்டு நீரணி மாடத்தில் வீற்றிருந்தான்.

பலநிறப் பூக்கள் சூடி, மணி முத்துமாலைகளை அணிந்து, வாசனைப் பொடிகள் பூசி, வண்டொலி

செய்யும் கருமணற் கூந்தலுடன் பொன் மணலை வாரித்தெளித்து, செந்நிறக்கோலங் கொண்டு, புதுமை இன்பம் பொங்கி விளையாட, கடலுடன் கலந்தாள் காவிரி நங்கை. வருஷந்தோறும் காவிரிப் புதுநீர்ப் பெருக்கன்று விழாக் கொண்டாடினர் அந்த நகரத்து மாந்தர். கரை கொள்ளாக் காட்சியுடன் பெருகி வரும் காவிரியாற்றின் தோற்றத்தில் மனம் ஒன்றி மெய்ம் மறந்திருந்தனர் யாவரும். ஒருவருக் கொருவர் நெருக்கித் தள்ளிக்கொண்டு ஆங்காங்கே பல்வகைக் காட்சிகளைக் கண்டனர். இந்த நெருக் கத்தில், பத்திரை, வசந்தி, ஸத்துகன் மூவரும் ஒரு புறம் ஒதுங்கி நின்று காட்சிகளைப் பார்த்தனர்.

இவர்கள் மூவரையும், நீரணி மாடத்தில் அரசனுடன் இருந்த இளந்தத்தன் உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தான். அவன் கவனிப்பதை ஸத்துகனும் அறியாமலில்லை. எனினும் என்ன செய்வது, அந்தக் கூட்டத்தில்? இங்கிலையில் திடீரென்று, "அதோ பாருங்கள்!" என்று சுட்டிக்காட்டினுள் வசந்தி.

"அவன்தான்!" என்ருள் பதற்றத்துடன் பத்திரை. அவர்கள் சுட்டிக் காட்டிய திசையைச் சட்டென்று நோக்கினுன் ஸத்துகன். யாரைப் பழிதீர்க்க ஸத்துகன் எண்ணினுனே—அந்த இளைஞனைக் கண் டான். ஸத்துகன் மனத்தில் ஒரு வேகம் மூண்டது. கையிலிருந்த வாளை உருவிய வண்ணம், "நீங்கள் போங்கள்" என்று பத்திரையிடம் கூறிவிட்டுத் தன் குதிரைமீது தாவி உட்கார்ந்தான். ஸத்துகனைக் கண்டதும் அந்த இளைஞன் ஸுமங்கள பிக்ஷு— ஜயதுங்கன் என்ற பாண்டிய நாட்டு வீரன், தன் குதிரையைத் தட்டி இழுத்து, அருகில் இருந்த குறுங்காட்டின் வழியே விரையச் செலுத்தினுன். காற்றின் வேகமாகப் பறந்தது ஜயதுங்கன் குதிரை. ஸத்துகன் மிகுந்த சீற்றத்துடன், குதிரையை மனே

வேகத்துடன் செலுத்தி ஜயதுங்கனைப்பின் தொடர்ந்தான். அங்கிருந்தவர்கள் அதைக் கண்டு திகைத்துப் போனார்கள். "வேண்டாம், வேண்டாம்!" என்று பத்திரையும் வசந்தியும் மாறி மாறிக் கூவியது ஸத்துகன் காதில் விழவில்லை. ஸத்துகன் வடிவம் கண்களுக்குத் தெரியும்வரையில் பார்த்து நின்றனர் பத்திரையும் வசந்தியும். பின்னர் மிகுந்த கவலையுடன் மாளிகை திரும்பினார்கள்.

## 14

### யாருக்குத் தெரியும்?

ஸத்துகனைக் கண்டவுடன், துணுக்குற்றாள். அவனை விழுங்கிவிடுவாள் போல் ஆவலுடன் பார்த்தாள்; அவனைக் கண்ட, அந்த ஒரு கணத்தில் அவள் உடல் சிலிர்த்தது. அன்றைக்கு முதல் நாள் மாலையில் ஜயதுங்கனைத் துரத்திக்கொண்டு ஸத்துகன் ஓடியது அவள் கண்களிலும், மனத்திலும், அகலாமல் பதிந்திருந்தது. ஜயதுங்கனால் ஸத்துகனுக்குத் துன்பம் நேரிடுமோ என்று எண்ணி ஒவ்வொரு கணமும் பயந்து சோர்ந்திருந்தாள். ஸத்துகன் வரவை எதிர் பார்த்து இரவு முழுதும் விழித்துத் துடித்துக் கொண்டிருந்தவள், மறுநாள்—அன்றைத் தினம் விடியற்காலையில் ஸத்துகனைப் பார்த்தவுடன் துணுக்குற்று, வியப்பெய்தியது ஓர் ஆச்சரியமா? சூரியனைக்கண்டு அலர்ந்த செந்தாமரை மலர் என அவள் முகம் பொலிவுற்றது.

'இரவில், ஜயதுங்கனுக்கும் ஸத்துகனுக்கும் என்ன நேர்ந்தது? ஜயதுங்கன் பிடிபட்டானா? இரவில், ஸத்துகன் தன் மாளிகைக்கு வராத காரணம் என்ன?' என்றயோசனையுடன், ஸத்துகனைக் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்க ஆவலுடன் நின்றாள்.

இரவு முழுவதும் தூங்காததால், வாடியிருந்த அவள் முகம் ஸத்துகனின் கம்பீரமான பொன்னன்ன மேனியிலிருந்து எழுந்த ஒளியால், சிறிது வியர்த்துப் புதிய பொலிவு பெற்றது. ஸத்துகனுக்கு ஏதேனும் இடையூறு நேர்ந்ததோ என்ற அச்சத்தால் - கவலையால் – கருவண்டுகள்போல் சுழலும், கரியவிழிகளால், அவன் மேனியைப் பன்முறை உற்று நோக்கினுள். அவள் பேசா மடந்தையாக நின்ருலும், அவள் விழிகள் ஏதோ ரகசியம் கூறுவனபோல் துறுதுறுவென அலைந்து மருண்டு நோக்கின. சிறிது நாழிகை சென்றபின்னரே, 'ஸத்துகருக்குத் துன்பம் ஒன்றுமில்லை' என்று அவள் மனம் ஆறுதலுற்றது.

பத்திரையின் தன்மையைக் கண்ட ஸத்துகன், வியப்பும், கனிவும் கொண்ட பார்வையுடன் கட்டிலில் அமர்ந்தான். அவள் வாய் திறவாமல் செய்த உபசரணைகளைக் கண்டு, அவன் உள்ளம் குளிர்ந்தான். அவன் மனத்தில் இருந்த கவலை, வருத்தம் யாவும் அப்போதே மறைந் தொழிந்தன.

"நேற்றிரவு, என்ன ஆயிற்று?" என்று மெள்ளக் கேட்டாள் பத்திரை.

"என்ன ஆவது? இந்த வாளுக்குக் கிடைக்க இருந்த விருந்து தப்பியது" என்று கூறிப் பெருமூச்சு விட்டான். அந்தப் பெருமூச்சில், அவன் உள்ளத்தில் எழுந்து பொங்கும் கோபக்கனல் பறந்து சிதறியது.

"என்ன? அவன் தப்பிவிட்டானு?—ஆனல் அதுவும் நல்ல காலத்திற்கே!"

"என்ன, நல்ல காலமா? முத்து வியாபாரியாக வந்து மோசம் செய்தவனும், பௌத்த பிக்ஷு ஸங்கங்களனுக நடித்து ஸத்துக மந்திரத்தின் உண்மைகளை உணர்ந்து கோள் கூறியவனும், காளனுக்குத் தீங்கிழைக்க முயல்பவனும் ஆகிய அந்தப் பாண்டிய நாட்டுப் பாதகனைக் கொல்லாமல் விடுவது நல்ல

காலத்திற்கு அறிகுறியாகுமா? அவ்விதம் அவனைத் தப்பவிட்டால், அவனுக்கு நல்ல காலம் என்பதோ! அவனால் 'சர்வமும் நாசமாகும். இவர் மீதுள்ள காதலால், நீ அவ்வாறு சொல்லிவிட்டாய்! அந்தப் பாதகனைப் பழிதீர்க்கவில்லையானால்...'' என்று பரிந்து பேசினாள் வசந்தி.

"ஆம்; நீ சொல்வது முற்றும் உண்மை! பத்திரைக்கு எப்போதும் பயமாகவே இருக்கிறது; அதனால் அவ்விதம் பேசுகிறாள்'' என்றான் ஸத்துகன்.

"அவ்விதமானால், இனி அவனை எப்படிப் பிடிப்பீர்கள்?'' என்று அச்சத்துடன் கேட்டாள் பத்திரை.

"பத்திரை, முன் இருட்டாதலால் அவன் நேற்றுத் தப்பிவிட்டான்! அவன் ஒரு மாளிகையில் புகுந்துவிட்டான். இனி அவனைத் தப்பவிடேன்; விரைவில் இந்த வாளுக்கே அவனை விருந்தாட்டுகிறேன்'' என்று இடியொலியென நகைத்து வாளை உறையிலிருந்து கழற்றிச் சுழற்றினான் அவன். அதைக் கண்டு வசந்தியும் பத்திரையும் துணுக்குற்றார்கள்.

"இதென்ன? வாளில் ரத்தக் கறை?'' என்று இருவரும் நடுங்கிக் கேட்டனர். வாளில் உறைந்திருந்த ரத்தக் கறையைக் கண்டதும் ஸத்துகனுக்குக் கூட முதலில் வியப்பு உண்டாயிற்று. எனினும் அதன் காரணம் சட்டென்று அவனுக்கு விளங்கியது.

உடனே கண்கள் சுழல விழித்து, "ஆம்; இப்போதுதான் அதன் ஞாபகம் வருகிறது. அதைச் சொல்வதற்கு முன்பு மறந்துவிட்டேன். நேற்று மாலையில் அவனைத் துரத்திச் சென்றபோது அவன் மிகவும் விரைந்து பீடிகைத் தெருவுக்குள் புகுந்துவிட்டான். நானும் பின் தொடர்ந்தேன். முன்னிருட்டாதலால் பிடிக்க முடியவில்லை. அவன் சட்டென்று ஒரு மாளிகைக்குள் புகுந்துவிட்டான். நான்

குதிரையை ஒரு மறைவில் நிறுத்திவிட்டு மெள்ள மாளிகைக்குள் புகுந்து மறைந்திருந்தேன். அந்த மாளிகையின் முன்புள்ள அறையில் ஒரு சாளரத்தின் புறமாக எட்டிப் பார்த்த வண்ணம் நின்றான் அவன். விளக்கின் ஒளியால் அவன் முகம் மட்டும் நன்றாகத் தெரிந்தது. அப்போது வெளியிலிருந்து ஒரு யுவதி விரைவாக வந்து அந்த அறைக்குள், புகுந்தாள். அவளும் அவனும் ஏதோ ரகசியமாகப் பேசினார்கள்; அந்தப் பெண் என்றால் அடிக்கடி, பார்க்கப்பட்ட பெண்போல் தோன்றினாள். நான் முன்பின் ஆலோசியாமல், காலதாமதம் செய்யக்கூடாது என்று எண்ணி, அந்தச் சாளரத்தின் மூகப்புக்குச் சென்று வாளைச் சுழற்றி ஐயதுங்கன் மீது வீசினேன். பாவம்! குறி தப்பி அந்த வாள், யுவதியின் கைமீது விழுந்தது. 'ஆ' என்று அலறி அவள் அவன்மீது சாய்ந்தாள். நான் நடுங்கி, ஒரு கணம், அவளை உற்றுப் பார்த்தேன். மறுகணம் அவ்விடத்தை விட்டு நீங்கி, குதிரை மீது ஏறித் திரும்பிவிட்டேன் மாளிகைக்கு" என்று சொல்லுகையில், "அவளைக் கொன்றுவிட்டீர்களா?" என்றாள் கனிவுடன் பத்திரை.

"இல்லை; உயிருக்கு ஒன்றும் இல்லை. கையில் சிறிய வெட்டுப்பட்டிருக்கும்; ஆனால், எனக்கு அவள் மீது சந்தேகம்!..."

"என்ன?" என்றாள் வசந்தி.

"அந்தப் பெண்ணின் சாயலிலிருந்தும், குரலிலிருந்தும், பௌத்த சங்கத்திலிருக்கும் ஒரு பெண்ணின் ஞாபகம் வருகிறது! அதில் சந்தேகம் வேறொன்றுமில்லை. ஐயதுங்கனுக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்? அவள் பிக்ஷுணிக் கோலத்துடனேயே தோன்றினாள்! அவள் அவன் மனைவியாய் இருக்க முடியாது! அவள்......இருக்கட்டும்; இன்று தெரிந்து கொள்கிறேன்."

"எப்போதும் உங்களுக்குச் சந்தேகந்தான். இவ் விதம் சந்தேகப்படுவதால் பெரிய பெரிய துன்பங் களே உண்டாகின்றன!" என்றாள் பத்திரை. வசந்தி அதைக்கேட்டுச் சிறிதே புன்னகை செய்தாள்.

"பத்திரை, எப்போதும் அப்படி நடக்குமா? பாலகனும் இளந்தத்தனும் வடிவத்தில் ஒன்றாய் இருந் ததால், சந்தேகம் கொண்டு அவனைக் கொன் றேன்! அது ஊழ்வினை! அதைத்தானே சொல் கிறாய்? இனி அதுபோல் ஒன்றும் நிகழாது!" என்றான் குறுநகையுடன். வசந்தியும் பத்திரையும் அதற்கு மறுமொழி கூறவில்லை. ஸத்துகனின் செய் கையும் பேச்சும், பத்திரைக்கும் வசந்திக்கும் பெரிதும் அச்சத்தை அளித்தன. ஸத்துகன் சிறிது குதூகல மாகப் பேசியிருந்துவிட்டு,

"பத்திரை, என் சந்தேகம் வீணாகாது. இதை இன்று தெரிந்து கொள்ளலாம். நீங்கள் சிவிகையில் சங்கத்திற்கு வந்துவிடுங்கள். நான் முன்பு போகி றேன்" என்று சொல்லிப் புறப்பட்டான். "நன்றாக அறிந்து முடிவு செய்யவேண்டும்" என்று பத்திரை கூறினாள். ஸத்துகன் அதைக் கேட்டும் கேட்காதது மாக விரைந்து சென்றான்.

ஸத்துகன் சொல்லியதில் நம்பிக்கை கொண்ட வர்களாய், சிறிது நாழிகை கழித்து, சிவிகையில் புறப்பட்டு ஸத்துக மந்திரம் சென்றனர் பத்திரையும் வசந்தியும்.

ஸத்துக மந்திர—பௌத்த சங்கத்தினர் யாவரும், அமைதி குலைந்து மனம் கலங்கி யிருந்தனர் பல காரணங்களால்—பல நாட்களாகவே அவ்வித நிலைமை ஏற்பட்டிருந்தது. அன்றைத் தினம் மேலும் அதிகக் கலக்கத்துடன் இருந்தனர். ஸத்துகன் தன் உள் ளத்தில் எழுந்த சந்தேகத்தைப்பற்றி, புத்தமித்திர

அடிகளிடமும் அமிர்த சந்திர பிக்ஷு முதலியவர்களிடமும் ஆலோசனை செய்தான்.

நீண்ட நேரம் அவர்கள் ஆலோசனை செய்த பின்னர், தக்க சமயம் என்று எண்ணி, "ஸத்துகரே இன்னும் பாலகன் வரவில்லையா? அவன் இருந்தால் இதுபோன்ற காரியங்கள் நடக்குமா? நடந்தாலும் எளிதில் அவன் அறிந்து தக்கவாறு செய்வானே!" என்று கேட்டான் அமிர்தசந்திரன். அமிர்தசந்திரன் பாலகனைப் பற்றி அவனைக் கேட்டது அன்று மட்டுமல்ல, பன்முறைகள் கேட்டுவிட்டான். ஆனால் உண்மையை மறைத்துத் தக்க சமாதானம் சொல்லி வந்தான் ஸத்துகன்

அன்று அவன் கேட்டதற்கும் முன்பு போலவே சமாதானம் சொன்னான் அவன். ஆனால் அவன் உள்ளம் மிகவும் வருந்தியது. 'எவ்வளவு முறை போலிக் காரணங்களைச் சொல்வது? ஒரு கால், நான் பாலகனைக் கொன்ற விஷயம் இவனுக்குத் தெரியுமா?—இல்லை! அந்த விஷயம் எனக்கும் வசந்தி, பத்திரை - இவர்களுக்கும் மட்டுமே தெரியும்; அவர்கள் யாரிடமும் சொல்லியிருக்க மாட்டார்கள்' என்று யோசனை செய்தான். உடனே, அமிர்த சந்திரனைப் பார்த்து, "இன்னும் கப்பல் வரவில்லையே? வந்தால் அவனைக் கொண்டு பல காரியங்களை முடித்துக் கொள்ளலாம்!" என்றான் ஸத்துகன்.

பாலகன் கொலை செய்யப்பட்ட மறுநாளே பௌத்த சங்கத்தினர் யாவரும், பாலகனைக் காணமல் ஸத்துகனைக் கேட்டனர். ஸத்துகன் உண்மையை மறைத்து, பண்டங்களுடன் மரக்கலம் ஏறி வாணிகம் செய்வதற்கு அயல்நாடு போயிருக்கிறான் என்று பொய் கூறினான். அவ்விதமே, வசந்தியும் பத்திரையும் ஸத்துகனின் நன்மைக்காகப் பொய் கூறி வந்தனர். அவ்விதம் மனத்தை வஞ்சித்துப் பொய் கூறுவது அந்த மூவர் மனத்தையும் வருத்திக்கொண்டிருந்தது.

பத்திரையின் மனம் பெரிதும் வருந்தியது. ஆயினும் என்ன செய்வது? ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஸத்துகனுக்குப் பாலகனைப் பற்றிய நினைவு வராமல் இராது. அன்றைத்தினம் புத்த மித்திரருடன் பேசுகையில், பாலகனைப்பற்றிய பேச்சு வரவே சிறிது தயங்கிப் பின்பே மறுமொழி அளித்தான். பௌத்த சங்கத்தினர் யாவருக்கும், பாலகன் கொலையுண்டது தெரியாது. பாலகன் நினைவு வந்ததும், ஸத்து கனுக்குச் சிறிது மனக்கலக்கம் ஏற்பட்டாலும் ஒருவாறு அடக்கிக்கொண்டு மேமேலே செய்ய வேண்டியதைப்பற்றி ஆலோசித்தான்.

ஸத்துகன் ஆலோசனைப்படி பௌத்த சங்கத்தி லுள்ள, பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் யாவரையும் ஆலோசனை மண்டபத்திற்கு வரவழைத்து விசாரிப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அவ்வாறே, ஐந்நூறு பிக்ஷுக்களும், இருநூற்றுக்கு மேற்பட்ட பிக்ஷுணிகளும், உபாஸகர், உபாஸினி களும் ஆலோசனை மண்டபத்தில் வந்து கூடினர். அப்போது வசந்தியும் பத்திரையும் அங்கே வந்து சேர்ந்தனர்.

ஸத்துகனுக்குப் பிக்ஷுக்கள் மீது சந்தேகம் இல்லை. எனினும் அவர்களுக்கு முன்பாகத் தன் சந்தேகத்தை அகற்றிக் கொள்ளவேண்டும் என்றே அவ்வாறு செய்தான். பிக்ஷுணிகளில், ஒருத்திமீதே அவனுக்குச் சந்தேகம் இருந்தது. எனவே ஸத்துகன், அமிர்த சந்திர பிக்ஷுவுடனும் புத்த மித்திரருடனும் பிக்ஷுணிகள் பக்கமாக உலாவினான். ஒவ்வொரு பிக்ஷுணியையும், பார்ப்பதும் பேசுவதும் சிறிது நின்று ஆலோசிப்பதுமாக மெள்ள நடந்துகொண்டே சென்றான் ஸத்துகன். அவன் மனத்தில் பதிந்திருந்த சாயலும், அவன் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்த குரலும் அகலாதபடியால் மேலும் அவற்றை நினைவுறுத்திக் கொண்டவனாய்ச் சென்றான் அவன்.

அவ்விதம் சென்றவன் சட்டென்று ஒரு பிக்ஷுணியைக் கண்டவுடன் திடுக்கிட்டு நின்றான். அவன் மனத்தில் உண்டாயிருந்த சந்தேகம் வலிவுற்றது. சற்று அமைதியுடனும் ஆலோசனையுடனும் நின்றான் அவன். ஸத்துகனைக் கண்டதும் மருண்டு மருண்டு நோக்கினாள் அந்தப் பிக்ஷுணி. அவள் உடல் நடுங்கியது. ஸத்துகன் தன்மீது சந்தேகம் கொண்டான் என்பதை அவள் உணர்ந்துகொண்டாள். தான், மேலே போர்த்திருந்த போர்வையை நன்றாக உடல் மறையப் போர்த்திக் கொண்டாள் அவள். ஸத்துகன் பார்வை அந்தப் பிக்ஷுணியின் வலது கையில் பதிந்தது. "மானஸி, நீ பெண்ணாயிருந்தாலும் க்ஷத்திரிய குலத்தில் உதித்த வீரன்போல் விளங்குகிறாய்! ஏன் மருள்கிறாய்? அதோ, உன் வலது கையில், நேற்று என் கை வாளால் ஏற்பட்ட வெட்டுக் காயத்தைக் காட்டு! ஏன் மறைத்துக் கொள்கிறாய்?" என்று ஸத்துகன் கூறிய குரலில் கோபத்தின் குறிப்புத் தோன்றியது. மானஸி என்ற அந்தப் பௌத்த பிக்ஷுணிக்கு உண்மை விளங்கியது. இனிமேல் மறைப்பதில் பயனில்லை என்று உணர்ந்து தைரியத்துடன், "ஆம், வெட்டுக் காயந்தான். ஸத்துகரே, ஏன் சந்தேகம்? நான் அரசகுலத்தில் உதித்த பெண் என்பதைத் தெரிந்து கொள்ளும். மறைந்து நின்று வாள்கொண்டு வீசும், தங்கள் போன்ற வீரர்களுக்கு நான் தாழ்ந்தவள் அல்ல!" என்றாள் சினத்துடன். உடன் இருந்த யாவரும் ஒன்றும் விளங்காமல் அதிசயித்தனர். பத்திரைக்கும் வசந்திக்கும் ஒருவாறு உண்மை புலப்பட்டது.

"மானஸி, உண்மையைச் சொல்; ஸுமங்கள பிக்ஷுவாக நடித்த ஜயதுங்கனின் மாளிகையில், அவனுடன் களித்திருந்த உன்னை என் கைவாள் கொண்டு தண்டித்தேன் என்பதை இப்போதாவது உணர்ந்துகொள்" என்று கூறிப் பல்லை 'நெற நெற'வெனக் கடித்தான் ஸத்துகன்.

"ஸத்துகரே, தாங்கள் யாரைத் தண்டிக்க அங்கு வந்தீர்கள் என்பது எனக்குத் தெரியும். தங்கள் கை வாள் என்மீது பட்டது என்பதை, நான் ஒப்புக் கொள்கிறேன். நான் பொய் ஒன்றும் கூறவில்லை. கேளுங்கள் என் வரலாற்றை: நானும், ஜயதுங்கரும், பாண்டியநாட்டில், மதுரையில் வாழ்ந்தோம். நான் அரசகுலத்தில் உதித்தவள்தான். நாங்கள் இருவரும் இளமை தொடங்கிக் காதலராய் இருந்தோம். உண மைக்கும் நடு நிலைமைக்கும் புகழ்பெற்ற பாண்டிய நாட்டில் நாங்கள் இருவரும் நன்னெறியிலிருந்து வழுவவில்லை எனினும் பௌத்த சமயத்திலே மிகுந்த ஆவலுடன் நாங்கள் இருவரும் சேர்ந்து கொண் டோம். அந்நகரில் பௌத்த மதத்தினர் குறைவாகவும், சைவ மதத்தினர் மிகுதியாகவும் இருந்தனர்; ஜைன மதத்தினரும் இருந்தனர் சைவ மதத்தினருக்கும் பௌத்த ஜைன மதத்தினருக்கும் பகை உண்டா யிற்று. சைவ மதத்தைச் சார்ந்த பாண்டிய மன்னன் பௌத்தர்களையும் ஜைனர்களையும் துன்புறுத்தினன். பௌத்தர்களையும் ஜைனர்களையும் கழுவில் ஏற்றியும், சிறையில் அடைத்தும் நாடு கடத்தியும் துன்புறுத்தினன் பாண்டிய மன்னன். ஆகவே முதலில் நான் நாடு கடத்தப் பட்டேன். பாண்டிய நாட்டை விட்டு என்னைத் தனியே துரத்தவே, நான், இந்நகரை அடைந்து இந்தச் சங்கத்தில் சென்ற வருஷம் புகலடைந்தேன்: என் கொள்கைகளுக்கு ஏற்ற சங்கம் என்று எண்ணி னேன். ஆனல் இங்கே நிகழும் சம்பவங்கள் என் மனத்தைப் புண்படுத்திக் கொண்டே இருந்தன. இந்நிலையில், ஜயதுங்கரும் நாடு கடத்தப்பட்டு, இந் நகர் வந்து சேர்ந்து, நான் இங்கிருப்பதை முதலில் அறியாமல், பௌத்த மஹா சங்கத்தில் சேர்ந்து கொண்டார்; அல்லாமல், சோழவேந்தனின் அந்த ரங்க ஒற்றுளாகவும் நியமிக்கப்பட்டார்.

"ஒரு நாள் நான் பீடிகைத் தெருவில் பிக்ஷைக்குப் புகுந்தபோது என் காதலர் ஜயதுங்கரைக் கண்டேன். இருவரும் சந்தித்துப் பேசினோம். மீண்டும் எங்கள் காதல் தளிர்த்தது. என்னிடம் உள்ள காதலால் அவர் இந்தப் பௌத்த சங்கத்தில், ஸோமங்களன் என்ற பெயருடன் சேர்ந்துகொண்டார். அரசன் காரியமாக, இந்தச் சங்கத்தில் நிகழும் கொடிய செயல்களையும், அவ்வப்போது நடக்கும் சம்பவங்களையும் அவர் உணர்ந்துகொண்டார். பின்னர் உயிருக்கு இறுதி நேரும் என்று தோன்றியதும் இவ்விடம் விட்டு அகன்றார். அவர் நன்மையைக் கருதி நான் ஒன்றையும் ஒருவரிடமும் கூறவில்லை. அன்று முதல், நான் அவர் மாளிகைக்குச் சென்று வரலானேன். இந்த நிலையில் என்றும்போல் நேற்று அவர் மாளிகைக்கு நான் போயிருந்தேன். அப்போது தங்களால் இந்த வெட்டுக்காயம் ஏற்பட்டது. தாங்கள் அவரைத் துரத்தி வந்ததாகவும், அவரை வெட்ட எண்ணிய தாங்கள் தவறி என்னை வெட்டிவிட்டதாகவும் ஜயதுங்கர் பின்பு சொன்னார். இதுவே நடந்த உண்மை!" என்று தைரியத்துடன் கூறி நின்றாள் மானஸி.

மானஸி என்ற அந்தப் பிக்ஷுணியின் வார்த்தைகளைக் கேட்டு யாவரும் திடுக்கிட்டனர். பத்திரையும் வசந்தியும் ஆச்சரியமும் நடுக்கமும் கொண்டனர்.

"இந்தச் சங்கத்தில் நடப்பனவற்றை அவ்வப்போது அவனுக்குக் கூறுகிறாய் அல்லவா?" என்று சீற்றத்துடன் கேட்டான் ஸத்துகன்.

"இல்லை! இல்லை! என் வாய்கொண்டு இது வரையில் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவருக்குத் தெரியும்! அதில் சந்தேகம் என்ன?" என்றாள் விறுவிறுப்புடன் மானஸி.

"அமிர்தசந்திரா, இந்தத் துஷ்டையை இருட்டறையில் அடைக்கச் செய். என் உத்தரவின்றி

இவளை வெளியில் விடவேண்டாம்" என்று பணித்து விட்டு விரைந்து அப்புறம் சென்றான். உடனே அவள் இருட்டறைக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். ஸத்துகன் குறிப்புப்படி யாவரும் தத்தம் இடங்களை அடைந்தனர். புத்தமித்திர அடிகளும், அமிர்த சந்திர பிக்ஷுவும் ஸத்துகனிடம் ரகசியமாகச் சில வார்த்தைகள் கூறிவிட்டு அப்புறம் சென்றனர். ஸத்துகன் தீவிர ஆலோசனையுடன், ஓர் அறையில் அமர்ந்தான். அப்போது பத்திரையும் வசந்தியும் அவனருகில் வந்து நின்றனர்.

"பத்திரை, வசந்தி, பார்த்தீர்களா? நான் சொல்லியதை நீங்கள் நம்பவில்லையே? என் சந்தேகம் வீணாகவில்லை என்பது இப்போது தெளிவாயிற்று?" என்றான்.

"இது யாருக்குத் தெரியும்? ஆச்சரியமாக இருக்கிறதே? இனிமேல் என்ன செய்வது?" என்றாள் பத்திரை.

"அவள் செய்கை மாயமாயிருக்கிறதே!" என்றாள் வசந்தி.

"யோசிப்போம்" என்று கூறி விட்டுப் பத்திரையையும் வசந்தியையும் அழைத்துக்கொண்டு தன் மாளிகைக்குச் சென்றான் ஸத்துகன்.

## 15

## போக வேண்டாம்

அவளைப்பற்றிய நினைவே அவனுக்கு இல்லை என்பது உண்மைதான். ஆனால், அவளுக்கு அவனைப் பற்றிய நினைவு இல்லாமல் போகுமா? அவனை மறந்து அவளால் இருக்க முடியுமா? - முடியாது என்பதும் உண்மையே.

பத்திரையிடம் கொண்ட புது மோகத்தாலும், ஸத்துக மந்திரத்தைப்புற்றிய கவலையாலும் அவன் சயந்தியை மறந்துவிட்டான். ஆனால் அவனையும் அறியாமல் அவள், அவன் உள்ளத்தில் ஒருபுறம் மறைந்து நிலைபெற்றிருந்தாள்.

அவன் மறந்துவிட்ட பின்பும் அவள் மனம் மாற வில்லை. அவனைப் பிரிந்து இப்போது பல நாட்கள் ஆகிவிட்டன. ஆனால் அவள் முன்னிலும் மிகுதி யாகவே ஸத்துகனிடம் பிரேமை கொண்டிருந்தாள். அவளுடைய காதல் வளர்ந்ததேயன்றி சிறிதும் தேய்வுறவில்லை. அவனுடைய பிரிவில்தான் அவள் காதல் வளர்ந்தோங்கியது. அவனை ஒவ்வொரு கணமும் நினைத்து மனம் பொருமலானாள். அவனுடைய பிரிவை அவளால் பொறுக்க முடியவில்லை. எவ்விதத் திலும் அவளுக்கு ஆறுதல் கிடைக்கவில்லை. அவளுடைய சேடி நாகவல்லி எவ்வளவு சொல்லியும், சயந்தியின் மனம் ஆறுதல் பெறுமல் ஏங்கித் தவித்தது. ஸத்துகனை அவள் பார்க்க முடியவில்லை என்றாலும், அவனைப்பற்றிய செய்திகளை ஒவ்வொரு நாளும் நாகவல்லி மூலம் அறிந்து கொண்டிருந்தாள்; அவள் நிலை பெரிதும் இரங்கத் தக்கதாக இருந்தது.

'அவரைப் பற்றி இன்று ஏதேனும் செய்தி உண்டா என்று அறிந்து வா' என்பாள் சேடி. கணிகையர் வீதியில் சில இடங்களுக்குப் பொழுது போக்காகச் சென்றுவிட்டு, ஆங்காங்கே ஸத்துகனைப் பற்றியும், ஸத்துக மந்திரத்தைப் பற்றியும் பரவும் செய்திகளை அறிந்து வந்து சொல்வாள்.

என்றும்போல் அன்று நாகவல்லி சில புதுச் செய்திகளை அறிந்து வந்தாள்.

"இன்று என்ன என்ன செய்திகள் சொல்லப் போகிருயோ என்று பயமாயிருக்கிறது..." என்று நாகவல்லியைப் பார்த்தாள், மனம் நொந்தவளாய்.

"நான் என்ன சொல்வேன்? எங்கும் அவரைப் பற்றிய பேச்சாகவே இருக்கிறது."

"என்ன பேசிக் கொள்கிறார்கள்?"

"அவரிடம், சோழவேந்தர் சந்தேகமும் கோபமும் கொண்டிருக்கிறாராம். ஸத்துக சங்கத்தில் சொல்ல முடியாத அநீதங்கள் நடக்கின்றனவாம். ஸத்துக சங்கத்துத் தலைவனை காளனைச் சிறை செய்யும்படி அரசர் கட்டளையிட்டிருக்கிறாராம்; அவருக்குப் பெருங் கேடு உண்டாகும் போல் தோன்றுகிறது..."

"ஐயோ!......இவ்விதக் கொடுஞ் சொற்களே, என் உயிரை நாள்தோறும் தேய்த்து வருகின்றன! நான் என்ன செய்வேன்? ஒரு முறை அவரை நான் காண நேர்ந்தால் பெரும் பாக்கியம் செய்தவளாவேன்! அவருடைய காட்சிக்காகவே நான் என் உயிரை இழக்காமல் இருக்கிறேன்; அவருடைய காட்சி கிட்டும் வரையில் அவர் தந்த இன்பக்கனியாகிய இம் மைந்தன் என் உயிரைக் காப்பாற்றுகிறான் என்றே நினைக்கிறேன்; இன்பக்கனிப் புதல்வனை நான் பெறாதிருந்தால் என்றோ என் உயிர் இவ்வுடலை விட்டு, அவருடன் ஒன்றாகியிருக்கும்......அவரை ஒரு முறை, காண்பதற்கும் மைந்தனைக் காப்பாற்று வதற்குமே நான் உயிர் வாழ்கிறேன்,........ நாகவல்லி,...உன் எண்ணம் என்று நிறைவேறுமோ அறியேன்!...அவரைப்பற்றிய செய்திகளைக் கேட்டு என் மனம் பதறுகின்றதே! அவரை எப்போது காண்பேன்? எப்படிக் காண்பேன்? அவர் இருக்கு மிடம் சென்று பார்க்கலாம் என்றால், என் விரதம்...என்னாவது!"......என்று சொல்லி உள்ளம் நொந்தாள்.

இவ்விதம் நொந்த உள்ளத்தோடு மாலைக் காலத்தில், மங்கிய ஒளி பரவிய வானப் பரப்பை சாளரத்தின் வழியே நோக்கியவளாய் அன்றைக்கு

மேல் மாடத்தில் அமர்ந்திருந்தாள் அவள். மேகக் கூட்டங்கள் ஒன்றோடொன்று கூடிப் பலவித வடிவங் களைச் சித்திரிப்பதும் மறைப்பதுமாக இயங்குவதைக் கண்டாள். நீல நிற வானத்தின்மேலிருந்த வெண் ணிற மேகம், புத்த பகவானுடைய சுத்தசுகாஸன நிலையிலுள்ள வடிவத்தைச் சித்திரித்து அவள் கண் களுக்கு ஒளியைக் கொடுத்து மறைந்தது. மேகத்தி னிடைத் தோன்றிய புத்ததேவனின் மோகனக் காட்சி அவள் மனத்திற்கு இன்பத்தை அளித்தது; அது ஒரு நற்சகுனமாகவும் தோன்றியது, அவளுடைய சோகம் நிறைந்த உள்ளத்திற்கு. அதே கணத்தில் வீதியில், யாரோ பாடிவரும் இன்னிசையைக் கேட்டு, மாடத்தின் வெளிப்புறம் போய் வீதியை உற்று நோக்கினாள் சயந்தி.

ஓர் இளமங்கை பாடி வருவதைக் கண்டாள். அந்திக் காலத்தின் ஒளியில் அவள் வடிவம் பொலி வுடன் தோன்றியது; அந்த மங்கையின் அலங் காரமே விசித்திரமாக இருந்தது. ஒரு புறமாகக் கொண்டை போட்டிருந்த கூந்தலில் முல்லை மலர்களைச் செருகியிருந்தாள். நெற்றியில் பாதி மறையச் சுட்டி என்னும் ஆபரணம், மைதீட்டிய கரிய விழிகள், திரண்டு உருண்ட முத்துமாலைகள் மார்பில், முழங்கை வரையில் பலநிற வளையல்கள், கைவிரல்தோறும் பலவகை மோதிரங்கள், காதுகளில் முத்துக்களின் தொகுதி, இடையில் கலகலவென்று ஒலிக்கும் மேகலாபரணம், கால் விரல்களில் ஒளி துள்ளும் வெள்ளி உருட்டுகள், பாதத்தின் மேற்புறம் தவழும் சிலம்புகள், கிணிகிணிகள், மேனியில் கருநிற ஆடை, கையில் முறம், தலையில் கூடை, மற்றொரு கையில் ஒரு சிறிய பிரம்பு—இந்த விசித்திரக் கோலத் துடன் அந்தக் குறி சொல்லும் குறமங்கை, கணிகை யர் வீதிவழியே வந்துகொண்டிருந்தாள். அவள் வருகையை அவள்மீது அணிந்திருந்த ஆபரணங்களே யாவருக்கும் அறிவித்தன.

குறி சொல்லும் குறமங்கையாகிய அவள் அந்த வீதியில் யாரையோ தேடி வருகிறாள் என்பது தெரிந்தது. யாருக்கும் அவள் குறி சொல்லவில்லை. ஆனால், ஆங்காங்கே, விநோதம் பார்த்து நின்றவர்களிடம், யாரைப்பற்றியோ ஏதோ விசாரித்தாள் என்பது மட்டும் உண்மை. அந்தக் குறத்தியை வியப்புடன் பார்த்தவாறே, மகளிர் தங்கள் தங்கள் மாளிகையில் நின்றுகொண்டிருந்தனர். குறத்தி மிக விரைவாகச் சென்றவள் வீதியில் நின்றவரைக் கேட்டுவிட்டு சயந்தியின் மாளிகைக்கு முன்னர் ஆலோசனையுடன் நின்றாள். அதிலிருந்து அவள் சயந்தியைத் தேடி வந்தவள் என்பது புலப்பட்டது. அந்தக் குறமங்கையைக் கண்டு பேச, ஆவலுடன் இருந்த சயந்தி, மேன்மாடத்தில் இருந்தபடியே தன் மாளிகையின் முன்பு அவள் நிற்பதைக் கண்டு உவகையும் பரபரப்பும் கொண்டாள்; 'இந்தக் குறிசொல்லும் குறத்தியிடம் என் மனக் கவலை தீரக் குறிகேட்பேன். என் துயரை அகற்ற, புத்த தேவனின் அருளாலேயே இவள் என் மாளிகையின் முன்பு நிற்கிறாள்! இவளை உள்ளே அழைக்கவேண்டும்' என்று முடிவுசெய்தாள் சயந்தி. உடனே ஆவலுடன், "ஏ குறத்தி! உள்ளே வா" என்று கூறிக் கைதட்டினாள். பின்னர், அவளை அழைத்து வருமாறு நாகவல்லியையும் அனுப்பினாள்.

சயந்தியின் தோற்றத்தைக் கீழிருந்து நோக்கிய குறத்தி, வியப்பும் உவகையும் கொண்டு, 'பழம் நழுவிப் பாலில் விழுந்தது' என்று மகிழ்ந்தவளாய்ப் புன்னகை பூத்தாள். "அம்மே, சயந்தியம்மை நீதானா?" என்று கேட்டாள் நிமிர்ந்த வண்ணம் குறத்தி. அதைக் கேட்டதும் சயந்தி முன்னிலும் அதிகம் வியப்புற்றவளாய், "ஆம், நான்தான்; உள்ளே வா" என்றாள் மேல்மாடத்தில் இருந்தபடியே. அதற்குள்ளாக, கீழே வந்து, தாழ்ப்பாளைத் திறந்து, குறத்தியை அழைத்துச் சென்றாள் நாகவல்லி.

குறத்தி மேல்மாடத்திற்கு ஏறிச் சென்றபோது, அவள் கால் சிலம்புகளிலிருந்து எழும் 'கலீர் கலீர்' என்ற சப்தம் சயந்தியின் செவிகளுக்குப் புது நாதத்தை அளித்தது.

அவள் மேல்மாடத்தை அடைந்ததும், சயந்தி ஒரு கட்டிலைக் காண்பித்து அதில் அவளை அமரும்படி கட்டளையிட்டாள். முறத்தையும் கூடையையும் கீழே வைத்துவிட்டுப் புன்னகையுடன் உட்கார்ந்தபடி, மேல் மாடத்தைச் சுற்றுமுற்றும் பார்த்தாள். புத்த தேவனின் பிரதிமைக்கு அருகில் உள்ள ஸத்துகனின் சித்திரப் படத்தைக் கண்டு சற்று ஆலோசனையுடன் இருந்தாள். அவள் வாயிலிருந்து எழும் வார்த்தைகளை எதிர்பார்த்து அவளுக்கு அருகில் சென்று அமர்ந்தாள் சயந்தி. குறத்தி மிகுந்த பணிவுடன், "அம்மா, நான் குறி சொல்லும் குறத்தியானாலும் உங்களிடம் வேறு காரியத்திற்காக வந்தேன்" என்றாள்.

"என்ன காரியம்? நீ எந்த ஊர்?" என்றாள் சயந்தி.

"ஒரு சந்தோஷச் செய்தி அம்மா!" என்றாள் குறு நகையுடன் குறத்தி. அவளுடைய அழகுத் தோற்றத்திலும் இன் சொல்லிலும் சயந்தி மயங்கி விட்டாள். ஏன்?—மெய்ம் மறந்து அவளிடம் ஒருவித அன்பு கொண்டாள். அழகு, அன்பு, இன்சொல், தயை, கொடை, உண்மை, நீதி - என்பவற்றிற் கெல்லாம் சயந்தி, தன்னை அடிமையாக்கிக் கொண்டிருந்தாள் அன்றோ! எனினும், அவை எல்லாவற்றிலும் அவள் கற்பு வீரம் நிறைந்திருந்தது. அந்தக் காரணங்களால், குறத்தியின் அழகுத் தோற்றத்திலும், அன்பு கனிந்த பார்வையிலும், இன் சொல்லிலும் சயந்தி சொக்கிப் போனாள் என்பது உண்மை. குறத்தியுடன் வார்த்தையாட ஆவல் மிக்கது சயந்திக்கு.

"குறத்தி, தைரியமாய் என்னவென்று சொல்!" என்றாள்.

"சொல்லுகிறேன்...ஆனால், எனக்குச் சம்மானம் என்ன தருகிறீர்கள்?" என்று குறத்தி கேட்டாள்.

"வேண்டியதைத் தருகிறேன்; சொல்லு..." என்று சொல்லிவிட்டு நாகவல்லிக்குக் குறிப்புச் செய்தாள். நாகவல்லி அறைக்குச் சென்று, பழம், வெற்றிலை முதலியனவும், ஒரு முத்து மாலையும் வைத்த தட்டை, அவள் முன் கொணர்ந்து வைத்தாள். சயந்தி அவற்றைச் சுட்டிக்காட்டி, "இவைகளெல்லாம் உனக்குத்தான். இன்னும் வேறு எது வேண்டு மானாலும் கேள்; தருகிறேன். விரைவில் செய்தியைச் சொல்" என்றாள் ஆவலுடன்.

சம்மானத்தைக் கண்டு களித்தவளாய், "ஆ, என்ன அன்பு! என்ன எளிமை! தாய்க்கு ஏற்ற பெண்! தங்கள் குணத்துக்கு ஏற்ற தாய் அம்மா! எல்லாம் நன்மையாக முடிய வேண்டும்" என்று புகழ்ந்தாள் குறத்தி. அவள் வார்த்தைகளில் ஏதோ மறைபொருள் இருப்பதை உணர்ந்த சயந்தி, சிறிது சினத்துடன், "என்ன? ஏதேதோ பிதற்றுகிறாயே! யாரைப்பற்றிப் பேசுகிறாய்? யாரைத் தாய் என்று சொல்லுகிறாய்? விளங்கும்படி சொல்லு" என்று கேட்டாள்.

"ஆம், பிதற்றல்தான். தாயைப் பிரிந்து பல நாட்கள் ஆகிவிட்டன அல்லவா? தாயைக்கூட இந்தக் காலத்தில் மறந்துவிடுகிறார்கள்!" என்றாள் குறத்தி சாளரத்தை நோக்கியவளாய். சயந்தியால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. சட்டென்று, குறத்தியின் கைகளைத் தட்டி, "ஏ குறத்தி, என்ன சொல்லுகிறாய்? உண்மையை விளங்கும்படி சொல்!" என்றாள் கடுகடுப்புடன்.

"உங்கள் தாயைப்பற்றித்தான்!" என்ருள் குறத்தி.

"என் தாயைப்பற்றியா? அவளைப்பற்றி உனக்கு எப்படித் தெரியும்? என்ன சொல்லுகிருய்?"

"சுமதி என்ற ஒரு கிழவிதானே உங்கள் தாய்? அந்த அம்மைதான் உங்களைப் பார்த்துவரச் சொன்ருள்" என்று குறத்தி கூறியதும், சயந்தி திடுக்கிட்டு, "என்ன, என் தாயிடமிருந்து வருகிருயா? உயிருடன் இருக்கிருளா என் தாய்? எங்கே இருக்கிருள்? உண்மையில்..." என்று குரல் தழுதழுக்கக் கேட்டாள் அவள்.

"ஆம், அம்மா! சுமதி என்றுதான் உங்கள் தாயை அழைப்பீர்களா? அவள்தான் சொன்ருள்; இந்நகரில் புது நீர் விழாவில், காவிரியாற்றில் மூழ்கும்போது..." என்று குறத்தி கூறுவதற்குள், "ஆம், காவிரிப் பெருக்கில் கடலில் இழுக்கப்பட்டு எங்கோ போய் விட்டாள்; அப்போது பல இடங்களில் தேடியும் அகப்படவில்லை! ஆனல், இறந்து போனுள் என்று நிச்சயம் தெரியாது......" என்ருள் சயந்தி கண்ணீர் துளும்ப.

"கடலில் மூழ்கித் தத்தளித்த போது, அருகில் சென்ற ஒரு கப்பலில் ஏற்றப்பட்டு கடல்மல்லைத் துறையில் சேர்க்கப்பட்டாள். அங்கே வாழ்ந்து என்னுடன் இருந்துவந்தாள். பின்னர் தங்களைக் காண்பதற்கு ஆசைகொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டாள். நானும் உடன் வந்தேன். கடல்மல்லைத் துறையிலிருந்து நடந்தே இந்த நகர் வந்தோம்..."

"என் தாய் வந்துவிட்டாளா? எங்கே இருக்கிருள்? உன்னுடன் இங்கு வரவில்லையா?" என்று கேட்டவாறு, குரலடைக்க, இருதயம் விம்மக் கண்ணீர் சொரிந்தாள் சயந்தி. குறத்தி சிறிது ஆலோசனை

யுடன், "அந்தக் கிழவி நேற்று, காவிரித் திருமுகத் துறையில்வந்து தங்கியது முதல் எழுந்திருக்கவும் சக்தியில்லை. அங்குள்ள அரண்மனையைச் சேர்ந்த ஒரு மாளிகையில் படுக்கவைத்துவிட்டுச் சொல்லிப் போக வந்தேன்; பாவம்! கடல்மல்லைத் துறையிலிருந்து நடந்தாள் கிழவி; நான் நடப்பதற்கும் அவள் நடப்பதற்கும் வேறுபாடு இல்லையா? அம்மா, உங்கள் தாய் என்னிடம் அவள் கதையையெல்லாம் சொன்னாள். உங்களைப் பற்றி நினைத்து வருந்தாத நாள் இல்லை. கிழவியின் வார்த்தைகளுக்கு ஏற்றாற்போல் நீங்களும் அழகும் குணமும் பொருந்திய பெண்ணாக வாய்த்திருக்கிறீர்கள்; இந்தச் சம்மானம் எனக்கு வேண்டாம் அம்மா! உங்கள் குணத்தை அறியவே கேட்டேன். விரைவில் உங்கள் தாயைக் கவனியுங்கள் அம்மா!" என்று மொழிந்தாள் குறத்தி.

அதற்கு மேல் சயந்தியால் அங்கே இருக்க முடியவில்லை; "நீ சற்று இருப்பாயா? உன்னுடனேயே வருகிறேன். என் தாயை இங்கே அழைத்து வந்துவிடலாம்" என்று கண்ணீர் சொரிந்து கனிவோடு கேட்டாள் சயந்தி.

"அம்மா, நான் இருப்பதற்குத் தடையில்லை. விரைவில் வாருங்கள்; ஆனால், கிழவியால் நடக்க முடியாதம்மா!" என்றாள் குறத்தி.

"என் பல்லக்கு இருக்கிறது. அதில் ஏற்றி வருகிறேன்" என்று கூறி அப்புறம் சென்று பூங்கட்டிலில் உறங்கிக்கொண்டிருந்த மைந்தனைப் பார்த்தாள். 'என் தாய் என் மைந்தனைக் கண்டால் எவ்வளவு குதூகலம் கொள்வாள்' என்று அவள் மனம் பேராவல் கொண்டது. "நாகவல்லி, குமரன் தூங்குகிறான்; எழுந்தால் கவனித்துக் கொள். விரைவில் தாயை அழைத்து வந்துவிடுகிறேன்" என்றாள்.

"அம்மா, நான் போய் அழைத்து வருகிறேன். நீங்கள் போக வேண்டாம்; குழந்தை எழுந்திருந்தால் அழுவான்" என்ருள் சேடி பணிவுடன்.

"இல்லை; நானே போய்வருகிறேன்" என்று புறப்பட்டாள் அவள்.

"விரைவில் வந்துவிடுங்கள்" என்று நாகவல்லி சொன்ஞள்.

அன்றைக்குத்தான் சயந்தி, தனிமையாக மாளிகையை விட்டு வெளியே வந்தாள். அதற்கு முன் அவள் மாளிகையை விட்டு ஸத்துகன் இல்லாமல் வெளிவந்ததில்லை. அந்தக் காரணத்தால் தனித்துப் போவதற்கு அவள் மனம் சிறிது அஞ்சியது. தாயைப் பார்க்க வேண்டுமென்ற அவா, அவளைப் பிடர் பிடித்து உந்தியது. நீண்ட நாட்களாகப் பிரிந்திருக்கும் பெற்ற தாயைப் பார்க்க, யாருக்குத்தான் ஆவல் இராது? இறந்து போஞள் என்றே எண்ணியிருந்த தாய் உயிருடன் காணக் கிடைத்தால் யார்தாம் ஆவலுடன், மெய்ம் மறந்து, செயல்மறந்து அவளைப் பார்க்க முற்படா திருப்பார்கள்? அவ்விதம் இல்லையேல், 'ஸத்துகருடன் அன்றித் தனித்து எந்தக் காரணத்திற்காகவும் வெளியில் செல்லேன்' என்று விரதம் கொண்ட சயந்தி அவ்விரதத்தையும் மறந்து மாளிகையை விட்டு இவ்வாறு புறப்படுவாளா? ஆஞல், புறப்படும் போது ஸத்துகனின் ஞாபகம் அவளுக்கு வராமல் இல்லை. தாயைக் காண்பதற்கு ஆதுரம் கொண்டிருந்த அந்த நிலையிலும் ஸத்துகனை அவள் மறக்கவில்லை. காரணமில்லாமல் ஏன்?—காரணம் இருந்துதாஞே என்னவோ, அவள் இருதயம் துடித்துக்கொண்டு இருந்தது. எனினும் சயந்தி மனந்தளராமல் உறுதி யுடன் பல்லக்கில் ஏறி அமர்ந்தாள். காவிரித் திருமுகத் துறைக்குச் சென்றது பல்லக்கு.

காவிரித் திருமுகத்துறையில், ஒரு புறமாக, அரண்மனையைச் சேர்ந்த ஒரு மாளிகையின் முன்பு பல்லக்கு நின்றது. அந்த மாளிகையின் வெளி வாயிலில் வாளேந்திய இரண்டு காவலர் நின்றனர். பல்லக்கை விட்டு இறங்கி, சயந்தியை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றாள் குறத்தி. பல்லக்கு வெளியே நின்றது.

மாளிகையின் உட்புறம் போகப் போக நீண்டு கொண்டே இருந்தது. கூடங்கள், அறைகள், முற்றங்கள், பூச்செடிகள் வைத்த தாழ்வாரங்கள் — இவ்வாறு ஒவ்வொன்றாகக் கடந்தனர். போகும் போதே, "என் தாய் எங்கே இருக்கிறாள்? இது யார் இருக்குமிடம்? ஒருவரையும் காணோமே?" என்று கேட்டுக்கொண்டே போனாள், சயந்தி மனக்கலக்கத் துடன். முன்னே சென்ற குறத்தி, ஓர் அறையைச் சுட்டிக் காட்டி, "அந்த அறையில் இருக்கிறாள்" என்றாள். சயந்தி ஆவலுடன் ஓடி அந்த அறைக்குள் புகுந்து பார்த்தாள். சிறிய விளக்கொன்று எரிந்து கொண்டிருந்த அந்த அகன்ற அறையில், பலவித மஞ்சங்களும் பூங்கட்டில்களும், சித்திரம் அமைந்த ஆசனங்களும், பிரதிமைகளும் காணப்பட்டன. தாய் எங்கே படுத்திருக்கிறாள் என்று ஒவ்வோர் இடமாகப் பார்த்தாள். அந்த இடத்தின் தன்மையைக் காணுந் தோறும் அவள் இருதயம் வெடித்துவிடும்போல் இருந்தது. தாயைத் தேடிக்கொண்டிருந்த அவள் ஒரு மூலையில், பூங்கட்டிலில் ஓர் உருவம் அமர்ந்திருப் பதைக் கண்டு திடுக்கிட்டாள்; "யார்?" என்று பதற் றத்துடன் உற்றுப் பார்த்தாள், தாயென்று எண்ணி. அப்போது 'கல கல' வென்று நகைத்தான் அங்கு உட்கார்ந்திருந்த இளந்தத்தன். ஆம், அவன் தான். அதில் சந்தேகம் என்ன?

கண்கள் சுழல, நிலை தளர்ந்து, "குறத்தி" என்று திரும்பிப் பார்த்தாள் அவள். "கல கல" வென்ற சிரிப்

புடன், அந்த அறையின் வாயிற் கதவை மூடித் தாழ்ப்பாள் போட்ட வண்ணம் மறைந்தாள் குறத்தி. ஓட முயன்ற சயந்தி கதவுகள் மூடப் பெற்றதும், 'ஆ' என்ற கூக்குரலுடன் கீழே வீழ்ந்து மூர்ச்சையானாள். உடனே இளந்தத்தன் காதல் மயக்குடன், வேறு வழியாக வெளியே வந்து ஒரு சேடியை அனுப்பிச் சயந்தியை மூர்ச்சை தெளிவிக்கச் செய்தான்.

மாளிகை வாயிலில் இருந்த பல்லக்குத் தூக்கும் மல்லர்களிடம், "மல்லர்காள் நீங்கள் போங்கள்; அவர்கள் வேறு சிவிகையில் போய்விட்டார்கள்" என்று குறத்தி கட்டளையிட்டாள். பல்லக்குடன் மல்லர்கள் திரும்பிச் சென்றனர். இளந்தத்தனின் சூழ்ச்சி பலித்தது. சயந்தி சிறைப்பட்டாள். 'போக வேண்டாம்' என்று நாகவல்லி கூறியதைச் சயந்தி கேட்டிருந்தால் இவ்வாறு நேருமா?

## 16

## 'தெய்வம் நின்று கொல்லும்'

விடியற் காலம். குளிர்ந்த காற்று வீசியது. சோலையிலுள்ள மரங்கள் 'ஓ' என்ற ஒலியுடன் ஆடி அசைந்துகொண்டிருந்தன; 'சலசல' என்ற முழக்கத்துடன் அருகில், சுழித்து நெளிந்து ஓடியது காவிரி. சில பறவைகள் சற்று நேரத்துக்கு ஒரு முறை இன்குரலுடன் கூவியபடி அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருந்தன. ஆனால் காவிரியை அடுத்திருந்த அந்த மாளிகையில் சிறிதும் சப்தம் இல்லை. ஏதோ கனவு கண்டு விழித்தவள்போல் திடுக்குற்றுக் கண் திறந்து சுற்றும் முற்றும் பார்த்தாள் சயந்தி. அவள் படுத்திருந்த இடத்திற்கு அருகில் சாளரத்தின் வெளிப்புறமாகப் பறவைகள் கூவிச் செல்வது அவள் காதுகளுக்கு நன்றாகக் கேட்டது. கண் விழித்தவள்

எழுந்திருக்கவும் வன்மை இல்லாதவள் போல், மெலிந்த குரலில் ஏதோ கூறினாள். அவள் கூறியதை அருகிலிருந்த அந்தப் பெண்ணால் கேட்க முடியவில்லை. பின்னர் கண்களை மலர விழித்தாள். அப்புறந்தான் அவளுக்குத் தான் இருக்குமிடத்தைப்பற்றிய ஞாபகம் வந்தது. உடனே முகத்தைத் திருப்பி, சாளரத்தை நோக்கவே, சூரியன் உதயமாவது அவளுக்குப் புலப் பட்டது. சிறிது மருட்சியுடன் பார்த்துவிட்டு, "ஏடீ, நீ குறத்தியா? ... அல்லவே?" என்று சொல்லி விட்டு மீட்டும் கண்களை மூடிக்கொண்டாள். குறத்தியைப் பற்றிய நினைவு அவள் மனத்தைவிட்டு அகலவில்லை. 'குறத்தி' என்று கூறும்போதே அவள் கண்கள் கோவைப்பழம்போல் சிவந்துவிட்டன. அவ்வளவு கோபம் குறத்திமீது சயந்திக்கு இருந்தது.

சயந்தியின் நிலையைக் கண்டு அருகில் இருந்த சேடி மெள்ள, அவள் வகிர்நுதலைத் தடவினாள்; "அம்மா, நான் குறத்தி அல்லவே? அவள் இங்கே இல்லை. நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்றாள்.

அவ் வார்த்தைகளைக் கேட்டவுடன் சயந்தி கண் விழித்தாள். சேடியை உற்று நோக்கி, "உன் பெயர் என்ன? நீ இங்கே ஏன் இருக்கிறாய்? நீயார்?" என்று கேட்டாள்.

"அம்மா, நான் இளந்தத்தரின் பணிப்பெண். என் பெயர் அந்தி. தங்களுக்குப் பணி செய்வதற்கு நியமிக்கப்பட்டிருக்கிறேன்" என்றாள் அவள்.

"அந்தப் பாதகனின் பணிப் பெண்ணா நீ? போ, போ! அந்தப் பாதகன், துரோகி இங்கேதான் இருக்கிறானா?" என்று கடுகடுப்புடன் கேட்டாள் சயந்தி.

"அம்மா, ஒன்றும் சொல்லாதீர்கள். அவர் அடுத்த அறையில்தான் இருக்கிறார். இந்த இடம் அவர்

மாளிகைதான். முன்பே சொன்னேனே!" என்று அந்தி சொன்னாள்.

"அந்தி, அந்தப் பாதகன் செய்தது நியாயமா? தாயைக் காட்டுகிறேன் என்று என்னை வஞ்சித்து அழைத்து வரச் செய்த அவனை நான் வைவது உனக்குப் பொறுக்கவில்லையா? வஞ்சகக் குறத்தி, என் வாழ்க்கையைக் கெடுக்க எண்ணினாளே, போதி ஸத்துவா! நீயே காப்பாற்ற வேண்டும்" என்றாள்.

"அம்மா, நான் ஒரு பணிப் பெண்தானே! அவர் கட்டளைப்படிதானே நான் நடக்க வேண்டும். என்றால் முடிந்தவரையில் தங்களுக்கு வேண்டியதைச் செய்கிறேன்" என்று இரக்கத்துடன் சொன்னாள் அந்தி.

"அந்தி, உன்னை நோவதில் என்ன பயன்? என் தலைவிதியை நொந்துகொள்கிறேன். எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம். என்னை இந்த இடத்தை விட்டு வெளியேற்றிவிட்டால் போதும்" என்றாள்.

"ஐயோ, வெளியேற்றவா? ஈ கூட இந்த இடத்தை விட்டு வெளிச்செல்ல முடியாதே அம்மா! உங்களை வேண்டிக்கொள்கிறேன். அதைமட்டும் என்னிடம் சொல்ல வேண்டாம். இது தெரிந்தால், அவர் என்னை உடனே தண்டிப்பார்" என்று பயந்தவாறே சொன்னாள் அந்தி.

அவள் நடுக்கத்தைக் கண்டு சயந்தி மனம் இரங்கினாள். பாவம், அவள் என்ன செய்வாள்? சயந்திக்குத் துக்கம் தாங்கவில்லை; இரவில் கண்ட கனவு நினைவுக்கு வந்தது.

"பிறர் மனைவியை விரும்பும் பெரும் பாதகனைத் தெய்வம் கண்டு உடனே தண்டிக்கவில்லையே! நீதி நெறி பிறழாத சோழவேந்தன் ஆட்சியில் அவன் சேனைத் தலைவனே இந்தத் தீய காரியத்தில் ஈடுபடுவது என்றால் இதைவிட அநீதி என்ன இருக்

கிறது? மன்னவனுக்குத்தான் கண்ணில்லை என்றால் தெய்வத்துக்குக்கூட இல்லையா? என் மைந்தனின் கதி என்ன ஆவது? என் காதலரை இனி எப்போது காண்பேன்? ஆம்; குற்றம்;—விரத நெறி தவறி, தாயைக் காணும் ஆவலுடன் மாளிகையை விட்டு வெளியேறியது என் குற்றந்தான்! ஆனால் அதற்குத் தண்டனை இதுவா?

"இந்தத் தண்டனையைவிட என் உயிரை மாய்த்துக் கொள்வதே தக்க தண்டனை; அதைவிடச் சிறந்த தண்டனை வேறு இல்லை. இறக்கும் முன்பு ஒரு முறையாவது அவரைக் காணவேண்டும். நேற்று இரவு, கனவில் தோன்றிய அவர்..." என்று கூறிக் கலகலவெனக் கண்ணீர் சொரிந்தாள்.

"அம்மா, ஏன் வருந்துகிறீர்கள்? யாரைக் குறித்து வருந்துகிறீர்கள்?" என்று அந்தி கேட்டாள்.

அவளை இடைமறித்து, "அந்தி, என்னவோ பிதற்றினேன்; உன்னிடம் சொல்லி என்ன பயன்? இரவு என் காதலரைக் கனவில் கண்டேன். கனவு என்பது வெறும் பொய்தானே! அதில் சந்தேகமில்லை. எல்லாம் என் மன மயக்கம். ஆனால் அதுமட்டும்..."

"என்ன அம்மா? அதைச் சொன்னால் நான் யாரிடமேனும் சொல்லுவேனோ என்று பயப்படு கிறீர்களா?" என்றாள் அந்தி.

"எனக்கு யாரிடமும் பயமில்லை. என் மைந்தனுக்குக் கனவில் வந்து அவர் பெயரிட்டதுமட்டும் ஏதோ உண்மைபோல் தோன்றுகிறது! கனவுதானே அதுவும். ஆனால் என்ன அழகான பெயர்! 'சுகதன்!' உண்மையில் என் மைந்தன் சுகதன்தான்! சுகதா, உன்னைக் காணாமல் அரைக் கணமும் இங்கு இரேன். உன் தந்தை உனக்கு இட்ட பெயர்! கனவு நனவாகாதா?" என்று விம்மி அழலானாள்.

"யாரம்மா, சுகதன்? ஏன் இப்படிப் புலம்பு" கிறீர்கள்? எல்லாம் அவரவர் செய்த வினைப்பயன்படி நடக்கும்" என்றாள் அந்தி.

"அந்தி, உனக்கு விளங்கவில்லையா? நேற்று இரவு, என் காதலர் கனவில் தோன்றி என் மைந்த னுக்குச் 'சுகதன்' என்ற பெயரை இட்டார். எவ்வளவு அழகான பெயர்! அதை நினைத்துத்தான் புலம்பு கிறேன். இதுவும் என் விதிப் பயன்!" என்று கூறியவாறே எழுந்து சாளரத்தின் பக்கம் மெள்ளச் சென்றாள். காவிரிப் பெருக்கின் காட்சியைக் கண்டு மனம் உருகி நின்றாள். கண்களில் நீரூற்றுப் பெருகியது. நீர் நிரம்பிய கண்களில் ஒளி மறைந்த பின் மனம் பொருமி, மீண்டும் கீழே அமர்ந்து அழ லானாள். அவள் நிலையைக் கண்ட அந்தியின் மனமும் இளகிவிட்டது; "ஏன் இப்படி அழுகிறீர்கள்?" என்று சொல்லிக்கொண்டே, சயந்தியின் கூந்தலைத் தடவினாள்.

சற்று நேரம் கழித்துச் சயந்தி தன்னைத் தானே ஆற்றிக் கொண்டாள். தன் அருகில் அமர்ந்து உபசரணை செய்துகொண்டிருந்த அந்தியைப் பார்த்து, அவள் கபடற்றவள் என்பதை உணர்ந்தாள். 'என்னுடைய வாழ்க்கை வரலாற்றை இவளிடம் கூறினால் ஒருவாறு மனப்புண் ஆறும் என்று தோன்றுகிறது; துயர் தீரச் சொல்கிறேன்' என்று எண்ணி அந்தியிடம் தன் வரலாறு முழு வதையும் சொன்னாள். பேதையான அந்தி சயந்தியின் வரலாற்றைக் கேட்டுத் திகைத்துப் போனாள்.

"அம்மா, குலத்தளவே ஆகும் குணம் என்பது உங்கள் விஷயத்தில் பொய்யாகிவிட்டது. உங்கள் குணத்துக்குத் தக்கபடி நீங்கள் உயர் குலத்தில் பிறந் திருக்கவேண்டும். கணிகையர் குலத்தில் ஏனோ பிறந்து விட்டீர்கள்! உங்கள் குலாசாரத்தை

மீது காதல்கொண்டு அவளுடன் திரிகிறான். உனக்கு அது தெரியாதுபோல் இருக்கிறது" என்றான் இளந் தத்தன்.

அவன் வார்த்தைகள் சிறிதும் அவளுக்கு நம்பிக்கையைத் தரவில்லை. எனினும் அந்த வார்த்தைகள் சயந்தியின் உள்ளத்தில் சுரீலென்று தைத்தன.

"என் உயிர் உன் கையில் இருப்பதாக நீ நினைக்கிறாய். என் உயிர் என்னிடங்கூட இல்லையே! அவரிடம் அல்லவா இருக்கிறது! இன்று என்னை என் மாளிகைக்கு அனுப்பாவிட்டால் உன் உயிர் அவர் கையில் அகப்படும் என்பதை உணர்ந்துகொள்! என் தாயை நீ அறிவாய் என்பதற்காக இந்த வஞ்சனை உன் புத்தியில் தோன்றிவிட்டது. நானும் தாயைக் காணவேண்டும் என்ற ஆவலுடன் வந்துவிட்டேன். இல்லையேல் எந்தக் காரணத்தைக் கொண்டும் நான் வெளியில் வரப்போவதில்லை. குறத்தியைக் கொண்டு வஞ்சித்துவிட்டதாக எண்ணும் நினைவை அறவே மறந்துவிடு."

"சயந்தி, ஏன் வீண் வார்த்தைகள்? இன்னும் சில நாட்களில் உன் காதலனின் கதி என்ன ஆகிறது என்று பார்க்கப் போகிறாய்; அப்புறம் உன் புத்தி தெளிவடையும்."

"என் காதலன் கதியைப்பற்றி முடிவு செய்ய ஆண்டவன் இருக்கிறான்; நான் பார்த்து ஏமாற்றம் அடையும்படி ஒன்றும் நடவாது; உனக்குத்தான் புத்தி தெளியவில்லை!"

"சயந்தி, உன் காதலன் ஸத்துகன் கழுவில் ஏற்றப்படுவதை உன் கண்களுக்குக் காட்டுகிறேன். ஸத்துக சங்கமே உருத் தெரியாமல் அழியப் போகிறது. இனி, ஸத்துகன் உயிர் தப்பான்!"

இதைக் கேட்ட சயந்திக்குத் தூக்கிவாரிப் போட்டது. உள்ளம் வெடித்துவிடும்போல் துக்கமும் கோபமும் உண்டாயின.

"அடே துரோகி; உன் செயலில் என்ன இருக்கிறது? நன்றி கொன்ற பாதகா! இளமைக் காலத்தில் உனக்கு எவ்வளவு நன்மை செய்திருக்கிறார் அவர்! அவரைக் கழுவேற்றுவதில் உனக்கு அவ்வளவு உவப்பா? அவரைக் கழுவேற்றும்படி அவர் செய்த குற்றம் என்ன? அவ்விதம் நடப்பதாக இருந்தால், போதிநாதன் அதைப் பார்த்திரான்! அவ் வார்த்தைகளை என் காதில் படும்படி மீண்டும் சொல்லாதே" என்று காதுகளைப் பொத்திக்கொண்டாள்.

"சயந்தி, நான் நன்றி மறக்கவில்லை. நன்றி மறந்தவன் அவன்தான். அதை உன் உள்ளமே அறியும். உன்னை முதலில் காதலித்த என்னை அடக்கி அவன் உன்னை அடைந்தான்; எனக்கு அவனிடம் பகை மூண்டதற்கும் காரணம் இதுதான்; ஆனால் அவன் கள்வன், கொலைஞன், பாதகன்; அவனுடைய தீய கொள்கைகளால் பௌத்தமதத்திற்கே பழி ஏற்பட்டுவிட்டது. அவனைக் கொன்றாலன்றி, ஸத்துக மந்திரத்தைத் தகர்த்தாலன்றி, பௌத்தமதத்திற்கும் இந்நகரத்திற்கும் நன்மை உண்டாகாது! அவனால் எத்தனை பௌத்த பிக்ஷுணிகள் கொலை செய்யப்பட்டிருக்கின்றனர்! எத்தனை மகளிர் கெடுக்கப்பட்டிருக்கின்றனர்! இவ்வளவு நாட்கள் வரையில் அவை யாவும் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. சில நாட்களுக்கு முன், சோழவேந்தனின் தேவியினுடைய முத்து மாலைகளை அரண்மனையிலிருந்து களவு செய்து அவற்றை மறைத்து வைத்திருக்கிறான். அதுவே காரணமாக எல்லாருடைய நன்மையையும் கருதி, அவனுக்குக் கொலைத் தண்டனை விதிக்கப் போகிறான் அரசன்!"

"சீ, இவை யாவும் பொய்; முற்றும் பொய்! என் காதலர் களவு செய்தாரென்பது கனவிலும் நம்பத் தகாதது!"

"நானே நேரில் கண்டறிந்திருக்கிறேன்."

"பிறர் மனைவியை விரும்பும் பெரும்பாவி! நீயே உண்மையில் கள்வன்! என்னை வஞ்சித்தது போல் அவரையும் வஞ்சித்திருந்தால்தான் அவரைக் கள்வன் என்று சொல்ல முடியும்! உன் வஞ்சனை உன்னையே தொடர்ந்து அழிக்கும்; எழு பிறவியிலும் நரகந்தான் உனக்குக் கிட்டும்; போதி சத்துவா! நான் அவருக்கு உண்மைக் காதலி என்பது உறுதியானால் வஞ்சகர்களின் சூழ்ச்சியிலிருந்து அவர் விடுபட வேண்டும்! புத்த பக்தியில் சிறந்த அவருக்குச் சிறிதும் துன்பம் நேர்வதா? நீ காப்பாற்றாவிடில் உன் பக்தர்களை வேறு யார் காப்பார்கள்?" என்று புலம்பினாள் சயந்தி.

"சயந்தி, நான் சொல்லியதில் சிறிதும் பொய் இல்லை. இனி நீ அவனை மறந்துவிடு. உன்னை உண்மையாக நான் காதலிக்கிறேன். நீயோ, கணிகையர் குலத்தில் பிறந்தவள். நீ கற்புடையவள் என்று சொன்னால் யாரேனும் நம்புவார்களா? கணிகையருக்குக் கற்பு ஏது?"

"சீ, நீ அறிந்தது அவ்வளவுதான். போய்விடு! வீணாக ஏன் வார்த்தையாடுகிறாய்? என் உள்ளத்தில் அவர் ஒருவருக்குத்தான் இடம் உண்டு. எந்தக் குலத்தில் பிறந்தால் என்ன? கற்புடைய மங்கை ஒருத்தி ஒருவனைத்தான் கருதியிருப்பாள். மற்றையோர் மிருகவர்க்கத்தினர். என்னை நீ விடுதலை செய்யாவிட்டால் உண்ணாவிரதம் இருந்து உன் மாளிகையிலேயே என் உயிரை மாய்த்துக்கொள்வேன். என் கற்பை உலகம் அறிய வேண்டாம்! உலகத்தை இயக்கும் ஆண்டவன் அறியட்டும்; என் காதலர்

அறியட்டும்; நிச்சயம் அவர் அறிவார்!" என்று வஞ்சினம் கூறினுள் சயந்தி.

"சயந்தி, என் உயிர்போனுலும், இங்கிருந்து உன்னல் வெளியேற முடியாது. என்றைக்கேனும் ஒரு நாள் என்னை நீ அடைய வேண்டியவள்தான். அவ்விதம் இல்லையேல் அடையும்படி செய்வேன்" என்று சினத்துடன் சொல்லிவிட்டுக் கதவைத் தாழிட்டு வெளியே சென்ருன் அவன்.

"போதி சத்துவா!" என்று கூறிச் சுவரில் சாய்ந்தாள் சயந்தி.

அப்போது அந்த அறைக்கு வெளிப்புறத்தில் குறத்தியும் இளந்தத்தனும் ஏதோ பேசிக்கொண்டிருக்கும் சப்தம் கேட்டது. குறத்தியின் குரலைக் கேட்டவுடன் விரைந்து சென்று கதவின்புறம் நின்று ஒற்றுக் கேட்டாள் சயந்தி. அவர்கள் பேசிக்கொண்டிருந்தது அவளுக்கு நன்கு விளங்கியது. "சயந்தியின் சேடி நாகவல்லியும், பல்லக்குத் தூக்கும் மல்லன் ஒருவனும், மாளிகை வாயிலில் வந்து சயந்தியைத் தேடினர்கள். 'சயந்தியும் தாயும் வெளியே போய்விட்டார்கள்' என்று நான் சொல்லிவிட்டேன். அவர்கள் திரும்பிப் போய்விட்டார்கள்" என்று குறத்தி இளந்தத்தனுக்குச் சொல்லியதைச் சயந்தி கேட்டுவிட்டாள்.

அதைக் கேட்டவுடன் சயந்தி தன் இருதயமே வெடித்து விடுவதுபோல் துக்கத்தால் பொருமினுள். மனம் நொந்து, தன் மைந்தன் சுகதனைப்பற்றி நினைந்து உருகினுள். இளந்தத்தனும் குறத்தியும் சேர்ந்து செய்த வஞ்சனை அவளைக் கணந்தோறும் வருந்தச் செய்தது. உடனே துக்கம் தாங்காமல், "வஞ்ச நெஞ்சம் படைத்த இளந்தத்தா, வஞ்சகக் குறத்தி! நீங்கள் செய்த வஞ்சனை உங்களையே வஞ்சிக்கும். உங்கள் வஞ்சனையை அறிந்து அரசன் தண்டிக்க

விலலயேல் தெய்வம் உங்களை எளிதில் விடாது! விரைவிலேயே உங்கள் வஞ்சனைக்குத் தக்க தண்டனை கிடைக்கும். 'தெய்வம் நின்று கொல்லும்' என்பதை நீங்கள் உணரவில்லை" என்று இரைந்து கூறிவிட்டுத் தலைகுனிந்து அழலானாள்; அப்போது அந்தி உள்ளே புகுந்தாள்.

## 17

### குறி சொல்லும் குறத்தி

குறத்தியின் சூழ்ச்சி வெற்றி பெற்றது. ஆனால் முற்றும் வெற்றி பெறவில்லை. இளந்தத்தனின் யோசனைப்படி சயந்தியை வஞ்சித்து அழைத்து வந்து அவன் மாளிகைக்குள் சிறை செய்தாள்—அவ்வளவே அவளுக்குக் கிடைத்த வெற்றி. ஆனால் இளந்தத்தன் எண்ணியதுபோல் நடைபெறவில்லை. 'கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை' என்பது போல் சயந்தியைச் சிறை செய்தும் அவள் காதலை அவன் பெற முடியவில்லை. அவள் அருகில் அணுகுவதற்கும் அவன் அஞ்சினான். குளிர் கொண்டவன் தீக் காயும் போது, அனலை அணுகாமலும் அனலை விட்டு அகலாமலும் இருப்பான் அல்லவா? அதுபோலச் சயந்தியின் மீதுள்ள காதலால் அவளை விட்டு அகல மனம் இல்லாமலும், அவளது மனவுறுதியாகிய தீக்கு அஞ்சி அவளை அணுக முடியாமலும் தவித்தான் இளந்தத்தன். எத்தனையோ உபாயங்கள் செய்தான். எவ்வளவோ உபதேசங்கள் சொன்னான். சயந்தியின் உறுதி சான்ற உள்ளத்தில் ஒன்றும் பதியவில்லை. சயந்தியை மறக்கவும் அவனால் முடியவில்லை. மறக்கும் எண்ணம் இருந்தால், என்றோ அவன் அவளை மறந்திருப்பானே!

சயந்தி அவனை முற்றும் வெறுத்து வந்தாள் என்பதை அவன் நன்கு அறிவான். எனினும் அவளிடமுள்ள தீவிரமான காதலால் சயந்தியை விடுதலை செய்வது அவனால் முடியாத காரியமாக இருந்தது. 'ஸத்துகன் மடிந்த செய்தியைக் கேட்டால் சயந்தி என்னைக் காதலிப்பாள். ஸத்துகன் உயிரோடுள்ள வரையில் என்னை இவள் விரும்பாள். ஆதலால் அவனை அழித்து இவளைப் பெறவேண்டும்; அது வரையில் பொறுத்திருப்போம்' என்று உறுதி செய்தான் அவன்.

'ஸத்துகன் மாய்ந்து விட்டால் இவள் என்னைக் காதலிப்பாள்' என்ற நம்பிக்கையே அவனுக்கு உறுதியாக இருந்தது. அதனால் அவன் சயந்தியை வற்புறுத்தி அவளுக்கு எவ்விதத் துன்பத்தையும் செய்யவில்லை. அவளை விடுதலை செய்யவும் அவன் விரும்பவில்லை. அவளுக்குத் துணையாகப் பல சேடியர்களை அமர்த்தியிருந்தான். சயந்திக்காகத் தன் உடைமை முற்றும் தியாகம் செய்வதற்கும் அவன் ஆயத்தமாக இருந்தான். பாவம்! விதியின் விளைவு வேறு விதமாக இருந்ததை அவன் முன்பே அறியவில்லை. 'சயந்யைத் தன் மாளிகைக்குள் சிறை வைத்திருப்பது, மெல்லிய துகில்கொண்டு தீயை மூடியது போன்றது' என்பதை அவன் உணரவில்லை. வெறும் தீயைக்காட்டிலும் கற்புத்தீ ஆயிரம் மடங்கு வெம்மையும் தூய்மையும் உடையதல்லவா? விலைக்கு உடலை விற்கும் விலைமங்கையர் குலத்தில் உதித்தவளுக்குக் கற்பு இல்லை என்று முதலில் அவன் எண்ணிவிட்டான். எனினும் குலமங்கையரிடத்தும் காணமுடியாத தூய்மை விலைமங்கையாகிய அவளிடம் இருப்பதாக அவன் பின்பு உணர்ந்தான். அந்தக் காரணத்தினலேயே அவன் அவளுக்கு எவ்விதத் துன்பத்தையும் செய்ய முற்படவில்லை.

அவ்வளவு நன்ருக அவளைப்பற்றி அவன் அறிந்திருந்தும் காதல் பிணிப்பால் அறிவழிந்து அவளை அவன் ஒரு விலை மங்கையாகவே கருதி விட்டான்.

குறத்தியும் ஒரே நாளில் சயந்தியின் தூய்மையை உணர்ந்தாள். தான் செய்த வஞ்சனைக்குத் தன்னையே நொந்துகொண்டாள். சயந்தியைச் சிறை செய்த பின்பு குறத்தி அவளைப் பார்க்கவில்லை. ஆனால் அவள் அங்கு வராமலும் இல்லை. சயந்தியை மீட்டும் பார்ப்பதற்கு அவள் மிகவும் அஞ்சினாள். கற்பின் செல்வியாக மதிக்கத்தக்க அவள் தன்னைச் சினந்து பார்த்தால் ஏதேனும் தனக்குக் கேடுநேருமோ என்ற பயமே அதற்குக் காரணம். ஆனால் இளந்தத்த னுக்காக எவ்விதக் காரியத்தையும் முன்பின் ஆராயாமல் உடனுக்குடன் செய்வதற்கு ஆயத்தமாக இருந்தாள். குறத்தியின் சூழ்ச்சியை இளந்தத்தனும் மதித்திருந்தான். ஆனால் குறத்திக்கும் இளந்தத்த னுக்கும் என்ன சம்பந்தம்? அவள் யார்? அவன் விஷ யத்தில் அவள் கவலை கொள்ளக் காரணம் என்ன? — என்பவை உணர முடியாமல் இருந்தன.

குறத்தியைக் கொண்டே மற்றும் ஒரு காரி யத்தை முடிக்க வேண்டுமென்று எண்ணியிருந்தான் இளந்தத்தன். அதைப்பற்றி முன்பே குறத்தியிடம் சொல்லியிருந்தான். அதற்குத் தக்க சமயம் வரவே இப்போது அதைப்பற்றிக் குறத்தியிடம் சொன்னான். குறத்தியும் உடனே அதைச் செய்துவிடுவதாகப் புறப் பட்டாள்.

அன்று அந்தக் காரியத்தைக் குறத்தி செய்து விட்டால் மற்றவை யாவும் எளிதில் முடிந்துவிடும் என்பது அவன் எண்ணம். ஆனால் அது நேர்மாருக நடக்கப் போகிறது என்பதை அவன் கனவிலும் கருதவில்லை. அவரவர் நினைத்தது நினைத்தபடியே நடைபெற வேண்டுமானால் தெய்வத்தின் துணை

இல்லாமல் நிறைவேறுமா? சயந்தி விஷயத்திலும், குறத்தி இளந்தத்தன் விஷயத்திலும் யாருக்குத் தெய்வத்தின் உதவி கிடைத்தது என்பது கூற முடியாமல் இருந்தது. அதை முன்னதாகவே அறிந்து கொள்ள யாரால் இயலும்?

கூடையும் முறமும் சுமந்து புறப்பட்டாள் குறத்தி. சயந்தியிடம் போனபோது எவ்வித அலங்காரம் இருந்ததோ அதேவித அலங்காரத்துடன் இப்போதும் சென்றாள். போகும்போதே 'குறம்' பாடிச் சென்றாள். யாவரும் அவளைப் பார்த்துக் குறி சொல்லும் குறத்தி என்றே எண்ணினார்கள். போய்க்கொண்டிருந்தவாறே வழியில் காணப்பட்ட ஆடவர் பெண்டிர் யாவருக்கும் சாதுர்ய வார்த்தைகளால் குறி சொல்லிப் போனாள். 'அவள் வார்த்தைகள் உண்மையா?' என்று யாரும் யோசிக்கவில்லை. அவள் நடையையும் பேச்சுத் திறமையையும் கண்டு திகைப்புக்கொண்டனர். சாதுர்ய வார்த்தைகளைக் கேட்டு உற்றுப் பார்த்து நின்றார்கள் சிலர். இடைமறித்துச் சிலர் கேள்வி கேட்டனர்; 'இவள் பைத்தியமோ?' என்று ஐயம் கொண்டனர் பலர். சந்தேகத்துடன் உற்றுப் பார்ப்பவர்களை விழியால் மயக்கி நடையால் அவசமாக்கிச் சென்றாள் குறத்தி. அவளுடன் யாரும் வார்த்தையாடி வெல்ல முடியவில்லை. தன் பெருந்திறமைக்குத் தானே மகிழ்பவள் போல் தனக்குள் சிரித்துப் பேசிச் சென்றாள் அவள்.

விரைவாகச் சென்ற குறத்தி அரசவீதியைக் கடந்து வணிகர் வீதியை அணுகினாள். வணிக வீதியில் புகுந்ததும் அவள் நடையின் வேகம் குறைந்தது. பாட்டும் பேச்சும் மாறுபட்டன. முன்னும் பின்னும் நோக்கியவளாய்ச் சென்றாள். அவள் பார்வையிலிருந்து யாரையோ அவள் தேடுகிறாள் என்று ஊகிக்க வேண்டியிருந்தது. மெள்ள மெள்ள வணிகர்

வீதியின் நடுவிடத்தை அடைந்தாள். அவள் வரும்போதே சிலர் விநோதமாக அழைத்தனர். அவள் நகைத்தவாறே போய்க் கொண்டிருந்தாள். அவள் தேடிவந்த மாளிகையை அணுகினாள். அப்போது அவள் வாயிலிருந்து முன்புபோல் பாடல் எழுந்தது :

"நன்மை வருகுது நன்மை வருகுதம்மே
சொன்ன குறி தப்பாது சொல்லுவேன் கேளம்மே!
நல்ல குறி சொல்வேன் நயந்து நீ கேளம்மே!
அல்ல குறி சொல்வேன் அணுகி நீ கேளம்மே!"

இவ்வாறு அவள் பாடுவதற்கு ஏற்ப, கால்களில் சிலம்பும் கிண்கிணியும் ஒலி செய்தன. பாடும்போதே அவள் மேனி காற்றில் ஆடும் பூங்கொடிபோல் இருந்தது. குறத்தியின் குரலைக் கேட்டு அருகில் உள்ள மாளிகையின் மேன் மாடத்திலிருந்து பத்திரை எட்டிப் பார்த்தாள்; "குறிசொல்லும் குறத்தியா இவள்?" என்று கேட்டுக்கொண்டே வசந்தியை அழைத்தாள். வசந்தியும் அவளருகில் வந்து குறத்தியைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

"பத்திரை, இவளை அழைத்துவந்து குறி கேட்போம். இவள் என்ன சொல்கிறாள் என்று அறிந்து கொள்ளலாம்" என்று கூறிவிட்டுக் கீழிறங்கிக் கன்னி மாடத்தின் வாயிற்புறம் வந்தாள் வசந்தி. மேன்மாடத்தில் இருந்த பத்திரையைக் கடைக் கண்ணால் நோக்கிய வண்ணம் குறத்தி அந்த மாளிகையை அணுகினாள். அதற்குள்ளாக, வசந்தி வெளியில் வந்து சுற்றிப் பார்த்துவிட்டு, "குறத்தி, உள்ளே வா; எங்கள் தலைவிக்குக் குறி சொல்லுவாயா?" என்றாள்.

"இதோ வந்தேன் அம்மே!" என்று கூறிவிட்டு வசந்தியுடன் கன்னி மாடத்திற்குள் புகுந்தாள் அவள். வெளியில் வேறு ஒருவர் அழைத்ததையும்

மறுத்துவிட்டு, அவள் வசந்தியுடன் மேன்மாடம் சென்றாள். சித்திர வேலைப்பாடுகள் அமைந்த அம் மாடத்தில், அன்ன வடிவாகச் செய்த கட்டிலில் பத்திரை அமர்ந்திருந்ததைக் கண்டாள். உடனே கைகுவித்து வணங்கிவிட்டுக் கீழே உட்கார்ந்தாள். வசந்தியும் பத்திரையும் நாணத்துடன் அவளுக்கு எதிரே உட்கார்ந்து கொண்டார்கள்; வசந்தி, பத்திரையின் கையைப் பிடித்து அவளிடம் நீட்டி, "குறத்தி, குறி சொல்லு; உண்மையாக இருக்க வேண்டும்" என்றாள்.

"அம்மை பகவதி அருளாலே குறிசொல்வேன்
அம்மே உன்கையில் அதிரகசியம் உள்ளதுவே"

என்றாள்.

"என்ன ரகசியம் இருக்கிறது? சொல்லு பார்ப் போம்" என்றாள் வசந்தி. அப்போது பத்திரை மனக் கலக்கத்துடன் கையைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டாள். குறி கேட்கவேண்டாம் என்றுகூட அவளுக்குத் தோன்றிவிட்டது;

"பெண்ணே நீ இன்னும் பெற்றிலையால் நற்கணவன்
கண்ணே பகையாகக் காதலித்தாய் கள்வனைத்தான்
திண்ணம் அவனுடன் நீ திரிந்தால் பெருந்துன்பம்
கண்ணுள ளுகக் கருதாதே அவனை நீ"

என்றாள் குறத்தி.

அதைக் கேட்டதும் பத்திரைக்குக் கோபம் வந்து விட்டது. "என்ன உளறுகிறாய்? சீ, இப்படித்தான் குறி கூறுவாயோ?" என்றாள் பதற்றத்துடன்.

"சொன்னகுறி தப்பாது சொன்னேன் உண்மையம்மே!
என்னைச் சினவாமல் இன்னமும் நீ கேட்டிடுவாய்"

என்றாள் எடுத்த குரலில் மீண்டும்.

பத்திரைக்குக் குறத்தியின் மீது நம்பிக்கை இல்லை. அவளை உற்று உற்றுப் பார்த்தாள். தனக்குக் குறி சொல்லவேண்டாம் என்று மறுத்துவிட்டாள். ஆனால்,

வசந்திக்குத் தான் குறி கேட்கவேண்டும் என்ற ஆவல் இருந்தது. அதனால் அவள் தன் கையை நீட்டினாள்.

"அம்மே, உன் வாழ்வு அவமாய்ப் போச்சுதே !
எம்மேல் சினவாதே இன்னமும் சொல்கிறேன் கேள்"

என்றாள்.

வசந்திக்கு அதைக் கேட்டதும் திடுக்கிட்டது. மேலும் கேட்கவேண்டும் என்ற ஆவலுடன், "என் வாழ்வு என்ன அவமாய்ப்போச்சு சொல்லு?" என்றாள். அதற்குக் குறத்தி மறுமொழி கூறுவதற்குள் பத்திரை கோபம் கொண்டாள்.

"போதும்; குறி கூறுவதை நிறுத்து; வேண்டாம்" என்றாள்.

பத்திரை குறத்தியிடம் சந்தேகம் மிகுதியாகக் கொண்டாள். குறத்தியின் புன்னகையில், அவள் முன் வரிசைப் பற்களைப் பார்த்த பத்திரைக்கு ஓர் ஐயம் எழுந்தது. அடுத்தாற்போல் அவள் மார்பையும் பார்த்தாள். குறத்திக்குப் பத்திரையின் நோக்கம் தெரிந்துவிட்டது. உடனே எழுந்து, "நான் போய் வருகிறேன் அம்மே!" என்றாள். வசந்தி புன்னகையுடன் ஓர் ஆபரணத்தை அளித்து, "போய் வா" என்றாள். குறத்தி விரைந்து கீழ்றங்கிச் சென்றாள்.

குறத்தியின் நடையையும் சாயலையும் கண்ட பத்திரைக்குச் சந்தேகம் அதிகமாயிற்று. 'இவள் யார்? உண்மையில் குறத்திதானா இவள்? இவள் குறி கூறுவதிலிருந்து ஏதோ ஒற்றறிய வந்தவள்போல் காணப்படுகிறாளே? இவளிடமா உண்மையை அறியமுடியும்?" என்று யோசித்தாள். உடனே விரைந்து மேல்மாடத்திலிருந்து எட்டிப் பார்த்தாள். திரும்பத் திரும்ப நோக்கியவண்ணம் குறத்தி போவதைப் பார்த்தாள்.

வசந்தியை அழைத்து, "இதோ பார், நம்மையே உற்று உற்றுப் பார்த்துப் போகிறாள். உண்மையில்

இவளைப் பார்க்கும்போதும், இவள் பேசும்போதும், குறத்தி அல்ல என்றே தெரிகிறது. வசந்தி, இவள் ஒற்றறிவதற்காகவோ, வேறு ஏதேனும் வஞ்சகச் செயலுக்காகவோ நம்மிடம் வந்திருக்கிறாள். உண்மை தெரியவில்லையே? இவள் உண்மையில் குறத்தியானால், நம் மாளிகையை நோக்கி வருவானேன்? எவ்வளவு பேர்கள் இந்த வீதியில் அழைத்தார்கள்! இப்போதும் நேராகச் செல்கிறாள் பார். நான் ஒன்று மறந்துவிட்டேன். அவளைப் பய முறுத்தியிருந்தால் உண்மை வெளிப்பட்டிருக்கும்" என்றாள் பத்திரை.

"எனக்குக்கூடச் சந்தேகந்தான். எப்படித் தெரிந்துகொள்வது? ஆனால், நான் ஒன்று செய்கிறேன்..." என்றாள் வசந்தி.

"என்ன செய்யப் போகிறாய்?"

"குறத்திக்குப் பின்னே நானும் தொடர்ந்து போகிறேன். அவள் எங்கே போகிறாள் என்பதை மட்டும் அறிந்து வருகிறேன்; அதிலிருந்து ஏதாவது உண்மை தெரியாதா?"

"நீ பின்னே வருவதை அவள் உணர்ந்து விட்டால் என்ன செய்வாய்? அவள் பெரிய மாயக் காரிபோல் தோன்றுகிறதே! தைரியம் இருந்தால் போய்அறிந்து வா" என்றாள் சஞ்சலத்துடன்.

"நான் அவள் அறியாமல் பின் தொடர்ந்து போய் விட்டு விரைவில் வந்து விடுகிறேன்" என்று கூறி விட்டு ஓடினாள் வசந்தி. போகும்போதே ஒரு சிவப்பு நிறப் போர்வையால் தன்னைப் போர்த்திக்கொண்டு சென்றாள். விரைந்து சென்றவள் குறத்தியை அணுகி விட்டாள். குறத்திக்குத் தன் வருகை சிறிதும் புலப் படாதபடி மறைந்து பாம்புபோல் சென்றாள்.

குறத்தி வணிகர் வீதியைக் கடந்து அரச வீதியில் புகுந்தாள். வசந்தியும் பின் தொடர்ந்தாள். அரச

வீதியில் சென்றுகொண்டிருந்த குறத்தி அவ் வீதியின் குறுக்கே பிரிந்து செல்லும் ஒரு சிறு வழியில் புகுந்தாள். செடி கொடிகள் அடர்ந்த வழியில் அவள் புகுந்ததும், வசந்தியும் மனம் தளராமல் பின் தொடர்ந்தாள். ஆனால் வசந்தி அந்த வழியை முன்பு கண்டதே இல்லை; ஆதலால் அவ்வழி எங்கே செல்கிறது என்று வசந்திக்குச் சந்தேகம் உண்டா யிற்று. காரியத்தில் கருத்துடையவளாகப் பின் தொடர்ந்தாள். 'அஸ்தமனம் ஆவதற்கு முன் திரும்பிவிட வேண்டுமே!' என்ற கவலை அடிக்கடி தோன்றியது வசந்திக்கு. இந்த நிலையில் முன்னே போய்க் கொண்டிருந்த குறத்தி, சிறிது தூரம் சென்ற பின்னர் வழியிடையிலுள்ள சோலை செறிந்த ஒரு மாளிகைக்குள் புகுந்தாள். அந்த மாளிகை யாருடையது என்பது வசந்திக்கு விளங்கவில்லை. யாரையேனும் கேட்கலாம் என்றால் அங்கு எவரையும் காணவில்லை. அந்த மாளிகையின் வெளிப் புறத்தில் சிறிது அச்சத்துடன் நின்றாள். இருள் சூழும் சமயமாக இருந்தது அப்போது. 'தாமதம் செய்யக்கூடாது' என்று உறுதி செய்து கொண்டு விரைந்து அம் மாளிகைக்குள் புகத் தலைப் பட்டாள். பார்ப்பதற்கு அம்மாளிகை பெரிய அரண்மனை போன்று விளங்கியது. தனிமையாகத் தனியிடத்திற்குள் புகுவதற்கு அவள் தயங்கினாள். 'யாரேனும் எதிரில் வந்துவிட்டால் என்ன செய்வேன்? ஒருகால் குறத்தி திரும்பிப் பார்த்துவிட்டால் என்ன செய்வது? என்னை யார் என்று யாராவது கேட்டால் என்ன சொல்வேன்?' என்று மயங்கினாள். அதனால் உள்ளே போவதற்கு மனம் துணியவில்லை. 'முன் அறிவில்லாமல் வந்துவிட்டோமே' என்று எண்ணிச் சிறிது கலங்கி நின்றாள். 'இவ்வளவு தூரம் வந்த பின்பு உண்மையை அறியாமல் திரும்புவதா?' என்று யோசித்து உறுதியுடன் முன்னே நடந்தாள்.

இருபுறமும் இருந்த செடிகொடிகளின் செறிவுகளுக்கு அப்பால் அகன்ற மாளிகையின் உள் தோற்றம் நன்ருகப் புலப்பட்டது. குறத்தி உள்ளே நேராகச் சென்று ஓர் அறைக்குள் புகுவதைக் கண்டாள். வெளியில் வாயில் காவலர் இருவர் நின்றனர். வசந்தி மனவுறுதியுடன் மாளிகையின் உட்புறம் புகுந்து விரைந்து போனுள். குறத்தியைப் பின்தொடர்ந்து தைரியமாகப் போனதால் வசந்தியை வாயில் காவலர் தடைசெய்யவில்லை. குறத்தியுடன் வந்தவள் என்று எண்ணியிருந்தனர்.

பேசாமடந்தையாக விரைந்து சென்ற வசந்தி உள்ளே புகுந்து, குறத்தி புகுந்த அறைக்கு வெளிப்புறம் நின்ருள். அறைக்குள் சிறிதும் பேச்சுக் கேட்கவில்லை. வெளியில் நின்றபடியே அறைக்குள், 'குறத்தி இருக்கிருளா' என்று எட்டிப் பார்த்தாள். குதூகலத்துடன் குறத்தி நிற்பதைக் கண்டு திடுக்கிட்டாள். அந்த அறையின் நாலுபுறமும் பெரிய கண்ணுடிகள் சுவரில் பதிக்கப்பெற்றிருந்தன. மீட்டும் கூர்ந்து கவனித்தாள். கண்ணுடிகளில் தன் அலங்காரத்தைப் பார்த்தவண்ணம் குறத்தி புன்னகையுடன் நிற்பதைப் பார்த்தாள். சற்று நேரத்தில் திடுக்கிடத்தக்க காட்சியை வசந்தி கண்டாள்.

ஏதோ முணு முணுத்த வண்ணம் குறத்தி, தன் மேலாடையைக் கழற்றிக் கீழே எறிந்தாள். அவள் தலையிலிருந்த பொய்க் கூந்தல் நழுவிக் கீழே வீழ்ந்தது. மார்பிலிருந்து நீண்ட கச்சு ஒன்று அவிழ்ந்தது. பின்னர் ஒவ்வொன்ருக ஆபரணங்கள் கீழே நழுவின. எல்லாம் கழற்றி எறியப்பட்டபின், அந்த மாயக் குறத்தியின் வடிவம் வீரக்கச்சை கட்டிய ஓர் ஆண் உருவாக மாறியது. அந்த ஆண் உரு அச்சன் வடிவமே என்பதும் தெரிந்தது. இளந்தத்தனின் நண்பன் அச்சனே, குறத்தியாக வந்தவன் என்பதை வசந்தி தெரிந்துகொண்டாள். அவள்

கண்களை அவளாலேயே நம்ப முடியவில்லை. குலை நடுங்கியது அவளுக்கு.

அவ்வளவையும் கண்கொட்டாமல் கண்டிருந்த வசந்தி சரேலென்று மார்பு பதை பதைக்க வாய் திற வாது பெருமூச்சு விட்டுக்கொண்டே ஓடத் தலைப்பட் டாள். வெளியில் யாரோ ஓடுகிற சப்தம் கேட்டதும் அச்சன் சட்டென்று தாவிப் பார்த்தான். வசந்தி ஓடுவதைக் கண்டதும் காற்று வேகமாய்ப் பின் தொடர்ந்து வசந்தியை வழிமறித்தான். அவள் தப்பு வதற்கு முயலவே அச்சன் சினத்துடன் அவளைப் பிடித்துத் தூக்கித் தன் அறைக்குக் கொண்டு சென்றான். வசந்தி, "ஐயோ, துரோகி, மாயாவி......" என்று அலறினாள். அச்சன் கோபம் கொண்டு இரண்டு வீரர்களை அழைத்து, "இவளைக் கயிற்றால் கட்டிப் போடுங்கள்" என்றான். அடுத்த கணத்தில் வசந்தி அசையவும் முடியாமல் கட்டப்பட்டாள். வேடன் கையில் அகப்பட்ட பறவைபோல் ஆயிற்று அவள் நிலை.

"வசந்தி, உன் தந்திரம் என்னிடம் பலியாது. இளந்தத்தனின் நண்பன் அச்சன் நான் என்பதை நீ அறியவில்லையா? வெறும் குறி சொல்லும் குறத்தி என்று ஏமாந்தாயோ? என்னிடமிருந்து இனி நீ தப்ப முடியாது" என்று நகைத்தான்.

"குறத்தியாக நடித்து வஞ்சகம் செய்யும் பேடி? உன் மாயத்தை அறியவே நான் இங்கு வந்தேன். என்னை நீ ஒன்றும் செய்ய முடியாது. நீ ஆண்மகனாய் இருந்தால் என்னை இப்போதே விட்டு விடு" என்றாள் கண்ணீர் ததும்ப.

"ஸத்துகனைப் பழிதீர்த்துவிட்டுப் பத்திரையை அவனிடமிருந்து காப்பாற்றவே குறத்தியாக வந்தேன். பாலகனின் காதலில் மயங்கிய நீ அவனுக்கு ஒற்றறிய வந்திருக்கிறாய் என்பதும் எனக்குத் தெரியும்.

ஸத்துகன் அழிந்துபோகையில் பாலகன் மட்டும் உயிர் தப்புவான் என்று கனவிலும் எண்ணுதே! கைம்பெண்ணுகிய நீ அவனைக் காதலித்ததை இந் நகர் முழுதும் அறியும்; காதலால் மதிமயங்கியவர் களுக்கு இதுதான் கதி! தெரிந்ததா?''

"பாலகர்! பாலகர்!" என்று கூறியவளாய்ச் சோர்ந்து கீழே சாய்ந்தாள் வசந்தி. அச்சன் அருகி லிருந்த வீரர்களை நோக்கி, "இவளைத் தூக்கிப் பல்லக்கில் வைத்து இளந்தத்தரின் மாளிகைக்குச் சென்று அங்குள்ள மங்கையுடன் இவளையும் சிறை செய்யுங்கள்" என்ருன். உடனே அவர்கள் வசந்தியைத் தூக்கிச் சென்றனர்.

## 18

## 'வஞ்சித்தார்'

கவலையாலும் வருத்தத்தாலும் மெய்ம்மறந்து உறங்கிவிட்டாள் சயந்தி. அவளுக்குத் தூக்கம் வருவதே அரிது என்ருலும், அன்று மிகுந்த களைப்பு ஏற்பட்டதால் உறங்கிவிட்டாள். அறையில் மின் மினிபோல் ஒரு தீபம் எரிந்துகொண்டிருந்தது. வெளியில் யாரோ அழைக்கும் குரல் கேட்டதும், அந்தி கதவைத் திறந்து நின்ருள். அவளுக்கு நேராக வசந்தி ஒரு மூடு பல்லக்கிலிருந்து இறக்கப்பட்டு அந்த அறைக்குள் கொண்டுவரப் பட்டாள். அப் போது அவள் தன் நினைவுடனேயே இருந்தாள். இளந் தத்தனும் அச்சனும் பின்னே நின்று அந்தியைக் கடைக்கண்ணுல் நோக்கினர். உடனே அந்தி அறைக் கதவைத் தாழிட்டாள்.

இருளில் அந்த அறையில் யார் யார் இருக்கி ருர்கள் என்று வசந்தியால் அறிய முடியவில்லை. அந்தியை நோக்கியதும் அவள் ஒரு பணிப் பெண்

என்பதை அறிந்துகொண்டாள். அவளிடம் ஒன்றும் பேசாமல் ஒருபுறத்தில் அமர்ந்தாள். என்ன செய்வதென்று அவளுக்குப் புலப்படவில்லை. அச்சனுடைய வாய்மொழியால் அம் மாளிகை இளந்தத்தனுடையது என்பது மட்டும் வசந்திக்குத் தெரியும். அந்த அறையில் வசந்தி புகுந்தபோது அவளை இளந்தத்தன் குறிப்பாக நோக்கினான்; ஆனால் வசந்தி அவனை நன்கு கவனிக்கவில்லை. தனக்கு நேர்ந்த கதியை எண்ணி அவள், வாய்பேசாமல் மௌனத்தால் மனம் குமுறினாள். வஞ்சகர்களிடம் அகப்பட்டபின் அவர்களுடன் வார்த்தையாடுவதில் என்ன பயன்? பத்திரையைப் பற்றிய எண்ணமும், 'தன் நிலைமை இனி என்ன ஆகுமோ' என்ற சிந்தனையும் அவள் மனத்தை இடையறாமல் அலைத்துக்கொண்டிருந்தன. தன் நிலைமைக்குத் தானே காரணம் என்று எண்ணி மனம் நொந்தாள். 'எனக்கு இவ்வாறு நேர வேண்டுமோ' என்று ஊழ்வினையின் செயலை எண்ணி உள்ளம் உருகினாள். எண்ணங்கள் அலைமேல் அலையாக எழுந்து பொங்கின; உள்ளம் குமுறியவளாய் நிலைபெயராமல் அசைவற்றுச் சுவரில் சாய்ந்திருந்தாள். வெளிக்குப் புகையில்லாமல் உள்ளூறக் கனிந்து கொதித்துச் சுழலும் கனல்போல் அவள் காணப்பட்டாள். உள்ளக் கொதிப்புற்ற அவள் உடலும் வெந்துவிட்டாற் போல் தோன்றினாள்.

தான் தனிமையாக அச்சனைப் பின்தொடர்ந்தது தவறுதான் என்பதை உணர்ந்தாள். ஆனால் மனம் தளரவில்லை. 'எவ்வாறேனும் இவ்விடத்தைவிட்டுத் தப்பி ஓடிவிடவேண்டும்' என்று முடிவுசெய்தாள். அச்சன் அவளைப்பற்றிக் கூறியமொழிகள் அவள் உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டாக்கின. அவற்றைக் குறித்து நீண்டநேரம் யோசித்தாள். 'பாலகர் என்னைக் காதலித்ததை அச்சன் எவ்வாறு உணர்வான்? ஆனால் மூடன் அவர் மாண்டதை

அறியான்! அவர் உயிருடன் இருப்பதாக எண்ணி, நான் அவருக்கு ஒற்றறிய வந்தேன் என்று சந்தேகம் கொண்டிருக்கிருன். அவர் மாண்டது தெரிந் திருந்தால் இவ்வாறு எனக்கு நேருமா? சீ! அவன் அதை அறிந்தாஞைல் ஸத்துக சிரேஷ்டிக்குப் பெருந் துன்பங்கள் உண்டாகும் என்பதில் சந்தேகமே இல்லை; அவ்வாறு உண்டாவது என் உயிர்த் தோழி பத்தி ரைக்குத் துன்பத்தைத் தரும் அல்லவா! ஏதோ, விதியின் விளைவால் என் துரதிருஷ்டத்தால் அவர் மாண்டார். அதற்காக ஜன்மம் முழுதும் வருந்தி என்ன பயன்? அவரை மனத்தால் நினைத்து வணங்கி உபாசித்தால் மறு பிறவியிலேனும் அவரையே அடைவேன்! எது எப்படியிருந்தாலும் இவ்விடத்தி லிருந்து தப்பிவிடவேண்டும். இல்லையேல் ஸத்துக சிரேஷ்டிக்கும் பத்திரைக்கும் பெருந் துன்பம் நேருவது நிச்சயம்' என்ற சிந்தனையுடன் அவள் சுவரில் சாய்ந்து கண்ணயர்ந்தாள். அவள் கண் ணயர்ந்த அப்பொழுது இரவின் பெரும் பகுதியும் கழிந்தது. அவள் கண்ணயரும் வரையில் விழித் திருந்த அந்தியும் அப்போது சிறிது உறங்கி விட்டாள்.

பொழுது புலரும் தருணமாக இருந்தது. உணவு அருந்தாததாலும், உள்ளக் கவலையாலும் உடல் சோர்ந்து உணர்ச்சியற்று உறங்கிய சயந்தி கனவு கண்ட மருட்சியால் சட்டென்று விழித்துக் கொண்டாள். கண் விழித்த அளவில் சுற்றும் நோக்கிஞள். பொழுது புலர்ந்ததைக் கண்டவுடனே எழுந்து உட்கார்ந்தவள், ஒருபுறமாய்ச் சுவரில் சாய்ந் திருக்கும் வசந்தியைக்கண்டு திடுக்கிட்டாள். 'அந்தியா இவள்?' என்று முதலில் சந்தேகித்தவள் அருகில் அந்தி படுத்திருப்பதை உணர்ந்ததும் தெளிந்தாள். 'சுவரில் சாய்ந்தவாறு உறங்கும் மங்கை யார்?' என்று எண்ணி வியப்புடன் எழுந்து வசந்தியின்

அருகில் சென்றாள். இளமையும் வனப்பும் ஒருங்கே கொண்ட வசந்தியின் முகத்தில் சோகக்களை தெரிவதைக் கண்டு சந்தேகம் கொண்டாள். சிறிதும் சப்தம் செய்யாமல் அவளருகில் அமர்ந்து, மெய்ம் மறந்து உறங்கும் அவளையே உற்றுப் பார்த்தாள். அவள கண்களின் கடைகளில் நீர் ததும்பித் தேங்கியிருந்தது. தோற்றத்தைக் கொண்டு உயர் குலப்பெண் அவள் என்பதைத் தெரிந்து கொண்டாள். வசந்தியைப் பார்க்கும் ஒவ்வொரு கணமும் அவள்மீது இயல்பாகவே இரக்கம் பெருகிற்று. உடனே அந்தியின் அருகில் சென்று அவளை மெள்ளத் தொட்டு எழுப்பினாள்; அந்தி எழுந்ததும் சயந்தியைப் பார்த்து வியப்படைந்து, "என்ன அம்மா?" என்றாள். சயந்தி வசந்தியைச் சுட்டிக்காட்டி, 'யார் இவள்?' என்ற குறிப்புடன் கேட்டாள். அந்தி புன்னகையுடன், வசந்தியையும் சயந்தியையும் மாறி மாறிப் பார்த்து, ஏதோ கையால் குறிப்புச் செய்தாள். சயந்தி ஒன்றும் விளங்காதவளாய் வியப்புடன், "என்ன சொல்கிறாய்? இவள் யார்? இங்கே இவள் வந்திருப்பதற்குக் காரணம் என்ன?" என்று கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டாள்.

"இவள் இளந்தத்தரின் ஆக்ஞைப்படி நேற்றிரவு கொண்டுவரப் பட்டாள். அவ்வளவுதான் எனக்குத் தெரியும் அம்மா" என்றாள் மெல்லிய குரலில் அந்தி.

"இவளும் என்னைப்போல் கொண்டுவரப்பட்டவளா? பாதகி! அந்தக் குறத்தியால்தான் இவளும் வஞ்சிக்கப்பட்டாளா?" என்றாள் சயந்தி.

குறத்தியைப்பற்றி ஏதேனும் கூறினால் தன் உயிருக்கே ஆபத்து நேரும் என்பதாலும் வசந்தியைப் பற்றிய வேறு விவரம் ஒன்றும் அந்திக்குத் தெரியாததாலும் பேசாமல் இருந்தாள் அவள்.

சயந்தியின் பேச்சினாலோ, அல்லது கனவினாலோ, தூக்கம் கலைந்து, "பத்திரை, பத்திரை" என்று அழைத்துக்கொண்டே எழுந்தாள் வசந்தி. ஆச்சரியத்துடன் அந்தியும் சயந்தியும் அவளருகில் சென்றனர். "என்ன அம்மா? ஏன்?" என்றாள் அந்தி அருகில் நின்று.

சூரிய ஒளியால் நிரம்பியிருந்தது அவ்வறை. வசந்தி அறையின் நாலுபுறத்தையும் அப்போது தான் நோக்கினாள். அருகில் நின்ற இருவரையும் மருண்டு மருண்டு பார்த்தாள். மறைந்து தங்கியிருந்த துக்கம் பொங்கியது வசந்திக்கு. பத்திரையைப்பற்றிக் கண்ட கனவை நினைத்துப் பார்த்தாள். கண்களில் நீர் சுரக்க, கன்றைப் பிரிந்த பசுப்போல் பத்திரையின் பிரிவால் வசந்தி உள்ளம் கலங்கினாள். "பாலகரையிழந்தேன்! பத்திரையையும் பிரிந்தேன்! பாவி, நான் இங்கே இருக்கிறேன்" என்று பிதற்றியவளாய் அருகிலிருந்த மஞ்சத்தில் சாய்ந்து விம்மி விம்மி அழுதாள்.

பாலகன் இறந்த துயரமும் பத்திரையைப் பிரிந்த வருத்தமும் அவள் உள்ளத்தை ஊடுருவித் துளைத்தன. ஸத்துகன் மீது அவளுக்கு வெறுப்பிருந்தாலும் பத்திரையிடம் குறையாத அன்பு அவளுக்கு இருந்தது. அவளை நினைத்தே வருந்தினாள். இருதயம் பிளவுறும்போல் பொருமினாள். அதைக் கண்டு பிறர்க் கிரங்கும் பேதையான சயந்தியும் மனம் இரங்கி அவளருகில் உட்கார்ந்தாள். வசந்தியிடம் சொல்ல முடியாத பரிவு உண்டாகியது அவளுக்கு. வசந்தி உள்ளம் புழுங்கித் தவிப்பதைக்கண்டு அவளும் மனம் பதை பதைப்புற்றாள்.

வசந்தியைப்பற்றி அவள் மனத்தில் ஏதோ உறுத்திக்கொண் டிருந்தது. அதற்குக் காரணம்

இல்லாமல் இல்லை. 'பாலகன் யார்? பத்திரை யார்? இவள் யாரைக் குறித்து இவ்வாறு பேசுகிறுள். பாலகன்—என் காதலருடைய நண்பன் பாலக பிக்ஷுவோ? அல்லது வேறு யார் பெயரோ? அவ் விதம் இருந்தாலும் பாலகனுக்கும் இவளுக்கும் என்ன சம்பந்தம்? இது ஏதோ ரகசியமாய் இருக்கிறது. பாவம், இவள் முகத்தில் கணவனை இழந்ததனுல் உண்டாகும் சோகம் தெரிகிறதே! இவள் யார் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்?' என்று எண்ணினுள் சயந்தி. மெள்ள அவளைத் தொட்டாள். சோகத்தால் குன்றிப்போன வசந்தி திரும்பிப் பார்த்து, சயந்தியின் முகத்தைக்கண்டு ஒருகணம் பேசாமல் இருந்தாள்.

"நீ யாரம்மா?" என்றுள்.

அந்தப் பேச்சில், அவள் உள்ளத்தில் கரை புரண்டோடிய துக்கத்தின் மிகுதி புலப்பட்டது. மிகவும் அமைதியோடு, "நான் ஓர் அபாக்கியவதி; இங்கே சிறைப்பட்டிருக்கும் ஓர் ஏழை; அவ்வளவு தான். நீ யார் என்பதை அறிந்துகொள்ள விரும்பு கிறேன்'' என்றுள் சயந்தி

"என்ன, சிறைப்பட்டிருக்கிறீர்களா? இதோ இவளும்.." என்பதற்குள், அந்தி முற்பட்டு "நான் சிறைப்பட்டவள் அல்ல அம்மா! உங்களுக்குப் பணிவிடை செய்வதற்குச் சேனுபதி இளந்தத்தரால் நியமிக்கப்பட்டிருக்கிறேன்." என்றுள் பணிவுடன்.

அதைக் கேட்டதும் வசந்தியின் முகம் மாறியது. சற்று மெல்லிய குரலுடன், "நீ, சற்று அப்புறம் இருக் கிருயா?" என்றுள் சயந்தி. அந்தி புன்முறுவலுடன் அப்புறம் சென்றுள்.

"அம்மா, தங்களைப்போல் நானும் சிறைப்பட்ட ஓர் அபாக்கியவதிதான். ஆனுல் இதெல்லாம் எதற் காகவோ தெரியவில்லை! நான் சிறைப்பட்டதற்குக்

காரணம் நானே. ஆனால், தாங்கள் இந்த மாயச் சிறையில் ஏன் அகப்பட்டீர்கள்?" என்றாள் வசந்தி.

"உன் பெயர் என்ன? நீ சிறைப்பட்டதற்கு என்ன காரணம்?"

"என் பெயர் வசந்தி. என் வாழ்க்கை ஒரு பெரிய வரலாறு. அதைச் சொல்வதற்கே பயமாய் இருக்கிறது. நீங்கள் எப்படி இங்கே கொண்டுவரப்பட்டீர்கள்?"

"நான், ஒரு குறத்தியின் வஞ்சனையால் கொண்டு வரப்பட்டேன். கெட்ட சிந்தனையுடன் இளந்தத்தன் செய்த வஞ்சனை இது! சொல்லவும் என நா நடுங்குகிறது. என் தாய் சுமதி என்பவள், சில வருஷங்களுக்குமுன் காவிரியாற்றில் நீராடுகையில் மறைந்து போனாள்; அவள் இறந்தாள் என்று நான் எண்ணிவிட்டேன். அவள் மறைந்தது இளந்தத்தனுக்குத் தெரியும். நான் அவனை வெறுத்து வந்ததால், என் தாய் திரும்பவும் வந்துவிட்டதாகவும் இங்கே சோர்ந்து படுத்திருப்பதாகவும் சொல்லி என்னை ஒரு குறத்தியைக் கொண்டு இங்கே அழைத்துவந்து சிறைசெய்து விட்டான். என் காதலரை நினைந்து உயிர்விடத் துணிந்திருக்கிறேன். புத்ததேவன் அருள் செய்வான் என்று நம்பியிருக்கிறேன்" என்று நடந்ததைச் சுருக்கமாகச் சொன்னாள் சயந்தி.

வசந்திக்குப் பெரிதும் மனம் புண்பட்டது;

"என் புதல்வனைப் பிரிந்து வாழ்வது ஒவ்வொரு கணமும் என் உயிரை வாட்டுகிறது. அருமைச் சிறுவனைப் பிரிந்து வாழ்வதைக் காட்டிலும் உயிரை விடுவதேமேல். ஏனோ இந்த வாழ்வு" என்று மீண்டும் சொன்னாள் சயந்தி.

அதைக் கேட்டு வியப்புற்றாள் வசந்தி.

"அம்மா, உங்கள் நிலையைக் கேட்க என் மனம் துடிக்கிறது! உங்கள் பெயர்?...நீங்கள் எங்கே இருந்தீர்கள்?" என்று வசந்தி அன்புடன் கேட்டாள்.

"நானா? என்னைச் சயந்தி என்பார்கள். கணிகையர் வீதியில் இருப்பவள்!" என்றாள்.

"கணிகையர் வீதியிலா?" என்று கேட்கும் போதே வசந்தியின் முகத்தில் மாறுதல் ஏற்பட்டது.

"ஆம்; கணிகையர் குலத்தில் உதித்தவள்தான் நான். ஆனால், என், உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒருவருக்கே உரிமை செய்துள்ளேன். மனம், வாக்கு, காயம் இவற்றால், அவருக்கே நான் அடிமை! ஆண்டவன் ஒருவனே அதைஅறிவான். போதிநாதன் அருளால் ஒரு மைந்தன் பிறந்தான்; அவனைப் பிரிந்து, அவரையும் பிரிந்து உயிரற்ற பிணம்போல் இங்கு உலாவுகிறேன்" என்றாள்.

சயந்தியின் வரலாற்றைக் கேட்டதும் வசந்திக்கு வியப்பு உண்டாயிற்று. 'கணிகையர் குலத்தில் பிறந்தவள்-குலத் தொழில் இல்லை! காதலன் ஒருவனே! மைந்தன் உண்டு என்கிறாள்! இவள் தோற்றத்தைக் கண்டால் குலமங்கையைப் போல் தோன்றுகிறாள். உள்ளத் தூய்மையும், வாக்குத் தூய்மையும் இவளிடம் குடிகொண்டிருக்கின்றன. இத்தகைய கற்புடையவளை இளந்தத்தன் காதலிக்கிறான்? எது உண்மை? இவளைக் காதலித்த காதலன் யாரோ? பாவம், இவள் வார்த்தைகளைப் பார்த்தால், கள்ளங் கபடற்றவள் போல் தெரிகிறது! இவள் வார்த்தையில் பொய் இருக்கக் காரணம் இல்லை. ஆனால் இன்னும் உண்மை என்ன என்று கேட்டுத் தெரிந்து கொள்வோம்!' என்று எண்ணினாள்.

தன் வரலாறு முழுவதும் கூறிய சயந்திக்கு வசந்தியும், தன் வரலாற்றைக் கூற முற்பட்டாள்.

தன் வரலாற்றைச் சொல்ல வேண்டுமானால் பத்திரையின் வரலாற்றையும் ஆதியந்தமாகக் கூற வேண்டுமே என்று மயங்கிச் சுருக்கமாகவே சொன்னாள்.

"நான், வணிகர் வீதியிலுள்ள பத்திரை என்னும் நங்கைக்குத் தோழி. அவள் காதலர் ஸத்துக சிரேஷ்டி என்பவர்; அவருக்கும்......" என்றவுடன் சயந்தி திடுக்கிட்டுக் கேட்டாள்.

"என்ன? அந்தப் பத்திரையின் காதலர் யார்?"

"ஏன் இப்படிப் பதற்றத்தோடு கேட்கிறீர்கள்? பத்திரையை நீங்கள் அறிவீர்களா?"

"இல்லை......நீ அவளைப்பற்றிச் சொல்......"

"அவள் காதலர் ஸத்துகசிரேஷ்டி என்பவர்தாம்; இந்திர விழாத் தொடங்கியதிலிருந்து அவருக்கும் பத்திரைக்கும் காதல் ஏற்பட்டது; ஆனால் அது தொடங்கி ஒன்றன்மேல் ஒன்றாகப் பல விபத்துக்கள் வந்துகொண்டே யிருக்கின்றன!"

"அவர் உண்மையாகப் பத்திரையின் காதலரா?" என்று கூறியபோது உள்ளம் வெடித்து விடும் போல் பொருமினாள் சயந்தி.

"ஆம்; அவர் ஸத்துகமந்திர சங்கத்தை ஸ்தாபித்தவர். ஆனால், அந்தச் சங்கத்தில் பல அநீதங்கள் நடந்து விட்டன. அதன் காரணமாக அரசனுக்கும் அவருக்கும் பகை ஏற்பட்டுவிட்டது. அவரிடமுள்ள தீராப் பகையால் இந்த இளந்தத்தன் அவருக்குப் பல விதத்திலும் வஞ்சனை செய்கிறான். ஸத்துகசிரேஷ்டியும் பெரிய வீரர். ஆனால், அவருடைய விதி எவ்வாறு இருக்கிறதோ? அவர் கூட்டுறவால் நான் பத்திரையுடன் பௌத்த சங்கம் போய்வந்தேன். அங்கே பிக்ஷுவும் உபாஸகருமான பாலகர் என்னைக் காதலித்தார். நான் இளமையில் கைம்பெண் ஆனாலும் அவர் வசப்பட்டேன்" என்று கூறும்போது வசந்தி கண்ணீர் சொரிந்தாள். துக்கம்

நெஞ்சை அடைத்தது. மேலே சொல்வதற்கு முடியாமல் பொருமினாள். சயந்தி கனவு காண்பவள் போல் இருந்தாள். பாலகனைப் பற்றிப் பேசவே, சயந்தியின் சந்தேகம் உறுதியாயிற்று.

"பாலகன் உன் காதலனா? இது உண்மையா?" என்றாள் வியப்புடன்.

"ஆம், அம்மா! விதியை என்னென்று சொல்வேன்? ஒருநாள், பாலகருடன், பத்திரையின் மாளிகையில் நான் குலாவியிருக்கையில் அவரை இளந்தத்தன் என்று எண்ணி ஸெத்துகர் கொன்று விட்டார்" என்றவுடன் சயந்தி துணுக்குற்றாள்.

"பாலகன் என்பவன் இறந்தானா?" என்றாள் பெருமூச்சுடன்.

"ஆம், இறந்துவிட்டார்! விஷயத்தைச் சொல்லி விடுகிறேன் கேளுங்கள். அன்றுமுதல் என் உள்ளம் உடைந்து விட்டது. ஈசன் எனக்குத் தக்க தண்டனையை விதித்தான். ஆனால் ஸெத்துகசிரேஷ்டி சந்தேகத்தால்தான் கொன்றுவிட்டார். அவருடைய ஆருயிர் நண்பராகிய பாலகர் மாய்ந்தது முதல் அவர் உதவியற்றவர் ஆனார். பாலகரை நினைத்தாலும் அவர் உள்ளம் என் போல் வருந்தும். ஆனால் அவர் மாண்டது யாருக்கும் தெரியாது. நேற்று, இளந்தத்தனின் நண்பன் அச்சன் குறத்தி வேஷத்துடன் அங்கே வந்தான்"

"குறத்தியாக வந்தவன் அச்சனா? உண்மையாகவா? நீ எப்படி அறிந்தாய்?"

"நானே முயன்று அறிந்தேன். குறத்திமீது பத்திரைக்குச் சந்தேகம் உண்டாயிற்று. அதை அறிந்த அவன் மெள்ளத் தப்பிச் சென்றான். குறி சொல்லியதிலிருந்து அவன் ஒற்றறிய வந்தவன் என்பது நன்றாக அவனுக்குத் தெரிந்து விட்டது. நான் உண்மையை அறிய எண்ணிக் குறத்தியைப்

பின் தொடர்ந்தேன். இருட்டிய சமயம், நான் அந்தக் குறத்தியின் மாளிகையை அடைந்தேன். அவன் ஓர் அறையில் சென்று குறத்தி வேஷத்தைக் களைவதைக் கண்டுவிட்டேன். அதற்கு முன்பு எனக்குக் குறத்தியின் உண்மை என்ன என்று தெரியாது. உடனே பயந்து அவ்விடத்தைவிட்டு ஓடினேன். அவன் ஓடிவந்து என்னைப் பிடித்துவிட்டான்'' என்று சொல்லிச் சிறிது பெருமூச்சு விட்டாள். சயந்தி வியப்புடன் இடைமறித்து, "உன்னைப் பிடிக்கக் காரணம் என்ன?'' என்று கேட்டாள்.

"நான் பாலகருக்கு ஒற்றறிய வந்தவள் என்று அவன் எண்ணிவிட்டான். உடனே என்னைக் கட்டச் செய்து பல்லக்கில் ஏற்றி இங்கே அடைத்து விட்டான்'' என்று முடித்தாள் வசந்தி.

அவ்வளவையும் கேட்ட சயந்தி உடலும் உள்ளமும் சோர உட்காரவும் முடியாமல் அனற் பொறிபோல் பெருமூச்சு விட்டவளாய்ப் பொருமினாள். கண்களிலிருந்து நீர் சொரிந்து கொண்டே இருந்தது. உள்ளிருந்து வார்த்தைகள் வெளிப்பட முடியாமல் துக்கம் நெஞ்சை அடைத்தது. விரு விரு வென்று அவள் நெற்றியில் முத்துக்கள்போல் வேர்வை தோன்றின. அவள் மார்பு படபட வென்று அடித்துக் கொள்வதை வசந்தியும் அறிந்து கொண்டாள். சயந்தியின் மெய்ப்பாட்டின் மாறுதலைக் கண்டு, "ஏன் நீங்கள் இப்படி...'' என்றாள் வசந்தி.

'வெள்ளம் தலைக்குமேல் போய்விட்டது. இனி எனக்கு உலகில் என்ன இருக்கிறது? இவள் சொல்வ தெல்லாம் உண்மையானால், நான் இனி உயிர் வாழ்வது எதற்கு? இவளிடம் முடிவாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்' என்று எண்ணினாள்.

"வசந்தி, நீ சொல்லியதெல்லாம் புத்ததேவன் அறிய உண்மையா?'' என்றாள் குரல் தழுதழுக்க.

வசந்திக்குச் சயந்தியின் வார்த்தைகள் ஆச்சரி யத்தை அளித்தன.

"ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்? நான் சொல்லியதில் பொய் என்ன இருக்கிறது? உங்களுக்கு ஏற்பட்ட சந்தேகம் என்ன?" என்றாள் வசந்தி அவளை உற்றுப் பார்த்து.

"வசந்தி, உண்மையைச் சொல்கிறேன் கேள்! அவரே என் காதலர்!"

"யார்?"

"அவர்தான்! பத்திரையை இப்போது காதலித்திருக்கிறாரே, அவர் தான்!"

"ஸத்துக சிரேஷ்டியா?"

"ஆம்!" என்று தலைகுனிந்து விம்மி அழுதாள் சயந்தி.

"அது எப்படியம்மா?" என்றாள் வசந்தி தீவிர யோசனையுடன். வசந்திக்கு ஒருவாறு சயந்தியைப் பற்றித் தெரிந்துவிட்டது.

சிறிது நாழிகை வாய்பேசாமல் அளவு கடந்த துக்கத்தால் குமுறிக் குமுறி அழுது ஓய்ந்து அமைதி பெற்றபின் தன் வரலாறு முழுவதையும் வசந்தியிடம் சொன்னாள் சயந்தி. தனக்கும் ஸத்துகனுக்கும் காதல் ஏற்பட்டது முதல் அன்று வரையில் நடந்த சம்பவங்களை ஒன்றுவிடாமல் சொன்னாள். வசந்தி அவற்றைக் கேட்டு நிலைகுலைந்து போனாள். ஒவ்வொன்றையும் நினைக்க நினைக்க வியப்பு, கோபம், இரக்கம், துக்கம், ஆச்சரியம், பயம் இவை ஒன்றன் பின் ஒன்றாக உண்டாயின. ஸத்துகனின் மாயச் செய்கை அவளுக்கு நன்கு புலப்பட்டது. தொடக்கத்தில் தான் சந்தேகித்தது உண்மையாயிற்று என்று அறிந்து கொண்டாள். அதன் பின், ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் காதல் ஏற்பட்டதைப் பற்றியும் அதன்

பின்னர் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றியும் விரிவாகச் சயந்திக்குச் சொன்னாள்.

'நான் இனி உயிர் விடவேண்டியதுதான்' என்று முடிவாக எண்ணினாள் சயந்தி. அறிவு மயங்கி, இன்னது செய்வது, இன்னது சொல்வது என்று தெரியாமல் கண்கள் சுழலச் சுவரில் சாய்ந்து கொண்டாள். அப்போது கலகலவென்ற சிரிப்பொலி ஒன்று அறைக்கு வெளியே எழுந்தது. உடனே இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். சாளரத்தின் வெளிப்புறத்தில் அச்சனும் இளந்தத்தனும் நகைமுகத்துடன் தோன்றினர். அவ்வளவு நாழிகை வரையில் அங்கேயே இருந்துகொண்டு, தாங்கள் இருவரும் பேசியவற்றையெல்லாம் ஒற்றுக் கேட்டிருக்கிறார்கள் என்பதை அப்போதுதான் வசந்தியும், சயந்தியும் அறிந்தனர். வசந்தி திடுக்கிட்டாள்.

"பாலகன் ஸத்துகனால் கொலையுண்டது தெரிந்துவிட்டது. ஜயதுங்கனின் காதலி மானஸி ஸத்துக மந்திரத்தில் அடைபட்டிருப்பதும் எங்களுக்குத் தெளிவாக விளங்கிவிட்டது!" என்று சொல்லி நகைத்துவிட்டு அவ்விருவரும் மறைந்தனர்.

புண்ணில் வேல் இட்டதுபோன்று இருந்தன அவ்வார்த்தைகள், சயந்திக்கும் வசந்திக்கும். சயந்தியின் உள்ளம் உடைந்து சிதறுண்டது. கடல் அலைமீது அலையும் சிறு துரும்புபோலத் தவித்தாள். பலவாறாகச் சிதறுண்ட மேகத்திரள் மீண்டும் ஒன்றுனாற்போல் சயந்தியின் உடைந்த உள்ளமும் மறு கணத்தில் ஒன்றுபட்டது. "உலகில் ஆடவரை என்றும் நம்பலாகாது, அம்மா!" என்றாள் வசந்தி வெறுப்புடன்.

"அவர் என்னை வஞ்சித்தார்! வஞ்சித்தார்!" என்று அரற்றியவளாய் வசந்தியை இறுகத் தழுவிக் கொண்டாள் சயந்தி. தாய் போன்று வசந்தி சயந்

தியை அணைத்துக்கொண்டாள். அவள் காதில் 'வஞ்சித்தார்' என்பது ஒலித்துக் கொண்டேயிருந்தது.

## 19
## சந்தோஷச் செய்தி

'கணகண' என்ற மணியின் ஒலியையும் குதிரைகளின் காலடிச் சப்தத்தையும் கேட்டு, பத்திரை வீதியை நோக்கினாள். கன்னிமாடத்தின் வெளி வாயிலில் நான்கு குதிரைகள் பூட்டிய தேர் ஒன்று நின்றது. அதைக் கண்டதும் பத்திரை அடைந்த ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. பூக்களாலும் முத்துக்களாலும் அலங்கரிக்கப் பெற்ற அந்தத் தேரில் ஸத்துகனையும் தேர்ப்பாகனையும் தவிர வேறு யாரும் இல்லை. என்றும் போல் இல்லாமல் புதிய ஆடை ஆபரணங்களை அணிந்து குதூகலத்துடன் தோன்றினான் அவன். புன்னகை அரும்பிக்கொண்டிருந்தது அவன் முகத்தில். வீதியில் பவனி வரும் அரசிளங்குமரனோ என்று சொல்லும்படி தோன்றினான். இந்திர நீலம்போல் இருண்ட குஞ்சி இருபுறமும் தோள்களில் புரண்டு அழகு செய்யத் தேரினின்றும் கீழே குதித்தான். உவகையாலும் பெருமிதத்தாலும் உடல் பூரித்துக் கம்பீரமாகத் தோன்றினான். மார்பில் உயர்ந்த ரத்தின மாலைகள்; காதுகளில் இருசுடர் என ஒளிவிடும் குண்டலங்கள்; தோளில் வாகுவலயங்கள்; கைகளில் வைரக் கடகங்கள்; அரையில் பட்டுக் கச்சை; அதில் செருகிய வைரவாள்; கால்களில் வீரக் கழல்கள். இவ்வாறு புதிய அலங்காரத்துடன் அவன் மாடத்திற்குள் புகுந்தான். 'இவர் வடிவழகு தேவாம்சமோ என்னும்படி இருக்கிறதே' என்று எண்ணி வியப்புற்றாள் பத்திரை.

ஸத்துகன் பத்திரையிடம் ஒவ்வொருநாளும் புதுமை கண்டு களிப்பது போலவே பத்திரையும்,

ஸத்துகனிடம் புதுமையின் பொலிவைப் புதிது புதிதாகக் கண்டாள். அன்று அவள் கண்ட காட்சி அவள் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது. என்றும் இல்லாமல் இன்றைக்கு இவர் இவ்வித அலங்காரத்துடனும் குதூகலத்துடனும் தேரில் ஊர்ந்து வரக் காரணம் என்ன?' என்பதை அறிய ஆவலுடன் இருந்தாள். வசந்தியின் பிரிவால் வருந்தியிருந்த அவள் உள்ளம், ஸத்துகனைக் கண்டதும் கார்கண்ட பெடை மயில்போல் களிப்புற்றது. துக்கம் எல்லாவற்றையும் மறந்தாள். விரைந்து முன் வந்து அவனை ஆவலுடன் வரவேற்ருள். முத்து வரிசைகளெனப் பற்கள் சிறிதே வெளித்தோன்றி ஒளிவிடப் புன்முறுவல் பூத்தாள். ஸத்துகன் பத்திரையைக் களிநோக்குடன் பார்த்தான். அவள் முகத்தில் முதலில் தெரிந்த மாறுபாட்டையும் தன்னைக் கண்டவுடன் அவள் குதூகலம் கொண்டதையும் உணர்ந்தான். களித்துச் செருக்குற்ற பத்திரை ஸத்துகனுடன் கன்னிமாடத்தின் உட்புறம் சென்ருள். என்றும்போல் ஸத்துகனுக்கு உபசரணைகள் செய்தாள்.

ஸத்துகன் சுற்றுமுற்றும் நோக்கிய பின், “பத்திரை, ஏன் ஏதோ மாறுபட்ட முகத்துடன் இருக்கிருய்? வசந்தி எங்கே?” என்ருன். அவன் கேட்டதும் பத்திரையின் முகம் சட்டென்று மாறுபட்டது. அவளுடைய கருவிழிகளில் கலக்கம் பிரதிபலித்ததையும் கண்டான். அவனுக்குச் சற்றுச் சந்தேகம் உண்டாயிற்று. அதற்குள்ளாகப் பத்திரை தழுதழுத்த குரலில், “வசந்தி எங்கே என்று பின்பு சொல்லுகிறேன். முதலில் இன்று என்ன விசேஷம் என்பதைச் சொல்லுங்கள்!” என்ருள். அவ்விதம் கேட்பதில் அவளுக்கு எல்லையற்ற ஆதுரம். ஸத்துகன் அவள் வதனத் தோற்றத்திலிருந்து அவளுடைய உள்ளத்தில் துயரம் அலைமோதுவதை உணர்ந்தான்.

"நான் விசேஷச் செய்திகளைச்...சொல்லுகிறேன். அற்ப துக்கத்தை முதலில் அநுபவித்து விட்டால், அளவில்லாத இன்பத்தைப் பின்பு நுகரலாம். என்பது என் அநுபவம். ஆதலால் முதலில் வசந்தியைப்பற்றிச் சொல்லு" என்றான்.

தன் மனத்தை ஸத்துகன் அறிந்து விட்டதை அவள் உணர்ந்தாள். உடனே கண்ணீர் துளிக்க, குறத்தி வந்தது முதல் வசந்தி அவளைப் பின் தொடர்ந்து சென்றது வரையில் ஒன்று விடாமல் சொன்னாள்.

ஸத்துகனுக்கு அடக்க முடியாத கோபம் உண்டாயிற்று. சற்று ஆலோசித்தவனாய், "பத்திரை, கவலைப்படாதே" என்று பெருமிதத்தோடு புன்னகை செய்தான். அப்போது அந்தப் புன்னகையிலும் அவன் கண் பார்வையிலும் பிரதிபலித்த கோபத்தைப் பத்திரை கண்டு கொண்டாள்.

"உண்மையில் குறத்தி, பெண் அல்ல என்றா சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"இல்லை; நிச்சயமாக எனக்குத் தெரியும். அவள் நடை உடை பாவனைகளிலிருந்து ஆண் என்பதை அறிந்து கொண்டேன்" என்று பத்திரை சொன்னாள்.

"அப்படியானால் முன்பு முத்து விற்றுச் சென்ற ஜயதுங்கனாகத்தான் இருக்கவேண்டும்" என்று ஸத்துகன் சொன்னான்.

"அவன் அன்று; அவனைப் போன்ற வேறொருவன்!"

"இளந்தத்தனாய் இருக்கலாமோ?...அவன் அவ்வளவு துணிவுடன் இங்கே வருவானா?"

"யாராய் இருந்தால் என்ன? தங்கள் பகைக் கூட்டத்தவரில் ஒருவனே அவ்விதம் வந்திருக்கிறான். நீங்களே ஆலோசித்தால் அறிந்து கொள்ளலாம்."

"ஆம், ஒரு சந்தேகம் தோன்றுகிறது. இளந்தத்தனின் நண்பன் அச்சன் என்று ஒருவன் இருக்கிறான். அவனே இதைச் செய்திருக்கவேண்டும்; பெண் வேஷம் கொள்ளும் பேடி அவனேதான்" என்று ஸத்துகன் கூறியதும் பத்திரை இடை மறித்து, "அவன் இளந்தத்தனின் நண்பன் என்றால், வசந்தியை என்ன செய்வானோ? அவளுக்கு ஏதேனும் துன்பம் உண்டாகுமா?" என்றாள்.

"அவளை அவன் என்ன செய்ய முடியும்? அவளைக் கொண்டு என்ன உண்மையைக் கண்டுவிடப் போகிறான்? வசந்தியின் மறைவைக் காரணமாகக் கொண்டே அவர்களுக்குப் புத்தி கூறுகிறேன் பார்."

"அவளை அனுப்பியது என் குற்றந்தான். அவன் யார் என்று அறிந்து வரும்படி அனுப்பினேன். நேற்று முதல் என் மனம் அவளை எண்ணிப் பதைபதைத்துக் கொண்டே இருக்கிறது. தாங்களும் நேற்று மாலையிலிருந்து இங்கு வரவேயில்லை. யாரிடம் சொல்லி அனுப்புவது? தந்தையிடம் சொன்னேன். அவரும் கவலைப்படுகிறார். எவ்வாறேனும் அவளை அழைத்து வரவேண்டும்!" என்றாள் ஏக்கத்தோடு, பத்திரை.

"பத்திரை, நீ கவலைப்பட வேண்டாம். நாளைக்கே அதற்குத் தகுந்த ஏற்பாட்டைச் செய்கிறேன். நீ இப்போதே கவலையை விட்டுவிடு" என்றான் அவளை உற்று நோக்கியவாறு.

அப்போதுதான் பத்திரைக்கு ஆறுதல் உண்டாயிற்று. சற்று நேரம் இருவரும் வாய்திறவாமல் குறுநகையுடன் அமர்ந்திருந்தனர். பத்திரை மலர்ந்த முகத்துடன் அவனை நோக்கி, "தாங்கள் ஏதோ சொல்லுகிறேன் என்றீர்களே" என்று கேட்டாள். ஸத்துகன் பத்திரையைச் சற்றே பரிகசித்துப் பார்க்க எண்ணினான். அப்போதுதான், தான் கூறப்

போகும் சந்தோஷச் செய்தியால், அவள் உள்ளம் புளகாங்கிதம் அடையும் என்று எண்ணினான்.

"நான் அந்தச் சந்தோஷச் செய்தியைக் கூறுவதற்குமுன், நீதான் ஒரு துக்கச் செய்தியைச் சொல்லி விட்டாயே?" என்றான் புன்முறுவலுடன்.

"அந்த அற்ப துக்கம், உங்களைக் கண்ட அப்பொழுதே மறைந்து போய் விட்டது. இப்போது..." என்றாள் பத்திரை சிறிது நாணத்துடன்.

"இப்போதே சொல்லிவிடத்தான் வேண்டுமோ?"

"என்னிடம் சொல்லக் கூடியதானால் சொல்லுங்கள்..." என்று சொல்லும்போது பத்திரை பிணக்குற்றதை அறிந்துகொண்டான். பத்திரையின் கண்களும் கன்னங்களும் சட்டென்று சிவந்தன.

"பத்திரை, சொல்வதற்குள் கோபமா? இதோ பார்; இப்போதிருக்கும் உன் நிலையே அழகின் மிகுதியை நன்கு எடுத்துக் காட்டுகிறது. பவழத்தின் சிவப்பையும் வென்று விட்டன உன் அதரங்கள். உன் கன்னங்கள் சிவந்து பொருமுவது கோபத்தால் ஏற்பட்டதாயினும், உன் அழகின் மிகுதிப் பாட்டை அவை எடுத்துக் காட்டுகின்றன. உன் பெருமூச்சின் வெம்மை, உன் உள்ளத்தில் பதுங்கியிருக்கும் உணர்ச்சி வேகத்தையும், கோபத்தின் மிகுதியையும் புலப்படுத்துகிறது. இதோ உன்..." என்று சொல்லிக் கொண்டிருக்கையில் பத்திரை அதைக் கேட்க மனம் பொருதவளாய் மேலும் ஊடல் கொண்டாள். அவள் நெற்றியில் விறுவிறென்று வியர்வை துளித்தது. விழிகள் சிவந்து மருண்டன. யாவற்றையும் உள்ளடக்கிக் கொண்டவளாய், நகைத்து, "என்னை இவ்வாறு பேசுவதாயிருந்தால்..." என்று சொல்லி, ஸத்துகன் கைப்பிடியினின்றும் நழுவி அப்புறம் சென்றாள். அவளுடைய ஊடல் காட்சியைக் கண்டு நகை செய்தான் ஸத்துகன். "நீங்கள் சொல்லப்

போவதில்லையா ?" என்று கேட்டுக் கொண்டே பார்த்தாள்.

அதற்குமேலும் ஸத்துகன் விளையாட எண்ண வில்லை. அவள் நிலைக்கு மனம் இரங்கிக் குதூகலத் துடன் எழுந்து சென்று அவளுக்கு ஆறுதல் கூறினான். இருவரும் கட்டிலில் அமர்ந்தனர். "பத்திரை, இன்று தான் உன் அழகின் நிறைவைக் கண்டேன். அலங் காரத்தால் ஏற்படும் செயற்கை அழகு அழகல்ல. உன் சிறு பிணக்கில் தோன்றும் இயற்கை அழகே நிறை வுடையது. உன் ஊடலில்தான் என்றும் காண முடியாத பேரழகைக் கண்டேன். அதுவே எனக்குப் பேரின்பம் தருகிறது" என்றான்.

"நான் போகிறேன்; நீங்கள் கற்பனை செய்து கொண்டிருங்கள்" என்று இளமென்னகையுடன் சொல்லி எழுந்தாள் பத்திரை.

"வேண்டாம்; சொல்லுகிறேன் கேள்! நாளை முதல் பதினான்கு நாட்கள் வரையில் புத்த தேவ னுக்குத் திருவிழா நடக்கப்போகிறது. வருஷந்தோறும் சிறப்பாக நடந்து வருகிறது. இந்த விழாவை உலகத்தி லுள்ள பௌத்தர் யாவரும் சிறப்பாகக் கொண்டாடு வார்கள். நமது பௌத்த சங்கத்தில் நடக்கும் விமரிசைகளைக் கண்டு சோழவேந்தன் கூடத் திகைத்துப் போவான். நம் தேசத்தில் நான் ஒருவனே இந்த விழாவைப் பிறரால் செய்ய முடியாத அள வுக்குச் சிறப்புடன் செய்து வருகிறேன். இந்த நகரம் அதை அறியும். உன் தந்தையும் அறிவார். பதினான் காவது நாளன்று புத்த தேவன் அவதரித்த புண்ணிய தினம். அன்றைக்கு வைசாக சுத்த பூர்ணிமை. புத்த பகவான் ஞானோதயம் பெற்றதும் அன்றுதான் என்பார்கள்" என்று சொன்னதும், உவகையுடன் பத்திரை, "மங்கலத் திருநாள் என்பார்களே! அதைத் தானே சொல்லுகிறீர்கள்!" என்றாள்.

"வைசாக சுத்த பூர்ணிமையைத்தான் மங்கலத் திருநாள் என்று கொண்டாடுவார்கள். அன்றைக் குத்தான் உன் மணமங்கலத் திருநாளும்! அதைத்தான் சந்தோஷச் செய்தி என்றேன்" என்றுகூறி ஸத்துகன் அவள் கரங்களை இறுகப் பிடித்துக் கொண்டான்.

பத்திரை பேராச்சரியம் அடைந்தாள். "என்ன? என் மணமங்கலத் திருநாளா?" என்று கேட்டாள். அவள் உள்ளத்தின் களிப்பு மிகுதியை அவள் கண்களின் மலர்ச்சியிலே கண்டு கொண்டான் ஸத்துகன்.

"ஆம்; வைசாக சுத்தபூர்ணிமை தினம்; அந்த மங்கலத் திருநாளில் உன்னை உலகம் அறிய மணந்து கொள்வேன். அதற்கு வேண்டியதைச் செய்ய என் தந்தை ஒப்புக்கொண்டார்! அதில் உனக்குத் திருப்திதானே?" என்றான்.

மணம் என்றதுமே அவள் மனம் விம்மிதம் கொண்டது. தந்தையின் மனம் இனி அமைதி பெறும் என்று ஆறுதல் கொண்டாள். ஆனால் ஸத்துகன் கூறியதற்கு மறுமொழி என்ன சொல்வாள் அவள்? ஸத்துகனின் குதூகலத்திற்கும் உவகைக்கும் காரணம் என்னவென்பது அப்போது தான் பத்தி ரைக்குப் புலப்பட்டது. அதுகாறும் அவள் தன் உள் ளத்தில் அடக்கிக் கொண்டிருந்த பெருங் கவலையைப் போக்கியவளாய் நீண்ட பெருமூச்சு விட்டாள். உண்மையில் அந்தப் பெருமூச்சிலேயே அவள் கவலைகள் யாவும் தீர்ந்தன. உவகையால் கண்களில் நீர்துளிக்கத் தனக்குத் தானே வியப்புற்றாள். அவள் உடம்பாட்டை உவகைக் கண்ணீராலும், மௌனத் தாலும் ஸத்துகனுக்கு உணர்த்தினாள்.

அரைநாழிகைப் போதில் பத்திரையின் நிலையே மாறி விட்டதைக் கண்டான் ஸத்துகன். தான் கூறிய நற்செய்தியால் அவள் அளவற்ற உவகை கொண்டாள்

என்பதை உணர்ந்தான். அவள் நினைந்து மகிழ்ந்து பெருமிதமுற்றதைக் காட்டிலும் பன்மடங்கு உள்ளம் பூரித்தான் அவன். இயற்கை, அவனை ஒரு வீர புருஷனாகவும், அழகு மங்கையாகிய அவளை அவனுக்குக் காதலியாகவும் வாய்க்கச் செய்ததில் வியப்பு என்ன இருக்கிறது?

ஸத்துகனின் அழகையும் வீரத்தையும் அந்நகரில் அறியாதவர்கள் இல்லை. தேவகுமரன் என்று யாவரும் புகழும் பெருமை வாய்ந்தவன்; அவனைக் காதலனாகப் பெற்ற பத்திரையின் அழகை எடுத்துச் சொல்வதும் அரிது. உலகில் காதலர்களின் சிருஷ்டி ஒன்றற்கொன்று ஒப்புமையுடையதாக வாய்ப்பது அரிதல்லவா? 'அழகின் வகைகள் யாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துச் சிருஷ்டித்த உயிருள்ள பெண் பிரதிமையே இவள்!' என்று சந்தேகித்து ஸத்துகன் ஒவ்வொரு சமயத்தில் மதிமயங்கி யிருக்கிறான். அவர்கள் ஆவல் ஒருபோதும் தணிந்ததில்லை. ஸத்துகன் பத்திரையின் அழகு நலத்தை முற்றும் நுகர முடியாமல் ஏங்கித் தவித்தான். பழியும் பாவமும் அற்ற இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு இன்பம் பெறவில்லையே என்பதுதான் பத்திரையின் மனக்குறையும். அதை அவள் வாய்திறந்து கூற வில்லை. ஆனால், அவள் தந்தையின் வற்புறுத்தலும், அவ்வப்போது அவர் கூறும் வார்த்தைகளும் அவள் மனத்தைப் புண்படுத்தி வந்தன. நாளடைவில் அவள் உள்ளமே அதை உணர்ந்தது.

இல்லறம் என்னும் மண வாழ்க்கையிலேதான் நிலையான, தூய, இன்பத்தைப் பெற முடியும் என்பதைப் பத்திரை உணர்ந்து அதற்குத் தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியே இருந்தாள். அவள் தந்தை ஏனாதி மும்முடி நாயகனும் சமயம் வாய்த்த போது பத்திரைக்கும் ஸத்துகனுக்கும் புத்தி

கூறுவான். அயலில் உள்ள பலரும் பலவாறு பழிமொழி கூறத் தலைப்பட்டனர். அவற்றையெல்லாம் உணர்ந்தோ, உணராமலோ ஸத்துகன் பத்திரையை மணம் புரிந்து கொள்வதென்று முடிவு செய்தான். அவ்விதம் அவன் அவ்வளவு விரைவில் முடிவு செய்ததைக் கேட்டவுடன் பத்திரைக்கு ஆச்சரியமும் ஆனந்தமும் கட்டுக் கடங்காமல் உண்டாயின. ஸத்துகன் கூறிய சந்தோஷச் செய்தியைக் கேட்டதும் பத்திரை பரவசமானாள் என்றே சொல்லவேண்டும். வாய்திறந்து பேசாவிடினும் காதல் கனிந்த நோக்குடன் அவனை நோக்கினாள். அவளுடைய உள்ளக் கிளர்ச்சியை அவள் கண்களே உணர்த்தின.

"பத்திரை, உன் தந்தையிடம் கூறும்படி என் தந்தை சொல்லியிருக்கிறார்; வா போவோம்" என்று எழுந்தான் ஸத்துகன். மேன் மாடத்திற்குச் சென்றான்: நாணங்கொண்ட பைங்கிளியாகிய பத்திரையும் பின்னே சென்றாள். நாய்கன் இவர்கள் வருகையைக் கண்டு எழுந்து உட்கார்ந்தான். ஸத்துகனை ஆசனத்தில் அமரச்சொல்லி வந்த செய்தியைக் கேட்டான். ஸத்துகன் மணத்தைப் பற்றி எடுத்துக் கூறித் தன் தந்தை சொன்னதையும் மொழிந்தான். அதைக்கேட்டதும் பெரும்பாரம் நீங்கியதுபோல் ஆயிற்று நாய்கனுக்கு. 'பின்னே என்ன நேர்ந்தாலும், எப்படியானாலும் இவர்கள் உலகறிய மணம் புரிந்துகொண்டால் போதுமானது' என்று உறுதி செய்தான் அவன். பத்திரையின் மணத்தைப்பற்றி நாய்கனுக்கு உள்ளூறச் சந்தோஷம் இருந்ததோ இல்லையோ! ஸத்துகனும் பத்திரையும் எல்லாவகையிலும் ஒப்புடையவர்களே என்பதால் அவனுக்கு அளவற்ற உவகைதான். எனினும் ஸத்துகனின் வாழ்க்கையில் அடிக்கடி துயர்ப் பேரலைகள் தோன்றிக்கொண்டே இருக்குமே என்றுதான் அவன் மனம் சஞ்சலம் அடைந்தது. இப்போது அதைப்

பற்றி நினைப்பதில் பயன் என்ன இருக்கிறது? தன்னுடைய நிறைந்த திருப்தியை ஸத்துகனிடம் தெரிவித்தான்.

உடனே நாய்கன் ஏவலாளரைக் கொண்டு காரியப் பெயரை அழைத்துவரச் செய்தான் காரியப் பெயர் நால்வர் வந்தனர். அவர்களிடம் முதலில் மண விழாச் செய்தியைச் சொல்லிவிட்டு, 'பத்திரைக்கும் ஸத்துகனுக்கும் மணம் செய்வதில் தனக்குள்ள விருப்பத்தையும், பத்திரைக்குச் சீதனமாகப் பத்துக் கோடி பொன்னும் ஐந்து கப்பல் வருவாயும், இரண்டு மாளிகைகளும் மகத தேசத்துக் குதிரைகளும் பாடலிபுரத்துப் பல்லக்குகளும், சேடியர் பதின்மரும் தருகிறேன்' என்பதையும் பெருஞ்சாத்துவனிடம் கூறும்படி சொல்லியனுப்பினான். அவர்கள் ஏறி பெருஞ்சாத்துவன் மாளிகையை நோக்கிச் சென்றார்கள்.

நாய்கன் பத்திரையைத் தன் அருகில் இருத்தி அவள் மனம் குளிரும்படி நல்ல வார்த்தைகள் மொழிந்தான். வசந்தியைப்பற்றி அப்போது ஞாபகம் வரவே அவளைப்பற்றி ஸத்துகனிடம் நாய்கன் கேட்டான். ஸத்துகன் அதற்கு மறுமொழி அளித்துச் சமாதானம் சொன்னான். 'தந்தையின் உள்ளம் குளிர்ந்தது!' என்று ஆறுதல் கொண்டாள். ஸத்துகன் எழுந்து நாய்கனை வணங்கி விடைபெற்றுக் கொண்டான். பத்திரை அவனைப் பின் தொடர்ந்து கன்னிமாடம் போனாள். ஸத்துகனுக்கு அப்போது தான், ஆறுதலும் அமைதியும் உண்டாயின. மாலை இளந்தென்றலில் மனம் களிப்பெய்த, கன்னி மாடத்தின் பின்னுள்ள தோட்டத்தினுள் புகுந்தனர் இருவரும். ஆணும் பெண்ணுமாகிய இணை பிரியின் உயிர் வாழா, அன்றிற் பறவை இரண்டென, ஸத்துகனும் பத்திரையும் குதூகலித்திருந்தனர். தூய வானில் தோன்றும் மேகம்போல் 'வசந்தி

இல்லையே' என்ற நினைவு அவர்கள் உள்ளத்தில் இடையிடையே தோன்றி மறையும்! ஆனால் இன்ப வெள்ளத்தில் காதற் புணைகொண்டு நீந்தித் திளைத் திருக்கும் அவர்களுக்கு அப்போது அவளைப்பற்றிக் கவலை என்ன?

## 20

### மார்க்கலி

இன்பமும் துன்பமும் ஒன்றன்பின் ஒன்றாக மாறி மாறி வருவதை ஸத்துகன் நன்கு உணர்ந்து தெளிந்தவன். அதனால் அவன் எந்தக் காரியத்திலும் மனம் தளர்வதில்லை. உண்மையை உணர்ந்தவனா யிருந்தும் அவ்வப்போது துன்புறும்போது கோபமும் இன்புறும்போது மகிழ்வும் கொள்வான். கோபத்தால் உள்ளும் புறமும் கொதித்து எழுவான் அப்போது யார், எது கூறினும் அவன் கோபம் தணியாது. இன்பத்தால் அவன் அடையும் உவகைப் பெருக்கை எடுத்துச் சொல்லி அளவிடமுடியாது. இன்பத்திற்கு யாரே மகிழாதவர்? - அதுவும் புதிய காதல் மங்கை யாகிய பத்திரையை மணந்துகொள்ளப் போவதால் அவனுக்கு உண்டாகியிருக்கும் அளப்பரும் மகிழ்ச் சியை எவ்வாறு கூற முடியும்? இந்திர விழாவில் அவர்களிடையே தளிர்த்த காதல், மெல்ல மெல்ல அரும்பாகி, காய்த்து இன் கனியாகும் தருவாயில் அன்றோ இருந்தது?

சயந்தியினிடம் ஏற்பட்ட அளவற்ற பிரேமை யால் தன் ஆருயிர் நண்பனாக இருந்த இளந்தத்தனை ஜன்மப் பகையாகக் கொண்டான். அவ்விதம் இளந் தத்தனைப் பகைவனாகக் கொண்டதே ஸத்துகனின் வாழ்க்கை பலவகையிலும் சீர்குலையக் காரண

மாயிற்று. அதன் பின்னர் பத்திரையின் மீதுகொண்ட தீவிரக் காதலால் சயந்தியின் தொடர்பை விலக்கிக் கொள்ள முயன்முன்; அதனுல் பின்னும் அவன் வாழ்வு நாசத்திற்குக் காரணமாயிற்று. ஸத்துகன் சயந்தியை மறக்க முயன்ருலும் அது அவனுல் முடியாத காரியமாக இருந்தது. செம்மண் நிலத்தில் பெய்த மழை நீர்போல் அவர்கள் உள்ளம் தாமாகவே கலந்து விட்டன; செம் மண் நிலத்தை வேருகவும் அதிற் பெய்த நீரை வேரு கவும் பிரிக்க முடியாதது போல் அவர்கள் உள்ளங் களும் பிரித்தற்கு இயலாமல் கலந்து விட்டன. ஸத்து கனின் உள்ளத்தில் சயந்தியைப்பற்றிய சிந்தனை அறவே இல்லாமல் போகவில்லை. அவன் அதை அறியாமல் இல்லை அறிந்தும் அறியாதவன் போல் இருந்தான். பத்திரையிடம் தன்னை முற்றும் அடிமை யாக்கிக்கொண்டு விட்டதே அதற்குக் காரணம். இப்போது பத்திரையை மணம் புரிந்துகொள்ளும் நிலையில் அவன் சிந்தனை வெளியிலே சயந்தி மறைந்து வாழ்ந்தாள். பத்திரையின் உள்ளத்தில், 'நான் மணமாகாத நிலையில் இவருடன் எவ்வளவு நாட்கள் இப்படியே இருக்க முடியும்? இவ்விதம் இருப்பது பெருந் துன்பத்தையும் பெரும் பழியையும் அல்லவா உண்டாக்கும்? இவருக்கு இதைப்பற்றிய சிந்தனையே இல்லையே? நான் எவ்வாறு சொல்லு வேன்?' என்று பத்திரை கவலைப்பட்ட பின்பே அவள் மணத்தைப்பற்றி ஸத்துகன் முடிவு செய்தான். அவன் விருப்பத்திற்கு அவன் தந்தையும் அவள் தந்தையும் உடன்பட்டவே ஸத்துகன் உள்ளம் குளிர்ந்தான். எனினும் அவன் உள்ளத்தில் சயந்தியைப்பற்றிய புரட்சிகரமான எண்ணங்கள் தோன்றி அலை மோதாமல் இல்லை. அவ்விதம் அவன் உள்ளத்தில் சுழன்றுகொண்டிருந்த எண்ணங்களைப் பத்திரையின் புதுமை நிறைந்த மோகம் திரையிட்டு மறைத் திருந்தது.

புத்ததேவன் அவதரித்த புண்ணியத் திருநாள்—போதி மரத்தின் கீழ் தேவன் ஞானம் பெற்ற புனிதத் திருநாள்—அன்று வைசாக சுத்த பூர்ணிமை. உலகெலாம் கொண்டாடும் அந்த மங்கலத் திருநாளைச் சிறப்புறக் கொண்டாடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை ஸத்துகன் முன்பே செய்துவிட்டான். இப்போது அவன் செய்யவேண்டியது பத்திரையின் மணமங்கலத் திருநாளுக்கு ஆகவேண்டிய காரியங்களே. பத்திரையை மணந்து கொள்ளப் போவதில் அவனுக்கு இருந்த ஆவலும் பேருவகையும் கட்டுக்கு அடங்காதவை. அந்த உவகைப் பெருக்கிலே யாவற்றையும் அவன் மறந்திருந்தான். பத்திரையின் விருப்பங்களைப் பூர்த்தி செய்வதிலேயே அவன் கருத்து ஒன்றியிருந்தான். ஒரு குறை அதில் இருப்பதாக அவன் எண்ணி, தன் வாக்குறுதியையும் நினைத்தான். அதுவும் பத்திரையின் காதல் இன்பத்தை நிறைவுடன் பெறவேயன்றி வேறல்ல.

'பத்திரையை நான் முதலில் காதலித்தபோதும் அதன் பின்னரும் எனக்கு என்றென்றும் மறவாத பேருதவிகளைச் செய்த வசந்தியைப் பகைவரிடமிருந்து மீட்டுவிடவேண்டும். அப்போதுதான் பத்திரையின் கவலை நீங்கும். எனக்கும் பத்திரைக்கும் நடக்கவிருக்கும் மணத்தை வசந்தியும் பார்த்துக் களிக்கவேண்டாமா? அவள் இல்லாமல் இருப்பது ஒரு குறையல்லவா?'' என்று எண்ணினான். 'வசந்தியின் நிலை என்ன ஆயிற்றோ தெரியவில்லையே? அவள் வந்த பின்பே என் மனம் ஆறுதல் அடையும். அவளைக் கொண்டு ஏதேனும் வஞ்சகம் செய்தாலும் செய்வார்கள். பெருந் துன்பங்களும் உண்டாகலாம். எவ்வாறேனும் அவளை முதலில் நீங்கள் மீட்டுவர முயலவேண்டும். அப்போதுதான் என் கவலை நீங்கும்' என்று பத்திரை, முதல் நாள் இரவு தன்னிடம்

வற்புறுத்திக் கூறியதும் அவன் நினைவுக்கு வந்தது. வசந்தியை எவ்வாறு மீட்பது? அவள் இருக்கும் இடத்தை எவ்வாறு தெரிந்துகொள்வது? என்றே ஸத்துகன யோசித்தான்.

'வசந்தி யாருடைய காவலில் இருக்கிறாள்? அவளே எங்காவது போயிருப்பாளா? அவ்விதம் சொல்லாமல் போகும் வழக்கம் அவளுக்கு இல்லையே! ஆனால், குறத்தி வேஷம் கொண்டு வந்தவன் யார் என்று தெரிந்தால் நிச்சயம் இப்போதே கண்டு பிடித்து விடலாம். வந்தவன் யார் என்று தெரிய வில்லையே. அச்சன் என்று நிச்சயிப்பதற்கும் இல்லை. எவ்விதம் இருந்தாலும் இளந்தத்தன், ஜயதுங்கன், அச்சன் இம் மூவரில் ஒருவனே இவ்வஞ்சகம் செய்திருக்கிறான். எனக்கும் பத்திரைக்கும் தீங்கிழைக்கவே இந்தச் சூழ்ச்சி நடந்திருக்கிறது. இது இளந்தத்தனின் சூழ்ச்சி என்பதில் சந்தேகமில்லை. இதை இன்றே கவனிக்க வேண்டும்' என்று சிந்தித்த வண்ணம், தன் மாளிகையின் உள் அறையில் சாய்ந்திருந்தவன் சரேலென்று எழுந்தான், ஒரு முடிவுக்கு வந்தவன் போல். உண்மையில் அவனுக்கு ஒரு முடிவு புலனாயிற்று.

ஏவலாளரை அழைத்தான்; தேரை ஆயத்தம் செய்யுமாறு பாகனுக்குக் கூறும்படி சொன்னான். 'தேர் புறப்படச் சித்தமாயிற்று' என்று ஏவலாளர் கூறினர். ஸத்துகன், விரைந்து சென்று தேரில் ஏறி அமர்ந்தான். பாகன் ஸத்துகனின் குறிப் பறிந்து விரைவாக ஸத்துக மந்திரத்தை நோக்கித் தேரைச் செலுத்தினான். தேரின் வேகத்தைக் காட்டிலும் மிகுதியாக, ஸத்துகனின் சிந்தனைத் தேர் பறந்தது. தேர் உருளைகளின் கடகட என்ற முழக்கமும் குதிரைகளின் காலடிச் சப்தமும் ஸத்துகனின் பரபரப்பை மிகுதிப்படுத்தின. வசந்தியைப்

பற்றிய பெருங்கவலை அவன் மனத்தில் குடி கொண்டது.

சில கணங்களில், தேர் ஸத்துகமந்திரத்தை அணுகியது. சங்கத்தின் உட்புறம் சென்று தேர் நின்றதும் ஸத்துகன் நிலத்தில் குதித்து உள்ளே புகுந்தான். முதலில் சங்கத்தின் தோற்றத்தையும் அலங்காரத்தையும் கண்டு களிப்புற்றான். அடுத்த கணத்தில் தான் வந்த காரியத்தைப் பற்றிய நினைவு வரவே விரைந்து உள்ளே சென்றான். அவன் மனோ வேகத்திற்குச் சிறிதும் குறையாமல் இருந்தது அவனுடைய நடையின் வேகம். அவனைக் கண்டு சங்கத்தினர் நடுங்கிப் போயினர். ஏனென்றால் ஸத்துகனின் கோபத்தால் ஏற்படும் விபரீதங்கள் அவர்களைப் பாதித்துக்கொண்டேயிருந்தன. கடந்த சில நாட்களாக ஸத்துக மந்திரத்தைப் பற்றி மாறுபட்ட அபிப்பிராயங்கள் நகரத்தில் உலாவுவதை அறிந்த ஸத்துகன், ஒருநாள் சங்கத்திலுள்ள யாவருக்கும் கடுமையான கட்டளைகளை ஏற்படுத்தி விட்டான். அன்று முதல் பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் யாவரும் அவரவர் விருப்பம் போல் பிக்ஷைக்குப் போவதும் வருவதும் முடியாமற் போய்விட்டது. சேர்ந்து பேசிக் கொள்வதும் இல்லாமல் போய்விட்டது. இப்போது மங்கலத் திருநாளின் கொண்டாட்டத்திற்காகப் பதினைந்து நாட்கள் வரையில் யாவருக்கும் கட்டுப்பாடுகளைக் குறைத்திருந்தான். ஆனால் அன்றைத்தினம் அவன் முகமாறுதலைக் கண்டதும், 'என்ன நேரிடுமோ!' என்று அஞ்சி நடுங்கினர் அங்குள்ள யாவரும்.

பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள், உபாஸகர், உபாஸினிகள் யாவரும், மங்கலத் திருநாள் கொண்டாட்டத்திற்காகச் சங்கத்தை அலங்கரிப்பதிலும், அதைப் பற்றிப் பேசுவதிலும் முனைந்திருந்தனர். ஒருபுறம் சமய ஆராய்ச்சி நடந்து கொண்டிருந்தது. மற்றொரு

புறம், புத்த தேவனின் திருவிளையாடல்களைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தனர். போதி சத்துவன் அருளிய பிடகத் திரயங்களை ஆராய்ந்து கொண்டிருந்தனர் வேறு ஓரிடத்தில். புத்தராக அவதரித்தவர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர் மற்றோரிடத்தில்— இவ்வாறு ஒவ்வோரிடத்திலும், கூட்டம் கூட்ட மாய்க் குதூகலத்துடன் இருந்தனர். பன்னிறப் பூக்களாலும் பட்டுக்களாலும், முத்துக்களாலும், பூவாடைகளாலும், பிரதிமைகளாலும் எங்கும் அலங்கரிக்கப் பெற்று விளங்கியது ஸத்துக மந்திரம். கொடிகள், தோரணங்கள், விதானங்கள் முதலியன கட்டிய வண்ணம் உபாஸகர்களும், வீரர்களும் காரியத்தில் ஈடுபட்டிருந்தனர்.

அவை யாவற்றையும் நோக்கியும் நோக்காமலும் நேராகச் சென்றான் ஸத்துகன். அவன் வருகையை முன்னதாகவே புத்த மித்திர அடிகளுக்கு உணர்த்து வதற்கு ஒருவன் முன்னே ஓடினான். ஸத்துகன் விரைந்து சென்று புத்த மித்திர அடிகளை அவர் இருப் பிடத்தில் காணாமல் புத்த தேவன் கோயிலுக்குச் சென்றான். அங்கு புத்தமித்திர அடிகள் இருப்பதாகத் தெரியவே உள்ளே புகுந்தான். புத்த தேவன் பிரதிமையையும், கோயிலையும் அலங்கரிப்பதில், புத்த மித்திரரும், அமிர்த சந்திரனும் முனைந்திருந்தனர். அங்கே மாணிக்கம், மரகதம், முத்து, பொன், வைரம் முதலியவற்றால் செய்த ஆபரணங்கள் குவியல் குவிய லாகக் குவிக்கப் பெற்றிருந்தன. அவற்றில் பெரும் பாலானவை, காளனின் கொடிய முயற்சியால் களவு செய்யப்பட்டுப் புத்த தேவனுக்குக் காணிக்கை யாக்கப்பட்டவை. அவற்றிற்காக எத்தனையோ உயிர்கள் பலியாகியிருக்கின்றன. ஆனால், அந்தப் பொருள்கள் யாவும் போதிநாதனின் மங்கலத் திருநா ளன்று பலருக்கும் ஸத்துக சிரேஷ்டியால் தானம் செய்யப்பெறும்.

அந்தப் பொற்குவியல்களுக்கு இடையே புத்த மித்திர அடிகளும், அமிர்தசந்திர பிக்ஷுவுமே இருந்தனர். வேறு எவரும் அங்கு இல்லை. ஸத்துகனைக் கண்டதும் அவர்கள் இருவரும் எழுந்து வரவேற்றனர். ஸத்துகன் சிறிது புன்னகையுடன், சங்கத்தின் நிகழ்ச்சிகளைப்பற்றி அவர்களுடன் பேசியவாறே அங்குள்ள பொன் அறைக்குள் புகுந்தான். புத்தமித்திரரும் அமிர்த சந்திரனும், ஸத்துகனின் முகத்திலுள்ள மாறுபாட்டை உணர்ந்து திகைத்தனர். மூவரும் பொன்னறையில் அமர்ந்த பின்னர், புத்த மித்திரரும் குறிப்புடன் ஸத்துகனை நோக்கினார். ஸத்துகன் அவர் குறிப்பை உணர்ந்து சிறிதும் தாமதம் செய்யாமல், வசந்தியைப்பற்றி விவரமாகச் சொன்னான். புத்த மித்திரர் அவற்றைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனார். காரியம் இவ்வளவுக்கு வந்து விடும் என்று அவர் எண்ணவேயில்லை. அமிர்தசந்திரன் மனம் பொறுதவனாய், "ஸத்துகரே, இவையெல்லாம் இளந்தத்தனின் வஞ்சனை என்பதில் ஐயமில்லை. விஷச் செடியை முளையிலேயே கிள்ளி எறிந்து விட வேண்டும்; அது முற்றி மரமான பின்பு ஒன்றும் செய்ய முடியாது. வயிரம் பாய்ந்து விடும். ஆதலால் இவ்விஷயத்தை உடனே கவனிக்க வேண்டும்" என்று பரபரப்புடன் சொன்னான். ஸத்துகன் அவனைக் கையமர்த்திவிட்டு புத்த மித்திரரின் யோசனையைக் கேட்டான். புத்த மித்திரர் ஆலோசித்துவிட்டு, "ஸத்துகரே, மங்களத் திருநாள் முடிந்த பின்பு அவர்களைத் தண்டிக்கும் காரியத்தை மேற்கொள்ளலாம். ஆனால் இப்போதே அவனுக்கு, "வசந்தியை விட்டு விடும்படி நய பயத்துடன் ஒரு லிகிதம் எழுதி அனுப்புங்கள். அதுவே போதும். அதன் பின் நடப்பதை யோசித்துச் செய்வோம். திருமுகத்தை, நம், மர்க்கலியினிடமே கொடுத்தனுப்பவேண்டும்" என்றார். ஸத்துகனும் அதற்கு உடம் பட்டான். உடனே இளந்தத்தனுக்கு ஒரு திருமுகம் எழுதினான்.

"ஸத்துக சிரேஷ்டியின் திருமுகம்; இளந்தத்தன் காண்க:

உன் வஞ்சகமும் சூழ்ச்சியும் முற்றும் எனக்குத் தெரிந்துவிட்டன. அதற்குத் தகுந்த காலத்தை எதிர் பார்த்திருக்கிறேன். உன்னாலும், உன்னை வழிபட்டு வாழும் அச்சன், ஜயதுங்கன் என்பவர்களாலும் செய்யப்படும் பெருமாயச் செயல்களையும் நான் அறிவேன். என் இயல்பை அறிந்திருக்கும் நீ இவ்வாறு மதிமழுங்கிப் போனது உன் ஊழ்வினையே! உன் செய்கைகள் யாவும் காலனைக் கைதட்டி அழைப்பதேயன்றி வேறல்ல. வேந்தனின் துணைகொண்டு என்னைச் சதிசெய்ய எண்ணியிருக்கும் உன்னைப் புத்தியீனன் என்றுதான் சொல்வேன். முடிவாகச் சொல்கிறேன்: உன் குற்றங்களுக்கு இனி மன்னிப்பே இல்லை. குறத்தியாக வந்து ஒற்றறிந்து பத்திரையை வஞ்சித்து வசந்தியை மறைத்து வைத்திருக்கும் உனக்கு வீரம், மானம் என்பன பருந்துக்கும் இல்லை என்றே புலப்படுகிறது. சோழ வேந்தன் உண்மையை உணராமல், உனக்கு ஏனாதிப் பட்டம் அளித்துச் சேனைத் தலைவனாக்கி விட்டான். என்னைச் சதி செய்வதற்கென்றே உனக்கு அவ்விதச் சிறப்புச் செய்திருக்கலாம். எது எப்படி இருந்தாலும், உன் வாழ்நாள் வீழ்நாளாகாமல் விரைவில், இன்று மாலைப் பொழுதுக்குள் வசந்தியை விட்டுவிடுவாயாக. அவ்விதம் செய்வாயானால், இன்னும் பத்து நாட்களேனும் உன் உயிர் உடலில் தங்கியிருக்கும். இல்லையேல் உன் விதியை விரைவில் அழைப்பேன். காளனின் கதிர்வாள் உன்னைக் கடுகி வரும்! பிழைத்துக் கொள்! புத்த தேவன் ஆணை!"

ஸத்துகன் எழுதிய திருமுகத்தைப் புத்தமித்திரரும் அமிர்த சந்திரனும் பார்த்து மகிழ்ந்தனர். தலையை அசைத்து உடம்பாட்டைத் தெரிவித்தனர்.

உடனே அமிர்த சந்திரன் சென்று மார்க்கலியை அழைத்து வந்தான். மார்க்கலி, பெரிய போர் வீரன். காளனுக்கு அந்தரங்க ஊழியன். அவனைப் பற்றி அறியாதவர் இல்லை. ஸத்துகன் அவனிடம் விஷயத்தைக் கூறித் திருமுகத்தையும் கொடுத்தான். மார்க்கலி அம்பெனக் கடிதிற் சென்று குதிரைமீது ஏறிப் புறப்பட்டான். காற்றெனக் கடுகியது அவன் குதிரை. வீதியில் யாவரும் 'மார்க்கலி போகிறான், மார்க்கலி போகிறான்' என்று கூறிக் கொண்டனர். 'காளனும் வருவான்' என்று அஞ்சிப் பதைபதைத்தனர்.

ஸத்துக மந்திரத்திற்கும் இளந்தத்தனின் மாளிகைக்கும் நெடுந்தூரம் இருந்தது. ஆனால், மார்க்கலிக்கு அது ஒரு பொருட்டாி பல குறுக்கு வழிகளில் புகுந்து மிக விரைவில் இளந்தத்தனின் மாளிகையை அடைந்தான். அருகில் காவிரியாற்றின் கரையில் குதிரையை நிறுத்திவிட்டு மாளிகை வாயிலை அடைந்தான். இரண்டு வாள்வீரர் அங்கே காவல் காத்து நின்றனர். மார்க்கலியை உள்ளே புகவிடாமல் தடை செய்தனர். கையில் இருந்த திருமுகத்தைக்காட்டி, "ஸத்துக சிரேஷ்டியின் திருமுகம் இது. இளந்தத்தரை உடனே பார்க்க வேண்டும்" என்றான் மார்க்கலி.

"யாரோ பேசிக்கொண்டிருக்கிறார்கள். இப்போது பார்க்க முடியாது" என்றனர்.

மார்க்கலிக்குக் கோபம் தாங்கவில்லை. கடுஞ் சினத்துடன், "தெரியும் எனக்கு; நான் யார் தெரியுமா? மார்க்கலி! காளனின் ஊழியன்!" என்றான்.

காவல் வீரர்கள் பிரமித்துப் பின்னே நகர்ந்தனர். இடி இடித்தாற் போன்று இருந்தன மார்க்கலியின் வார்த்தைகள். அவர்கள் பின்னே சென்றவுடன் மார்க்கலி உள்ளே புகுந்து விரைந்து சென்றான்.

போகும்போதே ஒவ்வோர் இடத்தையும் நோக்கியவாறே சென்றான். வசந்தியைத் தேடியல்ல. இளங்

த்தன் எங்கு இருக்கிறான் என்றே தேடினான். அப்போது மாளிகையின் நடு இடத்தில் சென்றுகொண்டிருந்த பணிப்பெண் ஒருத்தியை, "இளந்தத்தன் எங்கிருக்கிறான்?" என்று கேட்டான். அவள் அருகில் உள்ள ஓர் அறையைச் சுட்டினாள். உடனே அந்த அறைக்குள் புலிபோல் புகுந்து நின்றான் மார்க்கலி.

அந்த அறையில் அமர்ந்து யோசனைசெய்து கொண்டிருந்த ஜயதுங்கன், அச்சன், இளந்தத்தன்—மூவரும், உள்ளே புகுந்த மார்க்கலியைக் கண்டதும் திடுக்குற்றனர். அடுத்த கணத்தில் இளந்தத்தன் கடுங்கோபத்துடன், "உன்னை உள்ளே புகவிட்டது யார்? எதற்கு வந்தாய்?" என்று கேட்டவாறு எழுந்து அவன்முன் சென்றான். மார்க்கலி பேச்சவிந்து நின்றான்.

இளந்தத்தன் முதலிய மூவரும் மார்க்கலியைப் பற்றி நன்கு அறிந்தவர்கள். ஒற்றறிவதற்கே மார்ககலி வந்திருக்கிறான் என்று அவர்கள் முதலில் எண்ணிவிட்டார்கள். மார்க்கலி சிறிதும் அசையவில்லை. இளந்தத்தனுக்கு நேராகத் தான் கொண்டு வந்த திருமுகத்தை நீட்டினான். வியப்புடன் சட்டென்று இளந்தத்தன் அதை வாங்கிப் படித்தான். மீண்டும் ஒரு முறை தனக்குள் படித்துக் கொண்டான். அவன் உள்ளத்தில் பொங்கியெழுந்த கோபம் பெருநகையாக வெளிப்பட்டது. ஜயதுங்கனும் அச்சனும் வியப்புடன் இளந்தத்தனை நோக்கினர். திருமுகத்தை வெளிப்படையாக அவர்கள் கேட்கும்படி படித்தான். உடனே மூவரும் இடியொலியென, இடைவிடாமல் நகைத்தனர். மார்க்கலிக்குக் கோபமாகவே இருந்தது. அவன் என்ன செய்வான்? ஸத்துகன் கட்டளையை மீறிச்செய்வானா? இளந்தத்தன் மார்க்கலி பார்த்திருக்கும் போதே, ஸத்துகனின் திருமுகத்தைப் பல துண்டுகளாகக்

கிழித்தெறிந்தான். கோபத்தால் கண் சிவந்தான் மார்க்கலி. மார்க்கலிக்குப் புரியாதவாறு இருவருடனும் ஏதோ ரகசியம் பேசினான் இளந்தத்தன். ஒரு முடிவுக்கு வந்தவர்கள்போல் தலையை அசைத்துக் கொண்டனர் மூவரும்.

"மார்க்கலி! ஸத்துகனின் திருமுகம் எனக்கு மகிழ்ச்சியையே தருகிறது. ஆனால், ஸத்துகன் நினைப்பதுபோல், எழுதியிருப்பது போல் எதுவும் நடைபெறாது என்பதை அவனுக்குச் சொல்லிவிடு! யார் வஞ்சகம் புரிகிறார்கள் என்பதும், யார் இன்னும் பத்துத் தினங்களில் உயிரிழக்கப் போகிறார்கள் என்பதும் விரைவில் தெரிந்துவிடும். திறமையிருந்தால் மானமிருந்தால் வசந்தியை மீட்டுக் கொள்ளலாம் என்றும் கூறிவிடு. ஸத்துகனின் திருமுகத்தை நாங்கள் மூவரும் பார்த்துவிட்டதாகவும் சொல்லிவிடு. இனி எந்த வழியிலும் ஸத்துகன் உயிர் தப்ப முடியாது என்பதை உணரட்டும்" என்று சொல்லி விட்டு, 'போகலாம்' என்னும் குறிப்புடன் பார்த்தான் இளந்தத்தன். மறுமொழி கூறாமல் அடுத்த கணத்தி லேயே அவ்விடம் விட்டு அகன்றான் மார்க்கலி.

மார்க்கலி வந்த வழியே நேராகச் சென்றான். 'வசந்தி எங்கே இருப்பாள்?' என்று சிறிது ஆலோசித்துத் தயங்கினான். பின்னர் ஒருவகையாக முடிவு செய்துகொண்டு மாளிகையை விட்டு வெளியேறினான். மாளிகையின் வாயிலில் குதிரையில் ஏறி அமர்ந்து புறப்படும்போது, "மார்க்கலி, மார்க்கலி!" என்ற குரல் கேட்டது. அது வசந்தியின் குரல் போன்று இருந்தது. திடுக்குற்றுச் சுற்று முற்றும் நோக்கினான். ஒன்றும் புலப்படவில்லை. மீண்டும் அந்தக் குரல் கேட்டது. 'இது வசந்தியின் குரல்தான்' என்று உறுதி செய்துகொண்டது அவன் உள்ளம். குதிரையை விரைந்து செலுத்தினான். வசந்தியின் குரல் அவன் காதில் சுழன்றுகொண்டே இருந்தது.

## 21

### பொன்குடுமி

அரசன் கட்டளைப்படி இளந்தத்தன், அச்சன், ஜயதுங்கன் மூவரும் ஆலோசனை மண்டபம் வந்து சேர்ந்தனர். அவர்களுடன் மற்றும் சில ஒற்றர்களும் வந்திருந்தனர். இளந்தத்தன் அரசனை வணங்கிவிட்டு ஒருபுறம் அமர்ந்தான். அடுத்த கணத்தில் இளந்தத்தனின் பார்வை, அரசனுக்கு அருகில் அமர்ந்திருக்கும் அந்தண இளைஞன் மீது சென்றது. சட்டென்று இளந்தத்தனின் முகம் முற்றும் மாறியது. அந்தண இளைஞனும் அரசனும் இளந்தத்தனின் முக மாறுதலை அறிந்துகொண்டனர். அரசனின் முகமும் கோபத்தால் சிவந்திருந்தது. அதற்குக் காரணம் என்னவென்று இளந்தத்தனுல் அறிந்துகொள்ள முடியவில்லை. அரசனையும் அந்தணனையும் மாறி மாறிப் பார்த்தான் அவன். 'இந்தப் பொன் குடுமிப் பார்ப்பான் மீண்டும் இங்கு ஏன் வந்திருக்கிறான்? ஒற்றர் தலைவன் பதவியிலிருந்து அகற்றப்பட்ட பொன் குடுமியை, அரசன் மீண்டும் அழைப்பதற்குக் காரணம் என்ன? ப்ரம வைதிகனும், சோதிடம் கூறும் தொழிலுடையவனுமான இவனைக் கொண்டு என்ன காரியத்தைச் சாதிக்க முடியும்? வீரன்போல் கம்பீரமாகத் தோன்றினாலும் இவன், ரத்தத்தைக் கண்டு அஞ்சுபவனாயிற்றே!' என்று இளந்தத்தன் சிந்தனை செய்தான்.

உண்மையில் இளந்தத்தன் எண்ணியபடி, பொன் குடுமி ரத்தத்தைக் கண்டு அஞ்சுபவன் அல்ல; வீணே யாருடனும் பகைகொண்டு போர் புரியாதவன். அந்தண குலத்தில் பிறந்தவன் எனினும், போரில் பின்னடையாதவன். வில், வாள் முதலிய போரிலும் யானையேற்றம் குதிரையேற்றம் முதலியவற்றி

லும் வல்லவன். இளமையில், ஸத்துகன், இளந்தத்தன் முதலியவருடன், போர்ப்பயிற்சி பெற்றவன். பேச்சுத் திறமையும் நுண்ணறிவும் உடையவன். அதனால் சோழமன்னன் அவனுக்கு முதலில் ஒற்றர் தலைவன் பதவியை அளித்திருந்தான்; அத்துடன் சோதிடனாகவும் விளங்கினான். பொன்குடுமி என்பதே அவன் பெயர். பெயருக்கு ஏற்ப அவன் குடுமியும் பொன்னிறம் வாய்ந்து விளங்கியது. அகன்ற நெற்றியில் விபூதியைத் தரித்திருந்தான். உயர்ந்து அகன்ற மார்பில் முப்புரி நூல் விளங்கியது. பருத்த தோள்களும் உறுதியான கால்களும் அவன் ஒரு வீரன் என்பதை உணர்த்தின. வைதிகமதத்தைச் சேர்ந்தவனானாலும், அரசன் அவனை வெறுக்கவில்லை. ஆனால், ஸத்துகனைப்பற்றிக் கோள் கூறியும், காளனைப் பிடித்துவிடுவதாகச் சொல்லியும் அரசனின் மனப்போக்கை மாற்றி, பொன் குடுமியின் ஒற்றர் தலைவன் பதவியைத் தான் வகித்துக்கொண்டான், இளந்தத்தன். அரசனும் இளந்தத்தனுடைய பேச்சில் மயங்கிப் பொன்குடுமியை விலக்கிவிட்டான். ஆனால் அரசன் விரும்பியவாறு, இளந்தத்தன் காளனைப் பிடிக்க முடியவில்லை. அதைக் கண்ட அரசன் இளந்தத்தன்மீது சினமும் நம்பிக்கைக் குறைவும் கொண்டான். உடனே பொன்குடுமியை மீண்டும் அழைத்தான். அரசன் கட்டளைக்கு இரங்கிப் பொன்குடுமி அங்கே வந்திருந்தான். பொன் குடுமியைய மீண்டும் ஒற்றர் தலைவனாக்கவே அரசன் முடிவு செய்துவிட்டான். அவ்விஷயம் இளந்தத்தனுக்கு முற்றும் தெரியாவிடினும், ஒருவாறு உண்மை புலப்பட்டது.

அரசன் பொன்குடுமியிடம் ஏதோ மெள்ளக் கூறிவிட்டு இளந்தத்தனை நோக்கிச் சொல்லலானான்: "இளந்தத்தா! தேவியின் முத்து மாலைகள் களவு போய் விட்டதைக் கண்டுபிடித்துவிட்டதாகச்

சொல்லிப் பல நாட்கள் ஆகிவிட்டன! ஆனால் முத்து மாலைகள் இதுவரையில் என்னிடம் சேர்ப்பிக்கப் படவில்லை. கள்ளனையும் சிறைப்பிடிக்கவில்லை. நாள் தோறும் ஸத்துகனைப்பற்றியும் அவன் பௌத்த சங்கத்தைப்பற்றியும் குறை சொல்லிக்கொண்டே இருக்கிறாய்! நான் குறிப்பிட்ட காலத்திற்குள் கள்ளனைப் பிடிக்கவும் இல்லை. ஸத்துக மந்திரத்தில் முத்து மாலைகள் இருப்பது உண்மையானால், உடனே சோதனையிட்டு, களவு செய்தவரைச் சிறையிட்டு, முத்து மாலைகளை எடுத்துவரத் தாமதம் ஏன்? நகரில் காவலின் களவுகள் தடை செய்யப்படவில்லை. களவு நடந்துகொண்டுதான் இருக்கிறது. நீ அதைக் கவனிக்கவில்லை; திறமையும் இல்லை. உன்னை நம்பி யிருப்பது எனக்குத் துன்பத்தையே அளிக்கும்! ஆதலால் முன்புபோல் பொன்குடுமிக்கே ஒற்றர் தலைவன் பதவியை அளித்து விட்டேன். பொன் குடுமிக்கு வேண்டிய உதவிகளை நீங்கள் யாவரும் செய்ய வேண்டும்! நீ இது விஷயத்தில் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்; இதைக் கூறவே இன்று உன்னை இங்கு அழைத்தேன்."

வேந்தனின் மொழியைக் கேட்டதும் இளந் தத்தன் வருத்தமும் கோபமும் கொண்டான். பொன் குடுமியின் குணம் அவனுக்குத் தெரியு மாதலால் சற்றும் அவன் மீது கோபம் கொள்ள வில்லை. வேந்தனின் கட்டளைக்கு அஞ்சி உடம்பட வேண்டியதாயிற்று. எனினும் அவன் மனம் தளர வில்லை. பரம சாதுவாகிய பொன் குடுமியைக் கொண்டே தன் காரியங்களை முடித்துக்கொள்ளலாம் என்று எண்ணினான். அதனால் அவனுக்கு ஓரளவு உவப்பே உண்டாயிற்று; ஆறுதல் செய்துகொண் டான். உடனே வணக்கத்துடன் எழுந்து, "தங்கள் விருப்பம்போல் நடக்கிறேன். பொன் குடுமிக்கு

வேண்டிய உதவிகளை ஆவலுடன் நாங்கள் யாவரும் செய்கிறோம்" என்றான்.

வேந்தன் இளந்தத்தனைக் கையமர்த்திவிட்டு, "பொன்குடுமி, கள்ளனைப் பிடிப்பதும் முத்து மாலைகளைக் கொணர்வதும் உன் திறமையைப் பொறுத்தது. முத்து மாலைகள் ஸத்துக மந்திரத்தில் இருப்பது உண்மையானால் கள்ளனே அவற்றைக் களவு செய்திருப்பான். எவ்வாறேனும் அதை நீ கண்டுபிடித்தாக வேண்டும்! இப்போது மங்கலத் திருநாள் கொண்டாட்டத்திற்காக ஸத்துக மந்திரத்தில் குதூகலம் நிரம்பியிருக்கிறது. மிக எளிதில் நீ உண்மையைக் கண்டுபிடிக்கலாம். கள்ளனை என் கண்முன் கொண்டு வந்து நிறுத்தவேண்டியது உன் கடமை! நான் மங்கலத் திருநாள் கொண்டாட்டத்திற்கு வேண்டிய காரியங்களைச் செய்வதில் முனைந்திருக்கிறேன். இந்திர விகாரத்துப் புத்த முனிவர்கள் வந்திருக்கிறார்கள்; போய் வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டான்.

"வேந்தே, கவலையின்றித் தங்கள் காரியங்களைக் கவனிக்கலாம். நான் கள்ளனைப் பற்றிக் கவனித்துக் கொள்கிறேன்" என்று பொன்குடுமி மறுமொழி கூறினான். அரசன் யாவருக்கும் விடை கொடுத்துவிட்டு வேறுபுறம் சென்றான்.

பொன் குடுமியிடம் மீண்டும் சந்திப்பதாகக் கூறிவிட்டு இளந்தத்தன் முதலியவர்கள் விடை பெற்றுச் சென்றனர். பொன்குடுமி ஆழ்ந்த யோசனையுடன் தன் மாளிகையை நோக்கிச் சென்றான். அரண்மனைக்கு அடுத்தாற்போல் இருந்தது அவன் மாளிகை. பொன்குடுமி அங்கே சென்று தன் குதிரை மீது ஏறிப் புறப்பட்டான். தான் மேற்கொண்ட காரியத்தை உடனே முடித்துவிட வேண்டும் என்று எண்ணிவிட்டான் அவன். ஆனால் ரத்தம் சிந்தவிட்டுக் காரியத்தைச் செய்து முடிக்கவேண்டும் என்று அவன்

விரும்பவில்லை. காளனைச் சமாதானமாகப் பேசி நல்வழிப்படுத்த வேண்டும் என்று எண்ணினான். முதலில் அதற்கு ஸத்துகனையே சந்திக்க வேண்டும் என்று தோன்றியதால் அங்கே புறப்பட்டான்.

* * * *

ஸத்துகன் தன் மாளிகையில் மர்க்கலியுடன் பேசிக்கொண்டிருந்தான் இளந்தத்தன் மர்க்கலியிடம் சொல்லிய வார்த்தைகளைப் பற்றி ஸத்துகன் ஆலோசனை செய்தான். வசந்தி, இளந்தத்தன் மாளிகையில்தான் இருக்கிறாள் என்று மர்க்கலி வற்புறுத்தியதும் ஸத்துகனுக்குக் கோபம் மிகுதியாயிற்று. அப்போதே புறப்பட்டுச் சென்று இளந்தத்தன் முதலியவர்களைப் பழி தீர்த்துவிட்டு வசந்தியை மீட்டு வந்துவிடலாம் என்று எண்ணினான்; 'அவனுக்கு அவ்வளவு துணிவா? ஸத்துகனின் திறமையையும் இயல்பையும் இன்னும் அவன் உணரவில்லையா? விரைவில் உணரும்படிச் செய்கிறேன். தொடக்கத்திலேயே அவனைக் கிள்ளி எறியாதது என் குற்றந்தான்!' என்று கூறிக்கொண்டான். உடனே சட்டென்று எழுந்து சுற்று முற்றும் பார்த்துவிட்டு மர்க்கலியிடம் மெள்ள ஏதோ கூறினான். அவன் கட்டளையை ஆமோதிப்பவன்போல் மர்க்கலி தலையை அசைத்தான். சற்று நேரத்துக்கெல்லாம் மர்க்கலி ஸத்துகனிடம் விடைபெற்று மாளிகையை விட்டு வெளியே சென்றான்.

மாளிகையின் வாயிலை விட்டு மர்க்கலி வெளியேறும் சமயம்; பொன் குடுமி குதிரையிலிருந்து கீழிறங்கினான். மர்க்கலியைக் கண்டதும், "ஸத்துக சிரேஷ்டி இருக்கிறாரா?" என்று கேட்டான். தலையை அசைத்துவிட்டு மிக விரைவாகச் சென்றுவிட்டான் மர்க்கலி. ஸத்துகனின் கட்டளையை நிறைவேற்றுவதில் கருத்து ஒன்றியிருந்த அவன் பொன் குடுமி

அங்கு எதற்காக வந்திருக்கிறான் என்பதைப் பற்றி ஆலோசிக்கவில்லை. ஒற்றர் தலைவன் பதவியிலிருந்து நீக்கப்பட்டவன் அவன் என்பது மார்க்கலிக்குத் தெரியுமாதலால், 'இந்தச் சோதிடப் பார்ப்பானிடம் என்ன பேச்சு?' என்று மதிக்காமல் போய்விட்டான். 'காளனின் ஊழியன் மார்க்கலிதான் இவன்' என்று உணர்ந்த பொன்குடுமி அவன் விரைந்து செல்வதை நோக்கியவண்ணம் சற்று நின்றான்.

மார்க்கலி தலையை அசைத்ததிலிருந்து, ஸத்துகன் உள்ளே இருக்கிறான் என்று உணர்ந்தான். உடனே உள்ளே புகுந்தான். ஸத்துகன் அவனைக் கண்டதும் ஆச்சரியமுற்றான். பொன் குடுமியை ஸத்துகன் வரவேற்று எதிரில் அமரும்படி சொன்னான். பொன் குடுமியிடம் ஸத்துகனுக்கு எப்போதும் அன்பு உண்டு; உயிருக்கு இறுதி நேர்ந்த காலத்தும் உண்மையே கூறுவான் என்பதாலும், நியாயம் தவறி நடவான் என்பதாலும் அவனிடத்துப் பெருமதிப்பு வைத்திருந்தான். அவன் ஒற்றர் தலைவனாக இருந்த போது, அவனது நுண்ணிய அறிவுத் திறனையும் நன்கு உணர்ந்திருந்தான் ஸத்துகன். ஆகவே திடீரென்று அவன் தன்னிடம் வருவதற்குக் காரணம் என்ன என்பது அவனுக்கு விளங்கவில்லை.

தான் வந்த காரியத்தைப்பற்றி, பொன்குடுமி ஸத்துகனிடம் பேசலானான். தனக்கு மீண்டும் ஒற்றர் தலைவன் பதவி கொடுக்கப்பட்டிருப்பதைப் பற்றிச் சொன்னான். ஸத்துகன் அடைந்த ஆச்சரியத்துக்கு எல்லை இல்லை. இளந்தத்தன் அந்தப் பதவியிலிருந்து அகற்றப்பட்டதை நினைக்க நினைக்க ஸத்துகனுக்கு மகிழ்ச்சி மிகுதியாயிற்று. அதற்குக் காரணம் என்ன என்று பொன்குடுமியிடம் கேட்டான். இளந்தத்தன் விலக்கப்பட்டதன் காரணத்தையும், தான் வந்திருப்பதன் காரணத்தையும் தெளிவுபடக்

கூறினான் பொன் குடுமி. அதைக் கேட்ட அளவில் ஸத்துகனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது.

"பொன் குடுமி! நீ ஒற்றர் தலைவனாக வந்து விட்டதால் காளன் பிடிக்கப்பட்டு விடுவான் என்ற எண்ணமோ? அது பகற் கனவாகி விடும். அப்படிக் காளன் செய்த குற்றந்தான் என்ன? இளந்தத்தன் வார்த்தைகளைக் கேட்டு அரசன் மதி மயங்கியிருக்கிறான் என்பது எனக்குத் தெரியும்" என்றான் ஸத்துகன்.

"ஸத்துக சிரேஷ்டி! கோபம் வேண்டாம்! நகரில் நாள்தோறும் களவுகள் நடக்கின்றனவாம். அரண்மனையிலிருந்து முத்துமாலைகள் களவு போய் விட்டனவாம். இவை யாவும் காளன் செய்ததாகவே அரசன் கருதுகிறான்! இளந்தத்தனும் அவ்வாறே சொல்லியிருக்கிறான். அதைப்பற்றிப் பேசவே உம்மிடம் வந்தேன்...ஆனால், இளந்தத்தன் கூறுவதில் உண்மையே இல்லை என்று சொல்கிறீர்?" என்று பொன்குடுமி கேட்டான்.

பொன்குடுமியின் கபடற்ற வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டு, தன் கோபத்தை அடக்கிக் கொண்டான் ஸத்துகன்; "பொன்குடுமி, நீ சொல்வது வியப்பாக இருக்கிறதே! இளந்தத்தன் என்னுடன் இளமையில் பழகியவன் என்பது உனக்குத் தெரியாததல்லவே? அவன் பெரிய வஞ்சகன் என்பது உனக்குத் தெரியாதா? அவனுக்கும் எனக்கும் பகை ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் உண்டு. உண்மை உனக்குத் தெரியாது. என்னிடம் உள்ள பகையால் காளன் மீதும் பௌத்த சங்கத்தின் மீதும் குறை கூறிக்கொண்டே இருக்கிறான். எனக்குப் பல இடையூறுகள் செய்கிறான். அரண்மனையிலிருந்து முத்து மாலைகளைக் காளன் களவு செய்யவில்லை. இளந்தத்தனும் ஜயதுங்கனுமே களவு செய்திருக்கிறார்கள்;

ஆகவே இதற்காகக் காளனைப் பிடிப்பதென்பது முடியாத காரியம்; உனக்கு வேண்டுமானால் சில செய்திகளைச் சொல்கிறேன்......" என்றான். பொன் குடுமி மிகுந்த ஆவலுடன், "என்னவென்று சொல், கேட்கிறேன்" என்றான்.

பொன் குடுமியைக் கொண்டு தன் காரியங்களை முடித்துக் கொள்ளலாம் என்று எண்ணிய ஸத்துகன் அவனிடம், இளந்தத்தனைப் பற்றியும், அச்சன், ஜயதுங்கனைப்பற்றியும் குறிப்பாகச் சில வற்றைச் சொன்னான். சயந்தி விஷயமாகத் தனக்கும் அவனுக்கும் ஏற்பட்ட பகைமையைப்பற்றியும், குறத்தியாக வந்து பத்திரையை வஞ்சித்து வசந்தியைச் சிறை செய்திருப்பதையும், மார்க்கலி போய் வந்ததையும் விவரமாகச் சொன்னான்.

ஆனால் முத்துமாலைகள் தன்னிடம் இருக்கின்றன என்பதை மட்டும் அவன் சொல்லவில்லை. பொன் குடுமி ஸத்துகன் பேச்சைக் கேட்டுத் திகைத்துப் போனான். இளந்தத்தன் மீதும் ஜயதுங்கன் மீதும் அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. ஸத்துகன் சொல்லியன யாவும் உண்மையா என்ற சந்தேகமும் இருந்தது. அவ்வாறு இருப்பினும் அரசனின் கட்டளையை நிறைவேற்றித் தீரவேண்டும் என்று முடிவு செய்தான். உடனே, "சிரேஷ்டி, என் கடமையைச் செய்தாக வேண்டும். காளனை நான் பிடித்தே தீர வேண்டும். இளந்தத்தனுக்காக அல்ல! அரசனுக்காக அல்ல!— நாட்டின் நன்மைக்காக. காளனைக்கூட நல்லவனாக்கிவிடுவேன். ஆகவே, நீர் இதில் சினங்கொண்டு பயனில்லை. நீர் கூறாவிட்டாலும் முத்துமாலைகள் இருக்கும் இடத்தை எவ்வாறேனும் அறிந்துகொள்வேன். அவற்றைக் களவு செய்தவன் இளந்தத்தனாயினும் ஜயதுங்கனாயினும் அதற்கு அரசன் தக்க தண்டனை விதிப்பான்" என்று சொல்லி விட்டுப் பொன்குடுமி எழுந்தான்.

ஸத்துகனுக்குக் கோபம் பொங்கியது; "பொன் குடுமி! காளனைப் பிடிக்கும் எண்ணத்தை மட்டும் மறந்துவிடு. அதனால் உன் உயிருக்கே கேடு விளையும். காளனின் திறமையை நீ அறியாய். உன் நன்மையைக் கருதியே நான் கூறுகிறேன். நீ மறந்து விட்டாலும் இளந்தத்தனை நான் மறவேன். பிறகு உன் விருப்பம்" என்றான்.

"என் உயிரைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. உயிரைப் பெரிதென்று எண்ணுபவன் நான் அல்ல. என் வாழ்க்கையில் காளனைப் பிடிப்பதைக் காட்டிலும் வேறு உயர்ந்தது ஒன்றும் இல்லை. அரசனுக்குக் கொடுத்த வாக்குறுதியை நான் நிறைவேற்றித் தீர வேண்டும். நீயே என்னைக் கொல்லுவதாக இருந்தாலும் நான் அஞ்சேன். ஊழ்வினையின் படியே யாவும் நிகழும். நான் போய் வருகிறேன்" என்று கூறிவிட்டுப் பொன்குடுமி புறப்பட்டான்.

மறுமொழி கூறாமல் ஸத்துகன் அமர்ந்திருந்தான். பொன் குடுமியின் பேச்சைக் கேட்டு ஒரு புறம் வியப்பும் ஒரு புறம் நகைப்பும் உண்டாயின அவனுக்கு. பொன் குடுமி குதிரைமீது இவர்ந்து வேகமாகப் போய்விட்டான்.

ஸத்துகனுக்குக் கவலை மிகுதியாயிற்று. பொன் குடுமியால் ஏதாவது விபரீதம் நிகழுமோ என்று சந்தேகம் கொண்டான். அப்போது மேல் மாடத்தி லிருந்து ஏவலாளன் ஒருவன் வந்து, "தங்களைத் தந்தை அழைக்கிறார்" என்றான். சட்டென்று ஸத்துகன் மேல்மாடம் சென்று ஏறுதி பெருஞ்சாத்துவனை வணங்கினான். பெருஞ் சாத்துவன் அவனை அருகில் அமர்வித்து, "ஸத்துகா ஐந்தாறு நாட்களாக நாக வல்லி உன்னைத் தேடிச் சென்றாள். அவள் வரும் சமயம் நீ இருப்பதில்லை. இன்று காலையில் கூட வந்து தேடிச் சென்றாள் அப்போதும் நீ இங்கே இல்லை. அதைச் சொல்வதற்கே அழைத்தேன் ஆனால்

சயந்தியின் பேச்சைக் கேட்டு மனம் கலங்காதே. 'நீ பத்திரையை மணந்துகொள்வதை அவள் நிச்சயம் தடை செய்வாள். ஆதலால், பத்திரையை மணந்து கொள்வதில் நீ உறுதியாக இருக்கவேண்டும்'' என்றான்.

தந்தையின் வார்த்தைகள் ஸத்துகனுக்கு வியப்பை உண்டாக்கின. தான் நினைத்தபடியே தந்தையும் சொல்லியது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. உடனே தந்தையின் விருப்பத்துக்கு இணங்கி மறுமொழி அளித்துவிட்டுக் கீழிறங்கினான்.

அவன் சிந்தனை சயந்தியை நாடியது. 'நாகவல்லி இங்கே வருவதற்குக் காரணம் என்ன? சயந்தி அவளைத் தூதாக அனுப்பியிருக்கிறாள் என்பதில் சந்தேகமே இல்லை. பேதை! இன்னும் என்னை நம்பியிருக்கிறாள். பத்திரையை நான் மணந்து கொள்ளும் வரையில் சயந்தியை எட்டியும் பார்க்கமாட்டேன்! அவளைப் பார்த்துவிட்டால்—அவளுடன் பேசிவிட்டால் என் மனம் நிச்சயம் கலங்கும். அதற்கு வாய்ப்பே அளிக்கக் கூடாது. அவள் இளமைந்தன் - என் மைந்தனே தான் - அவனை நினைக்கும்போதுமட்டும் என் உள்ளம் கலங்குகிறது. அவனைக் கண்டுவிட்டால் என் உள்ளம் மாறிவிடும் என்பதில் ஐயமில்லை. ஒருவேளை நான் பத்திரையை மணந்துகொள்ளப் போவதை எவ்வித மேனும் அவள் அறிந்திருப்பாளோ? ஆயினும் என்ன? என்ன நேர்ந்தாலும் நான் பத்திரையை மணந்தே தீருவேன்' என்று முடிவு செய்தான். அடுத்த கணமே, 'நாகவல்லி மீண்டும் வந்தால் என்ன சொல்லுவது?' என்று யோசனை செய்தது அவன் உள்ளம்.

## காளன் என்னும் கள்வன்

வைசாக சுத்த பூர்ணிமை அணுகிவிட்டது. அம் மங்கலத் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று அரசன் நகர் முழுவதும் அலங்கரிக்கச் செய்தான். புத்த தேவன் கோயிலாகிய இந்திர விகாரத்தைப் பொன்மயமாகச் செய்து விட்டான். இரவிலும் பகலிலும் ஜாஜ்வல்யமாக ஒளி வீசியது இந்திர விகாரம். அரசன் நினைத்தால் செய்ய முடியாதது என்ன இருக்கிறது? வீதிகள் தோறும், சாலைகள் தோறும் பழ மணல் மாற்றிப் புது மணல் பரப்பினர். மகர தோரணங்களையும், பல நிறக் கொடிகளையும் எங்கும் கட்டினர். அங்கங்கே புத்த தேவனின் பிரதிமைகளை வைத்து வழிபட்டார்கள். குதூகலத்துடன் வேண்டிய அலங்காரங்களைச் செய்து கொண்டிருந்தார்கள். இந்திர விழாவைக் காட்டிலும் பன்மடங்கு சிறப்பாகக் கொண்டாடினர் புத்த தேவன் திருநாளை.

ஸத்துகன், தன் மாளிகையின் மேன்மாடத்தின் உச்சியில் நின்று, நகரத்தில் நடக்கும் சிறப்புக்களை அமைதியாகப் பார்த்தான். இந்திர விகாரத்தின் காட்சியோடு ஸத்துக மந்திரத்தை ஒப்பிட்டுப் பார்த்தான். ஆனால் அரசன்மீது அவனுக்குப் பொறாமை இல்லை. புத்த தேவனுக்குச் செய்யும் சிறப்புக்கள் யாவும், அவனுக்கு மகிழ்ச்சியையே அளித்தன. அவனிடம் எவ்வளவு குற்றங்கள் இருந்தாலும், புத்த பக்தியில் அவனைக் காட்டிலும் சிறந்தவர் இல்லை என்பதை யாவரும் அறிவர். அது விஷயத்தில் ஸத்துகனிடம் அரசனுக்கும் பெரிதும் மதிப்பு உண்டு. புத்த தேவனிடம் எல்லையற்ற அன்பும் மதிப்பும் உடை... அவன் நகர்க் காட்சியில் ஒன்றிப்போய்த் தன்மயமாகி

நின்றான். மங்கலத் திருநாளைப்பற்றிக் கற்பனை செய்து கொண்டிருந்த அவன் உள்ளத்தில் ஓர் எண்ணம் ஊடுருவித் துளைத்துக்கொண்டே இருந்தது ஒருபுறம். சயந்தியைப் பற்றியதுதான் அவ்வெண்ணம். சென்ற வருஷம் வைசாக சுத்த பூர்ணிமையன்று சயந்தியுடன் களித்திருந்த இன்ப நினைவு, அப்போது அவன் ஞாபகத்திற்கு வந்தது. அதை நினைத்ததும் அவன் உள்ளம் இரக்கமுற்று உருகியது. அந்தச் சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவன் கீழே நோக்கினான்; ஒரு பெண், அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டே தன் மாளிகைக்குள் நுழைவதைக் கண்டான். உடனே பரபரப்புற்று கடுகிய நடையுடன் மேன்மாடத்திலிருந்து கீழிறங்கினான். இறங்கியவுடன், எதிரில் வந்த அந்தப் பெண் துணுக்குற்று நின்றாள். இருதயம் விம்ம, கண்கள் நீர்த்துளியைச் சிந்த, ஸத்துகனைக் கை குவித்து வணங்கினாள். அவளைக் கண்ட ஸத்துகன் முற்றும் மாறுதலடைந்தான்.

"நாகவல்லி! எங்கே வந்தாய்? ஐந்தாறு நாட்களாக வந்துகொண்டிருக்கிறாயா? என்ன காரியம்? சயந்தியின் தூதா? ......" என்று புன்னகையும் வெறுப்பும் கலந்த குரலில் கேட்டான். அதற்கு மறுமொழி கூற முடியாதவளாய் நாகவல்லி பெருமூச் செறிந்து, கண்ணீர் துளும்ப முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள். ஸத்துகனின் வார்த்தைகளைக் கேட்டு நாகவல்லிக்குத் தாங்கமுடியாத அழுகை உண்டாயிற்று. விம்மி அழலானாள்.

ஸத்துகனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. 'இவள் ஏன் அழுகிறாள்? நான் வரவில்லை என்று இவள் அழுகிறாளா? ஒருசமயம் சயந்தியின் சூழ்ச்சியாகவும் இருக்கலாம்! கணிகை மங்கையாகிய அவள் வஞ்சனை செய்வது முடியாத காரியமா?' என்று எண்ணினான். தான் கேட்டதற்கு மறுமொழி கூறவில்லை என்று அவனுக்குச் சற்றுக் கோபமும் உண்டாயிற்று.

உடனே அருகில் சென்று, "நீ வந்த காரியம் என்ன என்று சொல், எதற்காக அழுகிருய்?" என்று கேட்டான்.

அதற்குமேல் அவள் துக்கத்தை அடக்கிக் கொண்டு சொல்லலாளுள்: "சயந்தி இளந்தத்தன் மாளிகையில் அடைக்கப்பட்டிருக்கிருள். வஞ்சனே யால் இளந்தத்தன் அவளேக் கொண்டுபோய் விட் டான்" என்று நாகவல்லி சொல்லுகையில் ஸத்துகன் உடல் பதறினன்.

"என்ன சொல்லுகிருய்? சயந்தியை இளந்தத்தன் கொண்டுபோய் விட்டாஞ? இது உண்மையா.....?" என்று நாகவல்லியின் கைகளேப் பிடித்து அசைத்தான். தன் வசமிழந்தான். சயந்தியும் இளந் தத்தனும் அவன் கண்களுக்குமுன் தோன்றினர். நாகவல்லி அச்சத்துடன் சொன்னுள்: "ஒரு குறத்தி வஞ்சகமாய் வந்து சயந்தியின் தாயைக் காட்டுவ தாகக் கூறி அழைத்துச் சென்று விட்டாள். சயந்தி திரும்பி வராததால் பல்லக்குத் தூக்கிச் சென்ற மல்லர்களின் உதவியைக்கொண்டு சயந்தியிருந்த இடத்தை அடைந்தேன். அவள் அங்கு இருப்ப தாகவும் அறிந்தேன். நான் உள்ளே போகமுடியாமல் காவலாளர் தடை செய்துவிட்டனர். அது இளந் தத்தன் மாளிகை என்றே அங்குள்ளவர்கள் சொன்னுர்கள். சயந்தியின் பிரிவால் சிறுவன் அழுது மெலிந்து போய்விட்டான். தங்களேக் காண நான் வந்தபோதெல்லாம் தாங்கள் வேறு எங்கோ போயிருந்தீர்கள். இனி என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லே."

அவள் முகத்தையே உற்றுக் கவனித்தான் ஸத்துகன். அவள் கூறியவை யாவும் உண்மை யென்றே எண்ணினுன். 'குறத்தியாக வந்து அழைத்துச் சென்ருளு? என்ன மாயம்? சீ! இனி

நான் உயிருடன் இருந்து என்ன பயன்? அந்த வஞ்சகர்களை இன்றே பழிக்குப் பழி தீர்க்கிறேன்' என்று நறநறவென்று பறகளைக் கடித்துக் கொண்டான். கோபத்தால் உடல் துடித்தது. நின்ற இடத்தில் நில்லாமல் அங்கும் இங்கும் உலாவினான்.

பூமியில் கால்களை உதைத்துக் கொண்டான். கைகளைத் தூணில் புடைத்தான். அவன் மனம் சுழன்றது. நா வரட்சியுற்றது. 'புலியிடம் அகப்பட்ட பெண் மான்போல் பூனையிடம் சிக்கிய கிளிபோல் சயந்தி துடிப்பாளே! இவ்வளவுக்கும் நானே காரணமல்லவா? பெரும் பாதகம் செய்து விட்டேன்! இளந்தத்தனுக்குக் கொலைத் தண்டனையைத் தவிர வேறு தண்டனை இல்லை. குறத்தியாக வந்தவனுக்கும் அதுவே தண்டனை' என்று தனக்குள் முடிவு செய்துகொண்டான். அவன் மனம் சயந்தியைப் பற்றியே கனவு கண்டுகொண்டிருந்தது.

"நாகவல்லி, நீ மாளிகைக்குப் போ! நான் இப்போதே சென்று சயந்தியை மீட்டு வருகிறேன்" என்றான். அவள் பேரிரக்கத்துடன் அவனைப் பார்த்து விட்டு அகன்றாள். ஸத்துகனுக்கு அதற்கு மேல் அரைக்கணமும் அங்கே இருக்கமுடியவில்லை. விரைந்து சென்று தன் குதிரையில் ஏறிப் புறப்பட்டான்.

ஸத்துக மந்திரத்தை விரைவில் அடைந்தான். அவன் வந்தவுடன் சங்கத்தில் பெருங் கிளர்ச்சி மூண்டு சட்டென்று அடங்கியது. குதூகலத்துடன் இருந்த ஸத்துக மந்திரம் அலையோய்ந்த கடல்போல் அமைதியுற்றது. அங்கு மிங்கும் போய்க்கொண்டிருந்த பௌத்த பிக்ஷுக்கள் சட்டென்று அவரவர் இருப்பிடங்களில் தங்கி விட்டனர். அவர்கள் யாவரும் காளன் பேச்சையே பேசிக் கொண்டு பதுங்கி இருந்தனர். அதற்குக் காரணம் அன்று

ஸத்துக மந்திரத்திலிருந்து காளன் எங்கோ புறப்படு கிருன் என்பதே.

கதிரவன் நடுவானத்தில் விளங்கினுன். கனற் பொறி சிதறுவதுபோல் இருந்தது வெயிலின் வெம்மை. காளனின் கோபக்கனல் அதைக் காட்டிலும் வெம்மை வீசியது. புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல் ஸத்துக மந்திரத்திலிருந்து வீரர்கள் ஆயுதபாணிகளாகக் கிளம்பினர். அவர்கள் யாவரும் காளனின் போர் வீரர்கள் என்பதைப் பிக்ஷுக்களைத் தவிர வேறு யாரும் அறியார்கள். முதல் நாள் ஸத்துகனின கட்டளைக்கு இணங்கி, மர்க்கலி, அங் கங்கே இருந்த வீரர்களை எல்லாம் ஒன்று சேர்த் திருந்தான். காளனின் உத்தரவுக்கு இணங்கி அவர்கள் நடுப்பகலிலே அவ்விடத்தை விட்டுப் புறப் பட்டனர் ஐந்நூற்றுவருக்கு மேலாக இருந்தனர் அவர்கள். அவ்வீரர்களுக்குப் பின்னே மர்க்கலியுடன் காளன் காட்சியளித்தான்.

காளனின் தோற்றம் எப்போதும்போல் இருந்தது. ஈர்க்கு நுழையவும் இடமில்லாமல் கவசம் அணிந்திருந்தான். அவன் உடலே புலப்படவில்லை. கண்கள் மட்டிலும் கனற்பொறிகள்போல் சுழன்று கொண்டே இருந்தன. கையில் நீண்ட ஈட்டியும் அரையில் வயிர வாளும் அணிந்திருந்தான். மர்க்கலி அவனுடன் நின்ருன். பார்ப்பதற்கு ஓர் இரும்பு மனிதன்போல் தோன்றினுன் காளன். அவனைக் கண்டவுடன் யாவரும் திடுக்குற்று நின்றனர்.

காளன் உத்தரவிடவே வீரர்கள் புறப்பட் டார்கள். வீதியிலுள்ளவர் அதைக் கண்டு கண் கலங்கினுர்கள். காளனின் குதிரை காற்றெனப் பறந்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாகப் பேசிக் கொண்டனர். எங்கும் பரபரப்பு ஏற்பட்டது. காற்று வேகமாகக் கடுகிச் செல்லும் காளனையும்

வீரரையும், பொன் குடுமியின் ஒற்றுள் ஒருவன் கண்டான். உடனே பொன் குடுமியிடம் ஓடினான்.

வணிகர் வீதி வழியே சென்ற காளன் பத்திரையில் மாளிகைப் பக்கம் அணுகியதும், அங்கே பார்வையைச் செலுத்தினான். வீதியில் ஒலிக்கும் ஆரவாரத்தைக் கேட்டு மேல் மாடத்திலிருந்து எட்டிப் பார்த்தாள் பத்திரை. காளனையும் அவன் படை வீரரையும் கண்டு திகைத்தாள். அவளருகில் இருந்த சேடி, "இவன்தான் காளன்?" என்று சுட்டிக் காட்டினாள். பத்திரை துணுக்குற்று அஞ்சிக் கண்களைப் புதைத்துக் கொண்டாள். அதற்குள்ளாகக் காளனின் படைவீரர் வணிக வீதியைக் கடந்தனர்; அரச வீதியையும் கடந்து விட்டனர். நேராகக் காவிரியின் கரைப் பக்கமாகச் சென்று இளந்தத்தன் மாளிகையை அடைந்தனர். காளனையும் படை வீரரையும் கண்டு குலைநடுங்கி, வாயிற் காவலர் அதை உணர்த்த இளந்தத்தனிடம் ஓடினார்கள். அதுதான் சமயமென்று காளனும் மார்க்கலியும் குதிரையை விட்டுக் கீழிறங்கினர். மார்க்கலியின் கட்டளைப்படி வீரர் யாவரும் மாளிகையை வளைத்துக் கொண்டனர். காளனும் மார்க்கலியும் உள்ளே புகுந்தார்கள். "மார்க்கலி, மார்க்கலி!" என்று முன்பு கேட்ட அதே குரல் மீண்டும் ஒலிப்பதை மார்க்கலி உற்றுக் கேட்டுக் காளனிடம் உணர்த்தினான். வசந்தியின் குரல்தான் அது என்பதைக் காளன் உணர்ந்துகொண்டான். அவன் சிந்தை, சயந்தியையே நாடியிருந்தது. அதனால் கடுகிய நடையுடன் நேரே உள்ளே சென்றான்.

நிலம் அதிர்ந்தது, காளனின் கடுகிய நடையால். மார்க்கலி அருகில் சென்று ஓர் அறையைச் சுட்டிக் காட்டினான். இரைகண்ட பருந்துபோல் அந்த அறைக்குள் தாவினான் காளன். அப்போது காளனின்

வ்ருகையைப்பற்றி வாயில் காவலர் இளந்தத்தனிடம் சொல்லிக்கொண்டிருந்தனர்.

அங்கே வந்த காளனைக் கண்டதும் துணுக்குற்றான் இளந்தத்தன். இருதயம் படபடவென்று துடிக்க எழுந்தான். உள்ளம் கலங்கியவர்களாய், ஜயதுங்கனும் அச்சனும் ஒருபுறம் நின்றார்கள். இளந்தத்தன் சினமுற்று உறையிலிருந்து வாளைக் கழற்றிச் சுழற்றினான்; "இளந்தத்தா! உனக்கு இந்த வாளால் பரிசளிக்க வந்துள்ளேன். சயந்தியை வஞ்சித்துக் கொணர்ந்த உனக்கு இதைவிடச் சிறந்த பரிசு இல்லை. ஏற்றுக்கொள். சயந்தியைக் காட்டிலும் அழகுள்ள மங்கையை வானுலகில் நீ காதலிக்கும்படி செய்கிறேன்." என்று கூறி இளந்தத்தன்மீது பாய்ந்தான், காளன். அவன் சிறிது பின் சென்று காளனை எதிர்த்தான். வாள்கொண்டு, கனற் பொறி சிதற இருவரும் இடைவிடாமல் பொருதனர். இளந்தத்தனுக்கு உதவி செய்ய வந்த ஜயதுங்கனையும், அச்சனையும் மார்க்கலி தாக்கினான். வாள் கொண்டு செதுக்கிய பச்சை மரம்போல, வெட்டுக் காயங்களால் செங்குருதி பாய விளங்கினான் இளந்தத்தன். இரும்புக் கவசமணிந்த காளனுக்குச் சிறிதும் புண் உண்டாகவில்லை. மார்க்கலி சீற்றத்துடன் பாய்ந்து வாளை வீசவே, ஜயதுங்கன் அடிபட்டு மூர்ச்சையுற்றுச் சாய்ந்தான். அச்சன் இடைமறித்து மார்க்கலியுடன் பொருதான். இவர்கள் போர்ச் செயலைக் கண்டு அம்மாளிகைக்குள் இருந்த வீரரும் ஏவலாளர்களும் மறைவிடத்தில் ஓடி ஒளிந்தார்கள். ஒவ்வொரு கணமும் உயிரிழப்பதற்கு அஞ்சியவனாய் இளந்தத்தன் அலக்கழித்தான். இளந்தத்தனும் காளனும் போர் புரியும் ஆரவாரத்தைக் கேட்டு அந்தி, சயந்தியிடம் கூக்குரலிட்டாள். அப்போது சாளரத்தின் கதவும் திறக்கப் பெற்றது.

சாளரத்தின் உட்புறமிருந்து சயந்தியும் வசந்தியும் திகைப்புடன் காளனையும் இளந்தத்தனையும் பார்த்தார்கள். "இவன்தான் காளன்!" என்று வசந்தி சயந்தியின் காதில் மெல்லக் கூறினாள். அன்றுதான் காளனைச் சயந்தி கண்டாள்; வசந்தி கூறியதும் அவள் மனம் திக்குத் திக்கென்று அடித்துக் கொண்டது. காளன் ரத்த வெறி கொண்டவனாய்க் கர்ச்சித்துக்கொண்டு இளந்தத்தனை முன்னும் பின்னும் துரத்தித் தாக்கினான். இளந்தத்தன் சோர்ந்து போனான். அவன் மேனி முழுதும் ரத்தம் பீறிட்டெழுந்தது. காளனின் வன்மையும் வீரமும் எங்கே? இளந்தத்தனின் போர்த் திறமை எங்கே! பாவம்? இளந்தத்தன், காளனிடம் அகப்பட்டுக் கொண்டான். 'இனி தன்னால் எதிர்த்து நிற்க முடியாது' என்பதை உணர்ந்தான். உடனே, தன் முழு வன்மையையும் கொண்டு, வாளை உயர்த்திக் காளனின் கழுத்துக்கு நேராக வீசினான். காளனின் தலைக் கவசம் படீரென்று பிளந்து சிதறுண்டது. இளந்தத்தன் வீசிய வாளும் பொடிப்பொடியாயிற்று. அதைக் கண்டு காளனே திகைத்துவிட்டான். கவசம் சிதறியது என்றாலும், அவனுக்குச் சிறிதும் காயம் உண்டாகவில்லை. வாள் வீச்சின் அதிர்ச்சியால் சிறிது கண் சுழல நின்றான். அப்போது இளந்தத்தன் திடுக்குற்றான். அவனுடைய சந்தேகம் உறுதியாயிறறு. கவசம் இழந்த காளனின் தலை, ஸத்துகனின் அழகு நிறைந்த முகமாகத் தெரிந்தது. 'காளனும் ஸத்துகனும் ஒருவனே' என்பதை உணர்ந்தான். உடல் முழுதும் குலுங்கியது அவனுக்கு. ஜயதுங்கன் சந்தேகமாகக் கூறிய வார்த்தைகள் அப்போது அவன் நினைவுக்கு வந்தன. தன்னை மறந்து வியப்பும் திகைப்பும் அடைந்தான். அதற்குள்ளாக, மார்க்கலியால் அடிபட்டு அச்சன் அறிவிழந்து விழுந்தான்; "ஸத்துகா! காளனாக நடிக்கும் மாயாவி நீதானா?

காளன் என்ற பெயருடன் களவும் கொலையும் செய்து பெரும் பாதகம் புரிந்தவன் நீதானே? அடே பாதகா! என் உயிர் போகும் தறுவாயிலாவது உன் மாயத்தை உணர்ந்தேன்! இதோ என் உயிர்...போகிறது. இன்னும் சிறிது நேரத்தில் என் உயிர் சென்றுவிடும்; சயந்தியைத் தீராக் காதலுடன் கொண்டு வந்தேன்; ஆனால், அவளைத் தீண்டிச் சிறிதும் இன்பம் பெற வில்லை! மறு பிறவியிலேனும், அவளை நான் அடைந்தே தீருவேன்! ஆ! சயந்தி! சயந்தி! என்னை இந்தப் பிறவியில் நீ வெறுத்தாலும், மறு பிறவியி லாவது என்னை அடைவாய்! உன்னால் என் உயிரையும் இழக்கிறேன். உன் காதலன் ஸத்துகன், காளன் என்னும் கள்வனே என்பதை இப்போ தாவது உணர்ந்து கொள்..." என்று சொல்லிக் கொண்டே நிலை தளர்ந்து ஒடிந்து விழும் மரம்போல் நின்றான்.

அதுகாறும் வாய்பேசாது திகைத்து நின்ற காளன் இடி ஒலி எனப் பெருநகை செய்தான். அப்போது அவன் முகம், அவன் ஸத்துகன் என்பதை நன்கு எடுத்துக் காட்டியது.

"இளந்தத்தா! இப்போது தெரிந்ததா? அறி வில்லாத பாதகனே! முத்து மாலைகளை அரண்மனையி லிருந்து களவு செய்து என்மீது பழி சுமத்திய உனக்கு இதுவே தக்க தண்டனை. குறத்தி வேஷத்தால் சயந்தியை வஞ்சித்துக்கொண்டுவரச் செய்த உனக்கு இதுவே தக்க பரிசு. காளன் வேறு ஸத்துகன் வேறு அல்ல. இருவரும் ஒருவரே. காளன் என்ற பெய ருடன் காவிரிப்பூம்பட்டினம் முற்றும் நிலைகலங்கச் செய்தவன் நானே. உன்னைப் பழி தீர்த்தபின் உலகில் வேறு எனக்குப் பகை இல்லை. விரைவில் நீ வானுலகை அடைந்து தெய்வ மகளிரைக் காத லிப்பாய்! உன் மார்பிலிருந்து பெருகும் ரத்தத் தினால் என் கோப வேகமும் சாந்தி அடைகிறது.

நீ எண்ணியவாறு ஏழு பிறவியிலும் எப்பிறவியிலும் நீ சயந்தியை காதலியாகப் பெறவே முடியாது. அந்த நினைவை மறந்துவிடு!" என்று கர்ச்சித்தான். அப்போது, மார்க்கலியால் தாக்குண்டு சோர்ந்து வீழ்ந்திருந்த ஜயதுங்கனும் அச்சனும் 'ஸத்துகனே காளன்' என்பதை உணர்ந்ததும், அவன் பேச்சைக் கேட்டுத் திடுக்குற்றனர். இளந்தத்தன் உயிர் போகும் தறுவாயில் தள்ளாடி நிற்பதைக் கண்டு மனம் பதைபதைத்தனர். சித்திரப் பதுமைகள்போல் சாளரத்தில் எட்டிப் பார்த்தவண்ணம் சயந்தியும் வசந்தியும் நின்றனர். இளந்தத்தனுக்குப் பாதி உயிர் போய் விட்டது. எனினும் காளனின்—ஸத்துகனின் கோபம் சிறிதும் தணியவில்லை. காளன் தன் கையிலிருந்த வேலை உயர்த்தி அருகில் சென்று இளந்தத்தன் மார்பில் பாய்ச்சினான். இளந்தத்தனின் முதுகுப்புறம் சென்றது வேல், "ஆ என்ற கூக்குரலுடன் நிலத்தில் சாய்ந்தான் அவன். அவன் உயிர் உடலை விட்டு அகன்றது. காளனின் வெடி நகை அம்மாளிகை முழுதும் எதிரொலித்தது. மார்க்கலி முன் வந்து அதோ பாருங்கள் சயந்தியையும் வசந்தியையும்!" என்றான் வியப்புடன். ஒரு கணம் அவளைப் பார்த்து விட்டுச் சட்டென்று திரும்பி, "ஜயதுங்கனையும் அச்சனையும் மறந்தேனே" என்று பின்புறம் தாவினான் காளன். அச்சன் மலைப்பாம்பென அசைந்து கிடந்தான். ஜயதுங்கனை அங்கே காணவில்லை. மார்க்கலி திடுக்குற்றுத் தேடினான். ஸத்துகன் அங்குமிங்கும் ஓடினான். அவனைக் காணவில்லை. ஜயதுங்கன் தப்பிவிட்டான் என்பதை உணர்ந்தான்; 'எங்கே சென்றாலும் அவனை விடேன்! நீ அச்சனின் அருகில் நில். இளந்தத்தனின் கதியே ஜயதுங்கனுக்கு நாளைக்குக் கிடைக்கப் போகிறது!" என்று மார்க்கலிக்குக் கட்டளையிட்டு, வேகமாகச் சயந்தியின் அறைப்பக்கம் சென்றான்.

"சயந்தீ!" என்று அழைத்தான். உடனே கதவு திறக்கப்பட்டது. எதிரில் நின்ற சயந்தி பெருமூச்சுடன் ஸத்துகனின் பாதங்களைத் தழுவிக்கொண்டு சாய்ந்தாள். அவள் அழுகையின் விம்மல் எங்கும் எதிரொலி செய்தது. ஸத்துகன் கண்ணீர் ததும்ப அவளை எடுத்து மார்புடன் அணைத்து, தனது ஆழ்ந்த பெருமூச்சாலும் அன்பு கனிந்த பார்வையாலும் கர ஸ்பரிசத்தாலும் சயந்தியை ஆறுதல் செய்தான். சயந்தியின் துக்கம் அளவு மீறியது. அவள் அழுகை ஓயவில்லை. ஸத்துகனின் முயற்சி சிறிதும் பயனுறவில்லை. ஸத்துகன் பார்வை அப்போது ஒரு புறமாய்த் தலைகுனிந்து நின்ற வசந்தியின் மேல் சென்றது. உடனே சயந்தியைப் பிடித்து அப்புறம் அழைத்துச் சென்றான். மார்க்கலியை அழைத்து, "மார்க்கலி! இதோ சயந்தி வருகிறாள், இவளைப் பல்லக்கில் ஏற்றி இவள் மாளிகைக்கு அனுப்புகிறேன்! நீ குதிரையில் சென்று இவளை மாளிகையில் விட்ட பின்னர் இங்கே வந்து விடு" என்றான். பின்னர் சயந்தியைத் தேற்றிப் பல்லக்கில் உட்காரச் செய்து, "நீ மாளிகைக்குச் செல். நான் சிறிது நேரத்தில் வந்து விடுகிறேன்" என்றான். சயந்தி வாய் பேசவில்லை! கண்ணீரைத் துடைத்த வண்ணம் தலை அசைத்தாள். அவள் அழுகை அப்போதும் ஓயவில்லை, பல்லக்குப் புறப்பட்டது. மார்க்கலி பின் தொடர்ந்தான்.

ஸத்துகன் சட்டென்று திரும்பி அறைக்குள் புகுந்தான். வசந்தியை அணுகி அவள் தோள்களை இறுகப் பிடித்து ஏதோ கேட்கும் பாவனையுடன் நின்றான். அவன் கண்களில் தீப்பொறி பறந்தது. "வசந்தீ! சயந்தியை யாரென்று அறிந்துகொண்டாயா! அவளிடம் என்னைப்பற்றிச் சொல்லி இருக்கிறாயா" என்றான். அவன் முகத்தோற்றத்தைக் கண்டு வசந்தி அஞ்சிப் பதைபதைத்துத் தலைகுனிந்து,

"அறிந்து கொண்டேன். தங்களைப்பற்றி நான் என்ன சொல்லப் போகிறேன். ஒன்றும் பேசுவதற்கில்லையே?" என்றாள் குரல்தாழ. தன் மீது ஸத்துகன் கோபமுற்றிருப்பது எதற்காக என்பது அவளுக்கு முதலில் தெரியவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் முற்றும் விளங்கியது. கடுங்கோபத்துடன் அவன் அவளை நோக்கி, "அது போகட்டும். சயந்தியைப் பற்றி எதையாவது பத்திரையிடம் நீ கூறினால் ?—"என்று சொல்லி முகம் சிவந்தான். அவன் கைகள் துடித்தன. அரையிலிருந்து உடை வாளை இழுத்து வசந்தியின் மார்பில் வைத்து "தெரிந்ததா? கூறினால்—இந்தப் பரிசுதான் கிடைக்கும்" என்றான். அவள் கண்கள் காளனைப் பார்க்கவும் கூசின. அவள் உடல் நடுங்கியது. முதலில் 'தான் காளன் என்பது வெளியாகிவிட்டதே! இதைப் பத்திரையிடம் இவள் கூறி விட்டால் என்ன செய்வது? இவளைப் பயமுறுத்தி வைத்தால் சொல்லாமல் இருப்பாள்' என்று இவன் தன்னை அச்சுறுத்துகிறானோ என்று நினைத்தாள். ஆனால் அடுத்த கணத்தில் அவன் வாய் மொழியைக் கொண்டே உண்மையை உணர்ந்தாள். சயந்தி என்னும் காதற் கணிகையைத் தான் காதலித்திருப்பதை பத்திரையிடம் இவள் கூறி விட்டால் என் செய்வது? பத்திரைக்குத் தெரிந்தால் பெரும் விபத்தல்லவா நேரும்? என்று எண்ணியே தன்னைப் பயமுறுத்துகிறான். என்பதை - உணர்ந்தாள்; "இந்த வாள்மீது ஆணையாகச் சொல்லுகிறேன்! நிச்சயம் பத்திரையிடம் சயந்தியைப்பற்றிய பேச்சே பேசேன். தாங்கள் என்னை நம்புங்கள். என்னுடன் இவ்வளவு நாட்கள் பழகியும் தாங்கள் என்மீது சந்தேகம் கொள்வதா?" என்றாள். கொழுந்து விட்டு எரிந்த தீ சட்டெனத் தானே அணைவதுபோல் ஸத்துகனின் கோபம் தணிந்தது. "வசந்தி, உன்னை நம்புகிறேன்—இனி நீ

பத்திரையிடம் போகலாம்" என்றான். அவ்வளவில் அவள் இறந்தவள் பிழைத்தவள்போல் பட்டமரம் தளிர்த்ததுபோல உவகை கொண்டு விரைந்து மறைந்தாள். ஆனால் அவள் மனத்தில் புகைந்து கவிந்து கொண்டு இருந்த பொறாமைத்தீ—சுற்றுப்புறத்தை எல்லாம் தகிப்பதற்கு இருப்பதை ஸத்துகன் எவ்வாறு அறிவான்?

இவற்றை எல்லாம் பார்த்த வண்ணம் எழுந்திருக்கவும் சக்தியற்றவனாய்க் கிடந்த அச்சனை ஸத்துகன் அணுகினான். ஆனால் குற்றுயிராய்க் கிடந்த அச்சனை ஸத்துகன் மேலும் தண்டிப்பதற்கு விரும்பவில்லை. முத்து மாலையைப்பற்றி அச்சனிடம் உண்மையை அறிய எண்ணிக் கேட்டான். அச்சன், ஸத்துகனிடமுள்ள பயத்தால் நடந்தவற்றை முறையே சொல்லி விட்டான். "குறத்தியாக வந்தது நீதானா?" என்று ஒரு பெருமூச்சு விட்டு நாகம்போல் சீறினான் ஸத்துகன். அச்சன் குலைநடுங்கி வாய் பேசாது ஒருபுறம் ஒதுங்கினான். கோபம் மிகுந்து ஸத்துகன் கையை ஓங்கவே, மாளிகையைச் சுற்றியுள்ள தன் வீரர்களது ஆரவாரம் கேட்டது. அந்த ஆரவாரம் ஸத்துகனைக் கலங்கச் செய்தது. துணுக்குற்று எழுந்து வாயிற்புறம் நோக்கினான். தன் படைகள் நான்கு பக்கமும் சிதறி ஓடுவதைக் கண்டான். அரசனின் படை உள்ளே புகுவதையும் உணர்ந்தான். அதே சமயம் பொன் குடுமியும் ஜய துங்கனும் வீரர் கூட்டத்துடன் உள்ளே புகுந்து ஸத்துகனை வளைத்துக் கொண்டனர். அதுவரையில் கீழே சாய்ந்திருந்த அச்சன் குதித்தெழுந்து ஈட்டியால் ஸத்துகனின் பின்புறத்தில் குத்தினான். ஸத்துகனின் மார்புக்கு முன்பு பொன் குடுமி வேலை நீட்டினான். ஜயதுங்கன் வலது பக்கத்தில் நின்று வாள்கொண்டு உறுமினான். ஸத்துகனுக்கு மதிமயக்கம் உண்டாயிற்று. தலைசுழல நின்றான். செயலற்றுப் போனான்.

"காளன் என்னும் கள்வன் நீதானா? ஸத்துகா, உன் மாயத்தை முன்பே அறிவேன். இப்பொழுது உண்மை வெளியாயிற்று. இளந்தத்தனைக் கொன்று விட்டாய். நான் இருக்கிறேன் என்பதை மறந்தாய். உன் வாழ்நாள் இன்றோடு முடிவுற்றது. காளனாய் நடித்துக் கொடும்பாவம் புரிந்த உனக்குக் கொலைத் தண்டனை தான் கிடைக்கும். புறப்படு" என்று சொல்லிவிட்டு வீரர்களைப் பார்த்தான். வீரர்கள் பெரும் சங்கிலிகளால் ஸத்துகனின் இரு தோள்களிலும் விலங்கிட்டனர். ஸத்துகன் பொன் குடுமியின் வசமானான். சிறைப்பட்ட சிங்கம்போல் ஸத்துகன் நடந்தான். தேரில் அவனை ஏற்றிப் பொன்குடுமி, அச்சன், ஜயதுங்கன் மூவரும் படைசூழச் சென்றனர். காளன் என்னும் கள்வன் ஸத்துகனே என்பது வெளிப்பட்டு நகர் முழுதும் கலங்கியது. காளன் சிறைப்பட்டான் என்ற பேச்சே எங்கும் எதிரொலித்தது. 'காளனாக நடித்த ஸத்துகன்' வீதிவழியே தேர்மீது செல்வதைக் காண எங்கும் கூட்டம் கூடியது. பாவம்! முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பது உண்மையாயிற்று. ஏறுபோல் தலைநிமிர்ந்து நடக்கும் ஸத்துகன் தலை குனிந்து நின்றான். உடலே குன்றி விட்டது அவனுக்கு. சிலையில் செதுக்கிய வீர வடிவமோ என்னும்படி தோற்றினான்.

வணிகர் வீதியில் ஸத்துகன் புகுந்ததும் ஆரவாரம் மிகுதியாயிற்று. மாளிகையில் பத்திரையிடம் சயந்தி விஷயத்தைத் தவிர மற்ற யாவற்றையும் வசந்தி சொல்லிக்கொண்டிருந்தாள். அப்போது, "காளனா அவர்?" என்று கேட்ட பத்திரை வீதியில் எழும் ஆரவாரத்தால் மனம் பதைபதைத்து மேன் மாடத்திலிருந்து வீதியை நோக்கினாள். வீதியில் சிறைப்பட்டுச் செல்லும் ஸத்துகனைக் வசந்தி கண்டதும் மீண்டும் உற்றுப் பார்த்தாள். பத்திரை ஸத்துகனின் முகத்தையும் விலங்கிடப்பட்ட அவன்

க்வசத் தோள்களையும் நோக்கியதும், "வசந்தி" என்று அவள் தோள்களைப் பிடித்துக்கொண்டாள். தன் நினைவிழந்தாள். 'காளன் என்னும் கள்வனைக் களவு புரிந்து வந்த ஸத்துகன் சிறைப்பட்டான்' என்ற கோஷம் பத்திரையின் காதுகளைத் துளைத்தது. ஆ! என்று கூவி வசந்திமீது சாய்ந்தாள் பத்திரை. அவள் மூர்ச்சை உற்றதைக் கண்டு வசந்தி நிலை குலைந்தாள். ஸத்துகன் தலை குனிந்தவாறே தேரில் சென்றான். சிறிதும் அவன் தலை நிமிரவில்லை.

## 23

## வீண் முயற்சி

முதல் நாள் மாலையில் மூர்ச்சையுற்ற பத்திரை அன்று முழுதும் எழுந்திருக்கவில்லை. வசந்தி அருகிலேயே இருந்து கண்ணீர்விட்ட வண்ணம் உபசரணைகள் செய்துகொண்டிருந்தாள். உடனிருந்து பல சேடியர்கள் பணிவிடை செய்தனர். நடந்த விவரங்களையெல்லாம், வசந்தியால் உணர்ந்த மும்முடி நாய்கன் மனம் உடைந்து, பத்திரையைத் தேற்றியவாறு அருகில் அமர்ந்திருந்தான். கன்னி மாடம் முழுதும் சோகக்களை ததும்பியது.

பத்திரைக்கு உணர்வு சிறிதும் உண்டாகவில்லை. மெல்ல மெல்ல மூச்சு மட்டிலும் இயங்கிக் கொண்டிருந்தது. நினைவு வந்தவுடன் ஸத்துகனை எண்ணிப் பிரலாபித்துப் பிதற்றலானாள். அவள் உள்ளம் வெம்மையுற்றிருந்தது போலவே, வார்த்தைகளும், அவள் உடலும் வெம்மையுற்றிருந்தன. அவள் நிலையைக் காணுந்தோறும் நாய்கன் உள்ளம் உருகினான். வசந்தி உள்ளம் பதைபதைத்தாள். எவ்வளவு சினமும், ஆற்றாமையும் வசந்திக்கு இருந்தனவோ, அவ்வளவும், பத்திரையிடம், பேரிரக்க

மாகவும் அளவு கடந்த அன்பாகவும் மாறின. ஸத்துகன் பிரிவால் பத்திரையின் உடல் வாடி மெலிந்து விட்டது. 'ஒரே நாளில் ஒரு பொழுதிலே, பத்திரை, இப்படி இளைத்து, அழகு குன்றிப்போய் விட்டாளே!' என்று வருந்தினாள்; திகில் உண்டா யிற்று வசந்திக்கு. 'இப்படியே இவள் இருந்தால் உயிரே போய் விடுமோ என்னவோ? இவ்வளவும் அந்தப் பாவி ஸத்துகனால் அல்லவா? நான் அன்றே சொன்னேன்! ஆனால், அப்போது இவள் என்னுடன் வாதாடினாள். நான் எண்ணுவது சிறிதும் தப்புவ தில்லை! ஆனால், விதியின் விளைவை யார்தான் வெல்லுவார்? நான் மணமாகிப் பின்னர் கைம்பெண் ஆனேன். இவள் கன்னிப் பருவத்திலேயே காதலனை இழக்கப் போகிறாள்! அந்தோ! இனி ஸத்துகன் உயி ருடன் வருவான் என்றால் யார்தான் நம்புவர்? யமனுலகு சென்றவன் திரும்பி வருவது உண்டா? ஆனால் அவனுக்குக் கொலைத் தண்டனை விதித் தாயிற்று என்று தெரிந்தால், மறு கணமே இவள் உயிரை விட்டு விடுவாளே!—இப்போது இவளைப் பார்க்கையில் அதற்கு முன்பே இவள் உயிர் போய் விடுமோ என்று சொல்லும்படி இருக்கிறதே! விதி என்ன எண்ணியிருக்கிறதோ? அறியேன்' என்றவாறு சிந்தித்திருந்தாள் வசந்தி.

சூரியன் உதயமானான். செங்கிரணங்கள் சாள ரங்கள் வழியே உள் புகுந்து பத்திரையின் மேனியில் திளைத்தன; அவ்வளவில் பத்திரையின் கரிய விழி மலர் திறந்தன; சந்திரனைக் கண்டு அலரும் குவளை, சூரியனைக் கண்டு மலர்ந்தது என்று சொல்லும்படி இருந்தது. அவள் தாமரை முகம் சூரியனைக் கண்ட பின்பும் பொலிவு பெறாமல், பனியால் கருகிய தாமரை போன்று அழகு குன்றியிருந்தது. கண் களில் நீர் ஊற்றுப் பெருக்கெடுத்தது. உள்ளிருந்து பொங்கியெழும் துக்கத்தை, விழுங்கி அடக்கிக்

கொள்ள முயன்றாள். தன்னைச் சுற்றிலும் உள்ளவர்களை ஒருமுறை நோக்குவதற்குள் அவள் கண்கள் மீண்டும் மூடிக்கொண்டன. மீண்டும் விழித்தாள்; "பத்திரை! பத்திரை!" என்ற வார்த்தைகளே நாய்கன், வசந்தி இருவர் வாயிலிருந்தும் வெளி வந்தன. பத்திரை அதற்கு மறுமொழி கூறவில்லை. நீர்த்துளி பனிக்கும் கண்களால் துயரம் வெளிப்பட நோக்கினாள். 'தன் உடலில், உணர்ச்சியோ, வன்மையோ எதுவும் இல்லை' என்றே அவள் எண்ணிச் சோர்வுகொண்டாள்.

கண்ணீர் பெருகிக் கன்னங்கள் வழியே ஓடி, பவளத்துண்டம் போலும் அவள் இதழ்களை நனைத்தன; அப்போது பேச முயன்றாள்; "கள்வரா அவர்!...அவர் கள்வரா?...தெய்வமே! இது உண்மையா?" என்று துயரம் கிளர்ந்தெழ, பெருமூச்சு விட்டுக் கூறினாள். தலை குனிந்து வாய் திறவாமல் கண்ணீர் பொழிந்தாள் வசந்தி. பத்திரைக்குத் துக்கம் பெருகியது. தந்தையின் சோகம் நிறைந்த முகத்தைக் கண்டதும் விம்மிப் பொருமிய வண்ணம் நாய்கனின் பாதங்களில், தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். நாய்கன், அதைக் கண்டு மனம் சகியாமல், துக்கம் நெஞ்சை யடைக்க, பத்திரையின் நறு மலர்க் கூந்தலைத் தடவியவாறு, "பத்திரை! பத்திரை! வருந்தாதே! முன்பு நான் சொல்லியதையெல்லாம் அலக்ஷியம் செய்தாய்! உன் கதி இவ்வாறு ஆகுமென்று கனவிலும் நான் கருதவில்லை! உனக்கு மணம் செய்வித்த பின்பு உள்ளம் குளிர உயிரைவிட வேண்டும் என்று எண்ணியிருந்தேன். தெய்வத்தின் நோக்கம் வேறாக இருக்கிறது! அந்த மாபாவி, ஸத்துகனை நம்பி மதியிழந்து இந்நிலை அடைந்தாய்! உன்னுடைய உள்ளம் குளிர்வதற்காக நானும், அவனை நம்பி மதியிழந்தேன்; மாயாவி! பாதகன்! என் குலத்தைக் கெடுக்க வந்த

துரோகி! என் உள்ளத்தைத் தீராத புண்ணாக்கிய வஞ்சகன்! பழிபாவம் அஞ்சாப் பாதகன்! நான் என் செய்வேன்! போதிஸத்துவா! முதுமைப் பருவத்தில் என்னை இவ்விதம் மீளாத் துயரததில் மூழ்கச் செய்து விட்டாயே! அந்தோ! பத்திரை! அவன் வெளி யழகைக் கண்டு அறிவிழந்து அல்லல் கொண்டாய்! காளன் என்ற பெயருடன், நீண்ட நாட்களாக எல்லை யற்ற களவு கொலைகள் செய்து வந்த அவனை அரசன், இனிமேல் கொல்லாமல் விடுவானே? அரசன் இன்றே கொல்வான்! நீ ஏன் வீண் துயரம் அடைகிறாய்? அவனை நினைக்க நினைக்க என் உடலும் உயிரும் துடிக் கின்றனவே! பத்திரை! இப்போதாவது உன் அறிவு தெளிவு பெற்றதா? அவனால் உன் வாழ்வே வீணாகி விட்டதே! முகர்ந்தபின், கசக்கி எறியப்பட்ட மலர் போலாயிற்றே உன் நிலை? என் மனக் கோட்டைகள் தொடக்கத்திலேயே அடியற்றுத் தகர்ந்துவிட் டனவே! உன் நிலையைக் கண்டு இனி யான் நீண்ட நாட்கள் உயிருடன் இரேன். உன்னைப் போதி ஸத்துவனே காத்தருள வேண்டும்...பாவி ஸத்துகா, நீ கொடும்பாவ நரகில் தவிக்கவேண்டும்" என்று புலம்பினான்.

இரு கைகளாலும் முகத்தைப் பொத்தி, அது காறும் தேம்பித் தேம்பி அழுத பத்திரை வெறி பிடித்தவள்போல் எழுந்தாள். நாய்கனின் பாதங்களைத் தழுவிக் கொண்டாள். வசந்தியும் சேடியரும் திடுக் குற்று அகல நின்றார்கள்.

"தந்தையே! தாங்கள் இவ்வாறு கூறினால் நான் என் செய்வேன்! விதியின்படியே யாவும் நிகழும்? நேர்ந்தவற்றிற்கு யாரும் காரணமல்ல. அவர் மீதும் குற்றமில்லை. என் மீதும் குற்றமில்லை. என்னையும் அவரையும் ஒன்றாக்குவித்த விதியின் மீதே குற்றம் கூறவேண்டும். அவரைக் கொல்லப் போகும் விதி

அதற்கு முன்பே என்னையும் கொன்றிருக்க வேண்டும். அவர் மீது எவ்வளவு பழிகள் ஏற்பட்ட போதிலும், நான் அவரை மறப்பது முடியாத காரியம்! என்னை அவரும் மறவார். அவரை நான் எந்த நிலையில், எந்த நினைவில், கண்டு காதலித்து மயங்கி அவருக்கு அடிமையானேனோ, அவ்விதமே இப்போதும் இருக்கிறேன். என் காதலில் சிறிதும் குறைவில்லை. அவரும் அவ்விதமே இருப்பார். அந்நிலை என்றும் மாறாது.

அவருக்கே நான் அடிமை! ஆனால் அது பொய்யாகாமல் நிலைக்க வேண்டும்! உடலுயிர் கலந்த எங்கள் உண்மைக் காதலைப் போதிநாதன் குறைவு பெறச் செய்யான்? என் சுக வாழ்வை நிலைத்திருக்கச் செய்வது தங்கள் கடமை; அதற்கு மாறாகத் தாங்கள் சிறிதும் எண்ணக் கூடாது! என் பிளவுற்ற இருதயத்தை மேலும் புண்ணாக்குவது நியாயமா? ஐயா, என் வாழ்வை நலமுறச் செய்வது, தங்கள் கடமையல்லவா? தங்களுக்கு என்மீது உள்ள அன்பு இப்போதன்றோ வெளிப்பட வேண்டும்? தாங்கள் உள்ளம் இரங்கி என்னைக் காக்காவிடில் என் வாழ்வு இன்றோடு முடிவுறும். என்னை........ அவருக்குச் சொந்தமாகச் செய்ய வேண்டும். என் உயிர் நிலைத்திருப்பதற்காக—என் சுக வாழ்வுக்காக—தங்கள் உள்ளம் குளிர்வதற்காக — அவரை விடுதலை செய்விக்க வேண்டியது தங்கள் கடமை! என் உள்ளத்தில் பொங்குவதை வெளியிட்டுவிட்டேன். என் பிளவுற்ற இருதயத்திலிருந்து எழும் வார்த்தைகளைத் தாங்கள் நிச்சயம் நம்பவேண்டும்; நான் வேண்டுவது இதுவே! இல்லையேல்...” என்று நாய்கன் பாதங்களைக் கண்ணீரால் நனைத்தாள்.

அவள் சொற்களைக் கேட்டு நாய்கன் திடுக்கிட்டுத் திகைத்துப் போனான். விசித்து அழுகின்ற

அவள் முகத்தையும், கசிந்து பெருகும் கண்ணீரையும், அவள் உள்ளம் நொந்து கூறிய உணர்ச்சி நிறைந்த வார்த்தைகளையும் கண்டு, கேட்ட நாய்கன் நெஞ்சம் நெக்குருகினான். அவன் மனத்தில், பத்திரையின் வார்த்தைகள் ஆழப் பதிந்தன. 'அந்தோ நான் என் செய்வேன்? இவளைக் காப்பது என் கடமை! - ஆனால் இவள் பொருட்டு அவனை விடுவிப்பதும் என் கடமையாக இருக்கிறதே! அந்தப் பெருந் துரோகியை எவ்வாறு மீட்பது? சோழவேந்தனது பிறழா நியாயத்தில், அவனுக்கு விடுதலை ஏற்படுவது எளிய செயலா! அந்தோ! யாருக்கு நான் வருந்துவேன்? கள்வனென்று பழிபூண்டு சிறைப் பட்டுச் சென்ற பின்பும் அவனிடம் சிறிதும் இவளுக்குக் காதல் குறையவில்லையே? என்ன அதிசயம்! அந்தக் கள்வனுக்குக் காதலியாக வாழவே இவளும் விரும்புகிறாளே! காதற் பெருந்திரைக்குமுன், பழி பாவம், அச்சம், பொய், மெய் என்பன மறைந்து புலப்படாமல் போகின்றனவே! கன்னிப் பருவத்து இயற்கைக் காதலால் வந்த பேரிடர்தானே இது! என் உயிருள்ளவரையில் இவளுடைய விருப்பத்தை யெல்லாம் நிறைவேற்றுவது என் கடமை! போதி ஸத்துவா! நான் என் செய்வேன்? உன்னிடம் பக்தி செலுத்தும் அவனை நீயே காப்பாற்ற வேண்டும்; உன்னிடம் பேரன்புடையவளான பத்திரையை நல் வாழ்வுறச் செய்வதும் உன் கடமைதான்!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

நாய்கன் வாய் திறவாமல் ஏதோ சிந்தனை செய்த வண்ணம் இருப்பதைக் கண்ட பத்திரை, "என் பொருட்டாவது அவரை விடுவிக்க வேண்டும்! அது தங்களுக்கு விருப்பமில்லையேல், என் உயிரைத் தங்கள் காலடியிலேயே விட்டுவிடுகிறேன். அவரை விடுவிக் கிறேன் என்று ஒரு வார்த்தை தாங்கள் வாய் திறந்து கூறவேண்டும். அந்த ஒரு வார்த்தையே என் உள்

ளத்தின் புண்ணை ஆற்றும்! துயரத்தை அடக்கும். அவ்வார்த்தையே என்னைத் துக்கக் கடலிலிருந்து உயிர் பிழைக்கச் செய்யும் ஒரு தெப்பம்போல் உதவும்!'' என்று மீண்டும் முறையிட்டாள்.

பத்திரையின் நிலையைக் கண்டு, நாய்கனால் அமைதியோடு இருக்க முடியவில்லை. பத்திரையின் உட்கருத்தை—உண்மை நிலையை நன்கு உணர்ந்தான்! 'இனி, பேசாமலிருப்பது தவறு' என்று எண்ணினான். அவளிடம் உள்ள பேரன்பால் "பத்திரை! இன்னும் உன் புத்தி தெளிவு பெற வில்லையே? அவனை விடுவிப்பது எளிதில் முடிவதா? ஆயினும் நீ நினைப்பது எனக்கு வருத்தத்தையே அளிக்கிறது. அவன் விடுதலை பெற்றால், அவனுடன் வாழவே நீ எண்ணியிருக்கிறாயா? இது உறுதியா? அந்தக் கள்வனுடன்...'' என்று சிறிது கோபத்துடன் கேட்டான். பத்திரை அஞ்சவில்லை.

"ஆம்! அவரைக் காதலித்தபின், வேறு ஒருவரை மனத்தாலும் நினைப்பேனா? அவரை மணப்பதாக நான் இருப்பதை யாவரும் அறிவார்கள்! பழி, பாவம் யாவும் அவருக்கு வருவன, எனக்கும் வந்தது போலத்தான்! அவருடன் வாழக் கிடைக்கவில்லையேல் உண்ணா விரதம் இருந்து உயிரை விடுவேன்!'' என்றாள்.

"பத்திரை! உன் துணிவே துணிவு! பெண்கள் தாம் கொண்டதை எவ்வகையிலும் விடார்கள் என் பதற்கு நீயே உதாரணம்; நான் ஒன்று கேட்கிறேன்; கள்வனின் காதலி என்ற பழிச் சொல்லுடன் வாழ்க்கை நடத்துவதில் உனக்கு விருப்பம் இருக் கிறதா? அவ்விதம் செய்வது நம் வணிக குலத்திற்கே இழிவைத் தருவதல்லவா? உன் குணம் ஏன் இப்படி மாறுபட்டு விட்டது? கள்வன் என்று உலக முழுதும் பழிமொழி கூறுகின்றனர் அவனை மணந்து கொள்வதா?''

"தந்தையே! இன்னும் கேட்கிறீர்களே! வாழ்ந்தால் அவருடன் வாழ்வேன்; இல்லையேல் அவருக்கு முன்னதாகவே என் உயிரை விடுவேன். அவருக்காகவே வாழ்வேன். அவருக்காகவே இறப்பேன். அவர் கொலைஞராஞலும், கள்வராஞலும்—உலகமே அவருடன் என்னையும் சேர்த்துப் பழிமொழி கூறிஞலும், அவருடன் வாழும் வாழ்க்கையையே நான் விரும்புகிறேன். எனக்கு அவருடன் வாழும் வாழ்வைக் காட்டிலும், இன்பம் தருவது வேருென்றில்லை."

"பத்திரை, நான் இனி என்ன சொல்லுவேன்! உன் எண்ணத்தை நீ மாற்றிக் கொள்ளவில்லை. ஊழ்வினைபோல் யாவும் நடக்கும். உனக்குக் காதலஞக அவனை விதித்த, விதி, இப்போது அவனை மீட்கவும் வேண்டும்! விதியின் செயலை யாரறிவார்? அரசன் ஆணையை யார்தாம் கடப்பார்? உன் நன்மையை விரும்பியே உயிர் வாழ்கின்ற யான், உன் விருப்பத்தை நிறைவேற்ருமல் இரேன்! சோழ மன்னனிடம் சென்று, கோடிக்கணக்கான பொன்களைக் கொடுத்தேனும் அவனை விடுவிக்க முயல்வேன். அதற்கு மேல், விதியின் செயல்!"

துக்கக் கடலில் மூழ்கித் தத்தளித்தவளுக்கு நாய்கனின் வார்த்தைகள் சற்று ஆறுதலை அளித்தன. அப்போது வீதியில் முரசொலி கேட்டது. நாய்கன், பத்திரை, வசந்தி, மூவரும் திடுக்குற்று ஓடி, சாளரத்தின் வழியே வீதியை நோக்கிஞர்கள்.

வள்ளுவன் யானை மீதிருந்து முரசு கொட்டிச் சென்ருன். இடையிடையே அரசனின் கட்டளை ஒன்றையும் வார்த்தைகளாகக் கூறிஞன்: "காளன் என்ற பெயருடன், களவு கொலை செய்து வந்த ஸத்துக சிரேஷ்டியை நாளை தினம் விசாரணை செய்து கொலைத் தண்டனை விதிக்கப்படும்; இது அரசன் கட்டளை!"

வள்ளுவனின் வார்த்தைகளைக் கேட்டு வீதியில் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள் ஜனங்கள். அப்போது நாய்கன் முதலிய மூவரும் இடியொலி கேட்டவர்போல் கலங்கினர். 'ஆ' என்று அலறிய வாறே நாய்கனின் பாதங்களில் பத்திரை விழுந்து புலம்பினாள்.

நாய்கனும் வசந்தியும் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்றினர். பத்திரை கண்ணீர்ப் பெருக்குடன், "இப்போதே, தாங்கள் புறப்படுங்கள்; இல்லையேல் இப்போதே என் உயிரைப் போக்கிக் கொள்கிறேன்" என்று வஞ்சினம் கூறினாள்.

நாய்கனின் இருதயம் நெகிழ்ந்தது. "பத்திரை, இதோ போகிறேன், நீ வருந்தாமலிரு. ஸத்துகனின் தந்தை பெருஞ்சாத்துவனையும் அழைத்துச் செல் கிறேன்" என்று புறப்பட்டான். பத்திரை வசந்தி யுடன் சற்று ஆறுதலடைந்து கன்னிமாடத்திற்குள் தளர்நடையுடன் போனாள்.

பன்னிரண்டு கோடிப் பொன்களுடனுடனும் காரியப் பெயர் நால்வருடனும் பல்லக்கில் ஏறிப் புறப் பட்டான் நாய்கன். ஸத்துகன் மாளிகையை நோக்கிச் சென்றது பல்லக்கு. அவ்விடத்தை அடைந்ததும், நாய்கன், சிவிகையிலிருந்து இறங்கிக் காரியப் பெய ருடன் உள்ளே சென்று பெருஞ்சாத்துவனைக் கண்டான். ஸத்துகனை நினைத்துப் புலம்பியவாறே சாய்ந்திருந்த பெருஞ் சாத்துவன், நாய்கனைக் கண்டதும் 'ஓ' என்று அலறினான்; நாய்கனுக்கு அவன்மீது பெரிதும் இரக்கம் உண்டாயிற்று. அருகில் பல வணிகர்கள் உடனிருந்து ஆறுதல் கூறிக்கொண் டிருந்தார்கள். நாய்கனும் தேறுதல் சொன்னான்.

"நாய்கரே, என் கதி இவ்வாறு ஆயிற்றே! என் ஒரே புதல்வனையும் இழக்கிறேன்; என் உயிர் போகவில்லையே! நான் என் செய்வேன்! ஸத்துகனே

காளன் என்ற கள்வன் என்பதை இதற்கு முன் சற்றும் அறியேனே! அந்தோ! இனி இந்த மாளிகையோடு நான் மாண்டுபோக வேண்டியது தான்! உமது பெண்ணை ஸத்துகன் மணந்து வாழும் மணக்கோலத்தைக் காணவேண்டுமென்று மகிழ்ந்திருந்தேனே! இனி அவன் பிணக்கோலத்தையே காணப்போகிறேன்!..." என்று முறையிட்டான்.

இடைமறித்து ஆறுதல் கூறினான் நாய்கன். தான் வந்திருப்பதன் நோக்கத்தையும் உணர்த்தினான். இறந்த உயிர் திரும்பி வந்தது போலாயிற்று பெருஞ்சாத்துவனுக்கு; எழுந்து உட்கார்ந்து ஸத்துகனை எவ்வாறேனும் விடுதலை செய்ய முயல்வோம் என்று எண்ணியவனாய், "நாய்கரே! உமது கருத்துப்படியே செய்தால், ஸத்துகனை நிச்சயம் விடுதலை செய்யலாம்; நானும் புறப்பட்டு விட்டேன்; அவனை விடுதலை செய்வதற்காக என் உடைமை முழுவதையும் கொடுக்கவும் ஆயத்தமாயிருக்கிறேன்; பதினெட்டுக் கோடிப் பொன் நானும் கொணர்கிறேன்" என்றான். சிறிது நேரத்திற்கெல்லாம், பதினெட்டுக் கோடிப் பொன்களுடன் பெருஞ்சாத்துவனும் புறப்பட்டான். நாய்கனும், சாத்துவனும், பொன் குவியலுடன், பல்லக்கில் ஏறி அரசன் அரண்மனைக்குச் சென்றனர்.

அரசன் சபையில் அமர்ந்திருந்தான். நாய்கனும் பெருஞ் சாத்துவனும் அதை அறிந்து, தங்கள் வரவைக் காவலாளர் வழியாக அரசனிடம் உணர்த்தினர். அரசன் அவர்களை வரும்படி அழைத்தான். நாய்கனும், பெருஞ்சாத்துவனும், நிலைதளர நடந்து பொற் குவியல்களை அரசன் பாதத்தில் வைத்து வணங்கினர். அவர்கள் வந்திருப்பதன் நோக்கத்தை எளிதில் உணர்ந்தான் மன்னன். எனினும் முறையே, அவர்களை, "வந்த காரியம் என்ன?" என்று கேட்டான். கண்ணீர் சொரிய இருவரும் வாய்விட்டு அரற்றி ஸத்துகனை விடுதலை செய்யவேண்டும் என்று

கேட்டுக் கொண்டனர். பொற் குவியல்களையும், அவர்களையும் மாறிமாறி நோக்கியவாறே வாய் பேசாமல் இருந்தான் அரசன்.

"மன்னர் மன்னவ! ஸத்துகன் செய்த குற்றங்களை இம்முறை மட்டும் பொறுத்தருளவேண்டும். எங்கள் உடைமை முழுவதையும் வேண்டுமானாலும் அளிக்கிறோம். கருணை செய்து அவனை மன்னித்து விட வேண்டும். தங்களுடைய அன்புக்குப் பாத்திரமானவன் அவன்! இம்முறை பொறுத்து விட்டால் போதும். அவனை விடுதலை செய்வது எங்கள் உயிர்களைக் காப்பது போலாகும் வேந்தே!" என்று முறையிட்டார்கள்.

அரசன் கோபத்துடன் வாய் பேசாமல் இருந்தான். அவ்வளவில் சபையிலுள்ள மந்திரியர், பிரதானியர் முதலோர் 'ஸத்துகனை விடுதலை செய்தல் தகாது!' என்று கூறினார்கள். அவர்கள் யாவரையும் கையமர்த்தி விட்டு அரசன் கூறலானான். "நாய்கரே, பெருஞ் சாத்துவரே! சோழன் நெறி தவறான் என்பதை மறந்தீர்களா? உங்கள் இருவருக்காக, என் கோடாச் செங்கோல் வளையுமா? என் முன்னோன் மனுநீதி கண்ட சோழன், தன் மகன் செய்த குற்றத்திற்காக அவனைத் தேர்க்காலின் கீழ்க் கிடத்திக் கொன்றான் என்பதை நீங்கள் அறியீர்களா? நியாயம் என்பது யாவருக்கும் ஒன்றே. ஆதலால் என் கோபத்திற்கு ஆளாகாமல் நீங்கள் திரும்பி விடலாம். பொற் குவியலைக் கண்டு மயங்கும் அரசன் நானல்ல. பால் புளித்துப் பகல் மாறுபடினும் என் நீதி மாறுபடாது. நாளை விசாரணை செய்து, நியாயம்போல் கொலைத் தண்டனையே விதிக்கப் பெறும். புத்த தேவனே ஸத்துகனுக்கு இந்தத் தண்டனையை அளிக்கிறான்" என்றான். அரசனுடன் எவ்வளவு முறையிட்டும் அவன் கேட்கவில்லை. அரச

னுக்குக் கோபம் மிகுதியாகவே, இருவரும், மனம் உடைந்து திரும்பி விட்டனர்.

நாய்கன் மதி கலங்கிப் போனன்; 'ஸத்துகன் நிச்சயம் கொலை செய்யப்படுவான்' என்ற உறுதியால் அவன் மனம் உடைந்து விட்டது; நேரே தன் மாளிகை நோக்கிப் பல்லக்கில் சென்றான். பெருஞ்சாத்து வனுக்கு அரசன் முன்னிலையிலேயே உயிர்போய் விட்டதுபோல் ஆயிற்று; தன் மாளிகையை அடைந்து கட்டிலில் சாய்ந்ததும், "ஸத்துகா,... ஸத்துகா..." என்று பிதற்றினன்; கண்கள் இருண்டன. செவிகள் அடைத்துப்போயின. மூச்சுத் திணறியது. ஸத்துகனை ஸ்மரித்தவாறே, அவன் உயிர் உடலிலிருந்து அகன்றது. புதல்வனுக்காகவே உயி ருடன் வாழ்ந்த அவன், அவனை இழந்து உயிருடன் இருப்பானே? புத்திர சோகத்தால் அவனுயிர் அகன்றதில் ஆச்சரியம் இல்லை. விரும்பினும் விரும்பா விடினும் வருவது வந்தே தீருமன்றோ? ஆகவே, நாய்கனும், சாத்துவனும் அரசனிடம் போய் வந்தது வீண் முயற்சியல்லவா?

## 24

### கொலைத் தண்டனை

ஸத்துகன் சிறைப்பட்டதை உணர்ந்த அப் போதே, ஸத்துக மந்திரத்தில் உள்ள யாவரும் நிலை கலங்கியிருந்தார்கள். சயந்தியை அவள் மாளிகைக்குக் கொண்டு போய்விட்டு வந்த மார்க்கலியும் நடந்த வற்றை யெல்லாம் நன்கு உணர்ந்து, புத்தமித்திர ரிடம் கூறினன். புத்தமித்திரர் இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்திருந்தார். சங்கத்தில் உள்ள பொருள்களை யெல்லாம் மறைத்து வைக்க

முயன்றார்; அந்தச் சங்கத்தை விட்டு ஓடித் தப்பிவிட அவர் எண்ணவில்லை. அரசன் தன்னை எதுவும் செய்யான் என்ற எண்ணத்தால் துணிவுடன் இருந்தார். ஆனால் பௌத்த பிக்ஷுணிகளில் பெரும் பகுதியினர் திசை தெரியாமல் ஓடி மறைந்தனர். பிக்ஷுணிகள் ஒரு சிலரைத் தவிர மற்றையோர் ஓடி விட்டனர். இருட்டறையில் அடைக்கப்பட்டிருந்த மானஸி, உண்மையை உணர்ந்து வெளியில் தப்பிச் செல்ல முடியாமல் தவித்தாள். புத்தமித்திரர், அமிர்த சந்திரன், மர்க்கலி — இன்னும் சில பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள், மானஸி இவர்களையன்றி வேறு எவரும் அங்கே இல்லை.

காளன் சிறைப்பட்ட மூன்றாம் நாள் மாலையில் புத்தமித்திரர் புத்ததேவன் பிரதிமை மீது, மங்களத் திருநாளுக்கு என்று அணிவித்திருந்த, ஆபரணங்களைக் கழற்றி மூட்டை கட்டிக் கொண்டிருந்தார். அவருக்கு உதவியாக அமிர்த சந்திரன் அருகில் இருந்தான். வெளியில் மர்க்கலி காவல் செய்தான். அப்போதே வெளியிலிருந்து பேராரவாரம் எழுந்தது. மர்க்கலி திகைத்து நின்று பார்க்கையில் அரசன் படை சங்கத்துக்குள் நுழைந்தது. மர்க்கலி ஓடிச் சென்று, “குருதேவ! எழுந்திருங்கள்! அரசன் படை உள்ளே புகுந்து விட்டது!” என்று கூக்குரலிட்டான். துணுக்குற்றவராய் ஆபரணம் முதலியவற்றை அங்கேயே போட்டுவிட்டு, அமிர்த சந்திரனுடன் அவர் மதுபான சாலைக்குள் புகுந்து மறைந்தார். அதைக் கண்டவாறே உள்ளே புகுந்தான் பொன் குடுமி; அவனுடன் ஜயதுங்கனும் வந்தான். அரசன் படை ஸத்துக மந்திரத்தைச் சுற்றிலும் வளைத்துக் கொண்டது.

பொன் குடுமியும் மதுபான சாலைக்குள் தாவி, புத்தமித்திரரைப் பிடித்தான். ஜயதுங்கன், அமிர்த சந்திரனைப் பிடர் பிடித்து இழுத்தான். அப்போது மர்க்கலி பின் புறமாக வந்து, ஜயதுங்கனை

வெட்டுவதற்கு வாளை ஓங்கினான். பொன் குடுமி சட்டென்று ஜயதுங்கனை இழுத்து உயிர் தப்புவித்தான். உடனே ஜயதுங்கனுக்கும், மார்க்கலிக்கும் போர் மூண்டது. ஜயதுங்கன் மீளாச் சீற்றத்துடன் நய வஞ்சகமாய்ச் சிரித்துச் சிறிதே நின்று, மார்க்கலியின் மார்பில், தன் கை வாளை ஆழப் பதித்தான்; மார்பிலிருந்து செங்குருதி பீறிட்டெழுந்தது. அவன் உயிர் அகன்றது.

புத்தமித்திரரும், அமிர்த சந்திரனும் அப்போதே பொன் குடுமியின் கையிலகப்பட்டனர்; மற்றும் அங்கங்கே மறைந்திருந்த பிக்ஷுக்களையும் ஜயதுங்கன், பொன் குடுமியின்முன் கொணர்ந்தான். அவர்கள் யாவரையும், காவல் வீரர்களிடம் ஒப்பித்து அரசனிடம் அனுப்பினான் பொன்குடுமி. புத்த தேவனுக்கு அருகில் சிதறிக் கிடந்த ஆபரணங்களை மூட்டையாகக் கட்டினான்; புத்ததேவனது மார்பில் விளங்கிய முத்தாரத்தைக் கண்டதும், அதில் சோழ வேந்தனின் புலி முத்திரை இருப்பதைக் கண்டு உடனே அம் மாலைகளை எடுத்துக் கொண்டான். அதைக் கண்டவுடன் ஜயதுங்கனின் மனம் பதை பதைத்தது. உண்மையை ஒருவாறு உணர்ந்திருந்த பொன்குடுமி அப்போது ஜயதுங்கனின் முகத்தை உற்று நோக்கினான். அவன் உள்ளத்தில் பிரதிபலிக்கும் நடுக்கம் புலப்பட்டது. ஒன்றும் கூறாமல் புன்னகை செய்தான். ஸத்துக மந்திரத்திற்கு நூற்றுவர் வீரர்களைக் காவல் வைத்துவிட்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான்.

அப்போது ஜயதுங்கன் சட்டென்று ஓரறைக்குள் புகுந்தான்; அதன் உள்புறம் பூட்டப் பெற்றிருந்தது. உடனே அதை ஆயுதம் கொண்டு உடைத்து உள்ளே புகுந்தான். வாடிய பூங்கொடி போல் மெலிந்து உருமாறிப் பேரயிருந்த மானஸியைக் கண்டு தழுவிக் கொண்டான். உயிர் பெற்றவள் போல் உடல்

பூரித்து அகமகிழ்ந்து ஜயதுங்கனை நோக்கினாள். ஜயதுங்கன் நடந்தவற்றையெல்லாம் அவளிடம் கூறி உடனழைத்துக் கொண்டு பொன்குடுமியிடம் வந்தான். அவனிடம் மானஸியைப் பற்றிக் கூறிவிட்டு, விடை பெற்று அவளுடன் தன் மாளிகைக்கு விரைந்து சென்றான். பொன் குடுமி வியப்புடன் அரண்மனை சென்றான்.

பொன் குடுமியின் வரவை ஆவலுடன் எதிர் பார்த்திருந்த அரசன், அவனைக் கண்டதும் நடந்த விவரங்களைக் கேட்டான். பொன் குடுமியும் ஒன்று விடாமல் கூறி, முத்து மாலைகளையும் அவன் முன்பு வைத்தான். மன்னன் மகிழ்வுடன் அவற்றை எடுத்துத் தன் தேவியிடம் அனுப்பிவிட்டுப் பொன்குடுமியின் திறத்தைப் புகழ்ந்தான். முத்துமாலைகள் பொன் அறையிலிருந்து களவு போனதைப் பற்றி ஜயதுங்க னிடம் தனக்குச் சந்தேகம் இருப்பதாக அரசனிடம் பொன் குடுமி சொன்னான். அரசன் வியப்புடன், "அவன் மீது சந்தேகப்படுவது உண்மையானால் தகுந்த தண்டனையை அளிப்போம்" என்றான். அதைப் பற்றிய உண்மையை அறிவதாக அரசனிடம் கூறி விட்டுப் பொன்குடுமி அரண்மனையிலிருந்து வெளிக் கிளம்பினான்.

பொன் குடுமிக்கு ஆரம்பத்திலேயே ஜயதுங்கன், அச்சன், இளந்தத்தன் இம்மூவர் மீதும் சந்தேகம் உண்டு. பல முறைகளில் அதை அவன் அறிந்திருக் கிறான். ஆனால் இளந்தத்தன் அதை உணர்ந்தும், "இந்தப் பொன் குடுமி வெறும் சோதிடப் பார்ப்பான் தானே!' என்று அலக்ஷ்யமாக இருந்து விட்டான். பாண்டிய நாட்டிலிருந்து வந்தவனை ஜயதுங்கன்மீது சந்தேகங்கொண்டான். அன்றொரு நாள் ஜயதுங்கன் முதலிய மூவரைப்பற்றியும் ஸத்துகன், சிலவார்த்தைகள் சொல்லியது அப்போது அவன் ஞாபகத்துக்கு வந்தது. அதில் உண்மை

இருக்குமென்றே பொன்குடுமி நம்பினான். அதனாலேயே தன் கருத்தை அரசனிடம் கூறியதுடன் உடனேயே உண்மையை உணரப் புறப்பட்டான். அவன் புறப்பட்டது பத்திரையிடம் செல்வதற்கேயன்றி வேறல்ல. 'முத்து வாணிகன் வேஷத்துடன் முத்துமாலைகளைப் பத்திரை வசந்தி இருவரிடமும் விலை கூறி, விலை பெறுமல் ஜயதுங்கன் மறைந்தான்' என்று தன்னிடம் ஸத்துகன் முன்பு சொல்லியதே அவன் பத்திரையிடம் போகக் காரணமாயிற்று.

பொன் குடுமி விரைந்து சென்று பத்திரையின் மாளிகையை அடைந்து தான் வந்திருப்பதைப் பத்திரையிடம் கூறும்படி தெரிவித்தான். சேடியர் வசந்தியிடம் உணர்த்தவே, பொன் குடுமியை அவள் உள்ளே அழைத்துச் சென்றாள்.

'ஸத்துகனுக்குக் கொலைத் தண்டனை விதிக்கப் பெறும்' என்று அரசன் கூறியதை நாய்கன் சொல்லிச் சென்றது முதல், பத்திரை செய்கையற்று அறிவு சோர்ந்திருந்தாள். அவளை மீண்டும் பார்ப்பதற்குச் சகியாதவனாய் நாய்கன் தன் மாடத்தை அடைந்திருந்தான்.

வசந்திக்குப் பொன்குடுமியின் வருகையைப் பற்றி ஒன்றும் தெரியாது போனாலும் அவனிடம் பெருமதிப்பு உண்டு. அந்தக் காரணத்தினால் ஒன்றும் கேட்காமலேயே அவனைக் கன்னிமாடத்தின் உட்புறம் அழைத்துச் சென்றாள். நிலைதளர்ந்து படுத்திருந்த பத்திரையைக் கண்டவுடன் பொன் குடுமி திகைத்து நின்றான். ஸத்துகனின் காதலி இவள் என்றும், மங்கலத் திருநாளன்று இவ்விருவருக்கும் மணம் நிச்சயித்திருந்தது என்றும் வசந்தி பொன்குடுமியிடம் கூறிக் கண்ணீர் துளித்தாள்.

பத்திரைக்கு அதனால் மிகுந்த துக்கம் உண்டாயிற்று. பொன் குடுமிக்கு அவள் நிலையை நோக்க,

இரக்கமும் ஸத்துகனை நினைக்க வெறுப்பும் உண்டாயின. உடனே பத்திரைக்கு முன்பாக வசந்தியிடம், முத்து மாலைகள் களவுபோன விஷயமாய்த் தான் உண்மையறிய வந்திருப்பதாகத் தெரிவித்தான். அப்போதுதான், வசந்திக்கு உண்மை புலப்பட்டது. ஜயதுங்கன் முத்துமாலைகளை விற்க விலை கூறி வந்தது முதல் ஸத்துகன் அவற்றை எடுத்துச் சென்றது வரை நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினாள் வசந்தி. பொன் குடுமிக்கு அப்போதே உண்மை புலப்பட்டது. ஜயதுங்கனும் இளந்தத்தனுமே முத்து மாலைகளைக் களவு செய்திருக்கிறார்கள் என்று உறுதி செய்தான். அப்போது பத்திரை, ஆத்திரம் அடங்காதவளாய், உணர்ச்சி வசமானாள். உடனே எழுந்து பொன் குடுமியின் முன்பாக நின்று, "துரோகி மா பாதகன்!. வஞ்சகன்—அந்த ஜயதுங்கன் முத்து மாலைகளைக் களவு செய்ததற்கு, என் காதலர் குற்றவாளியா? இது என்ன நீதி! என் வாழ்க்கையைக் கெடுத்த அந்த மா பாவிகளான இளந்தத்தனும் ஜயதுங்கனும் மீளா நரகில் தண்டனை அநுபவிப்பார்கள்! அரசன் அறிந்து செய்யாவிடினும் தெய்வம் அறிந்து அவர்களுக்குத் தக்க தண்டனை அளிக்கும். அரசன் நியாயம் விசாரியாமல் உண்மையறியாமல் என் காதலருக்குத் தண்டனை விதிக்கிறான்! சோழ மன்னன் நீதியில் சோர்வு போனான்! அரசனின் ஆலோசனை யற்ற நீதியால் என் உயிரையும் இழக்கப் போகிறேன்! என் வாழ்க்கையை அவமுறச்செய்த மா பாவம் இந்த நடாளும் மன்னனையே சாரும். உண்மையை அறியாமல் முத்து மாலைகளைக் களவு செய்தான் என்று பொய்க் குற்றம் கூறி என் காதலரைக் கொல்வதை, இந்நகர் காக்கும் தெய்வங்களே அறியட்டும்! போதிநாதன் அரசனுக்குப் புத்தி தெளியச் செய்வான்!..." என்று முறையிட்டாள்.

பொன்குடுமி ஒரு கணம் திகைத்து நின்றான். பத்திரையின் உணர்ச்சி வசமான வார்த்தைகளைக் கேட்டு வியந்து உள்ளம் இரங்கினான். இயல்பாகவே பேரிரக்கமுடைய அவன் மனம் அவள் நிலையைக் கண்டு பெரிதும் இரக்கம் கொண்டது. குலத்திற் கேற்ற குணம் அவனிடம் குடிகொண்டிருந்தது. அந்தண குலத்திற் கேற்ற அருளுடையவனாக இருந்தான் அவன். பத்திரைக்கு உண்மையைக் கூற எண்ணினான். முத்து மாலைகளுக்காக அரசன் கொலைத் தண்டனை விதிக்கப்போவதில்லை என்பதையும் காளன் என்ற பெயருடன் நீண்ட நாட்களாகக் கொலை களவுகள் செய்த குற்றத்திற்காகவே கொலைத் தண்டனை விதிக்க முற்பட்டுள்ளான் என்பதையும் எடுத்துக் கூறினான்.

அதற்கு மறுமொழி கூற முடியாதவளாய்த் திரும்பி, "அவர் கள்வரா?......அந்தோ!" என்று கூறிக்கொண்டே மஞ்சத்தில் சாய்ந்தாள். அருள் குடிகொண்ட நெஞ்சினனாகிய பொன்குடுமி அவள் சோக நிலையைக் காணச் சகியாதவனாய் அப்புறம் சென்று நின்று வசந்தியைத் தனியே அழைத்தான். வசந்தியும் விரைந்து சென்று பொன்குடுமியை அணுகினாள்.

"குறத்தியாக வந்து வஞ்சனை செய்தது யார்?" என்பதைச் சொல்லும்படி கேட்டான். வசந்தி நடந்தவற்றைக் கூறி அச்சனே குறத்திவேஷம் கொண்டு வந்தான் என்பதை உணர்த்தினாள்; பின்பு மிகவும் அந்தரங்கமாக, ஸத்துகனுக்கும் சயந்திக்கும் காதல் தொடர்பு உண்டு என்பதையும் இளந்தத்தன் ஏவலால் அரசன் அவளை வஞ்சித்துச் சிறை செய்தான் என்பதையும் அவளை விடுதலை செய்யவே ஸத்துகன் அங்கு வந்து இளந்தத்தனை வெட்டி வீழ்த்தினான் என்பதையும் சொன்னாள். பொன் குடுமி அவள் சொன்னதைக் கேட்டுக்கொண்டான்.

ஸத்துகன்மீது சிறிதும் அவனுக்கு இரக்கமில்லை என்றாலும் பத்திரையிடம் பெரிதும் இரக்கம் கொண்டான். அவளுக்காகவாவது அவனை விடுவிக்க வேண்டும் என்று கருதினான். 'இளமங்கையாகிய பத்திரையின் வாழ்வை நலமுறச் செய்தால் அவள் உள்ளம் குளிர்ந்து, என்னை வாழ்த்துவாள். இந்தப் பெரும் புண்ணியத்தை நான் ஏற்றுக்கொண்டால் என்ன தவறு?' என்று எண்ணினான். ஆனால் ஸத்துகனை விடுவிப்பது எவ்வளவு அரிய காரியம் என்பதை நோக்க அவன் மனம் கலங்கியது. பத்திரையை நோக்க அவன் மனம் பெரிதும் கலங்கியது. ஸத்துகனைச் சிறைப்பிடித்த தன்னையே 'இவனே என் காதலரின் கொலைக்குக் காரணமானவன், துரோகி' என்று உள்ளம் குமுறி வைதால்; தன்னை அந்தச் சாபம் மிகவும் துன்புறுத்தும் என்று கவலை கொண்டான். 'பெண்ணென்றால் பேயும் இரங்கும்; ஆதலால் இவன் விஷயத்தில நாம் மனம் இரங்கியே ஆகவேண்டும்! ஸத்துகனை எவ்வித உபாயத்தாலாவது தப்புவிக்க வேண்டும்' என்று முடிவு செய்தான். ஸத்துகனை விடுதலை செய்வதால் யாருக்கும் மனவருத்தமோ, கோபமோ உண்டாகாதவாறு காத்து அதற்குத் தகுந்த உபாயத்தைச் செய்ய வேண்டுமென்று ஆலோசித்தான். சட்டென்று ஓர் உபாயம் தோன்றியது அவன் அறிவுக்கு. உடனே பத்திரைக்கு அருகில் இருந்தவர்களையெல்லாம் அகலப் போகும்படி கட்டளையிட்டான். வசந்தியையன்றி மற்ற யாவரும் அகன்றனர். பொன்குடுமி அவளருகில் சென்றான்.

"பெண்ணே! உன்னிடமுள்ள இரக்கத்தால் ஓர் உபாயம் சொல்லுகிறேன். அவ்வாறு நீ செய்தால் உன் காதலன் ஸத்துகனை அடைவாய்" என்றான். பத்திரைக்குத் திடுக்கிட்டது. பொன்குடுமியின் வார்த்தைகள், பத்திரையின் செவிக்கு அமுதமழை

பொழிந்தது போலிருந்தன. எழுந்து பொன் குடுமியின் பாதங்களில் தலைபடிய வணங்கி, "என்ன, அவரை நான் அடைவதற்கு உபாயமா? அந்தண குல சிரேஷ்டா! தங்கள் பேரிரக்கம் என்மீது இருக்குமானால் நான் பெரும் புண்ணியம் செய்தவள். அவரை நான் அடையும்படி செய்தால், என் வாழ்நாள் முழுதும் உங்களை மனமார வாழ்த்துவேன். என் உயிர் உடலை விட்டகன்றாலும், தங்கள் பேருதவியை மறவேன். சொல்லுங்கள், சொல்லுங்கள்!" என்று பதற்றத்தோடு கேட்டாள். அவள் கண்களில் எவ்வளவு பேராவல் ததும்பி யிருந்தது என்பதைப் பொன் குடுமியும் அறிந்து கொண்டான்.

"பெண்ணே, ஊழ்வினைதான் உனக்கு உதவி செய்கிறது என்று எண்ணிக்கொள்! ஸத்துகன் மீதுள்ள குற்றங்களோ எண்ணற்றவை! ஆதலால் நம் முயற்சியில், அவனை விடுதலை செய்யவே முடியாது; நான் கூறப்போவது தெய்வமுயற்சி! உன் விதிப்பயனைப் பொறுத்தது!" என்றவாறே மெல்ல அவள் அறியும்படி தன் உபாயத்தைக் கூறினான். அப்போதலர்ந்த தாமரை போல் அவள் முகம் மலர்ந்தது. அவள் உடல் முழுதும் சிலிர்த்தது: "தாங்கள் நீடுழி வாழவேண்டும். நான் முயன்றால் இது பயன் பெறுமா?" என்றாள் சிறிதே கவலைக்குறி தோன்ற.

"திண்ணமாகப் பயன் பெறுவாய்! தெய்வம் உன் சார்பில் துணை செய்யும்" என்றான். "அந்தணர் வாக்கு அருமறைபோன்றது! தாங்கள் காவிரி மணலினும் பலநாள் வாழ்வீராக" என்று வாழ்த்தி வணங்கினாள்.

பொன் குடுமி அதற்கு மேல் அங்கே நிற்காதவனாய், விடை பெற்று வெளியேறினான்.

அன்று மாலையிலேயே ஸத்துகன் விசாரணை ஆரம்பமாயிற்று. அறிஞர், அந்தணர், வணிகர், மந்திரியர், சேனாதிபதிகள், பிரதானியர் யாவரும் சபையில் நிறைந்திருந்தனர். நீண்ட நாட்களாகக் காளனால் துன்பமுற்று வந்த பெருஞ்செல்வர் பலரும் அமர்ந்திருந்தனர். இந்திர விஹாரத்துப் பௌத்த பிக்ஷுக்களும் மஹாபிக்ஷுவாகிய புத்த சத்துவரும் ஒருபுறம் அமர்ந்திருந்தனர். ஜயதுங்கன், அச்சன், பொன் குடுமி மூவரும் ஒரு புறம் இருந்தனர். ஸத்துக மந்திரத்துக் குற்றவாளிகளான, புத்தமித்திரர் முதலிய பிக்ஷுக்கள் அரசனுக்கு முன்பாக நின்றனர். வீரர்கள் சூழ்ந்த காவலரங்கில், ஸத்துகன் காளன் வேஷத்துடனேயே நின்றுகொண் டிருந்தான். இரும்புக் கவசம் அணிந்த மேனியுடனும், விலங்கு பூண்ட தோள்களுடனும் தலை குனிந்து மத்தகஜம் போல் நிற்கும் ஸத்துகனை நோக்கியவாறே யாவரும் தமக்குள் பலவாறு பேசிக் கொண்டிருந்தனர்.

ஸத்துகனை நோக்குந்தோறும் அரசனுக்குக் கோபமும் வியப்பும் மாறி மாறி உண்டாயின. 'காளனும் ஸத்துகனும் ஒருவனே!' என்பதை நினைக்க நினைக்க அவன் மனம் கலங்கியது. 'மனிதத் தன்மையையும் மீறிய மாயச் செயலன்றோ இது!' என்று எண்ணி வியப்புற்றான். இவனைச் சித்திரவதை செய்தாலும் பாவமில்லை என்று கருதினான். இனி இவனை உயிரோடு விடுவது பெருந் தவறு என்று முடிவும் செய்தான்.

பெருங் கூட்டத்தால் நிரம்பியிருந்த சபையின் நடுவில் தலை குனிந்து நிலத்தை நோக்கியவாறே நின்றான் ஸத்துகன். அவமானத்தால் உடல் குன்றி உள்ளம் வெம்பியிருந்த அவன் சிறிதும் நிமிர்ந்து நோக்கவில்லை. உணர்ச்சியற்ற உயிரற்ற ஓவியம் போல் தோன்றினான்; இடையிடையே, அவனது

அகன்ற மார்பு எழுந்து விம்மி, பெருமூச்சு விடுவதி லிருந்து அவன் உள்ளத்தில் துக்கத்தின் பேரலைகளும், கோபத்தின் கனற் பொறிகளும் ஒன்றோடொன்று கனன்று கலாய்த்துக் குமுறுகின்றன என்பது புலப் பட்டது. மேலே நிகழப் போவதை யாவரும் ஆவ லுடன் எதிர்பார்த்திருந்தார்கள்.

அரசன் சபையை நோக்கி, "அவையோர்களே, காளனின் துன்பத்திற்குள்ளாகியவர்கள் யாவரும், அவன் செய்த துன்பங்களைப்பற்றிக் கூறலாம்; இப் போதே அவற்றை நான் சபைமுன்பாக விசாரிக்கலாம் என்று எண்ணுகிறேன்" என்றான் அமைதியுடன். சற்று நேரம் கழித்து, அங்கு வந்திருந்த பலரும், காளன் தங்களுக்குச் செய்த தீமைகளைப்பற்றி ஒவ்வொருவராக எடுத்துக் கூறினர்; அவற்றை யெல்லாம் அரசன் ஒவ்வொன்றாக ஸத்துகனிடம் கூறி, 'இக் குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா நீ?' என்று கேட்டு வந்தான். ஸத்துகன் சற்றும் சிந்தனை யின்றி எல்லாவற்றிற்கும் மனம் ஒப்பி நின்றான்.

"ஸத்துகா, காளன் என்னும் கள்வா! உன் மீது சுமத்தப்பட்டிருக்கும் இக் குற்றங்களை யெல்லாம், நீ ஒப்புக் கொள்கிறாயா? மீண்டும் கேட்கிறேன்; இவற் றிற்குத் தகுந்த தண்டனையையும் ஏற்றுக்கொள் கிறாயா?" என்றான். சபையிலுள்ள யாவரும் நன்கு அறியும்படி, அப்போது ஸத்துகன் முகம் கோபத் தாலும், அவமானத்தாலும் சிவந்து புடை கொண்டிருந்தது.

"வேந்தே! யாவும் நான் செய்த குற்றங்களே! என்றாலேயே ஸத்துக மந்திரத்திலுள்ள யாவரும் இந்நிலை அடைந்தார்கள். ஆனால் ஒன்று சொல் கிறேன். நான் செய்த குற்றங்களுக்குப் பாவம் என்பது துளியும் இல்லை. யாவும் க்ஷணத்திற் கெடும் என்பது புத்தவாக்கியமாதலால் பாவம் க்ஷணத்திலேயே

அழிகின்றது! அதனால், நான் குற்றம் உடையவன் அல்ல'' என்று கூறினான்.

ஸத்துகன் மொழியைக் கேட்டு அரசன் வியந்து புன்னகையுடன், "ஸத்துகா, உன் வாதம் பயனற்றது. பௌத்த மதத்தின் உண்மையை நீ உணரவில்லை; உன் தீச் செயல்களுக்கெல்லாம் பௌத்த மதத்தில் சிறிதும் ஆதாரமே இல்லை. அதைப்பற்றி உன்னிடம் நான் கேட்கவும் இல்லை. பொறுத்திரு! இன்னும் சில முக்கியமான குற்றங்கள்!'' என்று சொல்லிவிட்டு ஜயதுங்கனை நோக்கினான். ஆவேசமுடன் எழுந்த ஜயதுங்கன், "வேந்தே, இவன் செய்த கொடுஞ் செயல்களுக்குக் கணக்கேயில்லை. யான் அறிந்த வரையில் சிலவற்றைச் சொல்கிறேன்; நான் சுமங்கள பிக்ஷுவாக நடித்து உண்மையை ஆராய்கையில் சிலவற்றை அறிந்தேன். பௌத்த பிக்ஷுணியாகிய சந்திர கலா என்பவளை, ஒரு பிக்ஷுவின் விருப்பத் திற்கு அவள் இணங்காத குற்றத்திற்காக, அவளை இவன் கொலை செய்யச் செய்தான். என் காதலி, மானஸி என்பவள், எனக்கு ஒற்றறிந்து கூறினாள் என்று எண்ணி, அவளை இருட்டறையில் அடைத்து வருத்தினான். இவன் நண்பன் பாலகனை, தப்பெண ணத்தால் ஒரு நாள் கொன்று விட்டான்! சேனாதிபதி இளந்தத்தனுக்கும் இவனே அன்று யமனானான். இவன் செய்திருக்கும் களவுகளைப்பற்றிக் கணக்கிட முடியாது. நம் அரண்மனைப் பொன்னறையிலிருந்து முத்து மாலைகளைக் களவு செய்தவன், இவனே! இவ்வுண்மையைப் பொன் குடுமியே அறிவார்!'' என்றான்.

அரசன் அவனைக் கையமர்த்திவிட்டு, பொன் குடுமியை நோக்கினான். அதற்குள்ளாக ஸத்துகன் கண்கள் சிவக்க இதழ் துடிக்கக் கோபமுற்றவனாய், "வேந்தே, முத்துமாலைகளைக் களவு செய்தவன் யான் அல்ல! மற்றக் குற்றங்களை ஒப்புக் கொள்கிறேன்!

உண்மையை ஆராயாமல் இவன் சொல்வதை நம்புவது தவருகும்?" என்ருன்.

"மன்னவ! முத்துமாலைகளைக் களவு செய்தவன் ஸத்துகனல்ல" என்று புன்னகையுடன் கூறினுன் பொன் குடுமி. ஜயதுங்கன் இடி விழுந்தாற் போலானுன்.

"அவ்விதமானுல், களவு செய்தவன் வேறு யார்? மாலைகள் யாரிடமிருந்தனவோ அவர்கள்தாம் களவு செய்திருக்க வேண்டும்!" என்ருன் அரசன்.

"இல்லை! உண்மை அதுவல்ல! ஜயதுங்கனும் இளந்தத்தனுமே அவற்றைப் பொன்னறையிலிருந்து களவு செய்து ஸத்துகனைச் சிறை செய்வதற்கு உபாயம் தேடினர்!" என்ருன் பொன் குடுமி தைரியத்துடன்.

"எவ்விதம்?" என்று அரசன் கேட்டான்.

"ஜயதுங்கன், முத்துமாலைகளை எடுத்துக் கொண்டு முத்து வியாபாரி வேஷத்துடன் சென்று, ஸத்துகனின் காதலி பத்திரை என்பவளிடம் விலை கூறிக் கொடுத்து விலை பெருமல் மறைந்தான். ஸத்துகன் அங்கே வந்தபோது உண்மையை உணர்ந்து, அம் முத்துமாலைகளைத் தான் எடுத்து வைத்திருந்தான். வைத்திருந்தது ஸத்துகன் குற்றமாஞலும் களவு செய்தவன் அவனல்ல. வேண்டுமாயின் உண்மையை' அறியச் செய்வேன் என்று கூறிப் பொன்குடுமி அமர்ந்தான்.

அச்சன் அப்போது, பொன் குடுமிக்கு உதவியாகப் பேசுபவன்போல் எழுந்து, "வேந்தே, பொன் குடுமியார் கூறியது உண்மை! அதை நானும் அறிவேன்" என்ருன். வியப்புடனும் கோபத்துடனும் அரசன் ஜயதுங்கனை நோக்கி, "இப்போது என்ன சொல்கிருய்?" என்று கேட்டான்.

"மன்னவ! பொறுக்கவேண்டும். களவுசெய்தவன் நான் மட்டுமல்ல. இளந்தத்தனும் உடனிருந்தான்; ஆனால் ஸத்துகனைச் சிறைப்பிடிக்கவே இந்த உபாயம் செய்தோம்" என்று நடுங்கியவாறே ஜயதுங்கன் கூறினான்.

அரசன் கோபாவேசமானான்: "அடே! அவனைச் சிறைப்பிடிக்க என் பொன்னறையிலிருந்து, முத்து மாலைகளைக் களவு செய்து வீண்பழியை அவன்மீது சுமத்துவதா? சீ! துஷ்டா, வஞ்சகா! காவலரங்கில் ஏறி நில்; இளந்தத்தன் இறந்தானாயினும் உனக்குத் தண்டனை விதிக்கத்தான் வேண்டும்" என்றான். ஜயதுங்கன் தலை குனிந்து காவலரங்கில் ஏறினான். சபையோர் திடுக்குற்றனர்.

"வேந்தே, மற்றொன்று: ஸத்துகனின் காதலி சயந்தியை இளந்தத்தனுக்காகக் குறத்தி வேஷத்துடன் சென்று வஞ்சித்து அவளை அவன் மாளிகையில் அடைத்து வைத்ததும், ஸத்துகனின் மற்றொரு காதலியாகிய பத்திரையிடம் குறத்தி வேஷத்துடன் சென்று வஞ்சித்து அவள் தோழியைச் சிறை செய்ததும் அச்சனின் செயல்கள்!" என்று பொன்குடுமி கூறினான். அரசன் அதுகேட்டு வியப்புற்றான்: "அச்சா, உன் மாயச் செயல்தானோ இது!" என்றான். அச்சன் அதற்கு உடம்பட்டான். அரசன் கட்டளைப்படி காவலரங்கில் அவனும் ஏற்றப்பட்டான்.

"பொன்குடுமி! ஸத்துகன் சார்பில் பேசுபவன் நீ ஒருவனே! ஆயினும் இதில் குற்றமில்லை. உண்மையை ஆராய்வதில் தவறு இல்லை!" என்றான் புன்னகையுடன் அரசன்.

"வேந்தே! பொறுத்துக் கொள்க. ஸத்துகனின் குற்றங்களை நான் மறக்கவில்லை; அவன் செய்த குற்றம் ஆலகால விஷம் போல் கொடியதுதான்; குற்றத்தை

அவனே ஒப்புக் கொள்கிறான்!" என்றான் பொன் குடுமி.

அரசன் சபையோரை நோக்கிக் கூறினான்: "அறிஞர்களே! இப்போது, ஸத்துகன் பெருங் குற்றவாளியாகி நம்முன் நிற்கிறான். இவன் செய்த குற்றங்களுக்குக் கொலைத் தண்டனையே தக்க தண்டனை. இவன் செய்துள்ள பொறுக்க முடியாத குற்றங்களுக்கு, அது குறைந்த தண்டனை தான். ஆனால், இவன் செய்த குற்றங்களுக்கு, தகுந்த பயனை அநுபவிப்பான். பௌத்த மதத்திற்கே பெரும் பழியைத் தரும் இவன் கொள்கையும் இவனோடு அழியும். இவன் சங்கமும் இன்றோடு முடிவுறும். பாப புண்ணியங்களைப்பற்றி இவனுடன் வாதாடுவது சிறிதும்பொருந்தாது. இவனோ எதிர்வாதப் புரிபவன்! நம் மதத்தின் உண்மைக் கோட்பாடுகளை யெல்லாம் மறந்து தீய செயல்களைச் செய்துவந்த இவனைக் கொல்வதே தகுதியாகும். இவனைச் சேர்ந்த இந்த மஹா பிக்ஷு புத்தமித்திரர் முதலியவர்கள் தீய கொள்கைகளை விட்டு நம் சிராவகயானத்தில் சேர வேண்டும். அதற்கு விருப்பம் இல்லையேல் இவர்களையும் கொலை புரிவதே தகுதியாகும். ஐயதுங்கன் களவு செய்ததல்லாமல், பொய்ப் பழி சுமத்த முற்பட்டதால் அவன் இந்நாட்டை விட்டு எட்டுத் தினங்களில் வெளியேறிவிட வேண்டும். அச்சன், செய்த வஞ்சகத்திற்காக அவனுக்கு மூன்று நாட்கள் சிறைத் தண்டனை! இவ் விஷயங்களைப் பற்றி ஏதேனும் கூற விருப்பமுண்டேல் யாரும் கூறலாம்."

"வேந்தனின் விருப்பமே எங்கள் விருப்பமும்! வேந்தன் செய்ததே நேர்மையானது. ஸத்துகனுக்குக் கொலைத் தண்டனையே தகுதியாகும்" என்று சபையோர் ஒருங்கே கூறினர். அப்போது பொன் குடுமியின் இருதயம் திக்கென்றது. அருகிலிருந்த

புத்தமித்திரர் முதலிய பிக்ஷுக்கள் அரசனை வணங்கி, "மன்னவ! நாங்கள் மந்திரயான மார்க்கத்தைக் கை விட்டோம். தங்கள் கட்டளையின்படி சிராவக யானத்தைச் சேர்ந்து நல்வழியில் இருக்கிறோம். எங்கள் குற்றங்களைப் பொறுத்தருள வேண்டும்" என்றனர். அரசன் உவகையுடன் அவர்களைக் கைக விந்து இருக்கச் செய்தான்.

பொன்குடுமி மெல்ல எழுந்து, "வேந்த! நாளைக்கு மங்கலத் திருநாள் விழாவன்றோ? இன்றும் அந்தக் கொண்டாட்ட நாளாயிற்றே? காருண்ய மூர்த்தியும், அஹிம்ஸா தர்மப் பிரபுவுமான புத்த பெருமானின் திரு அவதார நாளில், யாரையும் தண் டித்தல் தகாது என்பது தங்களுக்குத் தெரியாத தன்று. மங்கலத் திருநாள் முடிந்த பின் யாவருக்கும் தண்டனை அளிக்கலாம்" என்றான்.

அப்போது மஹாபிக்ஷுவாகிய புத்த சத்து வரும், "வேந்தே, அவ்விதமே செய்க. பொன் குடுமியின் வார்த்தைகள் நேர்மையானவையே" என்றார். அரசன் சிறிது ஆலோசனை செய்தவனாய், "குருதேவ! பொன் குடுமியின் வார்த்தைகளைத் தாங்கள் ஒப்புக் கொண்டதால் அவ்விதமே செய்வோம். ஸத்துகனுக்கு மங்கலத் திருநாள் முடிந்த மறுதினமே கொலைத் தண்டனை நிறைவேற்றப்படும்" என்று கட்டளையிட்டான்.

உடனே சற்று நேரத்திற்கெல்லாம், ஸத்துகன் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டான். ஜயதுங் கனையும் அச்சனையும் வேறு சிலர் காவலுடன் சிறைச் சாலைக்கு அழைத்துச் சென்றனர். அரசன் சபை கலைந்ததும் அந்தப்புரம் சென்றான். "ஸத்துகன் கொலை செய்யப்படுவான்" என்ற கோஷத்துடன் யாவரும் வெளியேறினர். பொன் குடுமியின் உள்ளம் மட்டிலும் புகைந்து கொண்டே இருந்தது.

## 25

### மங்கலத் திருநாள்

மங்கலத் திருநாள் கொண்டாட்டம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. நகர் முழுதும் இன்பமயம். 'ஓம் மணிபத்மே ஹூம்' என்ற இன்பநாதம் காவிரிப்பட்டினம் முழுதும் எதிரொலித்தது. புத்த தேவன் போதி மரத்தின் கீழ் இருந்து ஞானம் பெற்ற புனிததினம் என்பதாலும், புத்ததேவனின் திருவவதாரதினம் என்பதாலும், வைசாக சுத்த பூர்ணிமையாகிய அன்றைக்கு யாவரும் அவனை வழிபட்டனர். அன்றைத்தினத்தை 'மங்கலத் திருநாள்' என்று கொண்டாடி மகிழ்ந்தனர். இந்திர விஹாரத்தில் எழுந்தருளியிருந்த புத்ததேவனை நகர மக்கள் யாவரும் வணங்கி வலம் வந்து பூசித்துச் சென்றனர். தங்கள் தங்கள் இல்லந் தோறும், புத்த தேவனின் பிரதிமையை வைத்துப் போற்றிக் கொண்டாடினர்.

புத்த தேவனின் பாதபீடிகையில், 'ஓம் மணி பத்மே ஹூம்' என்ற மந்திரத்தைக் கூறிப் பன்னிற மலர்களைத் தூவி வழிபட்டனர். அம்மந்திரத்தைக் கூறி மலரிடுவதால், புத்ததேவன் உண்மையிலேயே அங்கு வந்து அதை ஏற்றுக் கொள்கிறான் என்பது அவர்கள் துணிபு. வணிகர்களும், மற்றுமுள்ள பிரபுக்களும், அன்றைக்கு அளவிடற்கரிய தானங்களைச் செய்தனர். பசித்தவர்களுக்கு அன்னமிட்டு உபசரித்தனர். எல்லாக் கோயில்களுக்கும் பூஜை முதலியன செய்வித்து மான்யமும் சிறப்புக்களும் அளித்தனர். அந்தணர்களுக்கு முற்றூட்டுக் கொடுத்தனர். மக்கள் யாவரும் தத்தம் தகுதிக்கேற்ப தானம் வழங்கினர். பௌத்த பிக்ஷுக்களுக்கு ஆடை, குடை, கமண்டலம் செருப்பு முதலியன அளித்தனர். பிக்ஷுக்களும்

தங்களுக்குள் தானம் வழங்கிக் கொண்டனர். புத்த தேவனது திரு விளையாடல்களை எடுத்துக் கூறி அங் கங்கே உபந்நியசித்தனர். இந்திரவிஹாரத்து மஹா சபையில் புத்ததேவனது பரோபகார சிந்தையையும், அவன் செய்த தியாகங்களையும், பரதுக்க துக்கியாகிப் பிறருடைய துன்பங்களை யெல்லாம் அகற்றுவதற்கு, முப்பத்திரண்டு நூறுயிரம் கற்பகாலம் பிறவி யெடுத்த வரலாறுகளையும் கூறிப் பிரசங்கித்தனர் பிக்ஷுக்கள். அவர்களோடு புத்தமித்திரர் முதலியோரும் கலந்து கொண்டனர். அரசனுக்கு நிகராக அன்றைக்கு வருஷந்தோறும் திருவிழாவைச் சிறப்புற நடத்தும் ஸத்துகன் சிறைப்பட்டு விட்டதால் ஸத்துக மந்திரம் 'ஓ' வென்று பாழடைந்த கோயில்போல் புலப்பட்டது. அம்மந்திரத்தை அரசன், அறச்சாலை யாக்கி ஏழைகளுக்கு அன்னமிடும் இடமாக அமைக்கக் கட்டளையிட்டு விட்டான்.

வைசாக சுத்த பூர்ணிமையாகிய அன்றைக்கு, ஸத்துகனையன்றி மற்றவர் யாவரையும் சிறையி லிருந்து விடுதலை செய்து விட்டான் அரசன். கொலைத் தண்டனை செய்வதற்கென்று ஸத்துகனை மட்டிலும் விடுதலை செய்யவில்லை. நீண்ட நாட்களாகச் சிறையி லிருந்த குற்றவாளிகள் யாவரும் அன்று விடுதலை பெற்றனர். அரசனுடைய மெய்க்காப்பாளர் உள் ளிட்ட யாவரும், நகரில் அன்றைக்கு ஆயுதம் தாங்கிச் செல்லக் கூடாது என்றும், கலகம், கோபம், துக்கம் பகை முதலியன இல்லாமல் யாரும் ஒருங்கே களித் திருக்க வேண்டுமென்றும் அரசன் கட்டளையிட்டான். அன்று நடக்கும் எந்தக் குற்றங்களுக்கும் தண்டனையோ, விசாரணையோ இல்லை என்றும் உத்தர விட்டான்.

பொன்னறையைத் திறந்துவிட்டு இரவலர்க்கு அளவற்ற பொருள்களை இரு கைகளாலும் அள்ளி

அள்ளி வழங்கினான். நிலம் வேண்டுபவர்க்கு நிலமும், பொன் வேண்டுபவர்க்குப் பொன்னும், பசு வேண்டு பவர்க்குப் பசுவும், ஆடை, அணிகலன் வேண்டு பவர்க்கு அவையும் தட்டின்றி வழங்கினான். "பொன்னி நாடன் வாழ்க! பூம்புகார் வளம் மலிக! புத்தன் அருள் சிறக்க!" என்று யாவரும் வாழ்த்தினர்.

"யார் எது வேண்டினும் தட்டின்றி ஈவேன்! என் உயிர் வேண்டினும் அளிப்பேன்" என்று குதூ கலத்துடன் அறை கூவினான், பொது மன்றத்தி லிருந்த அரசன். முரசறைந்து அரசன் ஆணையை யாவர்க்கும் உணர்த்தினர் வள்ளுவர். சோழன் வள்ளன்மை சொல்லில் அடங்குவதோ? கேட்கும் பொருள்களை எல்லாம் மந்திரியரும் பிரதானியரும் அரசன் அருகிலிருந்து கொடுத்துக் கொண்டிருந்தனர். இடைவிடாமல், வாரி வாரி அளித்தும், பொன் னறையில் சிறிதும் பொருட்குறைவு உண்டாக வில்லை. பொன்னி நாடனின் புகழ் வளர்வதுபோல், அதுவும் வளர்ந்து கொண்டிருந்தது. வெறுப்புச் சற்று மின்றி, சிறியவர் முதல் முதியவர் வரையிலுள்ள யாவருக்கும் வேண்டியவாறு தானங்களை அளித்தான். அரசனின் பெரும் வள்ளன்மையைக் கண்டு சபையோர் வியப்பும் பெருமிதமும் கொண்டு வாழ்த் தினர். தானம் பெற்ற யாவரும் பொருள்களை வாரி எடுத்துக்கொண்டு கரை புரண்டு வரும் காவிரி நீரின் பெருக்கென அரண்மனையிலிருந்து கூட்டம் கூட்ட மாகச் சென்றனர். பொன்குடுமியின் கண்கள் பூத்துப் போயின — அவன் கண்கள் யாரையோ தேடித் தேடி பரபரப்புற்றுக் கலங்கின. அவன் அவ்வாறு தேடுவதற்குக் காரணமில்லாமல் போகுமா? யாரைக் குறித்துக் கவலையும் பரபரப்பும் கொள்கிறான் என்பது அங்குள்ளவர்களுக்கு எவ்வாறு தெரியும்?

சபையின் வாயிலில், பல்லக்கிலிருந்து இரண்டு பெண்கள் கீழே இறங்கினர். ஒரு பெண் விரித்த

கூந்தலுடனும் நீர் வார்ந்த கண்களுடனும் இடை ஒசிய, நடை தளர, ஒரு பூங்கொடியென அரசனிடம் வந்துகொண்டிருந்தாள். மற்றொருத்தி வாயிலிலேயே நின்றுவிட்டாள். 'அலைந்து புரளும் கூந்தலுடன், மறையாவரும் மின்னலென அரசன் முன்பு வரும் அப் பெண் யார்?' என்று யாவரும் நோக்கினர். அவ்வழகு மங்கை பத்திரையன்றி வேறு யாராக இருக்கமுடியும்? அவள் வருகையைப் பொன்குடுமி கண்டவுடன், ஒரு கணம் உவகைப்பெருங் கடலில் ஆழ்ந்தான். அந்தப் பேருவகை கணத்தில் கவலைக் கடலில் ஆழ்ந்தது. அன்று வேறு யாரும் பத்திரையை யார் என்று அறியார்கள். அவளைக் கண்டதும், தானசூரனாக விளங்கிய சோழ மன்னன் திடுக்கிட்டான். புன்னகை அரும்பி ஒளி வீசியிருந்த அவன் முகம் சிறிதே வாடியது. பத்திரை அவன்முன் சென்று மண்டியிட்டு வணங்கினாள். அரசன் வியப்புடன் அவளை நோக்கினான்.

செவ்வரி சிதர்ந்து, கருவண்டெனச் சுழலும் கண்களிலிருந்து நீர்த்துளிகள் வெண் முத்தென நழுவி வீழ்ந்துகொண்டிருந்தன. இளமைச்செருக்கும் அழகு வீறும் குடிகொண்ட அவளுடைய பொன் மேனி பெருந்துன்பத்தால் வாடி, தீயால் கருகிய தாமரை மலரெனத் தோன்றியது. 'இளமைச் செவ்வியின் புது நலம் ததும்பும் இம்மங்கை யார்? இவளுக்கு உற்ற இடர்தான் என்ன?' என்று அரசன் ஆராய்ந்தான். அவளையும் அரசனையும் மாறி மாறி நோக்கினான் பொன் குடுமி. அரசன் பேரிரக்கமுடன், "பெண்ணே! நீ யார்? உனக்கு வேண்டுவது யாது? கேட்பதை இல்லையென்று கூறுவது சோழ குலத்து வேந்தருக்கு வழக்கமன்று. வேண்டியதைக் கேட்டால் உனக்குத் தருவேன். இன்று யார் எது வேண்டினும் அதை அளிப்பதாக வாக்குறுதி செய்துள்ளேன்" என்றான். உடனே பொன் குடுமியின் முகம் மலர்ந்தது; பத்திரை உள்ளம் உவந்தாலும் அதை வெளிக்காட்டிக்

கொள்ளாமல், செவ்விதழ் திறந்து, "வேந்தரே! சோழ குலத்தவர் சொன்ன சொல் தவருத் தூய்மையுடையவர் என்பதை யான் அறிவேன். தங்கள் குலப் பெருமையை உலகம் நன்கு அறியும். கைம்மாறு கருதாத கடப்பாடுடையவர்கள் சோழ குலவேந்தர்களே! எனினும் தாங்கள் நான் விரும்புவதை அளிப்பது உறுதிதாஞ?" என்ருள். பஞ்செனச் சிவக்கும் அவள் பாதங்கள் நிலம் பதியாமல் நடுங்கின; அரசன் யாது கூறுவானே என்று துடிதுடித்தது அவள் உள்ளம். அடுத்த கணத்தில் அரசன் இள நகை செய்தான். தியாகக் கடலின் கரை கண்ட பெருவள்ளலான சோழ வேந்தன் பெருமிதம் தோன்ற, தோள் பூரிககக் கைகளால் கொட்டிக் கொண்டான், யாவரையும் நோக்கியவாறே. சட்டென்று அவன் முகத்தில் புன்னகை மறைந்து உறுதி புலப்பட்டது; "பெண்ணே! இதுகாறும் இடையீடில்லாமல் கேட்டவர்க்குக் கேட்டதையெல்லாம் அளித்த யான், பேதையான உனக்கு மட்டிலும் நீ விரும்புவதை அளிக்காமல் போவேனு? நீ சோழநாட்டில் என் ஆட்சியின் கீழ் வாழ்பவளானல் என் இயல்பை உணராமலிருக்க முடியாது? வீண் வார்த்தைகள் ஏன்? இன்று எம்பெருமான் போதிநாதனின் புண்ணியத் திருநாள்! என் உடல், பொருள், ஆவி மூன்றையும் வேண்டுமாலும், தியாகம் செய்யப் பின்னடையேன், சொன்ன சொல் தவறுவது சோழனின் நாவல்ல; பரதுக்க துக்கியாகி, பிறர்க்கே உழந்து பெரியோஞன தியாக வீரன் புத்ததேவன் அறிய நீ விரும்பியதை அளிப்பேன; நீ வேண்டுவது என்ன? கேள்" என்று வஞ்சினம் கூறினன்.

பத்திரை பெருமூச்சுவிட்டாள்; "வேந்தரே, யான் விரும்பும் காதலனை எனக்கு அளித்து, என்னை அவருடன் இல்லற வாழ்வில் வாழச் செய்ய

வேண்டும்! இந்த மாங்கல்ய பிக்ஷை ஒன்றையே அடியாள் வேண்டுகின்றேன்" என்றவளாய் அரசனை ஆவலுடன் நோக்கினாள். வியப்புற்றான் அரசன். அவன் மனம் கலங்கியது. உடனே அவளைக் கூர்ந்து நோக்கி, "பெண்ணே கேட்பதைத் தருவது என் கடமை. எனினும் விளங்கக் கேள்; உன் காதலன் யார்? எனக்கு விளங்கவில்லை!" என்றான்.

"வேந்தரே! என் காதலர் தங்கள் வசமே இருக்கிறார். அருள் செய்ய வேண்டும். நான் விரும்பியவாறே மாங்கல்ய பிக்ஷை அளிக்கவேண்டும்" என்று துக்கம் நெஞ்சையடைக்கக் கேட்டாள். அரசன் முன்னிலும் பன் மடங்கு திடுக்கிட்டான். "என்ன? உன் காதலர் என் வசம் இருக்கிறாரா? அவர் யார்? உன் வார்த்தைகள் மறை பொருள்நிரம்பி உள்ளன. அவர் யாரென்று சொன்னால் இப்பொழுதே அவரை உனக்கு உடையவராக ஆக்குவேன்" என்றான்.

"வேந்தே! மன்னிக்கவேண்டும்; அவர் தங்கள் வசமே உள்ளார்; நாளைத் தினம் கொலை செய்வதற்கென்று சிறையில் அடைக்கப் பெற்றிருப்பவர்தான் அவர்" என்று கூறிய அளவில் துணுக்குற்றான். "என்ன? ஸததுகனா உன் காதலன்? அந்தக் காளன் என்னும் கள்வனா? ஆ!" என்று சிறிதே சீறினான்.

"அவரே என் காதலர்! பிழை பொறுத்து என் வாழ்வை நலமுறச் செய்ய வேண்டும். பெண்ணென்றால் பேயும் இரங்குமன்றோ? பெரு வள்ளலாகிய தாங்கள் என் பொருட்டு அவரைக் காப்பாற்றியே தீர வேண்டும். வாய்மொழி தவறாமல் வரம் அருளவேண்டும்; தங்கள் வாக்குறுதியைக் காக்கவாவது அவரை விடுதலை செய்ய வேண்டும்" என்று கண்ணீர் பெருக முறையிட்டாள். அரசனின் மறுமொழியை எதிர் பார்த்து உயிர் துடித்துக் கொண்டிருந்தாள். அரசன் மறுத்தால் அங்கேயே

தன் உயிரை விடுவதாக உறுதி செய்து கொண்டாள். மழைத்துளி நோக்கும் சாதகப் பறவையென சோழனின் முகமலர் நோக்கினாள்.

அரசன் நிலை சோர்ந்தான். தீர ஆலோசியாமல் வாக்குறுதி செய்துவிட்டோமே என்று மயங்கினான். இனி என்ன செய்வது? சொன்ன சொல் தவறுவது சோழ வேந்தனின் புகழுக்குத் தீராத களங்கமன்றோ? எனினும் கொடும்பாவக் கள்வனாகிய ஸத்துகனைக் கொலை புரிவதும் அவன் கடமைதானே! ஆகவே, அரசன் இன்னது செய்வதென்று தெரியாமல் மனம் கலங்கினான். இருதலைக் கொள்ளி எறும்புபோல் துடித்தான். மதியிழந்தேனே என்று மயங்கினான். ஸத்துகனை நினைக்கையில், அவன் உள்ளத்தில் கோபம் பொங்கி எழுந்தது. பத்திரையை நோக்குகையில் அவன் மனம் பேரிரக்கம் கொண்டு கலங்கியது. தன் வாக்குறுதியை நினைக்கையில், அவன் உள்ளம் சோர்ந்தது. அரசன் என்ன செய்வான்? விதியின் சோதனை என்பது இதுதானோ!

அருகிலிருந்த யாவரும் உண்மையை உணர்ந்தனர். அரசன் மனம் கலங்கித் தவிப்பதையும் அறிந்தனர். 'ஸத்துகனைக் கொன்றே தீரவேண்டும்' என்று கோபம் கொண்டவர்கள் அதை அரசனிடம் சொல்ல அஞ்சிப் பேசாதிருந்தனர். பத்திரையின் நிலையைக் கண்டு இரங்கிய சிலர், 'ஸத்துகனை விடுதலை செய்யவேண்டும்' என்று எண்ணினராயினும் அதைச் சொல்வதற்கு அஞ்சி யிருந்தனர். பொன் குடுமியின் இருதயம் துடித்துக் கொண்டிருந்தது. அரசன் யாது கூறுவானோ என்று கவலை கொண்டான். தான் ஏதேனும் சொன்னால், அவன் கோபம் கொள்வானோ என்று எண்ணி அகல நின்றான். இரவலர்க்குப் பொன் மாரி பொழிந்து களிப்புற்ற இரவிகுல வேந்தனான சோழன், பெரிதும் ஆலோசனை செய்தவனாய்ப் பத்திரையை நோக்கியவாறே திகைப்புடன் ஆசனத்தில்

அமர்ந்தான்; அரசனின் ஆலோசனை மிகுதியாகவே, பத்திரையின் துக்கமும் மிகுதியாயிற்று. அவள் விம்மியழும் ஒலி அங்கிருந்த யாவரையும் மனமிரங்கச் செய்தது. அரசன் மனத்திலும் இரக்கம் தலைப் பட்டது. 'இக் காரியத்தில் பிறர் யோசனையைக் கேட்பது வீண்' என்று முடிவு செய்தான். 'வாய் மொழி தவறாத வளவர் குலத்தில் உதித்த யான், வாக்குறுதி தவறுவது வாராப் பழியைக் கைதட்டி அழைப்பது போலாகும்?' என்று எண்ணினான். பத்திரையின் விருப்பத்துக்கு இணங்கி ஸத்துகனை விடுதலை செய்ய விரும்பவில்லை. தான் செய்த வாக்குறுதிக்காக அவனை விடுதலை செய்வதென்றே முடிவு செய்தான். அவனைக் கொலைத் தண்டனையி லிருந்து விடுவிப்பதை நினைக்க மனம் கலங்கினான். சொன்ன சொல்லைக் காப்பதற்காகச் சோழ நாட்டையே இழக்க நேர்ந்தாலும், அதற்குத் துணிந் தவனாதலால், ஸத்துகனை விடுதலை செய்வது பற்றி அவன் அதிகம் சிந்தை செய்யவில்லை. 'ஒரு பெண், நயவஞ்சகமாய்த் தன்னை ஏமாற்றி விட்டாளே' என்று அதிசயித்தான். ஒரு கணத்தில் தன் நிலையை மாற்றிக் கொண்டான். அவன் முகம் மலர்ந்தது.

"பெண்ணே, ஸத்துகனை உனக்குத் தந்தேன். வருந்தாதே! சொல்லிய சொல் காப்பது என் கடன். அவனைக் காதலனாகப் பெறுவதும் உன் கடமை. பெருங் கள்வனாகிய அவனை விடுதலை செய்வது, என் வாக்குறுதியைக் காக்கவேயன்றி வேறல்ல. நீ என்னை நயவஞ்சகமாய் ஏமாற்றினாலும், நான் சொன்ன சொல் தவறேன். அவன் இன்று விடுதலை யடைய வேண்டுமென்பது போதி நாதன் அருள் என்றே எண்ணுகிறேன். ஆனால், அவனிடம் சில உறுதி மொழிகளைப் பெற்றுக்கொண்டு இப்போதே அவனை உனக்கு உடையவனாக்குகிறேன்" என்று கூறினான்.

"பொன் குடுமி, ஸத்துகனுக்கு விடுதலை அளித்தேன்; அவனை இங்கே அழைத்துவா" என்று கட்டளையிட்டான். உவகையுடன் மின்னலென மறைந்தான் பொன் குடுமி.

வேந்தனின் வார்த்தைகளைக் கேட்டதும், பத்திரை, உடல் பூரித்து உவகையால் மெய்ம் மறந்தாள். அவள் முகம் புதுப் பொலிவு பெற்றது. மறுமொழி கூறவும் முடியாமல் உவகைப்பெருக்கால் கொந்தளித்தது அவள் உள்ளம். "வேந்தே, தங்கள் பேருதவியை எழு பிறவியிலும் நான் மறவேன். என் உயிர் தந்த தெய்வம் தாங்களே! போதி நீதன் அருளே, தங்களை உள்ளம் இரங்கச் செய்தது" என்றாள். அரசன் அவள் வார்த்தைகளை மதித்தான். "பெண்ணே, உன் தந்தை யார்? உன் பெயர் என்ன? ஸத்துகனை நீ மணந்தது எப்போது?" என்று கேட்டான்.

"என் தந்தை பெயர் ஏனாதி மும்முடி நாய்கர்; என் பெயர் பத்திரை; நான் அவரை மணந்தது சென்ற வருஷம் இந்திரவிழாவில். ஆனால் உலகறிய அக்கினி சாட்சியாக மணப்பது இன்றைக்கே! மங்கலத் திருநாளாகிய இன்றுதான் என் மங்கலத் திருநாளும்!" என்றாள். ஏனாதி மும்முடி நாய்கனும், பெருஞ் சாத்துவனும் முதல் நாள் வந்து போன நிகழ்ச்சி அப்போது தான் அரசன் நினைவுக்கு வந்தது. நாய்கனின் மகளே இவள் என்பதை உணர்ந்தான்.

ஸத்துகனை விடுதலை செய்யும் விஷயத்தில் அங்கிருந்தவர் பலர் மாறுதலான அபிப்பிராயம் கொண்டனர். அவர்கள் கருத்தை உணர்ந்தான் அரசன்.

"என் வாக்குறுதியை இழப்பதைக் காட்டிலும், ஸத்துகனை விடுதலை செய்வதே மேலானது! இதைத்

தடை செய்பவர், மஹாபலியின் தானத்தைத் தடை செய்ய முயன்ற சுக்கிரனின் கதியையே அடைவார்கள்'' என்முன் சிறிது சினத்துடன்.

அப்போது புத்த சத்துவர் எழுந்து, புன்னகையுடன், "வேந்தே, உன் முடிவே நல்லது. ஸத்துகனை விடுதலை செய்வதே என் கருத்துமாகும். ஏனெனில், நம் தேவன் பிறரைத் துன்புறுத்துவதை விரும்பான். துன்பம் செய்தவருக்கு நன்மையே செய்து, அவரை நல்வழிப் படுத்துவதே மேலாகும். அவனைக் கொல்வதால் ஓர் இளம்பெண்ணின் வாழ்வே வீணுகிறது. பெண் பாவம் பெரும்பாவம்! அது உன்னையே சாரும். ஆதலால் ஸத்துகனை விடுதலை செய்து அவனை நல்வழிப்படுத்துவதே நேர்மையாகும்'' என்முர்.

அவ்வளவில் பொன்குடுமியுடன் ஸத்துகன் அங்கே வந்து சேர்ந்து அரசனை வணங்கினன். தன் விடுதலைக்குக் காரணம் பத்திரையே என்பதைப் பொன்குடுமியால் உணர்ந்த ஸத்துகன், அவளைக் கண்டதும் தழுவிக்கொண்டான். பத்திரையும் பேராவலுடன் அவனைத் தழுவிக்கொண்டாள். அப்போது அரசன் சிறிதும் சினமின்றி, ஸத்துகனை நோக்கி, "ஸ்த்துகா, உன் காதலிக்குக் கொடுத்த வாக்குறுதிக்காக உன்னை இப்போது விடுதலை செய்தேன். ஆனல் நான் கூறும் விஷயங்களுக்கு நீ உடன்படவேண்டும். அதாவது இன்றுமுதல் நீ, மஹாயான, மந்திர யானங்களைக் கைவிட்டு, சிராவக யானத்தையே பின்பற்ற வேண்டும். காளனுகிப் புரிந்த கொலை களவுகளை இனி விட்டுவிடவேண்டும். இவற்றுக்கு நீ உடன்பட்டால், உன் காதலியுடன் சென்று சுகமாக வாழலாம்'' என்முன். ஸத்துகன் சிறிதும் ஆலோசனையின்றி, "வேந்தே, போதிநாதன் அறிய, தங்கள் கட்டளைக்கு உட்பட்டிருப்பேன்'' என்முன்.

அதற்குமேல் ஸத்துகனல் அங்கே நிற்க முடியவில்லை; அவமானத்தால், தலைநிமிர்ந்து யாரையும்

நோக்காதவனாய் உடல் வளைந்து நின்றான். அரசன் அதை உணர்ந்து இரக்கம் கொண்டு, அவனுக்கும் பத்திரைக்கும் விடைகொடுத்தான். சபையோர் ஆச்சரியமும் பரபரப்பும் கொண்டனர்; எனினும் அரசன் ஆணைக்கு அடங்கியே தீரவேண்டுமன்றோ?

பத்திரையுடன் ஸத்துகன் அவ்விடம் விட்டு அகன்று, வாயிலிலிருந்த முத்துச் சிவிகையில் ஏறிக் கொண்டான். வசந்தியும், அடங்கா உவகையுடன் சிவிகையின் ஒரு புறம் அமர்ந்துகொண்டாள். வசந்தி இருப்பதையும் உணராமல், ஸத்துகன் பத்திரையை அணைத்து, மெச்சி, முத்தமிட்டுக் கொண்டான். இருவரும் உள்ளம் கலந்த மகிழ்ச்சியால், முன் நிலைமையை முற்றும் மறந்தனர். 'பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?' இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருந்த ஸத்துகன். சிவிகையில் செல்லும் போதே, தன் தந்தை தன் பிரிவால் இறந்துபோனமையைப் பத்திரைமூலமாக அறிந்து வருந்தினான். ஆனால் அவ்வருத்தம் அவன் உள்ளத்தில் ஆழ்ந்திருக்கவில்லை; சிறிதே தோன்றி மறைந்தது. அவ்வருத்தங் காரணமாகச் சிறிது நேரம் வாய்பேசாது தலை குனிந்திருந்தான்.

சிவிகை, நேராகப் பத்திரையின் மாளிகையை அடைந்தது. வசந்தி முன்னதாக ஓடி நாய்கனிடம் நடந்தவற்றைக் கூறினாள். நாய்கன் பேருவகை கொண்டு, ஸத்துகனையும் பத்திரையையும் வரவேற்று வாழ்த்தினான். நடந்த விவரங்களையெல்லாம் பத்திரை எடுத்துக் கூறினாள். ஸத்துகனின் விடுதலைக்குப் பொன்குடுமியே காரணம் என்பதைக் கூறினாள். பொன்குடுமியை மனமார வாழ்த்தினர்.

நாய்கன், அன்றே, ஸத்துகனுக்கும் பத்திரைக்கும் திருமணம் செய்ய ஏற்பாடு செய்தான். அவர்கள் திருமணச் செய்தியை முரசறைவித்து எங்கும் பரப்பினான்; வியப்பும் உவகையும் அடைந்தனர் பலர்.

ஸத்துகனிடமுள்ள பயத்தால், அரசன்மீது வெறுப்புக் கொண்டனர் சிலர். பத்திரை ‘பெரும் பாக்கியவதி’ என்று புகழ்ந்தனர் பலர். ஸத்துகனுக்கும், பத்திரைக்கும், அன்றே குதூகலத்துடன் மணம் செய்வித்தான் நாய்கன். அவன் அடைந்த உவகைக்கு அளவே இல்லை. ஸத்துகனும் பத்திரையும் இன்பத்தால் மயங்கி விம்மிதமுற்றனர். வசந்தி அதைக்கண்டு உள்ளம் குளிர்ந்தாள். ஆனால், ஸத்துகனைப் பார்க்கும்போதெல்லாம் அவள் உள்ளம் திடுக்கிடும். பழைய நினைவுகள் உண்டாகும். அப்போது அவள் உள்ளத்தில் சிந்தனை அலைகள் ஒன்றன்மேல் ஒன்றாக மேலெழும்பி வரும். அவற்றில் ஆழ்ந்து மூழ்கியவளாய் மெய்ம்மறந்திருப்பாள் வசந்தி. பத்திரையும் ஸத்துகனும் முன் நிலைமையை மறந்து பேருவகையில் மூழ்கியிருந்தனர். என்றாலும் வசந்தியின் உள்ளம்மட்டும் தீராக் கவலையில் ஆழ்ந்திருந்தது. அவளுக்குள்ள கவலையைப்பற்றி இப்போது எப்படிச் சொல்லமுடியும்?

## 26

## அறிகுறி

ஸத்துகனும் பத்திரையும் மணவாழ்க்கை நடத்தினர். மலரும் மணமும்போல் உள்ளம் ஒன்றியிருந்தனர். இரவும் பகலும் இடையீடின்றிப் பத்திரையுடன் பொழுதுபோக்கினான் ஸத்துகன். நறுமலரில் நறவம் மாந்தும் அஞ்சிறை வண்டென இடையறாமல் பத்திரையின் இன்பம் நுகர்ந்திருந்தான். ஸத்துகனின் கூட்டுறவால், பத்திரை, மெய்ம்மறந்து உள்ளம் பூரித்திருந்தாள். அவனைக் காட்டிலும் பன்மடங்கு உவகை பூத்தாள் அவள். காதல் விளையாட்டிலே களிமயக்கம் கொண்டிருந்த அவ்விருவரும் தாம் முன்பு அநுபவித்த துன்பங்களைச் சிறிதும்

நினைத்துப் பார்க்கவில்லை. நினைத்துப் பார்க்கச் சமயம் ஏது? காதற் கடலில் மூழ்கியிருந்த அவர்களுக்கு, நடந்த செய்திகளைப்பற்றி நினைக்கச் சமயம் வாய்க்கவில்லை. இளமை வீறுடைய அவ்விருவரது கட்டுக்கடங்காத காதலைப்பற்றிக் கேட்பானேன்! இரவேது? பகலேது? இவர்கள் காதல் உலகத்திலே மிக விரைவாகக் கணக்கின்றி மாறி மாறி இரவும் பகலும் போய்க்கொண் டிருந்தன.

நாட்கள் பலவாயின. ஸத்துகனும் பத்திரையும் மெய்ம்மறந்து இன்பமாக வாழ்வதைக் கண்டான் ஏனாதி மும்முடிநாயகன். அவன் உள்ளம் விம்மிதமுற்றது. உவகைப் பெருக்கு, கரைகடந்தது, அவன் உள்ளத்தில். அந்த உவகையிலே கவலைகளை எல்லாம் மறந்தான் அவன். 'இனி ஸத்துகனுக்குத் துன்பம் இல்லை. பத்திரையின் வாழ்வு புனிதமுற்றது' என்று எண்ணி இறுமாப்புற்றான். அந்த உவகைப் பெருக்கிலே அவன் உயிர் ஒரு நாள் அகன்றுவிட்டது. அப்போது இருவரும் காதல் விளையாட்டிலிருந்து விழித்துக்கொண்டனர். தந்தையின் பிரிவுக்குப் பத்திரை மனம் வருந்தினாள் என்று சொல்லவும் வேண்டுமா? ஸத்துகனுக்குச் சிறிதும் வருத்தமில்லை. வருத்தத்தை ஒருவாறு மறக்க முயன்றாள் பத்திரை. 'வயது சென்றவர்; போய்விட்டார்; வருந்தி என்ன பயன்?' என்று பலரும் ஆறுதல் கூறினர். பத்திரை ஆறுதலுற்றாள். நாயகன் இறந்தது தொடங்கி, பத்திரை, ஸத்துகன் இவர்கள் வாழ்க்கையும் முற்றும் மாறிவிட்டது. அதற்குக் காரணம் பத்திரையல்ல.

எவ்வளவு மனங்கலந்து பேசினாலும் ஸத்துகன், முன்புபோல் இல்லை. அவன் என்ன முயன்றும் உள்ளத்தில் குமுறிக்கொண் டிருந்த ஒன்றை அடக்க முடியவில்லை. பல வகையிலும் ஸத்துகனுக்கு இன்பூட்ட முயன்றாள் பத்திரை. அவள் தன்மையையும், அவளுக்குத் தன்மீதுள்ள காதலையும்

கண்டு ஸத்துகன் புன்னகை செய்வான். நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றி இருவரும் சிறிதும் பேசுவதே இல்லை. அந்த நினைவு வந்தால்கூட உடனே அதை மறைத்துப் பேசுவார்கள். இவர்களைப்பற்றி வீதியில் யாரேனும் பேசுவதை வசந்தி காதுகொடுத்துக் கேட்டாலும் அதை வாய்திறந்து கூறுள். 'இவ்விதம் தங்கள் பழைய வாழ்க்கையைப் பற்றிப் பேச அஞ்சி அதை மறைத்துவைத்து எத்தனை நாட்கள் காலங் கழிப்பது?' என்று இருவரும் சில சமயங்களில் எண்ணுவது உண்டு. தன் பழைய செயல்களை நினைத்தால் துக்கம் கரைபுரண்டுவிடுமோ என்று ஸத்துகன் அஞ்சினுன். தான் அரும்பாடுபட்டு அமைத்த 'ஸத்துக மந்திர பௌத்த சங்கம்' அரசனின் வன்மையால் தகர்ந்து போயிற்றே என்று அவன் உள்ளம் ஏங்கியது. எந்தச் செயலும் தான் இனிச் செய்யமுடியாமல் போயிற்றே என்ற வருத்தம் மேலும் அதிகரித்தது. இந்தக் காரணங்களால் அவன் வெளியில் தலைகாட்டவே இல்லை. வீதியில் செல்ல விரும்பவும் இல்லை. பத்திரையின் மாளிகையிலேயே உண்பதும் உறங்குவதுமாகப் பொழுது போக்கினுன். அவமானத்தினுல், வெளியில் செல்ல மனமில்லாமல், ஸத்துகன் அங்கேயே இருக்கின்ருன் என்பதைப் பத்திரை உணரவில்லை. தன்மீதுள்ள காதல் மிகுதியாலேயே இடைவிடாமல் தன்னுடன் தங்கியிருக்கிருன் என்று எண்ணியிருந்தாள். அவள் எண்ணியவாறே அவனும் காதல் மீதூர்ந்தவன் போல் அவளுடன் பொழுது போக்கினுன். அவளுடன் வாழ்வது அவனுக்குப் பேரின்பம் அளித்தது என்ருலும், அங்கேயே இருப்பது ஒரு சிறைபோன்று அவனுக்கு இருந்தது. அவன் உள்ளக் கவலையைப் பத்திரை உணரவில்லை.

அன்றிற்பெடையென இன்பமுற்று வாழும் பத்திரை ஸத்துகனின் கவலையை முற்றும் அறியாள் எனினும், குறிப்பாக ஒருவாறு உணர்ந்தாள்.

உள்ளக் கவலையாலேயே ஸத்துகன் குதூகலமற்று இருக்கிறான் என்பதை அறிந்தாள். 'எவ்வாறு மீண்டும் அவனைக் குதூகலமுள்ளவனாகச் செய்வது? ஸத்துகனின் கவலையை எவ்வாறு அகற்றுவது?' என்றெல்லாம் எண்ணினாள் பத்திரை. நாட்கள் ஆக ஆக ஸத்துகனின் போக்கு மாறிக்கொண் டிருந்ததேயன்றி ஒரு நிலைப்படவில்லை. தொடக்கத்தில் இருந்த குதூகலமும் முகமலர்ச்சியும் வரவரக் குறைந்தன. பத்திரை அதை அறியாமல் இல்லை. அவள் வேறு என்ன செய்வாள்? கற்புடைய மங்கையருக்குக் கொழுநனே தெய்வமன்றோ? பத்திரைக்கு ஸத்துகனின் போக்கு மிகுந்த மனக் கலக்கத்தையும் வருத்தத்தையும் அளித்தது. 'நாட்கள் கடந்தால் யாவும் சரியாகப்போகும்' என்று ஆறுதல் அடைந்திருந்தாள்.

ஒரு நாள் முன்னிரவு! நிலவு சிறிதும் இல்லை. எங்கும் விளக்குகள் விளங்கின. எனினும் இருள் பெருந்திரையில் விளக்குகளின் ஒளி மங்கியிருந்தது. பத்திரையின் மாளிகை முழுதும் அகிற்புகை கமழ்ந்தது. ஸத்துகனுடன் பூங்கட்டிலில் அமர்ந்திருந்த பத்திரை, இன்னிசை வீணையின் மென்னரம்பை வருடி நாத அலைகளை எழுப்பினாள். அதனுடன் கண்டப் பாடலும் பாடினாள். யாழின் இன்ப ஒலியிலும் பத்திரையின் இன்னிசைப் பாட்டிலும் மதிமயங்கியிருந்தான் ஸத்துகன். ஸத்துகனின் உள்ளத்தைத் தீவிரமாகக் கவரவேண்டுமென்று பத்திரை மிக முயன்று லாகவமாகப் பாடினாள். ஆனால் அப்போது அவன் சிந்தனை முழுவதும் வேறு எங்கோ ஒன்றியிருந்தது. பத்திரை அதை நன்கு கவனிக்கவில்லை. பத்திரையின் இசை விருந்து முடிவுற்ற பின்பும் ஸத்துகன் ஏதோ ஆலோசித்தவனாய் அசைவறறிருந்தான். பத்திரை அவன்மீது மெல்லக் கரங்களை வைத்தாள். ஸத்துகன் திடுக்கிட்டவனாய் அவ

ளைப் புகழ்வதுபோல் இரண்டொரு வார்த்தைகள் கூறினன். உண்மையிலேயே அவன் தன் மீதுள்ள பிரேமையால் கூறுகிருன் என்று எண்ணிப் பத்திரை குதூகலித்தாள். ஆனல் அடுத்த கணத்தில் ஸத்துகன் கூறிய வார்த்தைகள் அவளைத் திடுக்கிடச் செய்தன.

“பத்திரை, நான் நீண்ட நாட்களாக வீதிப் புறமே போகவில்லை. இன்று போய்வரலாம் என்று எண்ணுகிறேன். என் மாளிகை வரையில் சென்று வருகிறேன்” என்ருன் தயக்கத்துடன். பத்திரை துணுக்குற்றவளாகப் பெருமூச்சு விட்டு, “என்ன? இந்த இருட்டிலா? நாளைக்குப் போய்வரலாமே. இப்போது என்ன அவ்வளவு அவசரம்?” என்ருள்.

“பத்திரை, தடை சொல்லாதே! ஏதோ தோன்றியது; போய்வருகிறேன். ஆனல் உன்னைப் பிரிந்து நான் தனியே இருக்கமுடியுமா? விரைவில் வந்து விடுகிறேன்; கவலைப்படாதே. ஆண், பெண்ணுகிய அன்றிற் பறவைகள்போல் கூடிக் களித்திருந்த நாம் சிறிது பிரிந்திருந்தாலும் வருத்தத்தையே கொடுக்கும்; அதற்கு வருந்தாதே!” என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

பத்திரை ஒன்றும் கூறவில்லை. தலையசைத்தாள். மேல் உத்தரீயத்தை இழுத்துப் போர்த்துக்கொண்டு, பத்திரையின் மாளிகையை விட்டுப் புறப்பட்டான் ஸத்துகன். இந்த முன்னிருட்டில் ஸத்துகன் எங்கே போகிருன் என்பதைப் பத்திரை அறிய முடியவில்லை. வசந்திக்கும் அது இயலவில்லை. ஸத்துகன் அவன் மாளிகைக்குச் செல்லவில்லை என்பதுமட்டும் அவளுக்குத் தெரியும். அவன் எங்கே போகிருன் என்பதை வசந்தி ஒருவாறு ஊகித்தாள். அவள் ஊகப்படியே அவன் கடுகிய நடையுடன் கணிகையர் வீதிப்பக்கமே சென்ருன்.

சயந்தியைக் காணவேண்டுமென்ற தீவிர ஆவல் அவனுக்குப் பல நாட்களாக இருந்தது. அதற்குச் சம

யம் வாய்க்காமலே போய்விட்டது. ஆனால் அன்றைத் தினம் அவ்வாவல் எல்லை மீறியது. எவ்வாறேனும் அன்று சயந்தியைக் கண்டே தீருவது என்று உறுதி செய்தான். பத்திரைக்குச் சிறிதும் அது தெரியாதிருக்கவேண்டும் என்று எண்ணியே அவளிடம் வேறு காரணம் கூறிவிட்டுப் புறப்பட்டான். அவன் போகையிலேயே, பல எண்ணங்கள் அவன் உள்ளத்தை அலைத்தன. 'சயந்தி என்னைப்பற்றிய எல்லாவற்றையும் அறிந்திருப்பாளே! அவள்முன் நான் எப்படிச் செல்வது? ஒரு சமயம் துக்கம் தாங்காமல் உயிர்.........இல்லை! என் வரவை அவள் அன்று முதல் எதிர்பார்த்த வண்ணமாயிருப்பாள்! என்னைக் காணுமல் உயிரை விடாள். என்மீது அவளுக்குள்ள தூய காதலுக்கு ஒப்புயர்வு ஏது? அவளை வஞ்சித்த பாவமே என்னை இந்த நிலைக்கு உள்ளாக்கியது. பத்திரையை நான் மணந்ததை அவள் உணர்ந்தால் என்ன பாடுபடுவாள்! அவளுக்கு நான் என்ன மறுமொழி சொல்வேன்?' என்று பலவாறு சிந்தித்துச் சென்ருன்.

* * * *

சயந்தி குழந்தையை உறங்கவைத்துவிட்டு எப்போதும்போல் தனிமையில் அமர்ந்து ஸத்துகனைப் பற்றி எண்ணமிட்டாள். ஸத்துகன் சிறைப்பட்டது முதல் பத்திரையை மணந்தது வரையில் நிகழ்ந்த எல்லாச் சம்பவங்களையும் நாகவல்லியிடமிருந்து சயந்தி அறிந்திருந்தாள். ஸத்துகன் உயிரோடு இருக்கிருன் என்ற காரணத்திற்காக அவளும் உயிர் வாழ்ந்தாள். 'ஸத்துகன் பத்திரையைக் காதலித்து மணந்துவிட்டான்' என்பதாக, ஒரு புறம் அவள் உள்ளத்தில் துக்கம் அழுத்திக்கொண்டிருந்தது என்ருலும் ஸத்துகனின் உயிரைக் காத்தவள் என்பதற்காக அவளை மனமார இப்போது வாழ்த்தினுள். எனினும், 'பத்திரையிடம் ஏற்பட்ட தீவிரக் காதலால்

தன்னை அவர் மறந்தாரோ' என்று ஏங்கிச் சாம்பி னாள்.

'என்னை அவர் நினைக்காவிடினும் அவர் உயிரைக் காத்த அந்த நங்கையுடன் அவர் நீடூழி வாழ்வாராக' என்று வருந்திக் கூறியவளாகக் கன்னத்தில் கைவைத்துக் கண்ணீர் சோர அமர்ந்திருந்தாள். நீர் வார்ந்த கண்களினூடே ஸத்துகனின் தோற்றம் இடையிடையே பிரதிபலித்துக்கொண் டிருந்தது. அசைவற்று ஆலோசனையுடன் அமர்ந்திருந்தாள். அப்போது வாயிற் கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்கவே, திடுக்குற்று எழுந்தாள். நாகவல்லி விரைந்து சென்று கதவைத் திறந்தாள். இருட்டில் மருள மருள விழித்தவனாக ஸத்துகன் உள்ளே புகுந் தான். கதவைத் தாளிட்டுவிட்டு நாகவல்லி முன்னே ஓடிச்சென்று ஸத்துகன் வரவைச் சயந்திக்குக் கூறி னாள். அதற்குள்ளாக ஸத்துகன், உடல் பதற விரைந்துவந்து சயந்தியைத் தழுவிக்கொண்டான். சயந்தியைக் காட்டிலும் பன்மடங்கு அவன் கண் களில் நீர் சோர்ந்தது. இருவரும் அன்பால் மனமுருகிக் கண்ணீர் ததும்ப நின்றனர். கனவு காண்பவள்போல் அசைவற்றுநின்றாள் சயந்தி. ஸத்துகன் நாத்தடுமாறப் பேசலானான்: "சயந்தி, சயந்தி! நான் செய்த குற்றங் களையெல்லாம் மறந்துவிடு! நான் துரோகி! வஞ்ச கன்! உன்னை வஞ்சித்தேன். உன் தூய காதலுக்கு உலகில் இணை ஏது? உன்னை யான் மறந்திருக்கவும் முடியுமா? உன் உருவம் என் உள்ளத்தை விட்டு ஒரு நாளும் அகன்றதில்லை......" என்று கூறிக் கொண்டே இருந்தான். அவனை அறியாமல் வாயிலி ருந்து வார்த்தைகள் விறுவிறுவென்று புறப்பட்டன.

ஒரு கணம் சயந்தி திகைத்து நின்றாள். கண் ணீரைத் துடைத்துக்கொண்டு, "சுவாமி, தாங் கள் இவ்வாறு பேசலாமா? நடந்தது நடந்துவிட் டது. தாங்கள் எதுவும் செய்யவில்லை. எல்லாம் விதிப்

பயன்! அடியேன் செய்த குற்றங்களைப் பொறுத்துக் கொண்டால் அதுவே போதும்! எனக்கு ஆருயிர் போன்றவர் தாங்கள். தங்கள் ஆருயிரைக் காத்தவள் அந்த வணிகப் பெண். அந்த மங்கையைத் தாங்கள் மணந்து மாலையிட்டது எனக்குப் பெரிதும் மகிழ்ச் சியையே தருகிறது. அவள் பெரும் பாக்கியவதி! அவ ளுடன் தாங்கள் நீடூழி வாழவேண்டும். நான் எவ்வளவு தூயவள் என்றாலும், கணிகையர் குலத்தில் உதித்தவள்தானே! என்னைவிட எத்துணையோ அதிகப் பெருமையுடையவள் அவள்! தங்கள் அருள் ஒன்றே அடியேனுக்கு வேண்டும். தங்கள் காட்சி இன்று எனக்குக் கிடைக்குமென்று நான் கனவிலும் கருதவில்லை!......” என்று இவ்வாறெல்லாம் சயந்தி பேசிக்கொண் டிருந்தாள்.

இடையிடையே அவள் வார்த்தைகள் தடுமாறின; கண்கள் சிவந்தன; உடல் வேர்த்தது; உணர்ச்சி வசமானாள்; பெருமூச் செறிந்தாள். கண்களிலிருந்து களகளவென நீர்த்துளிகள் சிதறின. அவள் தன்மையைக் கண்டு ஸத்துகன் மனம் கலங்கினான்; தன்னை நொந்துகொண்டான். அவள் வார்த்தைகளில் புலவிச் சொற்கள் நிறைந்திருப்பதைக் கண்டு உள்ளம் கலங்கினான். சயந்தியை எவ்வாறு ஆற்றுவது என்று எண்ணித் தவித்தான். சயந்தியின் தளிர்க் கரங்களை எடுத்து மார்புடன் தழுவிக்கொண்டான்.

“சயந்தி! உன்னை மறப்பது எழுபிறவியிலும் முடியாத காரியம். உன்னுடைய அன்புக்கும் பத்திரையின் அன்புக்கும் எத்துணையோ வேறுபாடு உண்டு. அந்தோ, என் இருதயத்தை நீ உணரும்படி எவ்வாறு காட்டுவேன்! சயந்தி, உன்னுடைய தூய காதல் ஒன்றுதான் என் உள்ளத்தில் நிலைத்திருக்கிறது! என் உயிரைக் காத்த ஒரு காரணத்திற்காகவே, அவளை நான் மணந்தேன். அதுவும் விதிப்பயன். நான் உன்னிடம் ஒன்றும் ஒளிக்கவில்லை. அவளும் கபடமற்றவள்.

ஆனுல் உனக்கும் அவளுக்கும், மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை இருக்கிறது. உன்னிடம் எனக்குள்ள காதல் சிறிதும் குறையவில்லை. தீவிரமாக வளர்ந்துகொண்டே இருக்கிறது. தீவிர உணர்ச்சி வேகத்தாலேயே உன்னை இப்போது காண ஓடி வந்தேன். இன்று உன்னைக் கண்டிராவிட்டால் என் உயிர் உடலில் இராது. உன்னிடமுள்ள பிரேமையை நான் எவ்வாறு வெளிக்காட்டுவேன்! நீயே அதை உணர்ந்துகொள்வாய்'' என்ருன் ஸத்துகன்.

ஸத்துகனின் நிலையைச் சயந்தி உணர்ந்தாள். அவன்மீது அவளுக்கு இரக்கமே உண்டாயிற்று. 'புண்பட்ட இவர் மனத்தில் வேல்கொண்டு எறிவதுபோல் வார்த்தைகளைக் கூறுவதால் என்ன பயன்? என்மீது இவருக்கு உள்ள காதலை யான் அறியேனு? இவர் செய்கைக்கு இவரே பின்னர் வருந்துவார். இப்போதே இவர் உள்ளம் என்ன பாடுபடுகிறதோ.....?' என்று எண்ணியவாறே சற்று அசைவற்றிருந்தாள். பின்பு சட்டென்று சென்று ஸத்துகனை வணங்கிஞள். எப்போதும்போல் ஸத்துகனை அமர்வித்து உபசரித்தாள். ஸத்துகன் தன் உள்ளமும் உடலும் குளிரச் சயந்தியை நோக்கியவாறே இருந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சயந்தி குதூகலம் கொண்டவள் ஆனுள். முன்போல் அவள் முகத்தில் புன்னகை தவழ்ந்தது; சோகம் மறைந்தது. கட்டிலில் உறங்கியிருந்த மைந்தனை எடுத்துவந்து காதலன் கையில் அளித்தாள். கண்களை மலர விழித்துப் பார்த்தான் மைந்தன். ஸத்துகன் களிப்போடு தன் கரங்களால் அவனைத் தழுவி மார்புடன் அணைத்துக்கொண்டான். இந்த நிலையில் மைந்தன் முகத்தையும் ஸத்துகன் முகத்தையும் மாறி மாறி நோக்கிஞள் சயந்தி. ஸத்துகனின் முகச்சாயல் மிகப் பொருத்தமாக மைந்தனுக்கு அமைந்திருந்ததே அதற்குக் காரணம்.

சயந்தி குறு நகையுடன், “தாங்கள் இவனுக்கு இட்ட பெயர் ஞாபகம் இருக்கிறதா?” என்றாள்.

“நான் இட்ட பெயரா? எப்படி? நான் இட வில்லையே.”

“ஒரு நாள் இவனுக்குத் தாங்கள் ‘சுகதன்’ என்ற பெயரிட்டதாகக் கனவு கண்டேன்.”

“சயந்தி! மிகப் பொருத்தமான பெயர் இது. புத்ததேவரின் நாமம் சுகதன் என்பதுதான். அவர் அருளால் பிறந்த இம்மைந்தனுக்கு அந்தப் பெயர் மிகப் பொருத்தமானதே!” என்றான் ஸத்துகன். ‘சுகதா!’ என்று அழைத்தவாறே இருவரும் மைந்தனை அணைத்து விளையாடினர். அவ்விருவர்தம் காதலையும் வளர்த்துவைக்கும் அம்மைந்தன் செவ்வாய் திறந்து சிறுசொல் மிழற்றினான். நீண்ட நாட்களாகப் பிரிந்திருந்த இருவர் உள்ளமும் மிக எளிதில் ஒன்றுபட்டுக் களித்தன. அவர்கள் உள்ளக் களிப்பை அளவிட முடியாது. பத்திரையை அவன் மறந்தே போனான். நடு இரவாகி விட்டது. சயந்தியுடன் அங்கேயே தங்கிவிட்டான். தன் உள்ளத்திற்கு இன்பம் அளிக்கும் காதலி சயந்தி ஒருத்தியே என்று அவன் மனம் உறுதி கொண்டது.

அன்றுமுதல் சயந்தியிடம் அவன் வந்து போவது தவறுவதில்லை. நாட்கள் ஆக ஆகச் சயந்தியின் காதலும் வளர்ந்துகொண்டே போயிற்று. பத்திரையுடன் அவன் கூடிக் களித்திருந்தாலும் சயந்தியின் உறவு வலியுற்று வந்தது. பத்திரையிடம் இருந்த பிரேமையைக் காட்டிலும் அது பன்மடங்கு மிகுதியாகவே இருந்தது. அதன் காரணத்தை யார் அறிவார்? சயந்தி என்னும் காதற் கணிகையின் தொடர்பு ஸத்துகனுக்கு இருக்கிறது என்பது பத்திரைக்கு எவ்வாறு தெரியும்? சத்துகனின் வஞ்சனை வசந்திக்கு முற்றும் தெரியும் என்றாலும் அவனிடம்

உள்ள அச்சத்தால் அதை அவள் பத்திரையிடம் கூறத் துணியவில்லை. ஸத்துகனுக்கு வேறு எந்த மங்கையிடமேனும் தொடர்பு உண்டோ என்ற சந்தேகம்மட்டும் பத்திரைக்கு அடிக்கடி தோன்றியது. 'ஸத்துகனுக்கு என்னிடம் தீவிரப் பிரேமை ஏற்படாததற்குக் காரணம் என்ன? முன்பு இருந்த தீவிரம் இப்போது குறைந்ததேன்?' என்றெல்லாம் பத்திரை சிந்தித்தாள். எவ்வாறேனும் ஸத்துகனின் மனப் போக்கை மாற்றித் தன்வசமாக்கவேண்டும் என்று அவள் எண்ணினாள். தனக்குள்ள குறையைப்பற்றி வசந்தியிடம் அடிக்கடி எடுத்துச் சொன்னாள். வசந்தி என்ன செய்வாள்? அவள் மனம் பத்திரையின் சுக வாழ்வைக் குறித்துப் பலவாறு சிந்தித்தது. "சர்வமும் நாசமாகி விட்டது என்று எண்ணினேன். ஆனால் இன்னும் சிறிது எஞ்சி இருக்கிறதுபோலும். சயந்தியிடம் ஸத்துகன் போய்வருவது பத்திரைக்குத் தெரிந்தால் அதுவே போதும்! 'சர்வம் நாசம்' என்பது பூர்த்தியாகிவிடும். பத்திரை என்னிடம் கூறுவனவெல்லாம் உண்மை வெளிப்படுவதற்கே அறிகுறி. ஏன்? பத்திரையின் சுக வாழ்வு நாசம் அடைவதற்குத்தான் இது அறிகுறி!" என்று தனக்குள் வசந்தி கூறிக்கொண்டாள்.

## 27

### 'சிதறிய பூக்கள்'

"நான் இனி என்ன செய்வேன்? இவ்வளவு தூரம் அவர் மனம் மாறுதல் அடையுமென்று கனவிலும் நான் கருதவில்லையே! அவர் இவ்வித மாறுபாட்டுடன் நடந்துகொள்ளும்படி நான் என்ன பிழை செய்துவிட்டேன்! எதுவும் நினைவுதவறியும் செய்ததாகக்கூடச் சொல்வதற்கில்லையே! நான் தவறு செய்திருந்தால் வாய்திறந்து அவரே சொல்லி

யிருப்பார்! அவர் மன மாறுதலுக்கு நான் காரணம் அல்ல என்றாலும், அதற்குக் காரணம் என்ன என்று தெரியவேண்டாமா? இவ்வளவு நாட்கள்வரையில் என்னிடம் மனம் ஒன்றியிருந்த அவர் இப்போது மாறியிருப்பதற்குக் காரணம் என்ன என்பதை நான் எவ்விதத்திலும் அறிய முடியவில்லையே! ஒருகால் தம் பழைய ஞாபகங்களால் மனம் நொந்திருக்குமோ என்றால் அதற்காக என்னிடம் குதூகலமற்று முக வாட்டத்துடன் பழகுவது நியாயமா? என்னை மணப்பதற்குமுன்பு அவர் எவ்வளவு குதூகலமும் முகப்பொலிவும் உடையவராக இருந்தார்! என்னைக் காண்பதிலும், பேசுவதிலும், தழுவி மகிழ்வதிலும் எத்துணை ஆர்வம் காட்டினார். ஏன்? மண மானபின்புங்கூட நீண்ட நாட்கள் அவரிடம் எந்த மாறுபாடும் தென்படவில்லையே! சில நாட்களாகத் தானே இவையெல்லாம். அவர் என்னைச் சில சமயங் களில் கனிவு நிரம்ப நோக்கும்போது, 'இவருக்கு என் னிடம் இவ்வளவு அன்பு எப்படி உண்டா யிற்று' என்றுகூட நான் நினைத்து ஏமாப்புற்றிருக் கிறேனே.

"அவருடைய இந்த மன மாறுலுக்குக் காரணம் காளனாகிக் கடுந்தொழில் புரிந்து சிறைப்பட்டத னால் நேர்ந்த அவமானமா? அரசன் கட்ட ளைக்கு உட்பட்டு ஸத்துக மந்திரத்தை இழந்து சிரா வக யானத்தை அடையும்படி நேர்ந்ததன் வருத் தமா? இல்லை. அவை காரணமாக இருந்தால் இந்த மாளிகையை விட்டு வெளியே தலைகாட்டுவாரா? சிறைப்பட்ட அவமானத்தால் எத்தனை நாட்கள் இந்த மாளிகையிலேயே இருந்து இரவும் பகலும் என்னு டன் மகிழ்ந்திருந்தார்! இப்போதோ இங்கே சிறிது நாழிகைகூடத் தங்குவதில்லையே. வருவதும் போவது மாகத்தானே இருக்கிறார். நான் ஏதேனும் கேட்டா லன்றி மறுமொழி சொல்வதே இல்லையே. அன்று ஒரு

நாள் என்ன காரணத்தாலோ, 'வீதிப்புறம் போய் விட்டு வருகிறேன்' என்று போனார். அன்று இரவு வரவே இல்லை! அன்று தொடங்கி நாள் தவறாமல் எங்கோ போவதும் வருவதுமாகவே இருக்கிறார்! நான் எதுவும் சந்தேகம் கொள்ளாதவாறு, என்னுடன் பேசும்போதெல்லாம், குதூகலமுடையவராகவும், அன்பு மிகுதியாக உடையவர்போலவும், புன்னகை ததும்பப் பேசி நடிக்கிறார்! இவை எனக்குத் தெரியாதனவா? அவருடைய மனக்குறை என்ன என்பது தெரிந்தாலாவது நான் நிவர்த்திசெய்ய முயல்வேன்! அது என்னிடம் சொல்லக்கூடியதாக இல்லாமல் இருந்தால்? என்ன காரியம், அப்படி இரவில்கூடப் போகும் படியாக? எங்கே செல்கிறார் என்பதையும் அறிய முடியவில்லையே! இவர் இவ்வாறே இருந்தால் என் வாழ்க்கை என்ன ஆவது? போதிநாதா நீயே துணை! எப்போதும் உன்னையன்றி வேறு யார் எனக்கு உதவி புரிபவர்?'' என்று மறுகுவாள்.

இவ்வாறு வருந்தியவளாக மஞ்சத்தில் அமர்ந்து சாளரத்தை நோக்கியிருந்தாள் பத்திரை. காதலன் பிரிவால் மனம் பொருமிப் பெருமூச்செறிவதும், தனக்குள் ஏதோ பிதற்றிக்கொள்வதுமாகச் சோர்ந்திருந்தாள் அவள். மலர் மணத்துடன் மாலை இளந்தென்றல் மெல்ல மெல்லத் தவழ்ந்துகொண் டிருந்தது. பத்திரையின் உள்ளத்தை அவை மேலும் துன்புறுத்தின. அதற்கு நேராகத் தோட்டத்தின் உட்புறம் பூக்களை மாலையாகத் தொடுத்துக்கொண் டிருந்தாள் வசந்தி.

மாலைகள் கட்டிக்கொண்டிருந்தபோதிலும், வசந்தியின் கருவிழிகள் பத்திரையையே நோக்கிக்கொண் டிருந்தன. பத்திரையின் வாழ்க்கையைப் பற்றிய கனவுகள் கண்டுகொண் டிருந்தது அவள் உள்ளம். ஸத்துகனைப் பற்றிய உண்மைகள் அவளுக்கு நன்கு தெரியுமாதலால் அவன் நாளடைவில் மாறிக் கொண்டு வருவதன் முடிவு என்ன ஆகும் என்பதை

யோசித்தபடி இருந்தாள் வசந்தி. சயந்தியிடம் மீண்டும் ஸத்துகனுக்குப் பிரேமை உண்டாகி அது தீவிரமாக வளர்கிறது என்பதும், பத்திரையிடம் பிரேமைக் குறைவு உண்டாகிறது என்பதும் அவளுக்குப் புலப்பட்டன. 'பத்திரையின் இளமை இன்பத்தை, அழகு நலத்தை இடைவிடாமல் நுகர்ந்து நுகர்ந்து அவளிடம் அவனுக்குள்ள பிரேமைவளர்ச்சி தடைப் பட்டுவிட்டதோ' என்றும் எண்ணினாள் வசந்தி. பத்திரையின் வாழ்க்கை இனிமேல் இவ்வாறே சுவையற்று, மலர்ச்சியற்று, மணமற்றுப் போய்விடும் என்பதே வசந்தியின் முடிவான கருத்தாக இருந்தது.

பத்திரைக்கோ கவலை பெரிதாகிவிட்டது. தன்னுடைய வாழ்வு இப்படியே சீர்கெட்டுப் போய் விடுமோ என்று அவள் அஞ்சிக் கலங்கினாள். 'ஸத்துகனுடன் முன்புபோல் குதூகலமாக வாழ்ந்து களிக்கும் நாள் என்று வருமோ?' என்று கலங்கித் தவித்தது அவள் உள்ளம். 'மணந்தால் மணமுற்று வாழலாம், என்று ஆவல் கொண்டிருந்தேனே! அது வீணாகிவிட்டதே!' என்று இல்வாழ்க்கைமீது வெறுப்புற்றாள் அவள். அவளுடைய சிந்தனை மேன்மேலும் பலவாறு பரவவே ஸத்துகன்மீது சந்தேகங்களும் உண்டாயின. வசந்தி ஸத்துகனைப்பற்றி முன்பு கூறியன அவள் நினைவுக்கு வரத்தொடங்கின. அப்போது சிறிது பரபரப்புற்றாள். வசந்தியை அழைத்தாள். பூமாலைகளைத் தட்டில் ஏந்திக்கொண்டு வசந்தி அருகில் வந்தாள்.

"பத்திரை! என்ன, எப்போது பார்த்தாலும் இப்படி ஆலோசனை செய்தவண்ணமாகவே இருக்கிறாயே? உன் முகம் எவ்வாறோ மாறிவிட்டதே! எதற்கு இந்தக் கலக்கம்?" என்று கேட்டுக்கொண்டே அவள் அருகில் அமர்ந்தாள் வசந்தி.

வசந்தியின் முகத்தை உற்றுப் பார்த்து, "அது இருக்கட்டும். இந்த மாலைகள் இன்று மிகவும் அழ

காக அமைந்திருக்கின்றனவே! நன்ருகக் கத்தரித்து அழகு செய்திருக்கிருயே!'' என்ருள் பத்திரை.

"இன்னுங்கூட அழகு செய்யலாம்; அதற்குள் கூப்பிட்டுவிட்டாய். இந்த மாலை உனக்கு; இது அவருக்கு; தெரிந்ததா?''

"வசந்தி, நீ மிகவும் சிரமத்துடன் இவ்வாறே தினமும் மாலைகள் தொடுக்கிருய்! இதைப் போல் எத்தனை நாட்கள் எத்தனை மாலைகள் அவருக்கென்று வைத்து வாடிப்போய்விட்டன தெரியுமா? நேற்றுக்கூட நடுயாமத்தில்தான் அவர் இங்கே வந்தார். இன்றிரவு வருகிருரோ இல்லையோ? மாலையை வைத்துக்கொண்டு என்ன செய்வது? இனிமேல் எனக்கு மாலை வேண்டாம்! மணமற்ற இவ்வாழ்வில் மணமுள்ள இம்மாலைகள் என்ன பயனைத் தரும்?''

"பத்திரை, உனக்கு என்ன அப்படி நேர்ந்துவிட்டது? இவ்வளவு கவலை உனக்கு எதற்கு?''

"என் வாழ்க்கை முழுவதும் நான் கவலைப்பட வேண்டியவள்தான்! என் காதல்தான். தளிர்த்துப் பூத்துக் காய்த்துக் கனியாவதற்குள் வெம்பிவிட்டதே! இதைவிட வேறு என்ன நேரவேண்டும்? உனக்குத் தெரியாததுபோல் கேட்கிருயே.''

"எல்லாம் இயற்கைதான். வாழ்வில் இன்ப துன்பங்கள் கலந்துதான் இருக்கும். அவ்வப்போது அவற்றைப் பொறுத்தே தீரவேண்டும். அதற்கு மனம் நொந்து என்ன பயன்? நீ எதிர்பார்த்தபடியெல்லாம் அவர் இருப்பாரென்று எண்ணுவது தவறு!''

"வசந்தி, நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை. நான் அப்படி ஒன்றும் பிரமாதமாக எதிர்பார்க்கவில்லையே. என் வாழ்வு அவருடன் இன்பகரமாக இருந்தால் அதுவே போதும். அவருடைய மனம் ஒன்

றிய காதல் ஒன்றையே நான் எதிர்பார்க்கிறேன். இது காதலர் யாவரும் அவரவருடைய வாழ்வில் எதிர்பார்ப்பதுதானே. ஒன்று சொல்கிறேன் கேள். அவரை நாள்தோறும் நீயும் பார்த்துத்தான் வரு கிறாய்; முன்புபோல் களித்துப் பேசி விளையாடுகிறாரா? அவருடைய புன்னகையில் இயல்பான உவகைத் தன்மை பிரதிபலிக்கிறதா? கண்களில் ஏதோ கலக் கம் தென்படவில்லையா, இப்போது?''

"பத்திரை, உன் மனக்கருத்து எனக்கு நன் ருகத் தெரிகிறது. பல நாட்கள் இடைவிடாமல் உன்னுடனேயே இருந்துவிட்டமையால் இப்போது அவர் பிரிவு உனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது. எப்போதும் ஆடவர் பெண்டிருக்கு அடிமையல்லர். அவர்கள் விருப்பப்படி நடப்பதற்கு, அவர்களுக்குச் சுதந்தரம் உண்டு. பெண்டிரே அடங்கி நடக்கவேண் டும். நீ பொறுமையுடன் இருக்கவேண்டும். அதற்கு வருந்தி என்ன செய்வது? நீ இவ்வாறு நினைப்பதும் இயற்கையே! காதல்வாழ்க்கையின் தொடக்கத்தில் இளமையின் புதுமோகம் மிகுதியாகவும் வலி வுடையதாகவும் இருக்கும். ஆனால் அது எப்போதும் அவ்விதமே இருக்கும் என்று எதிர்பார்ப்பது தவறு. ஒவ்வொரு பூவாகப் பார்த்து, அதிலுள்ள தேனை உண்டு களித்து வேறு பூக்களைத் தேடிப் போகும் வண்டுகளின் தன்மையை உடையவர் ஆடவர்கள். வண்டின் இயற்கையை மாற்ற முடியாதது போலவே ஆடவர் இயல்பையும் மாற்ற முடியாது. சிறிது சிறிதாகக் காதலின் தீவிரம் குறைந்தே போகும். எனினும் அத்தொடர்பு அற்றுவிடாது. தொடக்கத்தில் தீவிரம் எவ்வளவு மிகுதியாக இருந் ததோ, அவ்வளவுக்கு அத்தீவிரம் குறைந்துவிடும். மணமாவதற்கு முன்பு இருக்கும் காதல்நிலை வேறு; மணமானபின் இருக்கும் காதல்நிலை வேறு. மண மின்றி இருக்கும் வெறும் காதல்வாழ்க்கை மிகவும்

இன்பமுடையதாகவும் வலிவுடையதாகவும் இருக்கும். ஆனால், அந்தக் காதல் வாழ்க்கை இடையீடின்றி நிலைத்திருக்கும் என்றோ இராதென்றோ சொல்வதற்கில்லை. நிலைத்திருக்குமானால் அது மிக உயர்ந்த காதல் தான்! 'மணவாழ்க்கையில்தான் இடையீடின்றிக் களங்கமற்ற நிலைத்த இன்பத்தைப் பெறலாம்' என்று அறிஞர் கூறுவார்கள். எனினும் அவ்வாழ்க்கை எளிதில் பிளவுறாது என்று சொல்லலாமே அன்றி, வெறும் காதல்வாழ்க்கையில் இருக்கும், தீவிர இன்பத்தை அதில் பெறமுடியாது; குறையாகத்தான் பெறமுடியும். ஆதலால், உன் காதலரைப்பற்றிப் பலவாறு எண்ணுவது சரியல்ல. அவர் களிப்புற்றிருக்கும்போதுதான் நீயும் களிப்புற முடியும். அவர் வழியேதான் நீ போகவேண்டும். அதற்கு மனம் நோவதில் பயன் இல்லை. அவர் போக்கில் பல குற்றங்கள் இருப்பினும் நீஅதை லக்ஷ்யம் செய்யாமல் என்றும்போல் பழகவேண்டும்."

இவ்வாறு வசந்தி பேசுவாள் என்று பத்திரை எதிர்பார்க்கவே இல்லை. வசந்தியின் வார்த்தைகளில் எவ்வளவு அர்த்தம் நிரம்பி இருந்தது என்பதும் ஸத்துகளைப்பற்றிய குறிப்புக்கள் பல அதில் இருந்தன என்பதும் பத்திரைக்குப் புலனாயின. அறிவுக் கூர்மையும் வாக்குத் திறமையும் உடையவள் வசந்தி என்பது பத்திரைக்குத் தெரிந்த விஷயமாதலால், அவளுடன் எதிர்வாதம் புரிய அவள் விரும்பவில்லை. வசந்தியின் வார்த்தைகளில் எப்போதும் மறை பொருள் பொதிந்துகிடக்கும் என்பது பத்திரை அறிந்த விஷயம். அதனால் வசந்தியின் வார்த்தைகளில் தொனித்த விஷயங்களைப்பற்றி ஆலோசித்த வாறு சற்றுப் பேசாதிருந்தாள் அவள்.

"வசந்தி! உன் வார்த்தைகள், பட்டி மண்டபத்தே ஏறிப் பிரசங்கிக்கத் தக்கவை. எந்த விஷயத்தையும் நீ வெளிப்படக் கூறுவதே இல்லை. அவர்

மனம் மாறியிருப்பதற்குக் காரணம் என்ன என்று சொல்கிறாய்?''

“பத்திரை, நீ பெரு முயற்சி செய்து மணந்து கொண்ட கணவர்மீது, நீயே சந்தேகம் கொள்வது நேர்மையல்ல. எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்வதுதான் நேர்மை. அவர் நிலையை மாற்றுவதென்பது உன்னால் முடியும் காரியமல்ல. வெம்மை தெரியாமல் சாம்பல் பூத்திருப்பதைக் கோல் கொண்டு கிளறினால், உள்ளிருக்கும் கனல்பொறி பறக்கும் என்பது உனக்குத் தெரியாததல்ல. உன் காதலர் விஷயமும் அப்படித்தான். கிளறாமல் இருந்தால், தானே தணிந்து அணையும்! இல்லையெனில் அவரவர் இயற்கைக் குணங்களை அவர்களே மாற்றிக் கொள்ள வேண்டும். அதுவும் மிகவும் கடினமான செய்கைதான்!''

“வசந்தி, உன் பேச்சு இன்னும் மிக மிக நன்றாக இருக்கிறது. காதலர் மனம் ஒன்றி வாழாத வாழ்வு ஜீவனற்றது. அது எப்படி இருப்பினும் சரி! அவ்வாழ்வில் அன்புக்கே இடமில்லை. விஷம் பரவிய வாழ்வுதான் அது. அவ்வாழ்வு எனக்குத் தேவையில்லை. வெறுங்காதல் உயர்வுடையதல்ல. அது கானல்நீர் போன்றது. மணந்தபின்பே காதலின் உயர்வு புலப்படும். அதுவே பேரின்பத்துக்கு ஒப்பானது. ‘கள்வனை மணந்த காதலி’ என்ற பழிப்பெயரையும் நான் கொண்டது, சுவையற்ற காதல்வாழ்க்கை நடத்துவதற்கல்ல; நிறை மனத்துடனும், நிறை சுகத்துடனும் வாழ்வதற்காகத்தான். மாறுபட்ட மனத்துடன் காதல்வாழ்வு வாழ்வதைக்காட்டிலும் மடிந்து போவதே மேல். நீ உண்மையை வெளிப்படக் கூறாவிடினும் நான் உணர்ந்துகொண்டேன்'' என்று பத்திரை கண்கள் சிவக்க இதழ்கள் துடிக்கக் கூறினாள்.

பத்திரைக்குக் கோபம் மிகுந்திருப்பதை வசந்தி உணர்ந்தாள். பத்திரைக்குக் கோபமோ, வெறுப்போ

வந்தால் அவை கடுமையாகவும் பயனுடையனவாக வும் இருக்கும் என்பது அவளுக்குத் தெரியுமாதலால் கோபம் தணியும் அளவும் பேசாதிருந்தாள். பிறகு இரண்டு பூமாலைகளையும் தட்டில் வைத்து எடுத்துக் கொண்டு அவள் அருகில் போனாள்.

“பத்திரை, எதிலும் உனக்கு நம்பிக்கை உண் டாவதில்லை. உன் அநுபவத்தில் நேர்முகமாகக் கண்டபின்பே நம்புவாய்; இந்திரவிழாவில் காமன் கோட்டத்திற்குச் சென்றபோது, அன்று நான் சொன் னது நினைவிருக்கின்றதா?”

“என்ன சொன்னாய்? நினைவில்லையே!”

“அழகும் சீலமும் ஒத்துக் கொள்ளா’ என் றேனே! நினைவிருக்கிறதா?”

“ஆமாம்; அவரைப்பற்றி விவாதம் செய்தபோது நீ அவ்விதம்...” என்று பத்திரை கூறுமளவில் ஸத் துகன் உள்ளே புகுந்தான். அவர்கள் வார்த்தைகளை அரைகுறையாகக் கேட்டவாறே அவன் உள்ளே நுழைந்தான். பத்திரையும் வசந்தியும் திடுக்கிட்டுப் போயினர். ஸத்துகனின் பார்வை வசந்திமீது சென் றது. குலை நடுங்கியவளாக அகலப்போய் நின்றாள் வசந்தி. பத்திரை தலைகுனிந்து நின்றாள். ‘நான் கூறிய வார்த்தைகளை ஸத்துகன் கேட்டவாறே வந் திருக்கிறான்’ என்று சிந்தித்துக் கலங்கினாள் வசந்தி. வசந்தி நினைத்ததுபோலவே ஸத்துகன், அவர்கள் வார்த்தைகளைக் கேட்டவனாய், மனம் பொருமினான். வெளிப்படையாகத் தெரிவிக்காமல் வசந்தியைக் கடு நோக்கால் கலங்கச் செய்தான். பத்திரையின் மனத்தை மாற்றுகிறாள் வசந்தி என்று முடிவு செய்து கொண்டான் ஸத்துகன். ‘தன்னைப்பற்றியே அவர்கள் பேசுகிறார்கள்’ என்பதை உணர்ந்தானேயன்றி உண்மை என்ன என்பதை அறியவில்லை.

உள்ளத்தை ஒளித்துக்கொண்டான். புன்ன கையை வருவித்துக்கொண்டான். பத்திரையின்

அருகில் சென்று; "ஏன் இவ்வாறு நிற்கிருய்?" என்று கேட்டவாறே அவளைத் தழுவிக்கொண்டே மஞ்சத்தில் அமர்ந்தான். அவன் புன்னகையுடன் தன்னைத் தழுவிப் பேசுகையில் பத்திரை பேசா திருக்கவில்லை. குதூகலத்துடன் அவனை உபசரித் தாள். ஸத்துகனின் உள்ளம்மட்டும் குமுறிக் கொண்டிருந்ததை அவள் உணரவில்லை. அவன் முகத்தின் புன்னகையிலும், வாயின் இன்மொழியி லும், சுகஸ்பரிச இன்பத்திலும் விரைவில் மயங்கி விட்டாள்; வருத்தத்தை மறந்தாள். ஸத்துகன் உள்ளத்திலோ, பத்திரையும் வசந்தியும் பேசிக் கொண்டிருந்ததைப்பற்றிய கற்பனைஅலைகள் ஒன் றன்மேல் ஒன்ருக எழுந்துகொண் டிருந்தன.

பத்திரை, தட்டில் இருந்த பூமாலைகளில் ஒன்றை எடுத்து ஸத்துகன் மார்பில் அணிவதற்குச் சென்ருள். அருகில் சென்றதும், அம்மாலையிலி ருந்த பூக்கள் பல பல வென்று உதிர்ந்து சிதறின. பத்திரையின் கையில் நூல்மட்டுமே இருந்தது. பத் திரை மெய்பதறிப் போனுள்; நிலை தளர்ந்தாள். ஸத்து கன்கூட வியப்புற்ருன். வசந்தி அகல நின்றவாறே திகைத்தாள். 'பூக்கள் ஏன் உதிர்ந்தன' என்பது இருவருக்கும் புரியவில்லை.

சிதறிய பூக்களைப் பத்திரை ஒன்ருகக் குவிக்க லானுள். "சிதறிய பூக்களை ஒன்ருகக் குவித்து என் செய்வது? வேறு மாலை இருக்கிறதே!" என்ருன் ஸத்துகன் புன்னகையுடன். அது உண்மைதானே! சிதறிய பூக்களை— சிதறிய உள்ளங்களை— மீண்டும் ஒன்ருகச் சேர்த்து, ஒரு மாலையாகத் தொடுப்பதென் ருல் அது எளிதில் முடிவதா? பத்திரை ஒன்றும் புரி யாதவளாகத் தட்டில் இருந்த மற்ருெரு மாலையை எடுத்து ஸத்துகன் தோளில் அணிந்தாள்.

# 28

## 'சந்திப்பு'

**ப**த்திரையின் மனம் முற்றும் மாறுதலடைந்தது. ஸத்துகனின் ஒழுங்கற்ற போக்கே அதற்குக் காரணம். பத்திரை, ஸத்துகன் இருவருக்கும் எதிர் பாராத அளவுக்கு மனம் வேறுபட்டுவிட்டது. பத்திரையின் போக்கு முற்றும் மாறிவிட்டதை ஸத்துகன் உணரவில்லை. 'வசந்தியின் முயற்சியால்தான் பத்திரை இப்போது மாறிவிட்டாள்' என்று அவன் உறுதிசெய்தான். முன்பே அவன் அதைக் குறித்துச் சந்தேகம் கொண்டது இப்போது உறுதியாயிற்று.

ஸத்துகனின் சந்தேகத்திற்கும் காரணம் இல்லாமல் இல்லை. அவ்வப்போது ஸத்துகனைப் பற்றி மறைமுகமாகவும் உள்ளுறையாகவும் கூறிய வார்த்தைகளைக் கேட்ட பத்திரைக்கு ஸத்துகன்மீது சந்தேகமும் வருத்தமும் உண்டாயின. அவை நாளடைவில் முற்றிவிட்டன. ஸத்துகனும் பத்திரையும் மனங்கலந்து பேசாத அளவுக்கு வந்துவிட்டமையால் இருவருக்கும் உள்ளத்தில் வருத்தம் நேரிட்டது. உள்ளத்தில் வஞ்சனையும், முகத்தில் புன்னகையும், வாயில் இன்சொல்லுமாகப் பத்திரையிடம் போலி அன்பு பாராட்டிய ஸத்துகனிடம், பத்திரையும் அதேபோல் நடந்துகொள்ளலானாள். ஸத்துகனிடமுள்ள வருத்தத்தால் இடையிடையே அவளுக்குச் சிறுபிணக்கும் உண்டாகும். அந்தச் சிறு பிணக்கை அகற்ற ஸத்துகன் முன்வருவான் என்றும், அதிலிருந்து அவனுடைய மனப்போக்கை மாற்றலாமென்றும் அவள் கருதுவாள். ஆனால் ஸத்துகன் அதைச் சற்றும் லக்ஷ்யமே செய்வதில்லை. புன்னகை என்பதே அவன் முகத்தில் தோன்றுவதில்லை.

பத்திரைக்கு வருத்தம் மிகவே, அடிக்கடி வசந்தியிடம் அவனைப்பற்றிப் பலவிதத்திலும் கிளறிக் கேட்கலானாள். வசந்தியும் பத்திரையின் வார்த்தைகளுக்கு நேர் மறுமொழி தராமல், சந்தேகத்தை அதிகமாக்கும் நோக்கத்துடன் பதில் கூறிவந்தாள். தன்னிடம் ஸத்துகனைப்பற்றிய ரகசியம் இருப்பதாக அவள் ஊகிக்கும்படி குறிப்பு வார்த்தைகளையும் பேசுவாள். அதனால் பத்திரை, வசந்தியை இடைவிடாமல் உண்மையைக் கூறும்படி வற்புறுத்தினாள். எளிதில் கூறுபவளாக இல்லை வசந்தி. இளந்தத்தனின் மாளிகையில் ஸத்துகன் தன்னை எச்சரிக்கை செய்திருந்தது அவளை உண்மையைக் கூறவிடாமல் பயமுறுத்தி வந்தது. பத்திரையுடன் ஒரு நாள் தான் பேசிக்கொண்டிருக்கையில் ஸத்துகன் உள்ளே புகுந்ததையும் தன்னைக் கடுநோக்கு நோக்கியதையும் அவள் நினைவில் வைத்திருந்தாளாதலால், பத்திரையிடம் எதுவும் கூறுவதற்கு அவளுக்குத் தைரியமில்லை. எனினும் ஸத்துகனைப்பற்றிய உண்மையைப் பத்திரையிடம் எவ்வாறேனும் கூறியே தீரவேண்டுமென்ற அவா அவளுக்கு இருந்தது. அந்த அவா, வசந்தியின், பழிவாங்கும் பேரெண்ணமேயன்றி வேறல்ல. அதை ஸத்துகன் நன்கு உணர்வான். ஆனால் பத்திரை அவ்விஷயத்தை உணர்ந்து கொள்வதற்கு வழி ஏது?

ஒரு நாள் மாலைப்பொழுது. அன்று ஸத்துகன் தொழில் சம்பந்தமாகக் காஞ்சிநகர் சென்றிருந்தான். போகும்போது பத்திரையிடம் சொல்லிவிட்டே போனான். பத்திரை, அவன் காஞ்சி போகும் காரணத்தைக் கேட்கவில்லை. 'அவனுடைய விருப்பத்திற்கு மாறாக எதுவும் பேசுவதில்லை' என்பது அவள் கொண்ட விரதமல்லவா? ஸத்துகன் புறப்பட்டுச் சென்ற அன்று மாலைப்பொழுதில் வசந்தியுடன் பத்திரை பேசிக்கொண்டிருந்தாள்; ஸத்துகனைப்

பற்றித்தான். பத்திரையின் வற்புறுத்தல் ஒரு புறம் இருந்தாலும், ஸத்துகன்மீது அவநம்பிக்கை ஏற்படுத்தவேண்டும் என்ற எண்ணம் தீவிரமாக இருந்தமையால் தன் உள்ளத்தில் பொதிந்து கிடந்த சில உண்மைகளைப் பத்திரையிடம் கூறத் துணிந்தாள் வசந்தி. 'வசந்தி என்ன சொல்லப்போகிறாளோ' என்ற ஆவலும் பயமும் ஒருங்கே பத்திரை உள்ளத்தில் அலைமோதின.

"பத்திரை, நீ அவர் விஷயத்தில் சந்தேகப்படுவதற்கெல்லாம் காரணம் இருக்கிறது. ஆனால் அந்த உண்மைகளை நான் கூறினால் உன் உள்ளம் பதை பதைக்கும். உனக்கு நம்பிக்கை உண்டாவதே கடினம்! அதனால்தான் நான் இத்தனை நாட்கள் ஒன்றுமே கூறவில்லை" என்று மெல்ல மொழிந்தாள் வசந்தி.

"வசந்தி, அப்படி என்ன உண்மையைச் சொல்லப்போகிறாய்! என்னிடம் இவ்வளவு நாட்கள் மறைத்துவைத்திருக்கும்படியாக என்ன நேர்ந்தது? இப்போதுதான் அதைச் சொல்லேன்" என்றாள் பத்திரை.

"அவர் உனக்குமுன்பே ஒரு காதற் கணிகையைக் காதலித்திருக்கிறார்!"

"என்ன? என்னை மணப்பதற்கு முன்பா?"

"இல்லை; இந்திர விழாவில் நீ அவரைக் கண்டு காதல்கொள்வதற்கு முன்பே!"

"உன் வார்த்தைகள் உண்மையா? அவர், கணிகையைக் காதலித்திருப்பது உண்மையா? உனக்கு எப்படித் தெரியும் இது!"

"இப்போது அவர் மாறி இருப்பதற்கும் அதுவே காரணம். அவளுக்கு இவரிடமாகப் பிறந்த ஒருமகன்கூட இருக்கிறான்."

"இவ்விஷயங்கள் உண்மையா?" என்றவளாய் மெய்ம்மயிர் சிலிர்க்க, கண்ணீர் ததும்ப வசந்தியின் தோள்கள்மீது தலையைக் கவிழ்த்துக்கொண்டாள், பத்திரை. சட்டென்று அவள் மனம் தைரியமடைந்தது. ஒருவிதக் கொதிப்பு ஏற்பட்டது, அவள் உள்ளத்தில். நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"பத்திரை, அந்தக் காதற் கணிகையின் பெயர் சயந்தி; நல்ல அழகும் நற்குணமும் உடையவள். அவளைப் பல வருஷங்களுக்கு முன்பே சத்துகர் காதலித்து அவளுடன் இருந்துவருகிறார். அவள்மீது இளந்தத்தன் மோகங்கொண்டு ஒரு நாள் தன் மாளிகைக்கே அவளைக் கொண்டுவந்து அடைத்து விட்டான்.

"அங்கே அடைக்கப் பெற்றபோது நான் அவளைக்கண்டேன். அவள் தன் வரலாறு முழுவதையும் என்னிடம் கூறினாள். ஸத்துகர் உன்னைக் காதலிக்கும் செய்தியை நான் முதலிலேயே சொல்லிவிட்டேன். அதற்கு அவள் முதலில் வருந்தினாலும் பிறகு சமாதானம் அடைந்தாள். அவளை விடுவிப்பதற்காகவே ஸத்துகர் அங்கே வந்து இளந்தத்தனை வெட்டிவீழ்த்தினார். சயந்தியை அவள மாளிகைக்குத் துணையுடன் அனுப்பிவிட்டார். அதன் பின்பு...நினைத்தாலும் என் குலை நடுங்குகிறது!" என்று நிறுத்தினாள் வசந்தி.

"ஏன்? விஷயம் என்ன? எல்லாவற்றையும் சொல்!"

"ஸத்துகர் உருவிய வாளுடன் என் அருகில் வந்தார். என் தோள்களை ஒரு குலுக்குக் குலுக்கினார்; என் உடல் பதறியது. நானும் சயந்தியும் பேசிக்கொண்டிருந்தோம் என்பதை உணர்ந்த அவர் அவள் விஷயமாக உன்னிடம் நான் ஏதேனும் கூறிவிடுவேனோ என்று பயந்திருக்கிறார். அவளைப் பற்றி உன்னிடம் நான் எதுவும் சொல்லாமல் இருக்கும்படி

வாள் கொண்டு அச்சுறுத்தினர். நான் அதற்கு உடன்பட்டேன். அந்தப் பயமே இவ்வளவு நாட்கள் உன்னிடம் உண்மையைக் கூறமுடியாமல் செய்தது."

"வசந்தி, இனி நான் என்ன செய்யப்போகி றேன்! என் வாழ்க்கை அவருடன் பிணைக்கப்பட்டிருக் கிறது. தெய்வமே அவர் உள்ளத்தைத் திருப்பவேண் டும். இல்லையேல், அவருக்கு அடிமைப்பட்டே என் வாழ்வை முடித்துக்கொள்வேன்."

"பத்திரை, இதற்கு வருந்திப் பயன் என்ன? இப் போதெல்லாம் அவர் சயந்தியிடமே போய்வரு கிறார். நான் உன்னிடம் சொல்லியிருப்பேனே என்ற பயம்தான் அவர் மன மாறுதலுக்குக் காரணம்?"

"வசந்தி, என் உள்ளத்தில் நம்பிக்கையில்லை. ஏதோ உறுத்திக்கொண் டிருக்கிறது. அந்தக் காதற் கணிகையைப் பார்த்தபின்புதான் என் மனக்கொதிப்பு அடங்கும்."

"நாம் இன்னரென்பது தெரியக்கூடாதே!"

"ஆமாம், அவருடைய உறவினள் என்று நான் கூறிக்கொள்கிறேன். நீ, அவள் மாளிகையைக் காட்டிவிட்டுப் பல்லக்கிலேயே இருந்துவிடு."

வசந்திக்கு இது பெருங் கலக்கத்தை உண்டாக்கி யது. உண்மை வெளிப்பட்டால் தனக்கு விபத்து நேருமே என்று அஞ்சினள் அவள். என்றாலும் பத் திரையின் வற்புறுத்தலால் அவளுடன், சிவிகையில் ஏறிப் புறப்பட்டாள். மற்றொரு சேடியையும் பத் திரை உடனழைத்துக்கொண்டாள். சிவிகை கணி கையர் வீதிப்புறம் சென்றது.

கணிகையர் வீதியை அடைந்ததும், அங்கே போகிறவர்களிடம் சயந்தியின் மாளிகை எது என் பதைக் கேட்டுக்கொண்டாள் வசந்தி. சயந்தியின் மாளிகையை நெருங்கியதும், வசந்தி மட்டும் சிவிகை

யில் இருக்க, பத்திரை உடன்வந்த சேடியுடன், அம் மாளிகைக்குள் புகுந்தாள். யாரோ உள்ளே வருவதைக் கண்டு திகைப்புற்ற நாகவல்லி அவர்கள் இருவரையும் யாரென்று விசாரித்தாள். தான் ஸத்துகருக்கு உறவினளென்றும், சயந்தியைக் கண்டு பேச வேண்டுமென்றும் பத்திரை கூறினாள். நாகவல்லி அதிசயமுற்றவளாய், சயந்தியிடம் அதைத் தெரிவித்து, அவள் அனுமதிப்படி அவர்கள் இருவரையும் அழைத்துச் சென்றாள். சயந்தியைக் கண்டதும் பத்திரை மார்பு விம்மிப் பெருமூச்சு விட்டாள். சயந்தியின் அழகைக்கண்டு திகைத்தாள். சயந்தி, பத்திரையை அமர்வித்து உபசரித்தாள். இளமை வனப்புடைய பத்திரையைக் கண்டதும் சயந்திக்கும் மனம் திகைத்தது. 'இவள் ஸத்துகருடைய உறவினளாக இருந்தும் நான் இத்தனை நாட்களாகப் பார்க்கவில்லையே' என்று எண்ணினாள். பத்திரையும் சயந்தியும் நீண்ட நேரம் ஒருவரை ஒருவர் பார்த்தவண்ணம் இருந்தனர். சயந்திக்குப் பத்திரைமீது சிறிது சந்தேகம் உண்டாயிற்று.

"அவர் காஞ்சிக்குப் போயிருக்கிறாரே!" என்றாள் சயந்தி, புன்னகையுடன்.

"ஆம்; போயிருக்கிறார். அவரைப் பார்ப்பதற்கு வரவில்லை. அவருக்கு அன்புடைய அடியாள் தாங்கள்தானே!"

"ஆம் ஏன்?"

"தங்களைப் பார்க்கவும், அவருக்கும் தங்களுக்கும் ஆர்வமூட்டும் குமாரனைப் பார்க்கவும் வந்தேன்!"

சுகதனைத்தானே!" என்று குதூகலத்துடன் எழுந்தாள் சயந்தி.

"சுகதனா? அவர் மைந்தனுக்குச் சுகதன் என்று தான் பெயரா?

"ஆம்!" என்று கூறிவிட்டுச் சுகதனை எடுத்து வந்து பத்திரையின் கையில் அளித்தாள் சயந்தி. பத்திரையின் கண்களில் நீர் சோர்ந்தது. ஸத்துகனின் வதனச் சாயை அப்படியே அம்மைந்தனின் முகத்தில் அமைந்திருப்பதைக் கண்டாள். சுகதனை இறுகத் தழுவி முத்தமிட்டாள். அவனிடம் அளவற்ற வாத்ஸல்யம் பத்திரைக்கு உண்டாகிவிட்டது! அவருடைய புதல்வன் என்பதால்தான் அது. பத்திரை இவ்வளவு அன்புடன் சுகதனைத் தழுவி மகிழ்வதைக் கண்டு சயந்தி அதிசயித்தாள். மெய்ம்மறந்த பத்திரை இடைவிடாமல் சுகதனுடன் கொஞ்சிக் குலாவினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் பத்திரையின் பரபரப்பு அடங்கியது. வசந்தியின் வார்த்தைகள் உண்மை என்பதை அவள் உணர்ந்தாள். ஓடியெறி மரம்போல் ஆயிற்று பத்திரையின் நிலை. சுகதனைச் சயந்தியின் கையில் அளித்தாள். அப்போது அவள் வாயிலிருந்து, "நீங்கள் பெரும் பாக்கியவதி!" என்ற வார்த்தைகள் தாமாக வெளிவந்தன. சந்தோஷத்தினால் உடல் பூரித்துப்போனாள் சயந்தி. மீண்டும் மீண்டும் பத்திரையின் பார்வை சுகதன்மீதே சென்றது. சட்டென்று பிரியமுடியாமல் எழுந்தாள்.

"மறுபடியும் ஒரு நாள் வருகிறேன்" என்று கூறிவிட்டுத் திரும்பினாள் பத்திரை. சயந்தி புன்னகையுடன் தலையசைத்தாள்.

எவ்வளவு வேகத்துடன் பத்திரை வந்தாளோ, அவ்வளவும் இப்போது குறைந்துவிட்டது. கால்கள் நிலைதடுமாறின; கண்கள் இருண்டன; மேல் மாடத்திலிருந்து இறங்குவதற்குள் அவள் உயிரே போய் விடும்போல் இருந்தது. சயந்திமீது அவளுக்குக் கோபமே உண்டாகவில்லை. 'என் விதிப்பயன்!' என்று எண்ணிக்கொண்டாள். அசைந்து நடந்து மெல்லச் சிவிகைக்குள் புகுந்து அமர்ந்தாள். சேடியும் உடனமர்ந்தாள். அமர்ந்ததுதான் தாமதம்; பத்திரை

பிரக்ஞையற்றுப் போனாள். வசந்தி உண்மையை உணர்ந்து திகில் கொண்டாள். 'பத்திரை, சயந்தி இவர்கள் சந்திப்பு எனக்கே பெருந்துன்பத்தை விளைவிக்கும்; இது நிச்சயம். அதற்குத் தகுந்தபடி கவனத்துடன் நடந்துகொள்ளவேண்டும்' என்று முடிவு செய்துகொண்டாள் வசந்தி. மாளிகை போகும் வரையில் பத்திரைக்கு நினைவு வரவே இல்லை.

## 29

### 'நிலா முற்றத்தில்'

"இல்லையே!"

"யாரும் உங்களுக்கு உறவினர் இந்நகரில் இல்லையா?"

"நிச்சயமாக ஒருவரும் இல்லை! ஏன் எதற்குக் கேட்கிறாய்?"

ஸத்துகன் 'இல்லை' என்று மறுமொழி அளித்ததும் சயந்தி வியப்புடன் ஆலோசனை செய்தாள். 'ஸத்துகருக்கு நான் உறவினள்' என்றல்லவா அவள் கூறினாள்! இல்லையென்று இவர் சொல்கிறாரே! யார் சொல்வது உண்மை? இவர் என்னிடம் எதையும் மறைப்பதில்லையே. ஒருவேளை வந்தவளே பொய் கூறி யிருந்தால்? — ஏன்? - அவள் ஏன் பொய் கூறவேண்டும்? தான் யாரென்பதை அவள் மறைத்துக் கூறியதில் என்ன பயன் இருக்கிறது?'- இவ்வாறு சயந்தி சிந்தித்தாள். அதற்குள்ளாக ஸத்துகன் இடைமறித்து, "என்ன சயந்தி, நீ கேட்டது எதற்காக?" என்றான் சந்தேகத்துடன்.

நேற்று நீங்கள் காஞ்சிக்குப் போயிருந்தபோது ஒரு யுவதி சேடியுடன் இங்கே வந்தாள். என்னையும் சுகதனையும் பார்க்கவேண்டுமென்று சொன்னாள். தங்

களுக்கு உறவினள் என்றும் சொன்னாள். சிறிது நேரம் சுகதனைக் கொஞ்சிக் குலாவிவிட்டுச் சென்றாள். ஆனால் அவள் ஏதோ பிரமைபிடித்தவள்போல் இருந்தாள். நல்ல அழகு, சுகதனிடம் எல்லையற்ற அன்பு பாராட்டினாள். வரும்போது அவளுக்கிருந்த வேகம், திரும்பிச் செல்லும்போது இல்லை. ஏதோ வருத்தத்தால் தாக்குண்டவள்போல் போனாள். எனக்கு மிகவும் இரக்கமாக இருந்தது. ஆனால் நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களே! அவள் வேறு யாராக இருக்க முடியும்?''

ஸத்துகனின் கண்கள் வெறித்துப் பார்த்தன. வாய்க்குள் ஏதோ முணுமுணுப்பது, சயந்திக்குக் கூடப் புலப்பட்டது. சயந்தி கூறிய வார்த்தைகளைக் கொண்டு, ஸத்துகன் உண்மையை அறிந்தான். கணநேரம் அவன் உடல் குலுங்கியது. "சயந்தி! அவள் யாரென்று உனக்குத் தெரியவில்லையா? அவளுடன் வந்த சேடியை நீ அறியாயா?'' என்றான் கண்களை அகல விழித்து.

சயந்திக்குப் புதிர்போலிருந்தன ஸத்துகனின் வார்த்தைகள்.

"என்ன சொல்லுகிறீர்கள்? எனக்கு அவர்களை எப்படித் தெரியும்? விளங்கச் சொல்லுங்கள்.''

"சேடியாக வந்தவள் வசந்தியல்லவா?'' அவளை நீ இளந்தத்தன் மாளிகையில் பார்த்திருக்கிறாயே!''

"சேடி வசந்தியா? அவள் அல்ல! சேடியுடன் வந்தவள் பத்திரை என்றா குறிப்பிடுகிறீர்கள்?'' என்று சொல்லி மருள நோக்கினாள்.

"ஆம்! ஐயமில்லை. அவள் பத்திரைதான்; வசந்தி வராததற்குக் காரணம் உண்டு; உன்னை அவளுக்குத் தெரியுமல்லவா?''

"ஆ! பத்திரை என்று தெரியாமல் போயிற்றே! பாவம்! ஏன் இந்த மனக்கலக்கம் அவளுக்கு? சுகதனிடத்து அன்பு பாராட்டியதன் காரணம் இப்போதுதான் எனக்குப் புரிகிறது! அவள் யாரென்று தெரிந்திருந்தால் அவள் மன வருத்தத்தை அப்போதே போக்கியிருப்பேனே! கணிகைமகளாகிய என்னிடம் அவளுக்குக் கோபம் இருப்பது இயல்பு தான். ஆனாலும் அப்படி நான் என்ன பாதகம் அவளுக்குச் செய்துவிட்டேன்?" என்று கூறியவளாக ஸத்துகனின் கரங்களை இறுகப்பற்றித் தாங்கள் எனக்காகவாவது பத்திரையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யத் தவறக்கூடாது! அவள் உள்ளம் வருந்தினால் என் உள்ளம் வெந்துபோகும் என்று மன்றாடினாள்.

"சயந்தி உனக்கும் அவளுக்கும் எத்தனையோ வேற்றுமை உண்டு. உன்னுடைய அருங் குணத்துக்கும் அவள் குணத்திற்கும் எத்துணை ஏற்றத் தாழ்வு இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். ஆனால் அவளுக்கு இந்த வஞ்சகம் எதற்கு?"

"இதில் வஞ்சகம் என்ன இருக்கிறது? பேதைமையால் செய்த செய்கைதானே! தங்கள் உயிர் காத்த மங்கையல்லவா அவள்! அவளிடம் கருணை காட்டுவது தங்கள் கடமை. நான் இன்னும் என்ன சொல்லுவேன்?"

"சயந்தி, உண்மை எனக்குத் தெரியும்; அவள் மீது குற்றமே இல்லை. கபடமற்றவள்தான் அவள்! ஆனால் அதற்குக் காரணம்..."

"காரணம் என்ன? வேறு யார்மீது குற்றம்?"

"உனக்கு என் வரலாற்றைக் கூறிய வசந்திதான் அதற்குக் காரணம். இவ்வளவுக்கும் அவளே காரணம். பத்திரையின் மனமாற்றத்திற்கும் அவளே காரணம்! அதைப்பற்றி இனி நீ நினைக்கவும் வேண்டாம்! நான் பார்த்துக்கொள்ளுகிறேன்."

ஸத்துகன் வார்த்தைகளைக் கேட்ட சயந்தி கலக்கமுற்றாள். ஸத்துகன் ஆழ்ந்து யோசித்தான்; ஏதோ முடிவுக்கு வந்தவன்போல் எழுந்திருந்தான்.

"சயந்தி, நான் அங்கே போய்வருகிறேன்! நிலா நன்றாகப் பரந்திருக்கிறது. விரைவில் திரும்பிவிடு கிறேன்" என்றான்.

"ஏன் இவ்வளவு அவசரம்! சரி, போய் வந்து விடுங்கள்; நிலவு மறைவதற்குள் வந்துவிடுவீர்களா?" என்று சந்தேகத்துடன் வினவினாள் சயந்தி.

"வந்துவிடுகிறேன்; கதவைத் தாழிட்டுக் கொள்" என்று கூறிக் கீழிறங்கிக் குதிரைமீது அமர்ந் தான் ஸத்துகன். மன அமைதியின்றியே சயந்தி கத வைத் தாழிட்டுக்கொண்டாள்.

நிலா முற்றத்தில் வசந்தியுடன் பேசிக்கொண்டு பத்திரை அமர்ந்திருந்தாள். ஸத்துகனைப்பற்றிய முழு விவரத்தையும் வசந்தியின் வார்த்தைகளால் உணர்ந்துகொண்டாள் பத்திரை. அல்லாமல், சயந்தி யைக் கண்டுவந்தது முதல் அவள் மனம் வெம்பி விட் டது. ஸத்துகனின் வஞ்சனையை முற்றும் உணர்ந்த பின், அவள் மனம் அமைதிப்படுமா? சயந்தியை நினைக்கும்போதெல்லாம் பத்திரையின் மனம் துடிக் கும். 'சயந்தியிடம் காதல் கொண்டபின் என்னிடம் இவருக்கு அவ்வளவு காதல் ஏன் உண்டாகியது? பின் அது சட்டென்று ஏன் தடைப்பட்டது? அப்போதே உண்மை தெரிந்திருக்குமானால்?— ஏன் வசந்திகூடத் தடை சொன்னாள்! சீ! என் மனம் பலவாறு சிதறு கிறது. இனி என்ன நேரிடினும் சரி, அவருக்கு வாழ்க் கைப்பட்ட நான் அவர் நன்மையையே நாடவேண் டும்; அவருக்கு என்மீது துளி அன்பு இருக்குமளவும், அன்பு வறண்டுபோன பின்புங்கூட, நான் அவருக்கு அடிமை. ஒரு கணிகையை அவர் காதலிப்பதற்காக நான் அவருடன் ஏன் மனஸ்தாபம் கொள்ளவேண்

டும். ஆனால் பழைய இன்ப நாட்களை நினைக்கும்போ தெல்லாம் என் மனம் கொதிக்கிறது. இந்தப் புண் ஆறாது. எவ்வளவு சமாதானம் நான் செய்துகொண் டாலும் என் உள்ளம் ஒருபோதும் முன் நிலையை அடையாது. போதிநாதா! உன் அருள் இதுதானா? இவ்வித நினைவுகளுடன் பத்திரை கண்ணயர்ந்திருப்பதை உணர்ந்த வசந்தியும் முற்றத் தில் கீழே படுத்து அண்ணாந்து நடுவானத்தில் நிர் மலமாக விளங்கும் முழுமதியின் வடிவத்தைக் கண்டு, ஏதேதோ கற்பனை செய்துகொண் டிருந் தாள். சந்திரனுக்கு அருகில் இருந்து ஒரு நக்ஷத்திரம் பூ உதிர்வதுபோல், விர் என்று கீழே விழுந்தது. அது எங்கே வீழ்கிறது என்பதைக் கூர்ந்து நோக்கிய வளாய் வசந்தி சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். அது மறைந்த இடம் எப்படித் தெரியும்? ஆலோசனையோடு மீண்டும் கீழே படுத்த அளவில், "வசந்தி!" என்ற குரல் கேட்டதும் திடுக்கிட்டு எழுந்தாள்; திரும்பிப் பார்த்தாள். ஸத்துகன் புன் முறுவலுடன் நிற்பது நிலவொளியில் நன்கு தெரிந் தது. அவளை அறியாமல் வசந்திக்கும் முகத்தில் புன் முறுவல் அரும்பியது. "இங்கே அமருங்கள்; பத் திரை தூங்குகிறாள்போல் இருக்கிறது!" என்றாள்.

ஸத்துகன் மெல்லப் பத்திரையின் அருகில் சென்று அமர்ந்தான். அவள் முகத்தை மெல்ல எடுத்துத் தன் முகத்தோடு அணைத்துக்கொள்ளு மளவில் பத்திரை விழித்துக்கொண்டாள்; திடுக் குற்று எழுந்து உட்கார்ந்தாள். ஸத்துகனின் கைகள் பத்திரையை விடவில்லை. பத்திரைக்கு யாவும் கனவு போல் இருந்தன; சற்று நேரம் ஆயிற்று நினைவு வர. 'உண்மையில் இவர் என்னை இவ்வாறு அருகில் வந்து தழுவி எத்தனை நாட்கள் இருக்கும்? இன்று எதிர் பாராமல் நிலவின் இனிமையில் இவ்வாறு வந்து தழுவுகிறாரே! இன்று இப் புதிய மாறுதலுக்குக்

காரணம் என்ன?' என்று முதலில் எண்ணமிட்டாள் பத்திரை. ஆனால் அந்த நிலவின் வசீகர இன்பத்தில் காதலன் தோளோடு தோள் சேர்ந்திருக்கும்போது அந்த எண்ணம் நிலைத்து நிற்குமா? பத்திரை ஸத்துகன் வசமானாள்; ஸத்துகனின் போக்கைக் கண்டு ஆச்சரியமும் வியப்பும் கொண்டாள். பழைய நிலைமையில் ஸத்துகன் பத்திரையுடன் பேசலானான். புண்பட்ட அவள் மனமும் சிறிதே ஆறுதலுற்றது. எவ்வாறேனும் பழைய நிலைமையில் என்னுடன் இவர் பழகினால் போதும் என்று எண்ணி உவந்தவளாக அவள் ஸத்துகனுடன் பேசினாள். வசந்தி மெல்ல அப்புறம் சென்று நின்றாள். ஸத்துகன் பத்திரையுடன் மாளிகையின் உட்புறம் சென்றான். பத்திரையும் ஸத்துகனும் குதூகலித்து மகிழ்வுடன் அமர்ந்திருந்த கட்டிலுக்கு நேராக, வெளிப்புறமிருந்த நிலாமுற்றத்தில் வசந்தி உறங்கினாள். நீண்ட நேரம் ஆகிவிட்டமையால் வசந்தி அயர்ந்து உறங்கினாள்.

நடு இரவு; பூர்ண சந்திரன் கம்பீரமாக வெண்கிரணங்களை வீசி விளங்கினான். எங்கும் நிசப்தம். அதுவரையில் ஸத்துகனுடன் மகிழ்ந்து பேசியிருந்த பத்திரை, அப்போதுதான் கண்ணயர்ந்தாள். ஸத்துகனும் அவளுடன் சிறிதே கண்ணுறங்கினான். அவன் உறக்கம் பொய்யுறக்கம் என்பதை அறிய யாரால் முடியும்? காற்று மெல்ல மெல்லத் தவழ்ந்துகொண்டிருந்தது. சாளரத்தின் வழியே நோக்கினான். நிலா முற்றத்தில் உறங்கிய வசந்தியின் மேலாடைகள் அங்கும் இங்கும் அசைந்துகொண்டிருந்தன. அவள் கூந்தல் சிறிதே புரள்வதுகூட அந்நிலவின் ஒளியிலே நன்கு புலப்பட்டது. 'ஒருவேளை வசந்தி விழித்திருக்கிறாளோ?' என்று ஐயம் கொண்டான். அடுத்த கணம் அவன் ஐயம் அகன்றது. சுவாசத்தின் போக்கால் அவள் மார்பு எழுந்து விம்முவதைக்கண்டு அவள் ஆழ்ந்த உறக்கத்தில்தான் இருக்கிறாள் என்பதை

அறிந்துகொண்டான். பத்திரை களைப்பு மிகுதியால் உறங்குவதையும் உணர்ந்தான். உடனே, பத்திரை அறியாமல் மெல்லப் படுக்கையிலிருந்து எழுந்தான். அவன் உள்ளம் விண் விண் என்று அடித்துக் கொண்டது. பத்திரை விழிக்காமல் இருப்பதற்காகப், பூனை போல் மெல்லக் கட்டிலிலிருந்து கீழிறங்கினான். இறங்கியபின் இரண்டடிகள் கட்டிலைவிட்டு வேறு புறமாக எடுத்துவைத்தான். அவ்வளவில் காலடிச் சப்தம் கேட்டுப் பத்திரை விழித்துக்கொண்டாள்; எனினும் சிறிதும் அசையவில்லை. ஸத்துகன் எங்கே போகிறான் என்பதை அறிய எண்ணிப் படுத்தவாறே இருந்தாள்.

ஸத்துகன் சட்டென்று கதவைத் திறந்து நிலா முற்றத்திற்குள் புகுந்தான். அதைக்கண்டதும் பத்திரை திடுக்குற்றாள். சாளரத்தின் உட்புறமாகக் கட்டிலில் இருந்தவண்ணம் தலையைத் தூக்கிப் பார்த்தாள். ஸத்துகன் அடிமேல் அடிவைத்து வசந்தியின் அருகே சென்றான். மேல் உத்தரீயம்கூட அவன்மீது இல்லை. அந்தக் காட்சியைக் காணக் காணப் பத்திரைக்கு உள்ளம் வெடித்துவிடும்போல் இருந்தது. மெய்ம்மயிர் சிலிர்க்க மீண்டும் நோக்கினாள். வசந்தியின் மேனியில் அவள் மேலாடைகள் காற்றால் அங்குமிங்கும் திளைப்பதைக் கண்ட பத்திரை வசந்தி விழித்திருக்கிறாள் என்றே எண்ணிவிட்டாள். வசந்தியின்மீது சந்தேகம் உண்டாயிற்று அவளுக்கு. மனம் பதறியது. ஸத்துகன் வசந்தியின் அருகில் சென்றதும், அவள் மார்புக்கு அருகில் மண்டியிட்டு அமர்ந்தான்; அவ்வளவில் பத்திரைக்கு நிலை கொள்ளவில்லை. மூச்சுத் திணறியது அவளுக்கு. வாய்திறந்து கூக்குரலிடலாமா என்றுகூட எண்ணிவிட்டாள். 'வசந்தி, நீ இவ்வளவு வஞ்சகி என்று நான் அறியாதுபோனேனே. இவர்மீது காதல் வெறிகொண்டு உலவுகிறாய் என்பதை இது வரையில் நான் அறியேன்! ஆ! இவரும், உன்மீது

காதல்வெறி கொண்டுள்ளாரே! ஆண்மைக்கு இது அழகா? என்னுடன் வாழ்க்கை நடத்த விரதம்பூண்ட இவர் இதுபோன்ற செயலில் தலையிடுவது நியாயமா? சயந்தி ஒருத்திதான் என்று எண்ணினேன்; வசந்தியும இவருக்குக் காமக்கிழத்தி என்பது இப்போதுதான் தெரிந்தது! வசந்தி! நீ பெரிய மாயக்காரி! வஞ்சகி! என்னை வஞ்சித்துவிட்டாய்! இந்தக் காட்சியை என் கண்கொண்டு காண்பேனே?'' என்று தனக்குள் வெதும்பிக் கூறிக்கொண்டாள். கண்கள்மட்டும் நிலாமுற்றத்தில் நடக்கும் காட்சியைக் கண்டனவே யன்றி அவள் உடல் உணர்ச்சியற்றுச் சோர்ந்தது.

அப்போது சட்டென்று வசந்தியின் மார்புக்கு நேராக மின்னல் ஒன்று ஒளிவிட்டு வீசியது. பத்திரை யின் கண்களை மினுக்கென்று நழுவச்செய்தது அவ் வொளி. ஸத்துகன் வசந்தியைத் தழுவுவதுபோன்று அவள் கண்களுக்குத் தெரிந்தது. ஸத்துகனின் ஒரு கை வசந்தியின் மார்பிலும் மற்றொரு கை நெற்றியிலும் இருந்தன. பத்திரை நிலைகொள்ளாமல் கட்டிலை விட்டு எழுந்தாள். அப்போது ஒரு கூக்குரல் கேட் டது. 'ஆ!...பத்திரை! இறந்தேன்' என்று வசந்தி வீறிட்டுக் கூவினாள். பத்திரை ஓடோடியும் சென் றாள். அதற்குள்ளாக, ஸத்துகனின் கைவாள் பிடி வரையில் வசந்தியின் மார்பில் அழுந்திவிட்டது. வசந்தியின் கண்கள் ஸத்துகனை மலரநோக்கின. "வசந்தி, இளந்தத்தன் மாளிகையில் இந்த வாள் கொண்டு சபதம்செய்ததை இன்று பூர்த்தி செய் தேன். விதியை விரைவில் அழைத்துக்கொண் டாய்!'' என்று அமைதியுடன் கூறினான் ஸத்துகன். வசந்தி அதைக் கேட்டாள். அவள் கண்கள் இருண் டன. வசந்தியின் மார்பிலிருந்து குருதி பீறிட்டெழுந் தது. அந்தக் காட்சியைக் கண்டு பத்திரை வசந் தியைத் தழுவிக்கொண்டாள். "என்னை, அவர்...பாலகர் சமாதி...'' என்ற வார்த்தைகளே

வசந்தியின் வாயிலிருந்து வெளிவந்தன. அதற்குள், அவள் உயிர் உடலை விட்டு அகன்றது. கவின் கொண்ட அவள் வெற்றுடலமே கீழே கிடந்தது.

பத்திரை மதிமயங்கி ஸத்துகனை நோக்கினாள். வசந்தியின் மார்பிலிருந்து அப்போதுதான் வாளை உருவி உறையில் செருகினான் ஸத்துகன். வேர்த்துப் பிரமைகொண்டு தோன்றும் பத்திரையின் முகத்தை நோக்கி, "பத்திரை, வருந்தாதே; நம் சுகவாழ்வுக்கு நாசத்தைத் தேடியவள் இவள்! அதனால் இன்று இவளை நாசம்செய்ய நேர்ந்தது. இவளாலேயே நம் வாழ்க்கை சில நாட்களாக மாறி வரலாயிற்று; விவரமாகச் சொல்கிறேன்: எழுந்திரு. இவளை இவள் விருப்பப்படியே பாலகன் சமாதிக்கு அருகில் புதைத்துவிடுவோம்...எழுந்திரு..." என்று கூறிவிட்டு வசந்தியின் உடலைத் தூக்கிக்கொண்டு சென்றான் ஸத்துகன். பத்திரையும் உடன் சென்றாள். பாலகன் சமாதிக்கு அருகில் வசந்தியைப் புதைத்தான் அவன். 'இனி எனக்குப் பகையே இல்லை!' என்று அவன் மனம் ஏமாப்புற்றது. வசந்தியின் பிரிவால் கண்ணீர் பெருக்கியவாறே நின்றாள் பத்திரை. அந்நிலையில் அவள் என்ன செய்வாள்? ஸத்துகன் பத்திரையைத் தழுவிக்கொண்டு "உள்ளே வா, யாவற்றையும் சொல்கிறேன். கலங்காதே!" என்று அழைத்துச் சென்றான். 'இந்தக் கொலைவெறிக்குக் காரணம் என்ன?' என்று அவள் மனம் ஆராய்ந்து கலங்கியது. ஸத்துகனுடன் உள்ளே போனாள்.

## 30

## தீராத வேதனை

வசந்தியின்மீது பல குற்றங்களைச் சார்த்திக் கூறி ஸத்துகன் புழி சுமத்தினான். அவள் சொன்ன யாவும் பொய்யே என்றும், நம்பத்தகாதனவற்றை யெல்லாம் நம்பவைக்கும் மாயக்காரி அவள் என்

றும், அதனால் பெருந் துன்பங்கள் தமக்கு ஏற்பட்டன என்றும் ஸத்துகன் எடுத்துக் கூறினான். ஸத்துகன் திறம்படப் பேசிய பேச்சில் ஒருவாறு நம்பிக்கை கொண்டாள் பத்திரை. என்றாலும் வசந்தியின் பரிதாபகரமான முகம், இறக்கும் தறுவாயில் மனம் நொந்து அவள் கூறிய வார்த்தைகள், அவள் தனக்கு நீண்ட காலமாகச் செய்து வந்த பேருதவிகள், பிறரை வசீகரிக்கும் அவளது இளம்புன்னகை, இவை ஒன்றன்பின் ஒன்றாகப் பத்திரையின்முன் தோன்றி, அவளை வருத்தின. வசந்தியின் பிரிவு பத்திரையைப் பெரிதும் வேதனைசெய்தது. ஸத்துகன் முயற்சியால், பத்திரைக்கு வசந்திமீது அவநம்பிக்கை உறுதியாயிற்று. இவள் அவனிடம் கொண்டிருந்த அன்புக்கு முன் அவை மறையாமல் இருக்குமா?

'வசந்தி கூறியதெல்லாம் பொய் என்றே தெரிகிறது. இவ்வளவு அன்புபாராட்டும் இவரை என்னிடம் அன்பில்லாதவர் என்று சொல்லி என் மனநிலையை மாற்றினாளே! இதில் வசந்திக்குத்தான் என்ன பயன்? வசந்தி பொய்கூறுபவள் என்றே முடிவு செய்துவிட்டாள். நான் கண்கொண்டு கண்டதும், நேர்முகமாகப் பேசி வந்ததுமான அந்தச் சயந்தியின் விஷயம் எப்படிப் பொய்யாக இருக்க முடியும்? சயந்தியே இவரைத் தன் காதலர் என்று ஒப்புக்கொண்டாளே! ஏன்?—அந்த மைந்தன் ஒருவனே சாட்சிக்குப் போதுமே! இந்த விஷயம் எனக்குத் தெரியாது என்று எண்ணி இவர் மறைக்கிறாரா? இவ்விஷயத்தை எனக்கு வசந்தி வெளிப்படுத்தியிருப்பாளோ, என்று ஐயம்கொண்டுதான் அவளைக் கொலை செய்தாரோ, என்னவோ? எனக்கு எதனாலோ இன்னும் மனம் அமைதி பெறவே இல்லை. இவர் என்னிடம் மிக நெருங்கி அன்பு பாராட்டுகிறார் என்றாலும் என் மனம் நம்பவில்லையே! அதன் காரணம் என்ன? சயந்திக்கும் இவருக்கும் தொடர்பு இல்லையென்று சொல்

வதற்கில்லை. இப்போதுகூடச் சில சமயங்களில் அங்கே போய்வருகிறார் என்றே எண்ணுகிறேன். இல்லையேல் இரவில்கூட வேறு வேலை என்ன இருக்கிறது? இவ்விஷயத்தை எனக்குத் தெரியாது என்று இவர் மறைத்து வைத்திருக்கும்போது, நான் எவ்வாறு இதைப்பற்றிக் குறிப்பாகவேனும் கேட்கமுடியும்? என்றைக்கிருந்தாலும் ஒரு நாள் இவ்வுண்மை வெளியாகாமல் இருக்கப்போவதில்லை என்பதுமட்டும் நிச்சயம். அதற்குள் நான் அவசரப்படுவது எதற்காக? இப்போது அதைப்பற்றிச் சிறிது குறிப்பாகக் கேட்டாலும் அதனால் மறுபடியும் மனஸ்தாபம் ஏற்படுவது தான் பயனாகும்! இப்போதிருக்கும் குதூகல வாழ்வும் நிலைகவிழ்ந்துபோகும்! நான் இதைப்பற்றி நினையாமல் இருப்பதே மேல்; இவ்விஷயத்தை அறியாதவள் போன்று நடிப்பதே நல்லது; உண்மை தானே வெளிப்படும்போது தெரிகிறது எல்லாம்.' பத்திரை இவ்வாறு முடிவுசெய்து தன் மனம்போனவாறே நடக்கலானாள்.

இப்போதெல்லாம், பத்திரைக்குப் புத்தி புகட்டுபவரும், ஆறுதல் கூறுபவரும் ஒருவரும் இல்லை. பத்திரைக்குப் பல சேடியர் இருந்தும், வசந்தி இல்லாத குறையால் ஒருவரும் இல்லாததுபோலவே தோன்றிற்று. ஆனால் மனம் எவ்வளவு சோர்ந்திருந்தாலும் பத்திரையைக் குதூகலம் கொள்ளச் செய்வதில் ஸத்துகன் பின்வாங்கவில்லை. ஒவ்வொரு சமயத்தில் ஸத்துகனின் போக்கைக்கண்டு பத்திரைக்கே ஆச்சரியம் உண்டாகும். ஆனால் ஸத்துகனின் மன ஆழத்தை அவள் அறிந்தாளா? எப்படி அறிய முடியும்? உலகில் அறிஞர் பலரும், பெண்களின் மன ஆழத்தையும் பாம்பின் போக்கையும், கடலின் ஆழத்தையும் ஒப்பிட்டு அவற்றை யாராலும் அறியமுடியாது என்று கூறுவது கண்கூடு. ஆனால், பத்திரை விஷயத்தில் அது நேர்மாறாக இருந்தது. ஸத்துகன் அவள் உள்ளப் போக்கை எளிதில் கண்டுகொண்டு அதற்குத் தக்க

வாறு நடக்கலானான். ஏன்? ஸத்துகனே பத்திரையைப் பற்றி அவ்வாறுதான் எண்ணியிருந்தான். தன்னுடைய திறமையைத் தானே மெச்சியிருந்தான்.

உண்மையில் ஸத்துகன் திறமையுள்ளவன்தான். பத்திரையின் மாறுபட்ட மனத்தை மிக எளிதில் மாற்றிவிட்டானல்லவா? சயந்தியிடம் இருப்பது போலவே பத்திரையிடமும் இருக்கத் தவறுவதில்லை. பத்திரையிடம் சில நாட்களாக வெறுப்புற்றிருந்த அவன் மனம் இப்போது திடீரென்று மாறி அவளிடம் அன்புபாராட்டுவதற்கு என்ன காரணம்? இவ்விஷயம் புரியாமலே இருந்தது. சயந்தியின் வார்த்தைகளுக்காக அவ்விதம் தன் மனப்போக்கை மாற்றிக்கொண்டானா, இயல்பாகவே அவன் மனம் மாறி விட்டாதா? அதற்குக் காரணம் என்ன என்று சொல்லமுடியவில்லை. பத்திரையின் மன இயல்பு ஸத்துகனுக்கு நன்கு விளங்கிவிட்டது. உண்மையில் அவள் இயல்பே தனியாக இருந்தது. கோபம் வந்தால் பொங்கிவிடுவாள். அதனால் ஏற்படும் பயன் பெரிதோ சிறிதோ அவளுக்குக் கவலை இருப்பதில்லை; அப்போது அவள் நிலையே மாறிவிடும். களிப்பு மிகுந்தாலோ அது எல்லையை மீறிவிடும்; கரை காணாத உவகைக் கடலில் மிதப்பாள். தனக்கு உவப்பைத் தந்தவர் யாராயினும் சரி; அவரை நம்பி ஆனந்தமயமாகிவிடுவாள். துக்கம் வந்தால் ஓரேஅடியாக நிலைகுலைந்து போவாள்! அவள் நிலைமை என்னவென்று சொல்வது? அவள் இயல்பை நன்கு அறிந்த ஸத்துகன் அவளைத் தன்னிடம் காதல் மீதூர்ந்தவளாகச் செய்ததில் என்ன வியப்பு இருக்கிறது? தாமும் பூவின் அகவிதழில், அதன் நறுமணத்திற்காக நாகம் இடைவிடாமல் உறைந்து மயங்கிப் படுத்திருக்கும் அல்லவா? அதுபோலவே ஸத்துகனும் அவளிடம் சுகித்திருந்தான். ஆனால், தன்னிடமுள்ள நறுமணத்

திற்கு மயங்கிப் படுத்திருக்கும் நாகத்திடம், கொடிய விஷமிருக்கிறது என்பதைத் தாழம்பூ அறிகிறதா? தன்னுடைய நறுமணத்தை நுகர்ந்து மதிமயங்கியிருக்கும் நாகம் களி மிகுதியால் விஷத்தைக் கக்கினுல், தன் இதழ்கள் யாவும் கரிந்து சாம்பராகி இருந்த இடம் தெரியாமல் போகுமே என்பது தாழம்பூவிற்கு எப்படித் தெரியும்? ஸத்துகன் நிலேயும் அப்படித்தான் இருந்தது. அவள் நறுமணம் மிகுந்த தாழம்பூவாகவும் அவன் கொடிய விஷத்தைக் கழுத்தில் கொண்ட நாகமாகவும் இருந்தனர். எந்தச் சமயத்தில் விஷம் வெளியாகிறதோ? யார் அறிவார்? ஏன், விஷம் வெளியாவதற்குமுன் தப்பமுடியாதா?

'வசந்தி எங்கே போயிருக்கிருள்?' என்று சேடி முதலியவர்கள் கேட்டபோது பத்திரை மறுமொழி கூறமுடியாமல் தவித்தாள். 'அவள் அவளுடைய ஊருக்குப் போய் விட்டாள்' என்று சொல்வதைத் தவிர வேறு வழி ஏது? 'எப்போது வருவாள்?' என்று உடனே கேள்வி பிறக்கும். பத்திரைக்குத் துக்கம் நெஞ்சை அடைக்கும்; 'தெரியாது, போங்கள்' என்று எரிந்து விழுந்துவிட்டு வேறு வேலேயைக் கவனிக்கப் போய்விடுவாள். நாளடைவில் அந்தக் கேள்விகளும் தாமாகவே மறைந்தன.

நாட்கள் கடந்தன; மாசங்கள் மறைந்தன. வருஷங்களின் எண்ணிக்கைக்கும் வந்துவிட்டது. எத்தனேயோ இரவு பகல்கள், கண்ணிமை, கைந்நொடியென, அவள் வாழ்க்கையில் மறைந்து போயின. ஆனுல் அவள் வாழ்க்கையில் சிறிதும் மாறுதல் இல்லே; ஏன்? மாறுதல் இல்லாமல் இல்லே; மாறுதல் தெரியாவண்ணம் பத்திரையையும் சயந்தியையும் சமாளித்து வந்தான் ஸத்துகன். வற்ருத பெரிய ஆறு, இரண்டு கிளேநதிகளுக்குத் தன் பிரவாகத்தைப் பிரித்துக் கொடுப்பதுபோல் இருந்தது ஸத்துகன் செயல். பத்திரை, சயந்தி என்ற இரு கிளே

நதிகளுக்கும் ஓர் உயிர்போன்று விளங்கினான் அவன். சயந்தி வற்றாத ஒரு ஜீவ நதிபோன்று இருந்தாள். ஸத்துகனின் பிரேமைப் பிரவாகம் நிறைந்து ததும்பி யிருக்கும் சயந்திக்குக் காவிரியையும் கங்கையையுமே ஒப்பிடலாம். வற்றிச் சுரக்கும் காட்டாற்றுக்கு ஒப் பாகப் பத்திரை விளங்கினாள். பிரவாகம், அதில் எவ்வளவு கரைபுரண்டாலும், மிக விரை வில் வற்றிவிடும். வற்றுவதும் பெருக்கெடுப்பதும் அதன் இயல்பு. ஸத்துகனின் பிரேமைப் பிரவாகம், ஓடினால்தான், பத்திரை ஒரு ஜீவநதியாகத் தோன்று வாள்; குறைந்த போதோ வறண்ட பாலைவன நதி தான்! பத்திரை, சயந்தி இருவரிடமும் ஸத்துகனின் பிரேமைப் பிரவாகம் கூடுதல் குறைவு இன்றி ஒப் பாகப் பிரவகித்தது; எவ்வளவு காலம்? சில நாட்களேதாம். பிரவாகத்தின் மிகுதி எங்கே, குறைவு எங்கே என்பது போகப் போகத் தெரியலாயிற்று.

ஒரு நாள் நள் என்று ஒலி அவிந்து இருந்தது நடு இரவு. உலகமே நினைவற்று உறக்கத்தில் மயங்கி இருந் தது. அந்தகாரம் ஆனந்தமாக வியாபித்திருந்தது. மோனநிலை தவமும் அந்தச் சமயத்திலும் விழித்திருப் பவர்கள் உண்டு. முற்றத் துறந்த முனிவர்கள், ஆண்ட வனைக் கண்டு களிகூரவும், ஆனந்திக்கவும் அந்தச் சம யத்தில்தான் விழித்திருப்பர்; நித்திய கல்யாணராகிய புது மணவாளப் பிள்ளைகள் காதலியருடன் களித்தி ருக்க விழித்திருக்கும்காலமும் அதுதான். அதே சமயத் தில் ஸத்துகனும் பத்திரையும் விழித்திருந்தனர். பத் திரை களிமயக்கத்தால் மதிமயங்கியிருந்தாள். ஸத்துக னும் அவ்வாறே இருக்கவேண்டியவன் சிறிது தன் நினைவுடன் இருந்தான். சுழித்து ஓடும் ஆ[illegible]ச்சுழலில் அகப்பட்டுச் சுழன்று நிலைகலங்கும் துரும்பைப்போல் அவன் மனம் ஒரு பயத்தின் சுழலில் அகப்பட்டுத் தவித்தது. அஞ்சா நெஞ்சனாகிய அவனே அஞ்சி நிலை

கலங்கினுன் என்ருல் கேட்கவும் வேண்டுமா? அதற்குக் காரணம் என்ன என்பதை நிச்சயமாக அவனுல் அறிய முடியவில்லை. நான்கு புறமும் வாளுடன் ஓர் உருவம் தோன்றி அச்சுறுத்துவதுபோல் அவனுக்குத் தோன்றியது. அவனுக்குத் தோன்றிய அது ஆண் உருவம் அல்ல. தலைவிரி கோலமாய், வாய் பிளந்து, கைவிரித்து அலங்கோலத் தோற்றத்துடன் விழுங்கவரும் பெண்பேயின் வடிவந்தான்! ஸத்துகன் அத்தோற்றத்தைக் கண்டு அஞ்சியது வியப்பேயல்ல! அவன் மனம் பெரிதும் ஊசலாடியது. கண்ணபிரானின் மாயவடிவம் கண்டு கதிகலங்கி மதிமயங்கிய கஞ்சனின் நிலையை ஒத்திருந்தது ஸத்துகனின் நிலை! 'வசந்தியைக் கொன்றதுநிமித்தமாகத் தன் மனத்தே தோன்றும் பிரமைதான் இது!' என்று ஒருவாறு ஆறுதல் செய்துகொண்டாலும் அவன் மனம் கேட்கவில்லை. அதனுலேயே ஸத்துகன், பத்திரையின் மனம் சென்றவாறே, குதூகலம் கொள்ளாதவனுய், நிலைகலங்கி இருந்தான். ஆனுல் இடையிடையே பத்திரைக்குத் தகுந்தவாறு நடிக்கவேண்டி இருந்தது. ஸத்துகனின் மனக்கலக்கம் பத்திரைக்கு எவ்வாறு தெரியும்?

இந்நிலையில் பத்திரை என்செய்வாள்? ஸத்துகனும் தன் மனக்கலக்கத்தை அவள் உணராதவாறு புன்னகையாலும் இன்சொல்லாலும் அவளைக் களிப்பித்தான். ஆனுல் அந்தப் பெண் வடிவம் அவனை அச்சுறுத்தித் திக்பிரமை கொள்ளச் செய்தது. அவன் மனம் அமைதியிழந்தது. பத்திரை சிறிதும் அதை உணரமுடியவில்லை; எவ்வாறு முடியும்? எல்லைமீறிய களிமயக்கத்தில் ஆழ்ந்த அவள், ஸத்துகனின் குதூகலமற்ற தன்மையைக் கண்டு அவனைப் பலவாறு ஊக்கினுள். அரைத் தூக்கத்தில் மயங்கியிருப்பவன்போல் சோர்ந்து கூறும் வார்த்தைகளால் பத்திரைக்கு மறுமொழி தந்தான் சத்துகன். உணர்ச்சியற்ற அவன்

வார்த்தைகளைக் கேட்டு பத்திரை, அவனை வேறு வழியில் ஊக்கினாள்; ஒன்றும் பயனில்லை!

இள நகையுடன் இன்மொழியுடன் களி கொண்ட மயக்கத்தால், ஸத்துகனின் உள்ளத்தைத் தட்டி எழுப்பினாள் பத்திரை. பத்திரையின் இன்ப நிலை முன்னிலும் மிகுந்தது. அவளுக்கு ஸத்துகன் போக்கால சிறிதும் குதூகலம் குறையவில்லை. வேட்கை மீதூர்ந்த நிலையில் இருந்த அவள் மதி மயங்கினாள். உணர்ச்சி வசமான வார்த்தைகள், பிரேமை ததும்பும் வார்த்தைகள், அவள் வாயினின்றும் காதல் நறுமணத்துடன் வெளிவந்தன. ஸத்துகன் உள்ளம் சிறிதும் உணர்ச்சி பெறவில்லை என்று சொல்வதற்கில்லை. அவள தன்மையால் அவன் மயங்கியிருந்தாலும், அவன் மனத்தில் தோன்றிய அச்சம் அவனை அழுத்தியது. அதனால் ஸத்துகன் அவளுடன் சமமாகக் குதூகலத்துடன் இருக்க இயலவில்லை. பத்திரையின் வெறி மிகுதியாயிற்று அவள் வார்த்தைகள் மயங்கின; மனம் பொருமியது; 'நான் இவ்வளவு முயலவும் இவர் என்னை லக்ஷ்யம் செய்யவில்லையே! நான் அவ்வளவு இழிந்தவளா? இருக்கட்டும். இவரை முடி வணங்கச் செய்து என் வசமாக்குகிறேன்' என்று. கண்சிவந்தாள் பத்திரை. இதழ்கள் சிவந்து துடித்தன. நுதல் வேர்த்தது. பெருமூச்செறிந்தாள். அவள் அங்கங்கள் துடித்தன. ஸத்துகன் மீது வைத்த கரங்கள் சரேலென்று பாம்பு நழுவுவது போல் நழுவின. அகலச் சென்று மஞ்சத்தில் சாய்ந்து கொண்டாள்.

அப்போதுதான் ஸத்துகன் உறக்கத்திலிருந்து விழித்தவன்போல் ஆனான். பத்திரையின் ஊடல் நாடகத்தைக் கண்டு அஞ்சினான். இளமென்னகையுடன் அவள் அருகில் சென்று இன்சொல் மிழற்றினான். தளிர்க் கரத்தால் தைவந்தான். அவள் மேனி வெம்மையைக் கண்டு துணுக்குற்றான். அவள் ஊடல்

மிகுதியை உணர்ந்தான். அவனால் இயன்ற அளவு ஆறுதல் கூறினான். ஒன்றும் பயன் அளிக்கவில்லை.

சிறிது நேரம் மௌனம் நிலவியது. அதன் பயனாகப், பத்திரையின் வாயிலிருந்து வார்த்தைகள் வெளி வந்தன. தணியாத ஊடல் சிறிது தணியத் தலைப்பட்டது. "நீர் கள்வரல்லவா? உம்முடைய மாயக் களவையெல்லாம் நான் அறிவேன்!" என்றாள் குறு முறுவலுடன். ஊடல் குறிப்புடன் எள்ளிக் கூறிய இன்ப வார்த்தைகள் அவை! ஆனால், ஸத்துகன் உள்ளத்தில் கூரிய விஷமுட்கள்போல் அவை தைத்தன. பத்திரையின் சொல்லம்புகள், ஸத்துகனின் இருதயத்தைத் துளையிட்டு ஊடுருவிச் சென்றன. அவன் உள்ளம் கொந்தளித்தது. துணுக்குற்று நிமிர்ந்து உட்கார்ந்தான். பத்திரையின் கைகளை அவன் கைகள் இறுகப் பிடித்தன. "ஆ! நான் கள்வனா?......" என்றதும் சிறிது நிதானித்தான். அவன் கோபத்தைப் பத்திரை உணர்ந்தாள். சிறிது கலங்கினாள். கோபத்தை விழுங்கிப் புன்னகை பூத்தான். "நான் கள்வன்தான்! கள்வனின் காதலியல்லவா நீ!" என்று நகை செய்து கூறினான். அந்த வெடி நகையில் எவ்வளவு பகைமை வேரூன்றி இருந்தது என்பதைப் பத்திரை எவ்வாறு அறிவாள்? நகையைக் காம விருந்தாகக் கருதி மயங்கினாள். உடனே பத்திரை வெட்கிப்போனாள். ஸத்துகன் எள்ளி நகையாடுவதாக எண்ணி ஊடல் தணிந்தாள். ஸத்துகனின் உள்ளம் கொதித்தது. பத்திரை கூறிய வார்த்தைகள் அவனைக் கணந்தோறும் சுட்டெரித்தன. தீயினால் சுட்ட புண் ஆறிவிடும்! நாவினாற் சுட்ட வடு ஆறுமா? அது பெரும் பகைநெருப்பை மூட்டி விட்டது! அப்போது அவன் அவளுடன் கலந்து மகிழ்ந்திருந்தான் எனினும் அவன் உள்ளத்தில், பத்திரையின் வார்த்தைகளால் ஏற்பட்ட 'தீராத வேதனை' யின் வேகம் அதிகரித்துக்கொண் டிருந்தது. பத்

திரையின் ஊடல் தணிந்தாலும் அவள் வார்த்தைக ளாகிய விஷமுட்கள் தைத்த வடு ஸத்துகனின் இரு தயத்தை விட்டு அகலவில்லை!

## 31

## 'போகிறேன்'

'நான் கள்வன்! என் களவை இவள் அறிவாள்! முற்றும் உண்மை! நான் கள்வன் என்று அறிந்தும் ஏன் என்னை இவள் மணந்தாள்? பழிகாரி! இவள் பெண்ணென்று இரங்கினேனே! பேயென்பது தெரிய வில்லையே! என் முன்னிலையில், என்னை நோக்கிக் கள்வன் என்று கூற இவளுக்குத் துணிவு எப்படி வந் தது? சீ! ஒரு பெண்ணின் முன் இகழப்பட்ட நான் ஆண்மை உடையவனு? கணவனைக் கள்வன் என்று இகழ்ந்துகூறுவது விளையாட்டா? காமத்தின் மதி மயக்கமா? ஊடலின் விபரீதமா? இவளை எனக் கென்று படைத்த கடவுள் எனக்குத் தக்கவாறு நடந்துகொள்ளும்படியும் ஏன் படைக்கவில்லை? இவள் குணம் எங்கே? சயந்தியின் குணம் எங்கே? சயந்தியின் இருதயத்தைப் பிளந்தாலும் ஒரு சிறு மாசுகூடக் காணக் கிடைக்காதே! இவள் உள்ளத் தில் பதுங்கியிருக்கும் கள்ளத்தை எப்படி அறியமுடி யும்? அவ்விதம் இல்லையேல், என்னைக் கள்வனென்று தன் வாய்கொண்டு எவ்விதம் கூறுவாள்? இவள் வார்த்தைகள் என்னைக் கணந்தோறும் கொல்லாமல் கொல்லுகின்றனவே. அந்த வார்த்தைகளுக்குப் பல வாறு அர்த்தம் கொள்கிறதே என்மனம். உண்மை யில் பத்திரை எனக்கு இனியவளா? என் காதலியா? என் உள்ளத்தில் கலந்திருப்பவளா? ஆயின் என் மனத்திற்கு வெறுப்பையும் சினத்தையும் அளிக்கும் அவ்வார்த்தைகளை ஏன் கூறினுள்? என் வாழ்நாள் முழுவதும் அவ்வார்த்தைகள் என்னை உருத்திக்கொண்

டிருக்குமே! அதற்கு நான் பரிகாரம் செய்தே தீரு வேன். அவ்வார்த்தைகள் என் நினைவைவிட்டு விரை வில் அகலும்படி வழி தேடிவிட்டேன். ஆம்! என் அறிவே எனக்குத் துணையாக வழி காட்டி விட்டது! ஆண்டகையாகப் பிறந்த நான், இதற்கு மதிமயங்குவது வீணே! மனமே பொறு! உன் விருப் பம்போல் செய்கிறேன்! அறிவே உன் உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? எனக் கும் பத்திரைக்கும இனிய காரியத்தை எனக்கு நினை வூட்டிய உன்னை வாழ்த்துகிறேன்! என் வாழ்க்கையில் நீயே உற்ற துணை. வாழ்க நீ!''

ஸத்துகனின் யோசனை இவ்விதம் குதூகலத் துடன் கொந்தளித்து எழுந்தது. அவன் மனம் ஆர் வத்தால் அலைமேல் அலையாகப் பல காட்சிகளைக் கற்ப னையில் கண்டது. உள்ளம் பூரிக்கவே அவன் உடலும் பூரித்தது. தோள்கள் நிமிர்ந்தன. ஒரு பெருமூச்சு விட் டான். அத்துடன் அவன் உள்ளத்தில் சிறிதே புகைந் திருந்த அச்சம் பனிச்சென்று மறைந்தது. அப் போதுதான் ஸத்துகனுக்கு என்றும் இல்லாத உவப்பு உண்டாயிற்று.

சட்டென்று மாளிகையை விட்டுப் புறப் பட்டான். அவன் மனம் எங்கோ உலவியது. வெளி யில் வந்து குதிரைமீது அமர்ந்தான். அவன் மனக் குறிப்பை அறிந்த குதிரை வாயு கதியாகச் சென்றது. சற்று நேரத்திற்கெல்லாம் பத்திரையின் மாளிகை வாயில் முன் அது நின்றது. ஸத்துகன் உள்ளே புகுந் தான்.

பத்திரை எதிர்பார்த்தபடி ஸத்துகன் அச்சமயம் அங்கே வந்ததும் அவள் மனம் குளிர்ந்தாள். எப் போதும்போல் இருவரும் அளவளாவினர். உள்ளத் தில் ஒளிவின்றிக் குதூகலமாகப் பேசினுள் பத்திரை. அதற்குத் தக்கவாறு மறுமொழி அளித்தாலும், ஸத்து

கன் உள்ளத்தில், ஏதோ காரியத்தைப்பற்றிய சிந்தனை அலைபாய்ந்துகொண் டிருந்தது. அவ்வலையின் கொந்தளிப்பை வெளிக்காட்டாமல் பத்திரைக்குத் தக்கவாறு நடந்துகொண்டான். அவன் முகத்தில் ஒரு கிளர்ச்சியின் அறிகுறி தென்படுவதைமட்டும் பத்திரை உணர்ந்தாள். உணர்ந்த அளவில் அதைப் பற்றிக் கேட்கவும் துணிந்தாள்.

"இன்று ஏதாவது விசேஷம் உண்டா?"

"ஏன்? எப்படிக் கேட்கிறாய்?" என்று சிறிது நகை செய்தான் ஸத்துகன்.

"உங்கள் முகத்தில் ஏதோ பரபரப்புத் தென்படுகிறதே! கண்களில் ஏதோ புதிய ஒளி சுழன்று கொண்டிருக்கிறதே! அதனால்தான் கேட்டேன்."

"பத்திரை, உன்னிடம் ஒன்றையும் மறைக்க முடியவில்லையே!"

அது இருக்கட்டும்; என்னவென்று சொல்லுங்கள்?"

"நீ அடிக்கடி என்னை வற்புறுத்தி வந்தாயே! நினைவிருக்கிறதா? இன்று அதை நிறைவேற்றலாம் என்று உறுதி செய்திருக்கிறேன்!"

"என்ன வற்புறுத்தி வந்தேன்? நினைவில்லையே!"

"மணிபல்லவம் சென்று பாதபீடிகையை வணங்கவேண்டும் என்றாயல்லவா? அங்குள்ள முனிவரிடம் பௌத்தமத உண்மையைக் கேட்கவேண்டும் என்றும் சொன்னாயே! நினைவில்லையா?"

நன்றாக நினைவிருக்கிறது! பல முறை சொல்லிப் பார்த்தும், நீங்கள் லட்சியம் செய்யாததால் பேசாமல் இருக்கிறேன்! உங்களுடைய மதக் கொள்கைகளில் நம்பிக்கை இல்லாததால்தான் அவ்விதம் சொல்லி வந்தேன்!"

"என்னுடைய கொள்கைகளில் உனக்கு எப்போதுமே நம்பிக்கை இருந்ததில்லை; அதற்கு நான் என்ன செய்வேன்? அதற்குத்தான் இன்று மணிபல்லவம் சென்று உன் சந்தேகத்தை நிவர்த்தி செய்யலாம் என்று எண்ணியிருக்கிறேன்! உன் விருப்பம் என்ன?"

"நீங்கள் அழைத்துப்போனால் நான் வருவதற்குத் தடையில்லை! பாதபீடிகையைப் பார்க்கவேண்டுமென்று நீண்ட நாட்களாகவே எண்ணிவந்தேன். இன்றுதான் உங்களுக்கு நினைவு வந்தது! அது இருக்கட்டும்; அங்கே முனிவர்கள் பலர் இருக்கிறார்களா?"

"இருக்கிறார்கள்; ஆனால் பலர் பேசவே மாட்டார்கள்; சிலர் உண்ணா நோன்பிகள். இப்போது சாவக நாட்டிலிருந்து ஒரு முனிவர் வந்திருக்கிறாராம்; அவர் உலகமெல்லாம் யாத்திரை போய் வந்திருக்கிறாராம்; மத ஆராய்ச்சியில் வல்லவராம், அதனால்தான் இன்று உன்னை அழைத்துப் போக நிச்சயித்தேன்!"

"நிச்சயமாகவா? எப்போது புறப்படப் போகிறீர்கள்?"

"மாலையில் புறப்பட்டால் போதும். விடியற்காலையில் போய்விடலாம்."

"கடலில் பிரயாணம் செய்வது எவ்வளவு மனோகரமாயிருக்கும்! அந்தக் கடற் காட்சிகளைக் கண்டு அடைவதே இன்பம்! நான் இப்போது வேண்டுமானாலும் வருகிறேன். புத்ததேவனின் பாத பீடிகையைத் தரிசித்தால் பூர்வ வினை யாவும் மாயும்! புத்த ஸாந்நித்தியம் நிறைந்த இடம் மணிபல்லவம்! அங்கேதான் மணிமேகலா தெய்வம் வாழ்கிறது......"

"பத்திரை! எல்லாம் எனக்குத் தெரியும்; மேற்கொண்டு செய்யவேண்டியதை யோசிக்கவேண்டும். நீ ஆயத்தமாக இரு. நான் என் மாளிகைவரையில் சென்றுவிட்டு வருகிறேன்."

"உங்கள் வருகையை எதிர்பார்த்திருப்பேன். விரைவில் வந்துவிடுவீர்களா?"

ஸத்துகன் தலையசைத்துவிட்டுப் புறப்பட்டான். ஸத்துகன் வடிவம் மறைந்ததும் பத்திரை குதூகலத்துடன் பாடிக்கொண்டே, மணிபல்லவம் போவதற்குத் தக்கவாறு அலங்காரம் செய்துகொண்டாள். கடல் யாத்திரையிலும், மணிபல்லவம் சென்று பாதபீடிகையைத் தரிசித்து, அங்குள்ள முனிவரிடம் உபதேசம் பெறுவதிலும் அவளுக்கு ஆர்வம் மிகுந்திருந்தது.

ஸத்துகன் குதிரை எப்போதும்போல் சயந்தியின் மாளிகை வாயிலில் நின்றது. சட்டென்று இறங்கி உள் புகுந்தான் ஸத்துகன். அவனை வழக்கப்படி உபசரித்தாள் சயந்தி. ஸத்துகன், அவள் அமைதியோடு செய்யும் உபசரணைகளைக் கவனிக்கவில்லை. அவள் முகத்தையே உற்றுநோக்கியிருந்தான். பரபரப்புடன் கொந்தளித்தது அவன் மனம். சட்டென்று எழுந்து, மைந்தன் சுகதனைத் தழுவி முத்தம் அளித்தான். அவன் செய்கையைக் கண்டு சயந்தியே பிரமித்தாள். மீண்டும் அவளிடம் அணுகி, கனிவுடன் அவள் முகத்தை நோக்கினான். அவள் கரங்களைத் தொட்டு, "சயந்தி, இன்று மணிபல்லவத் தீவிற்குப் போகிறேன் பாதபீடிகை தரிசனத்திற்காக!" என்றான் தழுதழுத்த குரலில். சயந்தி திடுக்குற்றாள். காரணம் இல்லாமல் அவள் உடல் வேர்த்தது. கண் கலங்கினாள்; "ஏன்? திடீரென்று இன்று போக வேண்டுமா? கடல் பிரயாணமாயிற்றே; அதற்கு வேண்டிய துணை ஆட்களுடன் அல்லவா போக வேண்டும்? நான்கூட வரலாமென்று விருப்பமாய் இருக்கிறது."

"சயந்தி, இம்முறை நான்மட்டும் போகவில்லை; பத்திரையும் உடன் வருகிறாள்! அவள் போகவேண்டும் என்றதனாலேயே புறப்பட்டேன்! உன்னை இன்னொரு முறை அழைத்துப் போகிறேன்!"

"பத்திரையுடனா? அவளை அழைத்துக்கொண்டு தனியே போகவா? அவள் எதற்கு அங்கே வருகிறாள்?"

"பாத பீடிகை தரிசனத்திற்கும், முனிவர் உபதேசத்திற்கும்தான். வேறு விசேஷமில்லை!"

"அவள் வருவதால் நான் வரமுடியாதுதான்; ஆனால், நீங்கள் எப்போது வருவீர்கள்?-" என்று கூறுகையில் சயந்தி கண்ணீர் வடித்தாள். ஸத்துகன் அவள் கண்ணீரைத் துடைத்தவனாய், ஏதோ நினைவுடன், " இன்று போகிறேன்;... போகிறேன்.. ...நீ வருந்தாதே...பின்பு உன்னையும் அழைத்துச் செல்கிறேன்". என்று சொல்லிக்கொண்டே மயங்கி நின்றான். நீர்வார்ந்த கண்களுடன் சிறிது தலை நிமிர்ந்து, "எப்போது வருவீர்கள் என்று கேட்டேன்!" என்றாள் சயந்தி.

"எல்லாம் முடிந்தவுடன் திரும்பிவிடுவேன்! சுகதனைப் பார்த்துக்கொள்!" என்றான் ஸத்துகன் சிறிது தன் நினைவுடன். சயந்தியின் உள்ளத்திற்கு அவன் வார்த்தை சமாதானமாக இல்லை. அவ்வார்த்தைகள் அவள் மனத்தைக் கலக்கின. தன் மனம் ஏன் இவ்வாறு கலங்குகிறது என்று அவளும் யோசித்தாள். அவள் நிலையைக் கண்ட ஸத்துகனும் மனக் கலக்கமுற்றான். உள்ளம் ஒன்றுபட்ட காதலர் இருவரது உள்ளங்களும் ஒருங்கே கலங்கின.

"எப்போது போகவேண்டும்?" என்றாள் சயந்தி.

"சிறிது நாழிகைக்கெல்லாம்!"

"கப்பலிலா? துணையாக யார் வருகிறார்கள்?"

"கப்பற் பிரயாணிகளே துணை! எனக்கு நீ துணை! ஏன்—?"

"நான் எப்படித் துணை இங்கிருக்கும்போது? அவள்தான்!..."

"இல்லை! எனக்குத் துணை நீ! நீ இங்கிருந்தாலும், நான் கடலில் சென்றாலும், என் உள்ளத்துடன் வருபவள். நீதான்! என் இருதயத்தில் அகலாமல் தங்கியிருக்கும் மலர் நீதான்! இதில் உனக்கு நம்பிக்கையில்லையா?"- ஸத்துகனின் குரல் மாறியது.

"தங்கள் இருதயம் யான் அறிந்ததே! விரைவில் திரும்பிவிடுங்கள்!" என்றாள் தலைகுனிந்து.

"போய்வருகிறேன்; உன்னை ஒருக்காலும் மறவேன்! பாதபீடிகைக்கு உன் நினைவு மலரையும் சமர்ப்பிக்கிறேன்! புத்தனின் அருள் உன்னிடம் என்றும் நிறைந்திருக்கும்" என்று அவள் கரங்களைக் கண்களில் ஒற்றிக்கொண்டு அகன்றான் ஸத்துகன். விரைந்து மேல்மாடத்திலிருந்து கீழிறங்கினான். சயந்தி மனத்தளர்வுடன், விரைந்து அவனைப் பின்தொடர்ந்து, அவன் கைகளைப் பற்றினாள். உடனே ஸத்துகன் துணுக்குற்றான். தயங்கி அவளையே நோக்கி நின்றான். "சயந்தி ஏன் கலங்குகிறாய்? நீ மனம் தளர்ந்தால் நான் வன்மை குன்றி இங்கேயே விழுந்துவிடுவேன்! உன் மனச் சோர்வு என்னை வாட்டுகிறது. தைரியமாக இரு; வருகிறேன். உன்னையும் அழைத்துப்போகிறேன்" என்று நீர் துளும்பும் கண்களுடன் சொன்னான். அதற்குமேல் சயந்தி ஒன்றும் கூற முடியாமல் பிரமித்து நின்றாள். ஸத்துகன் அவள் கனிந்த காதல் உள்ளங் கண்டு மனம் உருகினான்; தழுவிக் கொண்டான். சட்டென்று குனிந்து அவள் பாதங்களைத் தொட்டான். சயந்தி, திடுக்குற்றவளாய் ஸத்துகன் கைகளைப் பிடித்து, அவன் பாதங்களை வணங்கிக் கண்

களில் ஒற்றிக் கொண்டாள். அப்போது அவள் கண்களில் ஒளி மின்னலிட்டது.

"போய் வாருங்கள்...விரைவில்...போய் வாருங்கள்" என்றாள் மெல்லிய குரலில். ஸத்துகன் வாய் திறவாமல் அவளைக் கனிந்து நோக்கிவிட்டுச் சரேலென்று குதிரைமீது அமர்ந்து மறைந்தான்.

ஸத்துகனது வடிவம் மறையும்வரையில், கண்களில் நீர் நிரம்பியவண்ணம் நோக்கினாள் சயந்தி. அப்புறம், அவள் வெற்றுடலம், மாளிகைக்குள் உணர்ச்சியின்றிச் சென்றது. அவள் உயிர் அவனுடன் போய்விட்டது என்றே அவள் எண்ணினாள். செய்கையற்று நடைப்பிணமாக நடந்துசென்றாள் சயந்தி.

ஸத்துகன், பத்திரையை அழைத்துக்கொண்டு துறைமுகத்திற்குப் போய்ச்சேர்ந்தான். காவிரிப் பூம்பட்டினத்தின் துறைமுகத்தில் எள் விழற்கும் இடமின்றி, ஜனங்கள் கூடியிருந்தனர். பெரும்பாலோர் வணிகர்களே! கப்பல்களிலிருந்து பொருள்கள் இறக்கப்படுவதும் ஏற்றப்படுவதுமாக இருந்தனர். பலர் வெளிநாடுகளுக்குப் போகும் கப்பல்களில் ஏறிக்கொண்டிருந்தனர். தமிழ்நாட்டு மூவேந்தரது கப்பல்களும் அங்கே விளங்கின: சேர மன்னனின் விற்கொடி விளங்கும் கப்பல், சோழ மன்னனின் புலிக்கொடி விளங்கும் கப்பல் முதலியன இருந்தன.

அச்சமயம், துறைமுகத்திலிருந்து அசைந்தாடியவாறே ஒரு கப்பல் கிளம்பியது. அது சாவக நாட்டுக் கப்பல். மணிபல்லவத்தீவிற்குச் செல்லப் புறப்பட்டது. அதில், பௌத்தர்களும், ஜைனர்களும் ஏறியிருந்தனர். அங்கே ஒரு புறமாக ஸத்துகனும் பத்திரையும் அமர்ந்திருந்தனர். பெரும் முழக்கம்

செய்துவிட்டுக் கப்பல் அலைகளைப் பிளந்துகொண்டு சென்றது. சிறிது தூரம் சென்றபின், அதிலுள்ள யாவரும் எழுந்துநின்று காவிரிப்பூம்பட்டினத்தின் தோற்றத்தைக் கண்டு வியந்தனர். ஸத்துகனும் பத்திரையும் தோளொடு தோள் தழுவ மகிழ்ந்து நின்று கைகுவித்து வணங்கினர் காவிரிப்பூம்பட்டினத்தை. "பத்திரை, நம்மைப் பெற்ற தாயைக் காட்டிலும் சிறந்தது, நம்மைப் பிறப்பித்த இப்பொன்னி நாடு!'' என்றான், ஸத்துகன்.

"ஆம்! அதோ, அந்திவானின் செந்நிற ஒளியால், பொன்மயமாக அழகுடன் விளங்கும் நம் நகர், மறைகிறது! எவ்வளவு பெரிய பட்டினம்! இப்போது வடிவமே தெரியாமல், சிறிய உருவுடன் மறைந்து விட்டது பார்த்தீர்களா?"

"பத்திரை, இன்னும் சிறிது நாழிகையில் கடலைத் தவிர வேறொன்றையும் நாம் காண முடியாது! இதோ பார், கடலின் அமைதியை!'' என்று சொல்லி அவளைத் தழுவிக்கொண்டான் ஸத்துகன்.

இளங் காதலர்களாகிய இவர்களைக் கப்பலிலுள்ள பௌத்தர்களும் பிறரும் கண்டு, தமக்குள் பலவாறு பேசிக்கொண்டனர். அதை உணர்ந்த ஸத்துகன், அவர்கள்முன் நின்று விலகி ஒரு புறமாகச் சென்று பத்திரையுடன் கடற் காட்சியில் மனம் ஒன்றியிருந்தான். அந்தி மங்கியது; இருள் கவிந்தது; காற்று வேகமாகச் சீறியது; 'ஓ' என்ற சப்தம் எங்கும். அங்கும் இங்கும் ஆடியவாறே விர் என்று சென்றது கப்பல். பத்திரையின் இருதயம் திக் திக் என்று அடித்துக்கொண்டது; நினைவற்று, ஸத்துகனின் தோள்மீது சாய்ந்துகொண்டாள். அமைதி குடிகொண்ட அந்தகாரத்தில், ஸத்துகனின் சிந்தனைகள் மின்னிக்கொண் டிருந்தன!

# 32

## 'மணிபல்லவத்தில்'

இரவு முழுவதும் கடலில் அலைமோதச் சென்றது கப்பல். நெடு நேரம் விழித்திருந்த பலரும், விடியற்காலையில் சிறிது அயர்ந்து கண்ணுறங்கினர். உலகைச் சூழ்ந்து மூடியிருந்த இருளைக் கிழித்து உதய சூரியன் வெளிப்புறப்பட்டான். தனது பல்லாயிரம் செங்கிரணங்களை நாலுபுறமும் போகவிட்டான் செந்நிறக் கதிரவன். கடலின் அலைகள்மீதே, கதிரவனின் பிரதிபிம்பம் தகதகவென்று ஒளி பரப்பியது. மிக விரைவில் இருள் மாய்ந்து ஒளி பரந்தது. கப்பலில் உள்ளவர் யாவரும் கண்விழித்துக் காலைக்கடன்களை முடித்து உதய சூரியனை அகம் விரும்பித் தொழுதனர். எல்லோருடைய மனத்திலும், மணிபல்லவத்தைக் காணும் ஆவல் கொந்தளித்தது. 'ஓம் ஓம்' என்ற ஒலி யாவர் செவியிலும் இடைவிடாமல் சிறிது நேரம் ஒலித்தது. அவ்வளவில் யாவரும் குதூகலித்து எழுந்து மணிபல்லவத் தீவை நோக்கிக் கைகூப்பினர். அணைந்து தழுவுவதுபோல் மணி பல்லவத்தை அணுகியது கப்பல்.

பௌத்த பிக்ஷுக்கள், உபாசகர்கள், வணிகர்கள் பலரும் கப்பலைவிட்டு இறங்கியதும் புத்த தேவரின் பாதபீடிகையைத் தரிசிக்கச் சென்றனர். உடலும் உள்ளமும் பூரிக்க உள்ளம் உவந்து குதூகலித்திருந்த ஸத்துகனும், பத்திரையும் மணி பல்லவத் துறைமுகத்தில் தனித்து நின்று, கடற்காட்சியைக் கண்டனர். பின்னர் ஸத்துகன் பத்திரையுடன் அங்கே உலாவியவண்ணம், மணி பல்லவத்திலுள்ள விசேஷங்களை அவளுக்குக் கூறிக் கொண்டிருந்தான். பத்திரை அகம் களிகூர்ந்து அவற்றைக் கண்டு உலாவினாள். இருவரும் மணிபல்லவத்தீவில் உள்ள பல இடங்களிலும் உலாவினர். 'தரும

பீடிகை' என்று புகழ்பெறும் புத்ததேவனின் பாத பீடிகையைத் தரிசிக்க எண்ணினர். உடனே அங்குள்ள கோமுகி என்னும் பொய்கைக்குச் சென்றனர். பொன்மயமாகத் தக தகவென்று ஒளி வீசியது கோமுகிப் பொய்கை; அதில் தாமரை முதலிய பலவகை மலர்கள் பூத்து விளங்கின. அலர்ந்து நீர்த்துளி சிதறிய இதழ்களுடன் அசைந்தாடும் பூக்களில், பன்னிறப் பறவைகள் அமர்ந்து கல கலவென்று ஒலி செய்தன. காற்று, சில்லென்று வீசியது. ஆழ்ந்து அகன்று பொலிவு பெற்று விளங்கிய கோமுகிப் பொய்கையில் பல காட்சிகளைக் கண்டவாறு இறங்கினர் ஸத்துகனும், பத்திரையும். அவர்கள் உள்ளம் எங்கோ உலாவியது. பளிங்கைக் கரைத்தாற் போன்று தூய்மையுடன் விளங்கிய கோமுகிப் பொய்கையில் இருவரும் மூழ்கி விளையாடினர். அவ்வளவில் சூரியன் நடுவானத்தில் உலாவந்தான். நாழிகை ஆகிவிட்டதை உணர்ந்த ஸத்துகன், விரைந்து எழுந்தான். இருவரும், மாற்றுடைகளை அணிந்து, பாதபீடிகையைத் தரிசிக்கப் புறப்பட்டனர். கோமுகிப் பொய்கையிலிருந்து, பல மலர்களைப் பறித்து எடுத்துக்கொண்டு சென்றனர். அந்நேரத்தில், அங்கே கூட்டம் மிகுதியாக இல்லை.

பாதபீடிகையை வணங்கி, பூக்களால் அருச்சித்தனர்; மும்முறை வலம்வந்தனர்; இவ்விருவரது தன்மையையும் அறிந்து அங்குள்ள உபாஸகன் அறச்சாலைக்கு அழைத்துச் சென்று பழம் முதலியவற்றை அளித்தான். அருந்திய பின்னர் இருவரும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டனர். சாவக நாட்டிலிருந்து ஒரு முனிவர் வந்திருப்பதாக ஸத்துகன் கூறியிருந்ததைப் பத்திரை நினைவுறுத்திக்கொண்டே இருந்தாள். ஸத்துகன் புன்னகையுடன் அவளைத் தனியே ஒரு புறமாக அழைத்துச் சென்றான். ஸத்துகன் சிந்தனை எதிலோ ஆழ்ந்திருந்தது. "அந்த முனிவரிடந்தான்

அழைத்துச் செல்கிறேன்'' என்று கூறிக்கொண்டே சென்றான். அவர்கள் சென்ற வழியில் கற்பாறைகளும் முட்புதர்களும் நிறைந்திருந்தமையால் போவதற்குச் சிரமமாகவே இருந்தது. பத்திரை பெரிதும் இடர்ப்பட்டுப் போனாள். "எங்கே, இந்த முள் வழியில் போகிறீர்கள்? முனிவர் எங்குள்ளார்?'' என்று கேட்டாள். ஸத்துகன் சிறிது மௌனமாக இருந்தான். மீண்டும் கேட்டாள்; மறுமொழி கூறவில்லை. அவள் கால்கள் ரத்தக் களரியாகி விட்டன. சிறிதும் லக்ஷ்யம் செய்யாமல் சென்றான் ஸத்துகன். பழக்கமுள்ள ஒரு வழியில் செல்பவன்போல் போனான் அவன். இடையிடையே அவள் தடுமாறியபோது கைகொடுத்து அழைத்துச் சென்றான். வளைந்து வளைந்து செல்லும் அவ்வழியில், நேராகக் கற்பாறைகள் சென்றன. அதில் நடந்து களைப்புற்று, ஒரு மரத்தடியில் சோர்ந்து விழுந்தாள் பத்திரை. ஸத்துகன் திரும்பிப் பார்த்தான்; அவன் பார்வையில் எவ்வளவோ அர்த்தம் நிரம்பியிருந்தது. இருந்த இடத்திலிருந்து பத்திரை, தான் வந்த வழியை நோக்கினாள். ஒன்றும் புலப்படவில்லை. தான் இருக்கும் இடம் ஓர் உயர்ந்த கற்பாறை என்பதையும் பாதபீடிகை இருக்கும் இடம் மிகவும் கீழே உள்ளதென்பதையும், ஸத்துகன் கூறிய பின்பே, அவள் உணர்ந்தாள். அந்தத் தனியிடத்தைக் கண்டதும் பத்திரையின் மனம் சஞ்சலமடைந்தது. காரணமில்லாமல் அவள் அச்சத்தால் நடுங்கிக் கண்கலங்கினாள். அவள் நிலையை ஸத்துகன் எளிதில் உணர்ந்து புன்முறுவல் செய்தான்.

"இது ஒரு மலைக்குச் செல்லும் வழிபோல் இருக்கிறதே! இங்கே எதற்காக வந்தீர்கள்?'' என்றாள் கண் கலங்கி.

"ஆம்; மலைக்குச் செல்லும் வழிதான். அதோ தெரிகிறதே உச்சி, அங்கேதான் போகவேண்டும்.

சிறிது களைப்பாறு. நீ சோர்வடைவாயென்றுதான் முதலிலேயே சொல்லவில்லை!"

"மலை உச்சிக்கு எதற்காகப் போகவேண்டும்?"

"அங்கேதான், சாவகநாட்டு முனிவர் தங்கியுள்ளார்! அவரிடம் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றாயே! நினைவில்லையா?"

"ஆம்; அது நல்லதுதான்; ஆனால் மனித சஞ்சாரமே இங்கே இல்லையே! அவர் அங்கே என்ன செய்கிறார்? அவரைத்தவிர வேறு ஒருவரும் அங்கே இல்லையா?"

"ஏன்? இருப்பார்கள்! வருவதும் போவதுமாகத்தான் இருக்கும்; ஆனால் அவர் எங்கும் போகார்!"

பத்திரைக்கு ஸத்துகனின் வார்த்தைகள் சிறிது ஆறுதலைத் தந்தன; முனிவரைக் காண்பதிலும் உபதேசம் பெறுவதிலும், அவள் ஆவல் கொண்டவளாகக் களைப்பு நீங்கினாள். வழி நடந்த சிரமத்தைப் பாராமல், மேலும் நடக்கப் புறப்பட்டாள். ஸத்துகன் அவளை அழைத்துக்கொண்டு கற்பாறைகள் வழியே மலையில் ஏறத் தொடங்கினான். பத்திரைக்கு உள்ளம் படபடத்தது. மேலும், கீழும் பார்த்துக்கொண்டே மெல்ல மலைமேல் ஏறினாள். புதர்கள் நெருங்கிய அந்த மலைப்பாதையில், யாரும் போய்வந்த சுவடுகூட இல்லை.

செங்குத்தாகச் சென்ற மலையில் ஸத்துகன் அலக்ஷ்யமாக ஏறினான். பத்திரை கால்கள் நடுங்கத் தட்டுத் தடுமாறிச் சென்றாள். இருதயம் துடித்தது அவளுக்கு. ஸத்துகன் கையை ஊன்றுகோலாகக் கொண்டு போனாள். வெயிலின் வெம்மை மிகுந்தது. சில பறவைகளே இடையிடையே இவர்களைக் கண்டு அஞ்சி ஓடிப் பறந்து கூக்குரலிட்டன. பல ஜந்துக்கள் குறுக்கும் நெடுக்குமாக

ஓடின. பத்திரை அவற்றைக் கண்டு நடுங்கினாள். பத்திரை அஞ்சி நடுங்கித் தயங்கியபோதெல்லாம் ஸத்துகன் ஒரு வெடி நகை செய்வான். அதைக் கண்டு மேலும் அஞ்சுவாள் பத்திரை. புதர் மிகுதியாக இருந்த இடங்களில் பலவிதச் சப்தங்கள் உண்டாகும். அதனால் அவள் உள்ளம் வெடித்துவிடும்போல் இருக்கும். அப்பொழுதும் எள்ளி நகைசெய்வான் ஸத்துகன். இவ்வாறே இருவரும் மலையில் ஏறினர். ஸத்துகனுக்கு அளவற்ற குதூகலமும் ஒரு விதப் பரபரப்பும் ஏற்பட்டன. பத்திரைக்கு இருதயப் படபடப்பும், பெரும் பயமும் உண்டாயின. ஒரு சிறு சப்தம் கேட்டாலும், அவள் மார்பு விம்மி வெடித்து விடும்போல் துணுக்குறுவாள்; கண்கள் இருள உடலுணர்ச்சியின்றிச் சோர்வுறுவாள். ஆனால் ஸத்துகன் என்றும் இல்லாதபடி, குதூகலமாயிருந்தான். இது எதற்கு? அவனுடைய வெடிநகையில் இன்னதென்று சொல்ல முடியாத ஓர் அரிய உண்மை பிரதிபலித்தது.

அதைக் கண்டு பத்திரை திகைப்பும் அச்சமும் அடைந்தாள் என்றால் அது ஒரு வியப்பா? அவனுடைய புன்னகையால் எவ்வளவு நன்மை உண்டாகுமோ அவ்வளவைக்காட்டிலும், அவன் வெடிநகையால் பல விபரீதங்கள் உண்டாகும் என்பதைப் பத்திரை நன்கு உணர்ந்திருந்தாள். அதனால்தான் அப்போது அவள் அஞ்சி நடுங்கினாள். ஸத்துகனின் எதிர்பாராத வெடிநகைக்குக் காரணம் என்ன என்பதை அவள் மனம் ஆராய்ந்தது. ஆனால் அதற்குச் சமயம் ஏது? மேலும் மேலும் ஸத்துகன் செய்கைகளும் பேச்சும், பத்திரையைக் கலக்கிவிட்டன. அவள் மனம் பல சிந்தனைகளுடன் எங்கோ உலாவியது. ஸத்துகன் பத்திரையை உத்ஸாகப் படுத்துபவன் போல் பேசிக்கொண்டே சென்றான். பத்திரையின் விழிகள் சுழலும் கருவண்டுகள்போல், ஸத்துகனையே நோக்கிச் சுழன்றன. அந்தச் சுழற்சியில், ஏக்கமும் பய

மும் தாண்டவமாடுவதை ஸத்துகன் உணர்ந்தான். அளவு மீறி மதுபானம் செய்தவன், வெறி மிகுதியால் பேசி ஆடிச் செல்வது போல், ஸத்துகன் தோன்றினான். அந்த வெறியாட்டைப், பத்திரை அதற்குமுன் கண்டதே இல்லை.

இருவரும் ஒருவகையாக மலையுச்சியை அடைந்தனர். உச்சியை அடைந்ததும், அங்குள்ள காட்சியைக்கண்டு பத்திரை வியந்து நடுங்கினாள். மணிபல்லவத் தீவைச் சார்ந்த அம்மலை, மனித சஞ்சாரமே இல்லாதது; காடுகள் சூழ்ந்து விளங்குவது. அந்த மலையுச்சியில் கண்ணுக்கு எட்டிய மட்டும், தங்குமிடமோ, நீர் நிலையோ எதுவும் இல்லை. முட்கள்போல் தலை நீட்டியிருக்கும் பாறைகளும் முள் மரங்களுமே அங்கே தென்பட்டன. ஸத்துகன் சொல்லியபடி அங்கே முனிவர் எவரும் இல்லை. அந்த மலை உச்சியிலிருந்து பார்த்தால். ஒரு புறம் கடல் தென்பட்டது. மறுபுறம் மணிபல்லவத் தீவின் தருமபீடிகை புலப்பட்டது. மற்ற இருபுறமும் புதர்களே தென்பட்டன. பத்திரை நின்ற இடத்தை விட்டு நகர்ந்துசெல்லவில்லை. கேள்விகேட்கும் பாவனையாக ஸத்துகனை நோக்கினாள். அவள் வெறித்துப் பார்த்த பார்வைக்குப் பொருள் என்ன என்பதை ஸத்துகன் உணர்ந்தான்.

" இங்கே முனிவர் யாரோ இருப்பதாகச் சொன்னீர்களே? ஒருவரும் இல்லையே !" என்று கேட்டாள் பத்திரை. அவள் கேள்விக்கு ஸத்துகன் மறுமொழி கூறவில்லை; சிறிதே புன்னகை செய்தான். பத்திரையின் அருகில் சென்று அவன் இரு கரங்களையும் பற்றிக்கொண்டு நின்றான். பத்திரை மீண்டும் சிறிது அச்சத்துடன், "ஏன் பேசவில்லை? எனக்குப் பயமாயிருக்கிறது! சட்டென்று சொல்லுங்கள்" என்றாள். ஸத்துகன் பத்திரையின் முகத்தை உற்று நோக்கி, "என்ன சொல்வது? சொல்வதற்கு ஒன்றும்

இல்லையே. முனிவர் எவரும் இங்கே இல்லை'' என்று ஏதோ முனகினான் அவன். பத்திரை முன்னிலும் மிகுதியாக அச்சமுற்றாள். நிற்க நிலைகொள்ளாமல், "என்ன சொல்கிறீர்கள்? ஒன்றும் விளங்கவில்லையே! இப்படிப் பயமுறுத்தினால் வந்த வழியே திரும்பவேண்டியதுதான்'' என்றாள் பத்திரை. அப்போது கலகலவென்று சிரித்தான் ஸத்துகன். அவன் கண்களில் ஏதோ சூழ்ச்சியின் மின்னல் ஒளிவிட்டு வீசியது. "என்ன இது? எப்போது பார்த்தாலும் சிரிப்பா? விளையாட்டிற்குச் சமயமில்லையா? இவையெல்லாம் விளையாட்டா?'' என்று அச்சமும் வெறுப்பும் கலந்து கேட்டாள் பத்திரை. அப்போதுதான் தலைநிமிர்ந்து நின்றான் ஸத்துகன். பத்திரையின் இரு தோள்களையும் பிடித்தவாறே, "பத்திரை, இவையெல்லாம் விளையாட்டல்ல! ஆனால், நீதான் விளையாட்டில் வினையை வருவித்தாய். விளையாட்டின் இயல்பு உனக்குத்தான் தெரியாது!'' என்றான் ஸத்துகன்.

"நான் என்ன இப்போது விளையாடினேன்? இங்கே எதற்காக வந்தோம் என்று நினைவில்லையா? சூரியாஸ்தமனம் ஆகப் போகிறதே! திரும்ப வேண்டாமா?''

"திரும்பவேண்டியிராது! ஆம்! நீ இப்போது விளையாடவில்லை என்பது உண்மைதான். முன்பு விளையாட்டில் வினையைக் கலந்தாய்! ஆனால் அந்த வினை என் உள்ளத்தைச் சுட்டுத் தீராத புண்ணாக்கி விட்டது. அந்தப் புண்ணை ஆற்றுவதற்காகவே இங்கே வந்தேன். நீயே அதை ஆற்றவேண்டும்!'' - ஸத்துகனின் வார்த்தைகள் கணீரென்று வெளிக்கிளம்பின. அவன் கண்கள் சிவந்து புடை பெயர்ந்தன.

"என்ன வார்த்தைகள் இவை? விளங்கவில்லையே! நான் எந்த விளையாட்டில் வினையைக் கலந்

தேன் ?" என்றபோது பத்திரையின் குரல் தழு தழுத்தது.

"சொல்லுகிறேன்; பத்திரை! உனக்குக் கள்வ னல்லாத கணவன் கிடைப்பதற்காக, இப்போதே உனக்கு மறு பிறவி அளிக்கப்போகிறேன்; தெரிந் ததா? இதோ என் இருதயத்தின் உள்ளே புண் இருக்கிறது; நினைத்துப் பார் தெரியும்!"

"நான் என்ன செய்தேன்? நீங்கள் சொல்வன வெல்லாம் எதற்காக? உண்மையை விளங்கக் கூறுங் கள்!" என்று சொல்லிச் சிறிதே நகர்ந்து நின்றாள் பத்திரை.

"அன்று ஊடலில் அளவு மீறி நான் கணவ னென்றும் கருதாமல் நீ கூறிய வார்த்தைகள் நினை விருக்கின்றனவா?" என்று ஒரு பெருமூச்சு விட் டான்.

"என்ன கூறினேன்? நினைவில்லையே!" என்னும் போதே நடுங்கினாள் அவள். ஸத்துகன் தன்னை வஞ்சிப்பதற்கு எண்ணிவிட்டான் என்பதை உணர்ந்தவளவில் அவள் உடல் சிலிர்த்தது; குலை நடுங்கியது; கண்கள் நீரைக் கக்கின; கைகளைப் பிசைந்தவாறே ஸத்துகனை நோக்கினாள். ஸத்து கன் மிக அமைதியாக, "பத்திரை நீ, என்னைக் கள்வ னென்று இகழ்ந்தாயே! உன் உள்ளத்தில் சிறிதும் மென்மையே இல்லை! ஒரு பெண், ஒரு வீரனைக் கள்வ னென்று இகழ்வதை அவன் பொறுக்கமுடியுமா? அதுவும் தன் கணவனைக் கள்வனென்று அவன் முன்பே கூற எவ்வளவு துணிவும் கபடமும் இருக்க வேண்டும்? பத்திரை, நான் கள்வன்தான்; என்னை நீ மணந்ததும் தவறுதான். ஆனால் அந்தச் சொல்லை என்னால் பொறுக்கமுடியாது!"

அப்போதுதான் பத்திரைக்குப் பழைய நிகழ்ச் சிகள் நினைவுக்கு வந்தன. உண்மையை உணர்ந்

தாள்; மதி மயங்கினாள்; என்ன சொல்வதென்று தெரியாமல் சிறிதே பிரமித்தாள். "ஆம்! ஊடலில் கூறினேன்! இன்றுதான் தங்களுக்கு அது நினைவு வந்ததா? அதற்கு நான் இப்போது என்ன செய்யவேண்டும்? அதைப்பற்றி இப்போது என்ன?" என்றாள்.

"பத்திரை, அவ்வார்த்தைகள் என் உயிரையே உண்டுவிட்டன! என் இருதயம் புண்ணாகிவிட்டது; ஆறாத புண்! இதோ, இந்தப் பாறை வழியே விழுந்து மறைந்துவிடு. என்னுடைய இருதயப் புண் ஆறிவிடும்; உள்ளம் குளிரும். உனக்கு விருப்பமில்லையேல் நானே உன்னை அப்புறப்படுத்துகிறேன். என்னைக் கள்வன் என்று கூறியதற்கு இதுவே பிராயச்சித்தம். உன் ஆத்மாவும் சாந்தியடையும்; மறு பிறவியிலேனும் கள்வனல்லாத காதலனை நீ அடைவாய்!" என்றான் ஸத்துகன்.

பத்திரை ஸத்துகன் மொழியைக் கேட்டதும் தூக்கி எறியப்பட்டவள்போல் ஆனாள். "ஆ! கள்வனென்று கூறியதற்குக் கொலைத் தண்டனையோ? ஐயோ! இது உண்மைதானா? என்னைக் கொலை செய்யவா இங்கே அழைத்து வந்தீர்! தேவா!" என்று மெய்சோர்ந்தாள். அவள் கண்களுக்கு ஸத்துகன் ஒரு கொலையாளியாகவே தோன்றினான். ஸத்துகனைப் பற்றிய ஒவ்வொரு சம்பவமும் அவள் நினைவுக்கு வந்தன. ஒவ்வொன்றும் அலைமேல் அலையாக எழுந்தது. வசந்தியின் வார்த்தைகள் உண்மை என்பதை இன்றுதான் இவள் உணர்ந்தாள். இன்னது செய்வதென்று தோன்றாமல் தயங்கினாள். பாம்பு சீறுவதுபோல் கணத்திற்குக் கணம் பெருமூச்சு விட்டாள். "பத்திரை, நாழிகை ஆயிற்று. கடைசியாக நீ வேண்டியதைக் கேட்டுக்கொள்! அதோ சூரியன் சிவந்து நெருப்புப் பந்துபோல் கடலில் குதிக்கிறான். சிறிது நாழிகையில் இருள் கவிந்துகொள்ளும்; நீ சிரமப்படவேண்

டாம். புத்தஸ்மரணையுடன் தன்மயமாகி நில்! வருத்த மில்லாமல் உன் உடலை நாய், நரி, கழுகு தின்னுமல், உருவே தெரியாதவாறு உன் உயிர் சாந்தியுறச் செய்கிறேன்! கீழே தெரியும் பாறையில் உன் உடலி லிருந்து சிதறும் செங்குருதியைக் கண்டபின்பே என் ஆன்மா சாந்தியடையும். இருதயம் துடிக் கிறது; அருகில்வா!"—இவ்வாறு சொல்லிய அவன் பத்திரையைத் தழுவிக்கொண்டான். அவள், உடல் பதற உள்ளம் பதறப் பேச்சவிந்து நிலைகுலைந்தாள். வேண்டா வெறுப்புடன் அவன் அணைப்பைத் தாங் கிக்கொண்டாள். சட்டென்று அவள் உள்ளத்தில் ஒரு கிளர்ச்சி எழுந்தது. கண்கள் தாரை தாரையாக நீரைச் சொரிந்தன; வாடிய அவள் முகத்தில் புன் னகை தவழ்ந்தது. ஸத்துகனின் பாதங்களைக் கண்க ளில் ஒற்றிக்கொண்டாள். அவள் உள்ளத்தில் பெண் மைக் குணம் மாறியது. "தங்கள் விருப்பம்போல் என் உயிரைத் தியாகம் செய்கிறேன். எனக்குக் கணவனே தெய்வம்! ஆனுல், ஒன்று: தங்களைக் கடைசி முறை யாக மும்முறை வலம் வந்து வணங்கி, இம்மலைப் பிளவிலே, நீரில் மூழ்குவதுபோல் மூழ்குகிறேன். போதிநாதன் என் குற்றத்தை மன்னிப்பான். தாங் களும் மறுபிறவியில் என்னை மன்னிப்பீர்கள்!" என் ருன். ஸத்துகன் கொலைவெறி பிடித்தவனுகப் புன்னகை செய்து, "பத்திரை, அப்படியே செய்! போதிநாதனே உன்னை மன்னித்தருள்வான்!" என் ருன்.

பத்திரையின் கண்களில் மின்னல் ஒளிவீசி யது. கை கால்கள் துடித்தன; இருதயம் விம்மிக் கொந்தளித்தது; பேச நா எழவில்லை. ஆனுல் அவள் கண்களுக்குமுன் ஏதோ ஒரு தெய்வம் நின்று அவ ளுக்கு அருள் செய்வதுபோல் தோன்றியது. "தற் கொல்லியை முற்கொல்க!" என்ற வாசகம் பத்திரை யின் காதுகளில் இடைவிடாமல் ஒலித்தது; அது

ஏன்? அவள் உள்ளத்தில் பெண்மைக் குணம் மாய்ந்தது! பேயின் குணமும் செயலும் தாண்டவமாடின. ஸத்துகனைக் கைகூப்பித் தொழுதாள் அவள். உடலம் அந்தியின் செந்நிற ஒளியால் பொன் மயமாக அழகு பெற்று விளங்கியது. கூந்தல் அவிழ்ந்து காற்றின் வேகத்தால் நாலுபுறமும் பறந்தது. கண்கள் மருண்டு சுழன்றன. அவளுடைய இளமை வனப்பைக் கண்டு, ஸத்துகன் சிறிது மனம் இரங்கினான். 'இவள் உயிருக்கு, நான் யமனாக வேண்டுமா? இந்த நறுங்கனியை, நீண்ட நாள் நுகர்ந்திருக்க இயலாமல் போயிற்றே! ஆனால், என் உள்ளத்தின் புண் ஆற வேண்டுமே' என்று நினைத்தான். அடுத்த கணமே, ரத்தவெறி கொண்டான். தீவினையாகிய கடும் நோய் சுற்றுவதுபோல், பத்திரை, ஸத்துகனை வலம் வந்தாள். இரண்டு முறை வலம் வந்தாள்; மூன்றும் முறையும் வந்துவிட்டாள். ஸத்துகன் ஒரு புறமாகப் பார்த்தவாறே பிரமைகொண்டு நின்றான். பத்திரையின் இருதயம் துடித்தது. கைகள் வெட வெடவென்று நடுங்கின. மூன்றும் முறை வலம் வந்து முடியும் தருணம்! பத்திரையின் கைகள் சட்டென்று வேகமாக முன்சென்றன. ஸத்துகனின் விலாப் புறத்தில் அழுந்தின அவள் கைகள்! ஆ! என்ற கூக்குரலுடன் ஸத்துகன் மலைப் பிளவு வழியே பாதாளம் புகுவதுபோல் தலைகீழாகச் சென்றான்! அஞ்சா நெஞ்சத்துடன் வெறித்த கண்களால் ஸத்துகனின் சிதறும் உடலை நோக்கியவாறு மலையுச்சியில் நின்றாள் பத்திரை. ஸத்துகனின் உடல், முட்டும் முடுக்குமான கற்பாறைகளில் மோதிச் சிதறி, ஒவ்வோர் அங்கமும் வேறுபட்டு அரைக்கணத்தில் உருத்தெரியாமல் அழிந்தது. ஸத்துகன் அழிந்தான்! பத்திரை பெரும் பேயானாள். நின்ற இடத்தில் நில்லாமல் அம்மலை உச்சியின் ஒருபுறமாக அம்பு வேகத்தில் ஓடினாள்; இருள் எங்கும் சூழ்ந்தது.

# 33

## பிராயச்சித்தம்

பொழுது புலர்ந்தது. மணிபல்லவத் தீவின் மலை உச்சியில் உதய சூரியன், தன் செங்கிரணங்களைப் பரப்பினான்; மரம், செடி, கொடிகள் பனித்துளி சிதறி, புதுத் தளிர் ஈன்று கவின்பெற்று விளங்கின. பறவையினங்கள் குதூகலத்துடன் சப்தித்தவண்ணம் உலாவின. இளம் காற்று நறுமணம் கொண்டு மெல்லத் தவழ்ந்தது. இயற்கை அன்னையின் உவகைப் பெருமூச்சு என்று சொல்லும்படி இருந்தது அம்மெல்லிய காற்று. பறவை இனங்கள் ஒன்றையொன்று கூவி அழைக்கும் ஒலியையன்றி வேறு ஒலி அம் மலையில் இல்லை.

அவ்வளவில், கதிரவனின் செங்கிரணங்கள், பாய்ந்ததால், பத்திரையின் கருவிழிகள் இரண்டும் மலர்ந்தன. பனித்துளி பெருகிய, கருவிளை மலர் போல் நீர் பெருகியிருந்தது அவள் கண்களில். கண்களை விழித்ததும் தான் இருக்கும் இடத்தைப் பற்றி யோசித்தவளாகச், சுற்றிலும் நோக்கினாள் அவள். மலை நடுவில் ஓர் அசோக மரத்தின் நிழலில் தான் அலங் கோலமாகப் படுத்திருப்பதை உணர்ந்தாள். முதல் நாள் மாலையில் நடந்த சம்பவங்கள் அவள் நினைவுக்கு வரலாயின. ஸத்துகனை மலையிலிருந்து தான் உருட்டிக் கொன்ற கோரக்காட்சி, அவள் கண்முன் புலப்பட்டது. உடனே இருதயம் அதிர்ந்து துடித்தது. தொண்டையை யாரோ அழுத்துவதுபோல் இருந்தது. நா வறட்சிகொண்டு சுழன்றது. குப் பென்று காதுகள் அடைத்துக்கொண்டன. பெருமூச்செறிந்து, கண்களிலிருந்து நீர், தாரை தாரையாகப் பெருக, விம்மி அழலானாள் பத்திரை. அவள் அழுகையின் விம்மல் ஒலி பெரிதாயிற்று. மலையின் நாலு புறத்திலிருந்தும் அழுகையின் எதிரொலி கேட்டது.

அவள் துக்கத்தை மாற்றுவார் எவரும் அங்கே இல்லை. அவள் அழுகையை அடக்கி ஆறுதல் கூற ஒருவரும் இல்லை. மரம், செடி கொடிகளும் பறவையினங் களும் மற்றுமுள்ள ஜீவன்களும் அவளுக்காக இரங்கி அழுவனபோன்று மலையெங்கும் எதிரொலி செய்தன.

முதல் நாள் மாலையில் இருள் சூழ்ந்த சமயம், ஸத்துகனை மாய்த்த மறுகணத்தில், மலையின் ஒரு புறமாக ஓடிய பத்திரை, அசோக மரத்தின் அடியை அடைந்ததும் நினைவற்று விழுந்துபோனாள். கொலை வெறி கொண்ட அவள் உள்ளம், பல விதக் கொந்த ளிப்புடன் கலாய்த்துச் சுழன்றுகொண் டிருந்தது என்றாலும், அவள் மூர்ச்சையுற்றுக் கிடந்தாள். ஆடை யும் கூந்தலும் அலங்கோலமாகச் சிதறிக் கிடக்க, பொன்னன்ன மேனி சிவந்து புடைகொள்ள, பஞ் செனச் சிவந்த பாதம் கொப்பளிக்க, அசோக மரத் தின் கீழ் முட்புதரில் கிடந்தாள். காலை இளஞ் சூரி யன், அவள் கண்மலரைத் திறக்கவே, நினைவுற்று, அவள் உடலம் புழுங்கினாள். தன் செய்கைக்காக, உருகி நைந்து கலங்கினாள். அவள் மனம் பேய்போல் பெரும் வெறி கொண்டது. 'ஸத்துகனைக் கொன் றது நானா?' என்று கணத்துக்குக் கணம் அவள் மனம் கேட்டுக்கொண்டது. தூக்கிப் போட்டாற் போல் எழுந்தாள்; அசோக மரத்தை அணுகினாள். செந்தளிர் ஈன்று செழித்திருந்த அசோக மரத்தை மண்டியிட்டு வணங்கினாள். தன் முகத்தை மரத் தோடு சாய்த்துக்கொண்டு அதைக் கண்ணீரால் கழு வினாள். அவள் வாயிலிருந்து வார்த்தைகள் விம்மலு டன் வெளிவந்தன.

"அசோகமே, உன்னைச் சரணடைந்தேன். என் சோகத்தை அகற்றிவிடு! அந்தோ! பெரும் பாவி யேன் செய்த தீவினை இன்னும் என்ன உளதோ? எனக்குமட்டும் அல்ல! பெண் குலத்திற்கே பெரும்

பழியை உண்டாக்கினேன்! பெண்ணாகப் பிறந்து பேயாக மாறினேன். காதலனைக் கொன்ற கடும் பாவியானேன். வஞ்சக எண்ணத்தால், பழி தீர்க்க எண்ணிப் பெரும் பழிகொண்டேன்! 'காதலனைக் கொன்ற காதலி இவள்!' என்று உலகம் உள்ளளவும் பழிக்கும்படியானேன்! கற்புடைய பெண்டிர் குலத்தில் பிறந்து, கருதவும் அரிய கடுந்தொழில் புரிந்தேன். புத்ததேவனிடம் பொய்யன்பு பூண்டு வஞ்சகம் செய்தேன். தோழி சொல் மீறி, அவரைக் காதலித்தேன். அதனால் தோழியின் தோழமையை இழந்தேன். தந்தை சொல் கடந்து, அவரை நேசித்தேன். கள்வன் என்று அறிந்தபின்பும், இழக்க இருந்த அவர் உயிரைஎன் காதல் மிகுதியால் மீட்டேன். காதற் கணிகையின் தொடர்புள்ளமைக்காகக் கடுங்கோபம் கொண்டேன். உள்ளன்புடன் நேசித்த உயிர்க் காதலர் என்று எண்ணினேன். கள்வர், என்று இகழ்ந்து கடும்பழி கொண்டேன்! பழி தீர்க்க வந்த அவரை ஆத்திரம் கொண்டு பழி தீர்த்தேன்! பாதகியேன்! அசோகமே! உன்னை அடைந்தார் சோகத்தையெல்லாம் அகற்றுவையோ நீ! தளிர்த்துச் செழித்திருக்கும் நீ, அசோகமானாலும், என் சோகத்தை நீக்காததால், உனக்கு அப் பெயர் பொருந்தாது! உன்னைப் போலவே, முதலில் நானும் தளிர்த்துச் செழித்திருந்தேன். ஆனால், இப்போது வாடிக் கருகி, மணமிழந்து, ஒளியிழந்து சாகின்றேன்! நீயும் சில நாளில், இவ்வாறே மடிவாய்! போ! போ!''

ஆக்கிரோஷத்துடன் இவ்வாறு சொல்லியவாறே அசோகத்தை இரு கைகளாலும் அறைந்தாள் அவள். தளிர்போன்ற கைகள் இரண்டும், அசோகத்தைக் காட்டிலும் மிகச் சிவந்தன. இருதயம் எழுந்து விம்மும்படி உரக்கக் கர்ச்சித்து வீரிட்டாள். இன்னது செய்வது என்று அவளுக்குப் புலப்படவில்லை. வேறு புறமாக ஓடினாள். முட்களால் தாறுமாறாகக் கிழிந்தன அவள்

ஆடைகள். மெல்லிய சிவந்த அவள் மேனி, பல வாறாகக் கீறுண்டு ரத்தம் பீறிட்டது. மேகத்தில் உலாவும் மின்னல் கொடிபோல் அம்மலையில் அங்கும் இங்கும் ஓடினாள் அவள். அவள் உள்ளம் ஒரு நாளில் பெரிதும் வெந்துவிட்டது. நாலு புற மும் சுற்றினாள். வெறியும் திகிலும் ஒருங்கே குடி கொண்டன அவள் உள்ளத்தில். சிரிப்பும் அழுகை யும் கலந்து தோன்றின அவள் முகத்தில். "ஸத்துகர் என் காதலர்! என் காதலர்! அவரை நான் கொன் றேன்! நான் கொன்றேன்! பெண் பாவி நான்! பெரும் பழிபூணப் பிறந்தேன். பிறவி தோறும், அரு நரகில் ஆழ்ந்து வருந்த, ஆருயிர்த் துணைவருக்கு யம னானேன்! பறவை இனங்களே! மான் இனங்களே! மயில் இனங்களே! இதோ இருக்கிறேன் பாருங்கள்! கழுகு இனங்களே! இளமைச் செருக்குக் கொண்ட என உடலை அன்புடன் கொத்தி நுகருங்கள்! இதோ, செவ்விரத்தம் பீரிடுகிறது! மலை வாழும் தெய்வங் களே! என்னைப் புடைத்து உண்ணுங்கள்! என் உள்ளம் குளிர, என் மார்பைப் பிளந்து, உள்ளிருக்கும் விஷத்தைப் போக்குங்கள்! பழிச் சுமையை ஓட்டுங் கள். அந்தோ! இங்கே, குற்றம புரிந்தோரைத், தண் டிப்பவர் எவரும் இல்லையா? கண் கண்ட தெய்வ மாக விளங்கும் கதிரவா! உன் வெம்மையை, வீணே உலகில் வீசித் துன்புறுத்தாதே! வெம்மை முழுவதை யும் என்மீதே சொரிந்துவிடு! என்னை உன் தீச்சுட ரால், மூழ்குவித்துத் தூய்மையுடையவளாக்கு! என் னைச் சுட்டு எறித்துவிடு! ஏன் இன்னும் தாமதம்? இதோ இளமை வீறுகொண்டு மதர்த்துச் செழித்துப் பெரும்பாவங்கள் செய்த, இம் மேனியைச் சாம்பலாக்கு! அந்தோ உன்னிடமும் கருணை உள் ளதே! கொலைப் பாவம் உனக்குச் சம்மதமா? இல்லை: உனக்குக் கண் இல்லை. வெம்மையால் உன் அறிவும கண்ணும் கலங்கிவிட்டன! நான் போகிறேன்! போகிறேன்!" என்று புலம்பினாள்.

அமைதியுடனிருந்த மலை உச்சியில் இவ்வாறு பிதற்றிக்கொண்டே பத்திரை, உலாவினுள். நாலு புறமும் சுற்றிய அவள் மலையிலிருந்து இறங்க வழி தெரியாது தவித்தாள். சட்டென்று அப்போது அவளுக்கு அருகில் 'சல சல' வென்று ஓசை கேட்டது. திரும்பிப் பார்த்தாள். புதரை விலக்கிக்கொண்டு செந்நாய் ஒன்று வருவது தெரிந்தது. துள்ளிக் குதித்து அதன்முன் ஓடினுள். செந்நாய் பத்திரையின் வெறிபிடித்த தோற்றத்தைக் கண்டு அஞ்சி வேறுபுறமாகத் தாவி ஓடியது. பத்திரை பெருத்த சிரிப்போடு நாய் வந்த புதர் வழியை விலக்கிப் பார்த்தாள். 'ஸத்துகனுடன் தான் வந்த வழியே அது' என்று உணர்ந்தாள். விரைவில், 'சர்' என்று இறங்கினுள். அந்த மலைச்சரிவின் வழியே தட்டுத் தடுமாறிப் பாறைகளின் இடுக்கு வழிகளிலெல்லாம் புகுந்து வளைந்து சென்ருள். மணிபல்லவத் தீவின் நடுவில் விளங்கும், தருமபீடிகை புலப்பட்டது.

போதிமரத்தின் நிழலில் விளங்கிய தருமபீடிகையை உற்று நோக்கினுள். அவள் கண்களில் ஒளி மின்னலிட்டது. பௌத்த பிக்ஷுக்களின் கூட்டம் தருமபீடிகையைச் சுற்றி வருவதைக் கண்டாள். உடனே அவள் மனம் கடந்த நாட்களைப் பற்றிச் சிந்தித்தது. அதனுடன் ஸத்துகனின் நினைவும் வந்தது. சட்டென்று அந்த நடுவழியில் இருந்த கற்பாறையில் சாய்ந்தாள். புத்த மதத்தைப் பற்றிய சிந்தனை எழுந்தது. பௌத்த பிக்ஷுக்களின் வழிபாட்டைப் பற்றியும் பௌத்த சங்கங்களைப்பற்றியும், பிக்ஷுக்களின் செய்கைகளைப்பற்றியும் சிந்தித்தாள். ஸத்துகனும், அவன் பௌத்த சங்கமும் அவள் கண்களுக்கு முன் மாறி மாறிக் காட்சி யளித்தன. ஒவ்வொரு சம்பவமும் நினைவுக்கு வந்தது. ஸத்துகமந்திரத்தில் நிகழ்ந்த தீச் செயல்களும், ஸத்துகனின் லீலைகளும் நினைவுக்கு வந்தன. அவ்வளவையும் பௌத்தமதத்தின்மீது உள்ள

குற்றங்களாகவே அவள் கருதி விட்டாள். பஞ்ச மகா பாதகங்களுக்கும் இருப்பிடமானது பௌத்த மதம் என்று எண்ணி வெறுப்புக் கொண்டாள். கொலை, களவு, கள், காமம், பொய் ஐந்தும் இந்தப் பௌத்த மதத்தினரால் கையாளப்படுகின்றன என்று உறுதிகொண்டாள். ஸத்துக மந்திரத்தில் நிகழ்ந்த ஒவ்வொரு சம்பவத்தையும் மனத்தில் நினைத்து, அவற்றையெல்லாம் பௌத்தமதத்தின் மீதுள்ள குற்றங்களாகவே எண்ணினாள் அவள். அவற்றிற்கெல்லாம் ஸத்துகனும், ஸத்துக மந்திர முமே இலக்கியங்களென்று அவள் கருதிவிட்டாள். ஸத்துகனுடைய தீச்செயல்களுக்கும், அவன் மாறு பாட்டிற்கும் பௌத்தமதமே காரணம் என்றும் நன் னெறி கெடுத்துத் தன்னை இந்த நிலைக்கு உள்ளாக்கிய தற்கும் பௌத்தசங்கமே காரணம் என்றும் ஆத்தி ரம் கொண்டாள். எந்த வகையிலாவது தான் செய்த பெரும் பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டும் என்று உறுதிகொண்டாள்.

'பெரும் பாவக் களஞ்சியமாகிய பௌத்த மதத் தைச் சார்ந்து பெரும் பழி விளைத்துக்கொண்டேன்! பௌத்தமதத்தின் தீய கொள்கைகளாலேயே அவ ரும் பெரும்பழி கொண்டார். அவரிடமுள்ள காத லால் நானும் அறிவிழந்தேன். அவருடைய களவுக்கும் வஞ்சத்திற்கும் காரணம் ஸத்துக சங்கத்தின் பிக்ஷுக் களே. அதனாலேயே அவர், மாறுபட்டுத் துரோக சிந்தை யுற்றார். நானும் கணவனென்று கருதாமல், 'கள்வா' என்று இகழ்ந்தேன். என்னைக் கொலை புரிய வஞ்சித்து அழைத்துவந்த அவரையே கொன்றேன். அந்நிலையில் என் மனம் எப்படித்தான் துணிந்ததோ? மனைவியின் கையால் மரிக்க வேண்டுமென்பது அவர் விதி போலும்! கணவனைக் கொன்ற கிராதகி என்ற பழியைப் பூணவேண்டும் என்பது என் விதிபோலும்! இவ்வளவு துன்பங்களுக்கும் காரணமான இந்தப்

பௌத்தமதத்தை விட்டு விலகுவேன். பௌத்தமதத்திலுள்ள உண்மையை அறிந்து அதிலுள்ள தீமைகளை உலகுக்கு உணர்த்தி அவற்றை ஒழிப்பேன்! நன்னெறி தழைக்கச் செய்வேன். என்னைப்போல் பிறரும் அழிந்துபோகாமல் இன்பமுறும்படி நல்வழி காட்டுவேன். கணவனைக் கொன்ற கடும் பாவத்திற்கு இதுவே பிராயச்சித்தம்' என்று தனக்குள் கூறிக் கொண்டவளாக அவ்விடம் விட்டுப் புறப்பட்டாள்.

மலையிலிருந்து மிகுந்த வேகமாக இறங்கினாள். தருமபீடிகை இருந்த இடத்தை அணுகினாள். அங்கே கூடியிருந்த பௌத்தபிக்ஷுக்கள் இவள் தோற்றத்தைக் கண்டு பயந்தனர். 'இவள் பைத்தியமோ!' என்று பலர் கருதினர். பத்திரை பிக்ஷுக்களைப் பல வார்த்தைகளால் பழித்தவாறே தருமபீடிகையை வணங்காமலும், வலம் வராமலும் நின்றாள். சற்று நாழிகைக்கு ஒருதரம், பெருநகை புரிந்தாள். கண்களிலிருந்து நீர் ததும்ப முகத்தை மூடிக் கொண்டு அழுதாள். "மதம் பிடித்தவர்களே! உங்களுக்கு என்ன தெரியும்? மாமிசம் புசித்தலும், கள் உண்ணலும் காமமாடுதலும் கூறப்பட்ட உங்கள் பௌத்த சாஸ்திரத்தில் என்ன நீதி உள்ளது? பார்ப்பவரைப் பகட்டும் வேஷதாரிகளே! உண்மையில் நீங்கள் புத்த பக்தியுடையவர்களா?" என்று பிதற்றலானாள். அவள் வெறி பிடித்தவள் என்றே யாவரும் எண்ணிவிட்டனர். அவளுடன் யாரும் பேசவில்லை. 'இவள் இங்கிருந்தாலே நம் தவம் கெட்டுவிடும்; பல துன்பங்கள் உண்டாகும்; ஆதலால் இவளைக் கட்டிக் கப்பலேற்றிப் பாடலித் துறைமுகத்திற்கு அனுப்பிவிடவேண்டும்' என்று முடிவு செய்தனர். பாடலித் துறைமுகத்தை நோக்கிச் செல்லும் கப்பல், அங்கே தங்க வந்த சமயம்பார்த்து அங்குள்ள உபாஸகர்களைக் கொண்டு அவளைக் கட்டுவித்துக் கப்பலேற்றினர். பத்திரை வெறி கொண்டவளாய்ப் பலவாறு

பிதற்றிய வண்ணம் கப்பலில் இருந்தாள். பாடலித் துறைமுகத்தை நோக்கிக் கப்பல் சென்றது.

பாடலிபுத்திரத்தை நோக்கிக் கப்பல் போகிறது என்பதைப் பத்திரை உணர்ந்தாள். அவள் மனம், காவிரிப்பூம்பட்டினத்தைக் காண ஆவல்கொண்டிருந்தது என்றாலும் தன் முகத்தை அங்குள்ளவர்களிடம் எப்படிக் காட்டுவது? 'ஸத்துகன் எங்கே என்று யாரேனும் கேட்டால் என்ன மறுமொழி கூறுவது?' என்ற அச்சத்தாலும், பெருந் துக்கத்தாலும் அதை அடக்கிப் போசாதிருந்தாள். தன்னை அறிந்த மனிதரைக் காணாதிருக்க வேண்டுமென்று அவள் உள்ளம் எண்ணியது. தன்னையறியாத மனிதவர்க்கத்திடையே பழகி, நல்வழி யுறவேண்டுமென்று அவாவியது அவள் மனம். ஆகவே அவள் பாடலிக்குச் செல்ல ஒருப்பட்டாள். அந்தக் கப்பலில் உள்ளவர் பலரையும் ஒரு புறமாக நின்று நோக்கினாள். பலவகை வணிகர்களும் யாத்திரிகர்களும் கூடியிருந்தனர். மற்றொரு புறத்தில் அவள் கண்ட காட்சி அவள் உள்ளத்தைப் பிணித்தது. ஒரு புறம் இளைஞரும் முதியவருமாயுள்ள துறவிகளின் கூட்டம் காணப்பட்டது. அவர்கள் நடுவில் ஒரு துறவி அமர்ந்து உபதேசம் செய்துகொண்டிருந்தார். அவருடைய தீக்ஷண்யமான பார்வை பார்ப்பவரைப் பிரமிக்கச் செய்தது. அந்தத் துறவிகளின் கூட்டமே, தூய்மையொளி பெற்று விளங்கியது. நடுவிலிருந்த துறவியின் உபதேசத்தைக் கேட்டதும், பத்திரை வியப்பும் இரக்கமும் கொண்டாள். அந்தத் துறவியரின் கூட்டம் ஜைன முனிவர்கள் என்பது எளிதில் புலப்பட்டது. துறவியின் உபதேச மொழிகள் பத்திரையின் உள்ளத்தைக் கவர்ந்தன. மெல்ல அருகில் சென்றாள். ஜைனத்துறவியின் உபதேசத்தைக் கருத்தொன்றிக் கேட்டாள். புண்ணிய பாவப் பயன்களைப் பற்றியும் நிலையாமையைப் பற்றியும் மிக அழகாக அவர் உபதேசிப்பதைக் கேட்டவாறே அவள்

அமர்ந்திருந்தாள். அந்தத் துறவியே தனக்குக் குரு என்று உறுதி கொண்டாள்.

கப்பல் பாடலித் துறைமுகத்தை அடைந்தது. அவ்வளவில் ஜைன முனிவரும் உபதேசத்தை முடித்து எழுந்தார். அருகே இருந்த பத்திரை, நீர் வார்ந்த கண்களுடன் சட்டென்று அவர்முன் சென்று பாதங்களில் வணங்கி, "நான் அனாதை! எனக்கு இந்தப் பிறவி புனிதமடைய அறிவு புகட்ட வேண்டும்" என்று வேண்டினாள். முனிவர் திடுக்குற்றார். பத்திரையை எழுப்பி அவள் முகத்தை நோக்கினார். 'பெருந் துன்பத்தால் இவள் மனம் புழுங்கியிருக்கிறாள். ஆனால், அறிவு மேம்பட்ட உயர்குல நங்கையே இவள்! நமது பள்ளியிலுள்ள தபஸ்வினியால் உபதேசிக்கப் பெற்றுத் தூய்மையடையத் தக்கவள் இவள்' என்று எண்ணினார். உடனே பத்திரையை நோக்கி, "பெண்ணே! நீ பெரிதும் துன்பம் கொண்டிருக்கிறாய்! நம்முடன், பாடலி நகரில் உள்ள பள்ளிக்கு வந்தால் அங்குள்ள பல தபஸ்வினிகளுடன் சேர்ந்து உபதேசம் பெறலாம். மனம் தூய்மை பெறும் விருப்பம் உண்டானால் எம்முடன் வா" என்று அழைத்தார். பத்திரை, "ஆசார்ய! அடியேனைக் காப்பாற்ற வேண்டும்! பெரும்பாவியேனைப் புனிதமாக்க வேண்டும். தாங்களே எனக்குப் புகலிடம்" என்று கூறியவளாக உடன் சென்றாள். ஜைனத்துறவி தம் மாணவர்களுடனும், பத்திரையுடனும் கப்பலைவிட்டு இறங்கிப் பாடலிநகருக்குள் புகுந்தார். ஜைனர் வாழும் சமணப் பள்ளியை அடைந்தாள் பத்திரை. அவள் மனம் ஸத்துகனைக் கொன்ற கொலைப்பாவத்திற்குப் பிராயச்சித்தம் இதுதான் என்று எண்ணியது. சமணப்பள்ளியில் துறவு பூண்டு விளங்கிய தூயமங்கையர் குழுவினுள், பத்திரையும் சேர்ந்துகொண்டாள். ஜைன மதக் கொள்கைகள் அவள் உள்ளத்தில் நிலைகொண்டன.

## 34

## நிகண்டவாதி

"நீயா கொன்ருய்?"

'ஆம்! பெரும் பாவியானேன்!"

', உண்மையாகவா? உன் மனம் எப்படித் துணிந்தது?"

"விதியின் விளைவு என்றுதான் சொல்லவேண்டும்!"

"என்ன! நீ ஒரு இளம் பெண்! கணவனுடைய பல தீச் செயல்களுக்காக மனம் கொதித்து, அவனைக் கொன்று விடுவதென்ருல்......! இது நம்பத் தகுந்ததா?"

"இல்லை; தாயே! அது காரணமல்ல. என் உயிரைப் போக்க முற்பட்ட அவரை, நான் முற்பட்டுக் கொன்றேன்! இனி இதைக் கேட்காதீர்கள்; என் இருதயம் புண்ணுகியிருக்கிறது. என் கண்களுக்கு உலகமே சூனியமாகத் தென்படுகிறது. எவ்வாறேனும் என்னை இந்தப் பாபக் குழியிலிருந்து கரையேற்றவேண்டும்!"

"பத்திரை, உன் மீது குற்றமில்லை; அந்தப் பௌத்தமதக் கொள்கைகளை நம்பி, அதில் ஈடுபட்டதுதான் எல்லாவற்றுக்கும் காரணம். உன் கணவன் பெரும் பாதகனுகி இந்தக் கதியை அடைந்தான். ஆனுல், கணவனைக் கொன்ற பாதகம் எளியதல்ல. இதற்குப் பிராயச்சித்தம் எதுவுமே இல்லை. கொடும்பாவ நரகில் வேதனைப்பட்டே தீரவேண்டும்."

"அந்தோ, தாயே! தாங்களே எனக்குப் புகலிடம். அந்தச் சமண முனிவர் தங்களிடமே என்னை அடைக்கலம் வைத்தார். காக்க வேண்டும்."

"பத்திரை, வருந்தாதே; பாபத்தைச் செய்வது எளிது; அதைப் போக்குவது அரிது. மனத் தூய்மை யில்லாமல், துறவு பூண்டது நேர்மையல்ல. ஜைன மதக் கருத்துக்களையெல்லாம் நன்கு உணரவேண் டும். அறவுரை கேட்டு மனம் தெளிந்தபின்பே துறவுகொள்வது முடியும். தவம் செய்வது என்றால் உன் மெல்லிய தேகம் அதற்கு உடன்படாது. தீயின் மேல் தாமரை மலர்போல் உன் உடல் கருகிக் கெடும்."

"தாயே! தாங்கள் கூறுவதெல்லாம் நேர்மை யானதே; எவ்வாறேனும் இங்குள்ள தவ மகளிர் குழு வுள் என்னையும் ஒருத்தியாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும்."

"பத்திரை, அவ்விதமே செய்வேன். எம் தேவன் வினை வென்ற வீரன். அருகத பரமேஷ்டி யின், பஞ்ச நமஸ்கார மந்திரத்தால் எவ்விதப் பாவ மும் ஒழியும். அதை உனக்கு உபதேசிக்கிறேன். கருத்தில் பதித்துத் தியானம் செய்; உன் பாவம் அக லும். அதன் பின் அறவுரை கேட்கலாம்."

"தங்கள் அருள்!" என்று தவ மகளிர் தலைவி யாகிய ஆர்யாங்கனையை வணங்கினாள் பத்திரை. ஆர் யாங்கனை அன்புடன், பத்திரைக்கு, 'ஓம் நமோ அர ஹந்தாணம்' என்ற பஞ்ச நமஸ்கார மந்திரத்தை உப தேசித்தாள். பத்திரை அதை மனத்தால் தியானம் செய்யலானாள்.

பாடலிபுத்திர நகரில் சமணப் பள்ளிகள் மிகுதி யாக இருந்தன. அவற்றுள், மகளிர்க்கென்று தனியே சில தவப்பள்ளிகள் இருந்தன. துறவு பூண்ட மகளிர் நூற்றுவருக்குமேல் அங்கே இருந்த னர். அந்தத் தவப்பள்ளியில், பத்திரையும் சேர்க்கப் பெற்றாள். பள்ளியின் தலைவியாகிய ஆர்யாங்கனை பத்திரைக்கு, பஞ்ச நமஸ்கார மந்திரத்தை உப

தேசித்ததுடன், ஜைன மதத்தின் உயர்வுகளையும் எடுத்துக் கூறினாள். பத்திரையும் மனம் விரும்பி ஜைன மதத்தில் நம்பிக்கை கொண்டாள். நாளடைவில் பத்திரை ஜைனமத உண்மைகளை நன்கு உணர்ந்தாள். அதனுடன் பௌத்தமதத்தை ஒப்பிட்டுப் பார்த்தாள். பலவகையிலும் ஜைனமதம் ஏற்றமுடையதாகவே அவளுக்குப் புலப்பட்டது. ஸத்துகனைக் கொன்ற பாவம் பஞ்ச நமஸ்கார மந்திரத்தாலேயே போய்விட்டது என்று ஆர்யாங்கனை கூறியபோதிலும், பத்திரை அதை நம்பவில்லை. ஒவ்வொரு கணமும் ஸத்துகன் தன்முன் நின்று பேசுவதுபோலவே இருந்தது அவளுக்கு.

ஒரு நாள் ஆர்யாங்கனை, அசோக மரத்தின் நிழலில் அமர்ந்து அருகனைப் பற்றிப் புகழ்மொழி கூறிக்கொண்டிருந்தாள். அவற்றைக் கேட்டு உவந்திருந்தனர் தவமகளிர். அப்போது பத்திரை ஆர்யாங்கனையை நோக்கி, "தாயே! பௌத்தமதக் கொள்கைகள் தீயனவாயிருந்தாலும், சிராவகயானத்தைச் சேர்ந்தவர்களிடம் குற்றம் இல்லையே! அதுவல்லாமல், புத்தன் உத்தமனா? இழிந்தவனா? அவனால் உலகுக்கு நன்மையா, தீமையா? அவன் வழியைப் பின்பற்றியவர்கள், மோக்ஷம் அடைய முடியுமா, முடியாதா? இந்தச் சந்தேகங்களை எனக்குத் தெளிவிக்க வேண்டும்" என்றாள்.

பத்திரையின் கேள்விகள் ஆர்யாங்கனையைத் திகைக்கவைத்தன. நுண்ணறிவும், கல்வி முதிர்ச்சியும், மத ஆராய்ச்சியும் உடையவள் பத்திரை என்பதை ஆர்யாங்கனை உணர்ந்தவள். அதனால், அவள் சிறிதும் கோபம் கொள்ளவில்லை. 'தவப்பள்ளிக்கு வந்து பதினைந்து நாட்கள் ஆவதற்குள், இவ்வளவு ஆற்றலும் துணிவும் இவளுக்கு எப்படி வந்தன?' என்றுதான் திகைப்புற்றாள்.

"பத்திரை; உன் கேள்விகள் நேர்மையான

வையே! இப்போது அவற்றை ஆராய்வதற்குச் சமயம் இல்லை என்றாலும், உன் விருப்பத்திற்கு இணங்கிக் கூறுகிறேன் கேள். உலகில் எங்கள் ஜைனமதத்தைப் போல் உயர்ந்த கொள்கைகள் உடைய மதமே இல்லை. இதை நீ அறிவாய். பௌத்தமதத்தில் சிராவகயானத்தைச் சேர்ந்தவர்கள் ஒருவாறு குற்றமில்லாதவர் என்பது உண்மைதான்; ஆனால், அவர்கள் கொள்கைகள் தீயன என்பதில் சந்தேகமில்லை. புத்தன் உத்தமனே அல்லன்! உலகிலுள்ள உயிர்களின் இடர் தீர்த்து உயர் இன்பம் அளிக்கும் சொல்லுடைய எம் அருகத பரமேஷ்டியே உத்தமன். உயிர்களுக்கு இடர்தரும் துன்பச்சொல் உடையவனே புத்தன்! உனக்குச் சந்தேகம் ஏன்? அவன் வழியைப் பின்பற்றியதால் முன்பு நீ அடைந்த துன்பங்கள் நினைவில்லையா? உன் அநுபவமே அதற்குப் போதிய சாக்ஷியமல்லவா?"

"தாயே! நான் அடைந்த துன்பங்களுக்கு, நானே காரணமோ, அன்றி அவன் வழியைப் பின் பற்றியதே காரணமோ நான் அறியேன். தாங்கள் அவன் மீதுள்ள குற்றங்களை எடுத்துக் கூறினால் நம்புவேன்."

பத்திரையின் உறுதியான வார்த்தைகளைக் கேட்ட ஆர்யாங்கனை ஆலோசனை செய்தாள். 'புத்தனிடம் இன்னும் இவளுக்கு நம்பிக்கை இருக்கிறது. இதைப் போக்க வேண்டியது என் கடமை' என்று துணிந்தாள்.

"பத்திரை, நீ விரும்பியபடியே சொல்லுகிறேன். ஆனால், அறவுரை கேட்க யாவரும் இப்போது காத்திருக்கின்றனர். எனினும் சுருக்கமாகச் சொல்கிறேன் கேள். 'புத்தன் புண்ணிய பாவங்களைச் செய்தவர் அந்தப் பலனை அநுபவித்தல் இல்லை என்பதை அறிந்திருந்தும் உயிர்களை, 'புண்ணியம் செய்யுங்கள், பாவத்தை ஒழியுங்கள்!' என்று உபதேசித்துக் கிலே

சத்தை உண்டுபண்ணினான். புண்ணிய பாவங்கள் செய்தவன் அப்போதே அழிகின்றான் ஆதலால், அதன் பயனை அநுபவியான் என்று கூறிவிட்டு 'இன்ன புண்ணியம் செய்தவன் இன்ன பயன் பெறுவான்; இன்ன பாவம் செய்தவன், இன்ன துன்பம் அடைவான்' என்று பொய் கூறுதல் நேர்மையா? பொய் கூறுவதற்கும், கொலை செய்வதற்கும், களவு புரிவதற்கும் ஒரு வரம்பு கூறுகிறான்! காம சேவை உடையவனாகவும் உள்ளான்! வீதல் முதலிய ஐந்து அங்கங்களில் குறையக் கொன்றது கொலையல்ல, கொன்றவனுக்குப் பாவம் இல்லை என்கிறான். விலைகொடுத்து வாங்கிய மாமிசம் தின்பார்க்குக் கொலைப் பாவம் இல்லையென்று கொலைபுரியச் சொல்கிறான்! உறுப்பு என்ற மாத்திரை வைப்பது காமம் அன்று என்று காமசேவையை வளர்க்கிறான். கள் என்ற நினைவின்றிக் கள் குடித்தவர்களுக்குப் பாவம் இல்லையென்றும் மகாயான, மந்திரயானத்தவர்கள் கள் குடிக்கலாம் என்றும் கூறுகிறான். பிறர் பொய்யென்று அறியாமல் சொல்லும் பொய், பொய் அல்ல என்று பொய்கூறச் சொல்கிறான்! இன்னும் பலவகையாலும் உலகத்துக்குத் துன்பமே செய்தான். அவனால் உலக முழுவதிலும் தர்மம் அழிந்து அதர்மம் வளர்ந்துவிட்டது. புத்தன் பெரும்பாதகன் என்பதில் சந்தேகமே இல்லை. அவனால் உலகுக்குத் தீமையே என்பதிலும் ஐயமில்லை. அவன் வழியைப் பின்பற்றியவர் மோக்ஷம் அடையமுடியாது! புத்தனே மோக்ஷமடைதலின்றி, அறிவிழந்து, பல பிறப்பும் பெறுகிறான். கொலை, களவு, கள், காமம், பொய் இவற்றினின்றும் நீங்கியவனே உத்தமன் என்றும் மற்றையோர் தோஷவான்களே என்றும் எம் அருகத பரமேஷ்டியே கூறியுள்ளார். புத்தனோ, 'ஆத்மா என்பதே இல்லை' என்கிறான். 'துக்கம் உண்டு; துக்கத்தைச் செய்வோனும் செயலும் இல்லை' என்கிறான். அவை அஞ்ஞானம் என்கிறான். மோக்ஷம்

உண்டு, மோக்ஷிக்குப் புருஷன் இல்லை என்கிறான். மோக்ஷத்திற்கு வழியுண்டு; அவ்வழியில் செல்வோரில்லை, அது அவித்யை என்கிறான். பௌத்தர்களே, புத்தன் சர்வக்ஞனல்லன் என்று கூறுகின்றனர். வினை வென்றோனாகிய எம் அருகத பரமேஷ்டி ஒருவனே சர்வக்ஞன். பத்திரை, இப்போதாவது உன் மனம் தெளிந்ததா?'' என்று புன்முறுவல் செய்தாள் ஆர்யாங்கனை.

பத்திரை ஆர்யாங்கனையின் மொழிகளைக் கேட்டு வியப்புற்றாள். புத்தன் கொள்கைகளிலும் செய்கையிலும் வெறுப்பே உண்டாயிற்று. உடனே ஆர்யாங்கனையை வணங்கி, "தாயே, உண்மையை அறிந்தேன். இன்றுமுதல் யானும் இம்மகளிருடன் நிகண்டவாதத்தைப் பின்பற்றுகிறேன்'' என்றாள். ஆர்யாங்கனை அதற்கு மகிழ்ந்து உடன்பட்டாள்; உடனே, நிகண்டவாதக் கொள்கையைப் பற்றி எடுத்துக் கூறலானாள்.

"பத்திரை. சதேந்திரர்களால் வணங்கப்படும் இறைவன் அருகனே எமது ஸ்வாமி! அவன் அருளிச் செய்த அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதி யாகமம் மூன்றிலும் கூறப்படும் பொருள்கள், தருமாஸ்திகாயம் முதலிய பத்து. அப்பொருள்கள் ஒவ்வொன்றும், தன் தன்மையதாயும், தோன்றிய இடத்தின் தன்மையதாயும், ஒரு பொருள் ஒரே கணத்தில் நித்தியத்தன்மை, அநித்தியத்தன்மை இரண்டையும் அடைந்தும், ஒரு பொருள், ஒரே கணத்தில் உற்பத்தி, ஸ்திதி, நாசம் மூன்றையும் அடைந்தும் காணப்படும். அவற்றுள் தருமாஸ்திகாயம், எங்கும் உள்ளதாய் எக்காலத்தும் பொருள்களை நடத்தும். அதன்மாஸ்திகாயம் எப்பொருளையும் நிற்கச்செய்யும். காலம் குறு நிகழ்ச்சியையும் நெடு நிகழ்ச்சியையும் ஆக்கும். ஆகாயம் எல்லாப் பொருட்கும் இடம் கொடுக்கும் இயல்புடையது. ஜீவன்

உடலுடன் ஒத்துக்கூடிச் சுவை முதலிய புலன்களை நுகரும். பரமாணு, புற்கலமும் புறவுருவும் ஆகும். நல்வினை நல்வினையையும், தீவினை தீவினையையும் உண்டாக்கும். இருவினை வரும் வழியையும் கெடுத்து, முற்பிறப்பில் செய்த வினைப்பயனை அநுபவித்துப் பந்தத்தை அறுத்துவிடின் வீடு பெறலாம். இவையே எமது நிகண்டவாதத்தின் முடிந்த முடிபு. இவற்றை மனத்தில் பதித்து ஒழுகினால், நீ எமது அருகத பரமேஷ்டியின் பதத்தைப் பெறுவாய்.''

ஆர்யாங்கனை இவ்வாறு கூறியதும் பத்திரை அகம் களித்தாள். யாவரும் எழுந்து தவப்பள்ளியை அடைந்தனர். பத்திரை நிகண்டவாதத்தைப் பின்பற்றியவளாய், நாள்தோறும் அருகத பரமேஷ்டியை வழிபட்டுவந்தாள். ஜைனமத உண்மைகளை உணர்ந்து மிக விரைவில், உயர்ந்த நிகண்டவாதியாக விளங்கினாள் பத்திரை. அவள் அறிவுத் திறமையையும் பரிபக்குவத்தையும் கண்ட சமணர் யாவரும் அவளை நன்கு மதித்தனர். நிகண்டவாதத்தை எங்கும் பரவச் செய்து, பௌத்தமதத்தை அழித்துவிட வேண்டும் என்று பகற்கனவு கண்டாள் பத்திரை.

## 35

## அருக்க சந்திரர்

ஒரு மாதம் முடிந்தது; பாடலிபுரத்தில் சமணப் பள்ளியில் இருந்துவந்தாள் பத்திரை. அங்கே அவள் வந்து ஒரு மாதம் ஆகிவிட்டது. துறவு பூண்ட சமணப் பெண்மணிகளின் குழுவில் இவளும் ஒருத்தியாக விளங்கினாள். அந்த ஒரு மாதத்திற்குள் பத்திரை, சமண சமயத்தைப்பற்றித் தெரிந்துகொண்டவை பல. ஆனால் அவள் மனம், பௌத்த சமயத்தைப் பற்றிய நினைவில்லாமல் இருக்கவில்லை. சமண சந்நியாசினிகளின் தலைவியான ஆர்யாங்கனை பத்திரைக்

குப் பலவாறு பல உண்மைகளை உணர்த்தினுள் என்ருலும், பத்திரையின் மனம் தெளியவில்லை. பௌத்த மதத்தைப்பற்றிப் பல குற்றங்களை அவள், பத்திரைக்குப் புகட்டியதோடு ஜைன சமயத்தைப் பற்றிய உண்மைகளையும் எடுத்துரைத்தாள். ஜைன மதத்தின் உண்மைகளை உணர்ந்த பத்திரை அம்மதத்திலும் பல குற்றங்கள் இருப்பதாகவே எண்ணினுள். அதனுலேயே பத்திரை துறவு பூணுமல், அவர்களிடம் அறவுரைமட்டும் கேட்டுக்கொண்டும், பணிவிடை செய்துகொண்டும் ஜைனமதத்தைத் தழுவி வந்தாள். பத்திரைக்கு இன்னும் மனம் துணிவு பெறவில்லை என்பதை உணர்ந்த ஆர்யாங்கனை, அவளுக்கு மேலும் மேலும் பௌத்தமதத்தைப் பற்றிய தூஷணைகளையும் ஜைனமதத்தைப் பற்றிய புகழுரைகளையும் கூறி வந்தாள். நற்காட்சி நன்ஞானம், நல்லொழுக்கம் என்னும் ரத்தினத் திரயங்களைப்பற்றியும், நால்வகைப் பிறவித்துன்பம், நிலையாமை, தானம், தானப்பயன், சீலம், சீலப்பயன், காட்சிப்பயன், வீடுபேறு, சமவசரண மேன்மை, பஞ்ச நமஸ்காரத்தின் உயர்வு முதலியனபற்றியும் எடுத்துரைத்தாள். இவற்றைக் கேட்டுவந்த பத்திரை, மத ஆராய்ச்சியில் ஈடுபட்டாள். அவள் உள்ளத்தின் நாலுபுறமும் கொந்தளித்து எழுந்த துக்க அலைகளை அடக்கியிருப்பதற்கு, மத ஆராய்ச்சியே தக்க மருந்து என்று அவள் எண்ணினுள். இல்லையேல் அவள் சமணப்பள்ளியில் மன அமைதிபெற்று வாழமுடியுமா? தன் துக்கத்தை மறந்திருக்கத் துணைபுரியும் மார்க்கம் அதைவிடச் சிறந்தது வேருென்றும் இல்லை என்று எண்ணினுள்.

சமண சந்நியாசினிகளாகிய மகளிர்க்கும் பத்திரைக்கும் எவ்வளவோ வேறுபாடு இருந்தது. அழகும், இளமையும் வாய்ந்த மகளிர் பலர் அங்கே இருந்தாலும், பத்திரைக்கும் அவர்களுக்கும் மிக்க வேறுபாடு

இருந்தது. அதற்குக் காரணம் பத்திரை இன்னும் துறவு பூணுமையே! சமண மகளிர் யாவரும், தலை மயிர் பறிக்கப்பட்டவராய் விளங்கினர். அவர்கள் உள்ளம் தூய்மையுடன் இருந்தாலும் அவர்கள் மேனி தூய்மையற்று விளங்கியது. அவ்விதம் இருப்பதே மேன்மை என்றும் ஜீவகாருண்ய லக்ஷணம் என்றும் எண்ணினர். அவர்கள் வாழ்ந்த இடம் நகர்ப் புறமாய், சோலையால் சூழப்பட்டு ஆடவர் காண முடியாததாய் அமைந்திருந்தாலும் உடலுக்குப் போதுமான ஆடையை அவர்கள் அணிந்திருக்க வில்லை; கிழிந்ததோர் சிறு ஆடையையே அணிந்திருந் தனர். இரவில் விளக்கு ஏற்றுவதே அவர்களுக்கு வழக் கமில்லை. இவை பத்திரைக்கு முற்றும் மன மாறுதலை அளித்தன.

பத்திரையோ அடர்ந்து சுருண்ட கூந்தலுடைய வள். அங்கமுற்றும் ஆடையால் போர்த்திருந்தும் இன்பமயக்கால் செழித்து வனப்புற்ற அவள் மேனி பொலிவுடன் விளங்கியது. பஞ்செனச் சிவக்கும் அவள் பாதம் பருக்கைக் கற்களில் நடந்து கொப்புளமுற் றிருந்தது. அறுசுவை உண்டி நுகரும் அவள், காய் முத லியன தின்று வாழ்ந்தாள். உடலை வருத்தி வாழ்வதே உயர்ந்த இன்பமாகக் கொண்ட ஜைன மகளிருடன், அவள் மேனி சேர்ந்ததால் அனல்வாய்ப்பட்ட அசோ கந்தளிரென அது வாடியது. அவள் உடல் தூய்மை பெற்று விளங்கினும், உள்ளம் மாசுற்றிருந்தது. அது சாதாரணமானதல்ல! ஒருவராலும் போக்க முடியாதபடி மாசுற்றிருந்தது அவள் உள்ளம். காதல னைக் கொன்ற கடும்பாவம் பல வடிவங்களுடன் நின்று அவள் உள்ளத்தைச் சுட்டெரித்தது. கணந் தோறும் உருகி நைந்துகொண் டிருந்தது அவள் உள் ளம். அவள் உள்ளத்தின் கொந்தளிப்பை அடக்கி, மாசை அகற்றி, மனம் அமைதி கொள்ளும்படி செய்ய ஒருவர் வேண்டுமே! பெரும் பாவ பண்டாரமாகிய

அவனைக் கடைத்தேறச் செய்ய யாரால் முடியும்? காதலனைக் கொல்லும் காதலியும் உலகில் உண்டோ?

சமண சந்நியாசினிகளுடன் வாழ்ந்த ஒரு மாதத்திலேயே, பத்திரை பெரிய மாறுதல் அடைந்தாள். நிகண்டவாதியாக அவள் நடித்தாலும் அவள் உள்ளம் ஒருவகையிலும் அமைதி பெறவில்லை. ஜைன மதத்தின்மீதும் ஆழ்ந்த நம்பிக்கை அவளுக்கு உண்டாகவில்லை.

பாடலிபுரத்திற்கு அவள் வந்த ஒரு மாதத்திற்குப்பின் ஒரு நாள். அன்று பத்திரை மிகுந்த ஆலோசனையுடன் சோலையின் ஒரு புறமாக உலாவிக்கொண்டிருந்தாள். சமணப்பள்ளியை விட்டு நினைவில்லாமல் சிறிது தூரம் சென்றுவிட்டாள். அங்கே ஓர் அசோக மரத்தைக் கண்டதும் அதன் நிழலில் அமர்ந்து யோசனை செய்தாள். எங்கும் வெயில் மிகுதியாக இருந்தாலும் சுற்றிலும் உள்ள மரங்களின் உதவியால் காற்றுக் குளிர்ந்து வீசியது. பத்திரை அசோக மரத்தின்மேல் சாய்ந்தவாறே சிறிது கண்ணயர்ந்தாள்; ஆனால் அவள் உள்ளம் எங்கோ உலவியது; பலவிதக் கனவுகளைக் கண்டது அது. சற்று நாழிகைக் கெல்லாம் அவ்வழியே சென்ற ஒருவர் அசோகமரத்தின் நிழலைக் கண்டதும் வெயிலில் நடந்த களைப்புத் தீற அங்கே அமர்ந்தார். அமர்ந்தவர் சுற்றிலும் நோக்கவே மரத்தில் சாய்ந்து கண்ணுறங்கும் பத்திரையைக் கண்டு திடுக்குற்றார்: அவள் ஆழ்ந்த நித்திரையில் இருப்பதைக் கண்டு அல்ல! உறங்கும் அவள் கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்து ஓடியது. மெய்ம்மறந்து அவள் உறங்கிய போதிலும் துக்கம் தாளாமல் விம்மிப் பொருமியது அவள் இருதயம். அவற்றைக் கண்டே அம்முனிவர் திடுக்குற்றார். உடனே சிறிது நாழிகைக் கெல்லாம், 'ஓம் நமோ புத்தாய' என்று உச்சரித்தவாறே நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டார்.

புத்த ஸ்மரணையைக் கேட்டவுடன், அடிபட்டு எழுந்தவள்போல் திடுக்குற்றுக் கண்விழித்தாள் பத்திரை. அப்போது அவள் கண்களுக்கு ஒன்றும் புலப்படவில்லை. 'ஓ' என்ற ஒலியுடன் காற்றுச் சீறியதில், மீண்டும் புத்த ஸ்மரணையின் சப்தம் அவள் காதுகளில் புகுந்தது. கண்களைத் துடைத்து, விழித்துப் பார்த்தாள் பத்திரை. தனக்கு அருகில் ஒரு கம்பீர புருஷர் அமர்ந்திருப்பதைக் கண்டாள். அவர் வடிவத்தைக் கண்டதும், பத்திரையின் உள்ளம் படபடத்தது; அவள் நினைவு மாறியது. காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் பிக்ஷுக்களின் நினைவு எழுந்தது. 'இவர் யார்? பௌத்த பிக்ஷுவைப்போல் தோன்றுகிறாரே? நம் நாட்டினர்போல் இல்லை; இவருடைய கம்பீரத் தோற்றம் பார்க்கப் பிரமிப்பையும் பயத்தையும் கொடுக்கிறதே! இவர் யாரோ? என் மனத்திற்குச் சஞ்சலத்தைக் கொடுக்கிறது இவர் வடிவம்! காரணம் என்ன? அந்தோ, தனிமையில் தவப்பள்ளியைவிட்டு ஏன் இங்கே வந்தேன்? இந்த நிலையில், என்னை அந்தச் சமண மகளிர் கண்டால் என்ன நினைப்பார்கள்? விரைவில் இவ்விடத்தைவிட்டு அகலலாம் என்றால் இவரைப்பற்றி அறியாமல் போவது முறையா?'—இவ்வித நினைவலைகளினூடே பரிதவித்த பத்திரையைக் கண்டு, அந்தப் பௌத்த பிக்ஷு புன்முறுவல் பூத்தார். அதைக் கண்ட பத்திரை, துணுக்குற்றவளாய்ப் பரபரப்புடன் எழுந்து நின்று அவரை மருண்டு நோக்கினாள். பெண்டிர்க்கு இயல்பாயுள்ள நாணம், அவளைத் தலைகவிழச் செய்தது. 'இந்தப் புன்முறுவலுக்கு என்ன பொருள்?' என்று கேட்பவள்போல் மீண்டும் அவரை நடுக்கத்துடன் நோக்கினாள். ஓரடி அப்புறம் எடுத்துவைக்கவும் தைரியமின்றித் தளர்ந்து நின்றாள். பௌத்த பிக்ஷுவின் புன்முறுவல் பத்திரையைச் சுட்டு எரித்தது. அவருடைய ஒளி நிறைந்த பார்வையும், எல்லை காண முடியாத பொருள் நிறைந்த தூய புன்முறுவலும்

பத்திரையின் உடலையும் உள்ளத்தையும் ஒரு கணத்தி லேயே ஒடுக்கிவிட்டன. 'இவர் பார்வையின் ஒளி என்னைச் சாம்பராக்கும் அனல்பொறியோ? இந் தப் புன்முறுவல் என்னை உயிர்ப்பிக்கும் ஜீவ சக் தியோ?'' என்று திகைப்புற்றாள். அவளை அறியாமல் அவள் கைகள் அந்தப் பிக்ஷுவை வணங்கின. காற்றில் அலைந்தாடும் தளிர் நிறை மலர்க் கொடியென அவள் மேனி சிலிர்த்து நடுங்கியது.

'அடாத செயலால், அலைப்புண்ட பெண் பேய் இவள்' என்று ஆழ்ந்து அறிந்த அந்தப் பிக்ஷு மீண் டும் நகை செய்தார். அந்த நகைக்கு 'அபயம்' என் பது பொருள் என்று குறிப்பதுபோல் கைகவிழ்த் தார், பத்திரையை நோக்கி. சந்திரனைக் கண்ட சந்திர காந்தம்போல், பிக்ஷுவை நோக்கிப் பத்திரை கண் ணீர் உகுத்து நின்றாள். ஆன்று அவிந்து அடங்கி யவரும், ஆசை வேரை அறுத்தவருமாகிய பௌத்த பிக்ஷு, 'தன்னிடமுள்ள பெருங்குற்றங்களுக்குப் பெரி தும் இரங்கிக் கண்ணீர் கசிகின்ற இப்பாவையைத் தண்ணளி செய்து நல்வழிப் படுத்துவது நம் கடமை' என்று எண்ணினார். புத்தர் பெருமானின் பேர றத்தை நாடெங்கும் எடுத்துரைத்து வந்த, பௌத்த பிக்ஷு பௌத்த தருமமாகிய அமிர்தை அவளுக்கும் அளிக்கத் துணிந்தார். "பெண்ணே! நீ துக்கத்தால் பெரிதும் கலங்கியிருப்பதை அறிந்தேன். உன் இருப்பி டம் எங்கே? தனியே இங்கே இருக்கக் காரணம் என்ன?'' என்று வினவினார். அவர் வார்த்தைகளைக் கேட்ட பத்திரை சிறிது தைரியம் அடைந்தவளாகித் தன் வரலாறு முழுவதையும் ஒன்றுவிடாமல் கூறினாள்.

பௌத்தபிக்ஷு யாவற்றையும் கேட்டார். தான் நினைத்தவாறே அவள் வாழ்வும், பெரும் பாவம் நிறைந்திருப்பதை உணர்ந்தார். பத்திரையின் செய் கைகள் ஒவ்வொன்றும் அவருக்கு வியப்பை அளித் தன. 'பேயின் தன்மையை உடையவர் பெண்டிர்;

இல்லையேல், காதலனைக் கொல்லும் காதலியும் உலகில் உண்டோ?' என்று வியந்தார். பௌத்த மதத்திலிருந்து, ஜைனமதத்திற்கு அவள் மாறியதையும் சமண மகளிர், பௌத்தமதத்தின்மீது குறை கூறியதையும் கேட்ட அவர், பரபரப்புற்றார். பௌத்த மதத்தின்மீது அவர்கள் சுமத்திய பழிகளையும், பத்திரைக்கு அம்மதத்தில் இருக்கும் அவநம்பிக்கையையும் போக்க அவர் உறுதிகொண்டார். பௌத்தமத உண்மை உயர்வுகளைப் பத்திரைக்கு அறிவுறுத்த முற்பட்டது அவர் உள்ளம். அவற்றை அறிய அவாவியது பத்திரையின் உள்ளம்.

"பத்திரை, உன்னைப் பவித்திரையாக்க வல்லவை புத்தர் பெருமானின் அறவுரைகளேயாகும். உன் சந்தேகங்களை முற்றும் அகற்றுவதற்கென்றே பகவான் புத்தர் என்னை இங்கே அனுப்பியுள்ளார். நீ விரும்பினால், இன்று புத்தர் பெருமானின் உயர் நீதிகளையும், சமயக் கொள்கைகளையும் கூறுகிறேன்" என்றார்.

பத்திரை அவர் அருகில் சென்று வணங்கினாள். அவரை மும்முறை வலம் வந்தாள். "ஐய, யான் செய்த புண்ணியப் பயனே, தங்களை இங்கே நான் கண்ட காரணம். தாங்கள் கூறும் அறவுரையைக் கேட்க மிகவும் விருப்பமுடையேன். என் ஐயங்கள் அகன்றால், அது ஒன்றே போதும்" என்று பத்திரை கூறினாள்.

"பத்திரை, நான் இந்தப் பாரத பூமி முழுவதும் யாத்திரை செய்துவிட்டேன். பௌத்த மதத்திற்கு மாறு கூறும் யாவரையும் வாதில் வென்றுவிட்டேன். நான் வாழும் இடம் உஞ்சை நகர். என் பெயர் அருக்கசந்திரன் என்பார்கள். இப்போது காவிரிப்பூம் பட்டினம் போகவேண்டுமென்றே இவ்வழியே வந்தேன். உன்னைக் கொண்டே அந்நகரில் உள்ள பௌத்த முனிவர்களைப்பற்றி அறிந்துவிட்டேன்.

எனினும் இன்று உனக்குச் சில உண்மைகளைக் கூறியபின்பே நான் போகவேண்டும். இதோ சூரியன் அஸ்தமித்துவிட்டான். சந்திரனும் உதயமாகிறான். நான் சிறிது புத்தனைத் தியானித்துவிட்டு உனக்குக் கூறுகிறேன். இவ்விடத்தே அமர்ந்திரு!" என்று கூறிவிட்டுத் தியானத்தில் அமர்ந்தார், அருக்க சந்திர முனிவர். பத்திரையும் மெய்மறந்தவளாகி அவர் மொழிக்கு இணங்கிக் கீழே அமர்ந்தாள்.

சூரியன் மேலைக் கடலில் மூழ்கினான். அருக்கசந்திரன் அறவமிர்த்ததைப் பொழிவதற்கு முன்பாக முழுமதி தண்ணிலவாகிய அமுதை எங்கும் சொரிந்தான். அமைதி குடிகொண்டிருந்தது அந்தச் சோலையில். பறவைகளின் இன்குரல்மட்டும் சிறிது நேரத்திற்கு ஒருமுறை ஒலித்தவண்ணமாக இருந்தது. அப்போது அவ்வழியே பத்திரையைத் தேடி வந்தனர் இரு சமண மகளிர். நிலவின் ஒளியில் பத்திரை வடிவமும், பௌத்த பிக்ஷுவின் வடிவமும் அவர்கள் கண்களுக்குப் பட்டன. உடனே துணுக்குற்றவர்களாய் மறைந்து நின்று பார்த்தனர். புத்த ஸ்மரணை செய்யும் அவரைப் பௌத்த பிக்ஷு என்று எளிதில் அறிந்துகொண்டனர் அவர்கள். பத்திரைமீது சந்தேகமும், கோபமும் கொண்டனர். உடனே விரைந்து சென்று, அவ்விஷயத்தை உணர்த்துவதற்குத் தவப் பள்ளியை நோக்கி ஓடினர். ஆர்யாங்கனையிடம் தாம் கண்டதைக் கூறினர். ஜீவ காருண்யத்திற்காக இருட்பொழுதில் நடவாத விரதம் கொண்ட சமணமகளிர், 'விடிந்தபின் கவனிப்போம்' என்று இருந்துவிட்டனர்.

## 36

## தருமசாரம்

நிசப்தமாக இருந்த அந்தச் சோலையில், அருக்கசந்திர முனிவர், பௌத்த தருமங்களைப் பத்தி

ரைக்குப் போதிக்கலானார். பத்திரை மனமொழி மெய்களால் ஒருமை பெற்று, தன் நினைவற்று முனிவரின் அறவுரையைக் கேட்கலானாள். எவ்வாறேனும் பௌத்த உண்மைகளை உணர்ந்து தெளியவேண்டும் என்பது அவள் உள்ளத்தின் துணிபு. பௌத்த மதப் பிரசாரகரும், ஞான வீரருமான அருக்கசந்திரர் பத்திரையைப் பவித்திரமானவளாக ஆக்க உறுதி கொண்டார்.

"பத்திரை, சமண சந்நியாசினிகள் பௌத்த மதத்தைப்பற்றிக் கூறிய குறைகளை மறந்துவிடு. மததூஷணைக்கு எல்லையே இல்லை. பகவான் புத்தருடைய கொள்கைகளை உண்மையாக உணர்ந்தவர்கள் சிலர்தாம். அவர்களுடைய கருத்தை அறியாமல் தமக்குத் தோன்றியவாறெல்லாம் கூறித் திரியும் பௌத்த பிக்ஷுக்களும் உண்டு. அந்தக் காரணத்தைக் கொண்டு பௌத்தமதத்தையோ புத்தர்பெருமானையோ இகழ்ந்துகூறுவது முற்றும் தவறாகும். புத்தருடைய மாணவர்களே, பிறழ்ந்து தவறான கொள்கைகளைக் கூறும்போது சமண சந்நியாசினிகள் கூறுவது வியப்பே அன்று. ஆதலால் உண்மையான ஒரு குருவை அடுத்து உண்மையை அறிவதே மேன்மையாகும்" என்றார்.

"ஸ்வாமி. நானோ பெரும் மாயச் சுழலில் உழன்றவள். எனக்குத் தாங்களே உண்மைகளைக் கூறி, என்னை நல்வழிப் படுத்தவேண்டும்! நான் அறிந்த வரையில் பௌத்தமதத்தைப் பற்றி விசேஷமாகப் புகழ்வதற்கு ஒன்றும் தெரியவில்லை. தாங்களே அருள் செய்யவேண்டும்" என்று பத்திரை வேண்டிக்கொண்டாள்.

'பத்திரை, உலகத்தில் எல்லாம் துக்கம்; புத்ததேவரின் வழியைப் பின்பற்றி, நிர்வாணம் அடைந்த பின்பே துக்கம் அகலும். அந்தத் துக்கத்தை அகற்ற முயல்வதே சிறந்த தருமம். இதுவே பௌத்தர் யாவ

ருக்கும் உபதேசித்த கருத்து. இதுவே புத்தர் பெருமான் கொள்கை. முதலில் நீ பௌத்தமதத்தின் மும்மணியையும் வணங்கு: 'புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, ஸங்கம் சரணம் கச்சாமி' என்று கூறி மும்முறை வணங்கு.''

பத்திரை, முனிவரின் கட்டளைப்படி, மும்முறை, மும்மணிகளையும் கூறி வணங்கினாள்.

''பத்திரை, பகவான் புத்தருடைய மதத்திற்கு மூலம் நான்கு. அவை துக்கம், துக்கோத்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்பன. இவற்றை நான்கு சத்தியங்கள் என்று கூறுவார்கள், பிறத்தலும் துன்பம்; இறத்தலும் துன்பம்; பிணியும் துன்பம்; மூப்பும் துன்பம்; கூடுதலும் துன்பம், பிரிதலும் துன்பம்; ஆகையால் ஐம்புல ஆசையும் துன்பம். இதுவே துக்கம். நிறைவு பெறாத எல்லையுடைய ஆசையே துக்கோத்பத்தி; அது பிறப்பினும் வித்து; ஆசையை அறவே அகற்றி, தனித்து நின்று, அவ்வாசையை ஒழித்தலாகிய ஆசையின் அழிவே துக்க நிவாரணம். நற்காட்சி, நல்லொழுக்கம், நல்வாய்மை, நல்வாழ்க்கை, நற்செய்கை, நன் முயற்சி, நல்லெற்றைக் கடைப்பிடித்தல், நல்லோருடன் சேர்தல் என்ற எட்டும் துக்க நிவாரண மார்க்கம். இவற்றையே அஷ்டாங்க மார்க்கம் என்று கூறுவர்.

''பத்திரை, பௌத்த தரும ஸாரத்தை உனக்கு இதுவரையில் கூறினேன். உன் மயக்கம் நீங்கியதா?'' என்று புன்னகை செய்தார் அருக்கசந்திர முனிவர். அதுகாறும் பேச்சவிந்து சிலைபோல் இருந்த பத்திரை திடுக்குற்று, ''ஸ்வாமி. உண்மையை உணர்ந்தேன்; மயக்கம் நீங்கியது'' என்று கூறி அவரை வணங்கினாள்.

'' பத்திரை, அதோ, கதிரவன் உதயமாகுமுன் புறப்படவேண்டும். நாளைக்குள், காவிரிப்பூம்பட்டினம் போகவேண்டும்'' என்று எழுந்தார் பிக்ஷு, இள

நகையுடன். பத்திரை கண்ணீர்த் துளியுடன், மீண்டும் அவரை வணங்கி, "ஸ்வாமி நானும் உடன் வருகிறேன்; அருள்புரிய வேண்டும்" என்றாள். அருக்கசந்திரர் சிறிது ஆலோசித்துவிட்டு, "உன் விருப்பத்தை நான் தடைசெய்யவில்லை; விரைவில் போகவேண்டும்" என்று சொல்லியவாறே நடக்கலானார். முனிவரின் பாதச் சுவட்டைப் பின்பற்றிப் பத்திரையும் சென்றாள். கடற்கரை ஓரமாக உள்ள புன்னைமரக் காட்டின் வழியே இருவரும் போயினர். பாடலிபுரத்தைத் திரும்பிப் பாராமலே சென்றாள் பத்திரை. கோழிகள் கூவின. அவ்வளவில், பாடலிபுரத்தின் எல்லையைத் தாண்டி நெடுந்தூரம் போய்விட்டனர் இருவரும். விடிந்தபின் அசோகமரத்தடியில் சமண மகளிர் வந்து பார்த்தபோது பத்திரையைக் காணாமல் ஆச்சரியமும் கோபமும் கொண்டனர்.

## 37

### பெண்ணா, பேயா?

"இதுதான் காவிரிப்பூம்பட்டினம். அதோ தெரிகிறது பாருங்கள், இந்திரவிஹார பௌத்த சங்கம்!" என்று சுட்டிக் காட்டிய பத்திரை பெருமூச்சு விட்டவாறே நின்றாள். அருக்கசந்திர முனிவர் சிறிதே நிமிர்ந்து இந்திரவிஹாரத்தையும் நகர்த் தோற்றத்தையும் பெருமிதத்தோடு நோக்கினார்; உடனே சுற்றிலும் பார்த்து விட்டு, "பத்திரை, இந்தச் சோலை, இந்த நகரைச் சார்ந்ததுதானே?" என்றார், அவள் முகத்தை நோக்கி. "ஆம்; இதற்கு உவவனம் என்று பெயர்" என்று தழுதழுத்துக் கூறினாள் பத்திரை. அவள் கண்களில் நீர்ப் பெருக்கையும், உடல் நடுக்கத்தையும் முனிவர் கண்டு வியந்தார்.

பத்திரை எதற்காக அவ்வாறு கலங்கி நடுங்குகிறாள் என்பதை முனிவர் எளிதில் உணர்ந்தார். அவள் பார்வையிலிருந்தே இதை அவர் உணர்ந்துவிட்

டார். தலை குனிந்தவளாய் ஏதோ பேசுவதற்கு முயன்ருள் பத்திரை. வார்த்தைகள் தடுமாறின. தன் கருத்தை அவரிடம் எவ்வாறு சொல்வதென்று அவள் மனம் அஞ்சி நடுங்கியது. நகர் முழுவதுமே தன்னை நோக்கி எள்ளி நகையாடுவதாக எண்ணிஞள். மங்கையர் யாவரும் பழிமொழி கூறி அவளைத் தூற்றுவதுபோல் தோன்றியது. அவையெல்லாவற்றிற்கும் இடையே அவள் உள்ளத்தில் இருவடிவங்கள் மின்னிக்கொண் டிருந்தன; அவ்வடிவங்களை அவள் மறக்கவே முடியாது. அவ்வடிவங்கள் கண்ணும் கண்ணீருமாகத் தன்னை நோக்கி அழுது புலம்புவனபோல் கண்டாள் பத்திரை. அதனுலேயே அவள் மனம் பேதுற்றுக் கலங்கியது.

'காதலனைக் கொன்ற கொடும் பாவியாகிய நான் எவ்வாறு மீண்டும் நகருக்குள் புகுவது?' என்று அவள் கலங்கிஞள் என்பதை முனிவர் உணர்ந்தார். அது உண்மையே! ஆனுலும், அவள் உள்ளத்தை நிலை கலங்கச் செய்தது, அதுமட்டுமல்ல! வேறு காரணமும் இருந்தது. அந்தக் காரணத்தை அவள் கூறிஞலன்றி முனிவர் உணரமுடியுமா?

"நாழிகையோ ஆகிவிட்டது; கண்ணீரும் கம்பலையுமாக நீ ஏன் மயங்குகிருய்? உள்ளத்தில் உள்ளதை வெளியிட்டால் நான் ஆலோசனை கூறுகிறேன். பௌத்த தருமமாகிய அமுதத்தை உண்ட நீ ஏன் கலங்கவேண்டும்? இந்த நகரார் நீ தூயவள் என்று கூறும்படி செய்கிறேன்! பழைய நினைவுகளை மறந்துவிடு. அவையெல்லாம் வினைப்பயன். இந்திர விஹாரத்திலேயே உன்னைப் பௌத்த பிக்ஷுணியாகச் சேர்த்துவிட்டு, இந்நகரை விட்டுப் போவேன் நான்; கலங்கவேண்டாம். விரைவில் என்னுடன் வா" என்று புறப்பட்டார் முனிவர்.

முனிவர் மொழியைக் கேட்டும் பத்திரை சற்றுத் தயங்கிஞள். 'அறவுரையைக் கேட்டுத் தெளிந்த பின்

பும் தன் மனம் பற்றற்ற நிலையை அடையவில்லையே' என்று கலங்கினாள். அவள் மனம் எதற்காகவோ பரபரப்புற்றுத் துடித்துக்கொண் டிருந்தது. அதனால் இன்னது செய்வதென்று தெரியாமல் பரிதவித்துத் தலைகுனிந்து கண்ணீர் ததும்ப நின்றாள். அவள் நிலையை முனிவர் நோக்கினார்; அவளைப் பற்றிச் சந்தேகம் மூண்டது அவர் மனத்தில். இரண்டடி முன் நடந்த அவர் திரும்பி அவள் அருகில் போய் நின்றார்.

"பத்திரை, உன் கருத்து என்ன? எதைக் குறித்து இவ்வாறு கலங்குகிறாய்? மீண்டும் ஏன் அஞ்ஞானச் சுழலில் அகப்படுகிறாய்? உனக்கு ஏற்பட்ட கலக்கம் என்னவென்று தெரிவித்தால் நான் போக்குகிறேன்" என்று கூறினார் முனிவர்.

பத்திரை தலை நிமிர்ந்தாள். இன்னும் பேசாமல் இருப்பது தகுதியல்ல என்று அறிந்துகொண்டாள். எனினும் அவள் மனத்தில் சஞ்சலம் விரிந்துகொண்டே இருந்தது. சற்றுத் தைரியத்துடன் அவர் பாதங்களை வணங்கினாள்.

"சுவாமி, மன்னிக்கவேண்டும். மா பாவியான நான் இந் நகருக்குள் புகுவதற்கு வருந்தவில்லை. இவ்வுலகில் இனி நான் மான அவமான எல்லையை மீறிவிட்டேன். அதனால் நான் அவற்றிற்கும் அஞ்சவில்லை. இந்திரவிஹாரத்தில் உள்ள பிக்ஷுணிகள் குழுவில் நானும் ஒருத்தியாக இருக்கவேண்டும் என்பதே என் விருப்பமும். தங்கள் அறவுரையைக் கேட்ட பின்பு, நான் துறவு பூணாமல் என்ன செய்யப் போகிறேன்? என்னை நல்வழிப் படுத்த வந்த தேவரீரின் கட்டளையை என்றும் மீற மாட்டேன். ஆனால் சொல்வதற்கு அஞ்சுகிறேன்." இவ்விதம் கூறிப் பத்திரை தயங்குவதைப் பார்த்த முனிவர், "ஏன்? உள்ளத்தில் ஒன்றும் இல்லையே! யானையுண்ட விளங்கனிபோல் வெறிச்சென்று ஆகிவிட்ட

பின் வேறு என்ன இருக்கிறது? தயங்காமல் சொல்'' என்றார்.

"ஸ்வாமி, எனக்கு இனி ஆகவேண்டியது ஒன்றும் இல்லை. எவ்வகைப் பற்றும் இல்லை. ஆனால், இந் நகரில் நான் கடைசியாக ஒரு முறை பார்க்க வேண்டிய இடம் ஒன்று இருக்கிறது. அங்கே தாங்களும் அருள்கூர்ந்து வரவேண்டும். தடை சொல்லாமல் அருள் செய்யவேண்டும்'' என்று வணங்கினாள்.

முனிவர் திடுக்குற்றார்; 'இதில் ஏதோ விசேஷம் இருக்கிறது. அது என்ன என்று அறியவேண்டும். இவள் விருப்பத்தை ஏன் தடைசெய்யவேண்டும்? போய்ப் பார்த்துவந்தால் தெரிகிறது உண்மை' என்று எண்ணினார். உடனே புன்னகையுடன், "பத்திரை, இதற்கா இவ்வளவு நாழிகை தயங்கினாய்? உன் விருப்பம்போல் வருகிறேன்; உன்னை எப்படியாவது மேல்நிலைக்குக் கொண்டுவருவதென்று விரதம் கொண்ட நான் உன் விருப்பத்தை நிறைவேற்றி என் விரதத்தையும் பூர்த்தி செய்வேன். அடைக்கலம் அடைந்த ஒரு பேதைப் பெண்ணை பிறவிப் பிணியிலிருந்து காப்பதைக்காட்டிலும் புண்ணியம் வேறு என்ன இருக்கிறது? நீ முன் நடந்து செல்; வருகிறேன்'' என்று சொல்லி நடக்கலானார்.

பெருமகிழ்ச்சி கொண்ட பத்திரை முன் நடந்தவாறே, "ஸ்வாமி, பெண்ணிலும் நான் பேர் அபலை! எனக்குத் தாங்களே புகலிடம். அல்லாமல் பெண் பாவியாகிய என்னைக் காப்பதும் தங்கள் கடமை'' என்று கூறிச் சென்றாள்.

பத்திரையும், அருக்கசந்திர முனிவருமாகக் காவிரிப்பூம்பட்டின நகருக்குள் புகுந்தனர். பல வீதிகளையும், அங்காடிகளையும் கடந்தனர்.

தன்னை யாரும் அறிந்துகொள்ளாதபடி, மேலாடையால் நன்கு போர்த்துக்கொண்டு சென்றாள் பத்

திரை. 'இவள் எங்கே போகிறாள்? எதற்காகப் போகிறாள்?' என்று வியப்பும் ஆலோசனையும் கொண்டவராக வழிநடந்தார் அருக்கசந்திர முனிவர். பத்திரையின் உள்ளத் துடிப்பு மிகுதியாகிக்கொண்டிருந்தது. பழைய நிகழ்ச்சிகளெல்லாம் அவள் அகக்கண்முன் தாண்டவமாடின. போகப் போக அவள் நடையும் உள்ளக் கொதிப்பும் மிகுதியாயின. வாய் திறவாமல் விரைந்து பின் தொடர்ந்தார் முனிவர். வழியில் இயங்கிக்கொண் டிருந்த பலரும் இவ்விருவரையும் நோக்கியபோதிலும் இவர்கள் இருவரும் ஒரே நோக்கும் எண்ணமும் உடையவர்களாக நடந்து சென்றனர். வெறிபிடித்தவள்போல் சென்றாள் அவள்; அபூர்வ சக்தியொன்று தன்னை அவ்வாறு இழுத்துச் செல்வதாக எண்ணினாள். தன் பின் நடந்துவரும் முனிவரைக்கூட மறந்தாள், மனக் குழப்பத்தால். அவள் எங்கே போக விரும்பினாளோ அவ்விடம் அணுகியது. அவ்வளவில் அவள் உள்ளம் அளவுகடந்து கொந்தளித்தது. உடலையே தூக்கி எறிவதுபோல் இருந்தது அவளுக்கு. பெரும்பாரம் ஒன்று அவளை அழுத்துவதுபோல் இருந்தது. அந்தத் துக்கபாரத்தை எவ்வாறேனும் அப்புறப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் கடுகினாள் அவள். பத்திரையைக் கண்ட அம்முனிவர் திகைத்துப் போனார்.

வீதி வழியே செல்லும் முனிவர், அங்குள்ள மாளிகைகளைக் கண்டார். மாளிகையின் உப்பரிகையிலும் சாளரங்களிலும், வாயில் மாடங்களிலும் தோன்றிய மகளிரைக் கண்டார். உடனே திகைப்புற்றார். "இது என்ன? இம்மகளிரெல்லாம் இல்வாழ்க்கை நடத்தும் நல்லற மகளிரா? கணிகையர் போல் தெரிகிறதே! இங்கே ஏன் இவள் என்னை அழைத்துப்போகிறாள்? இவ்வீதி முழுவதுமே......சீ! பேசாமல் இவ்வீதி வழியே இவளுடன் போவது தகுதியல்ல!" என்று வெறுப்புக்கொண்டார்.

“பத்திரை, நில்! இது என்ன வீதி? இவ்வீதியில் போக எனக்கு மனமில்லை. நீ எங்கே போகிருய்?’ என்று கேட்டார்.

“ஸ்வாமி பொறுக்கவேண்டும்; கணிகையர் வாழும் வீதி இது. இதோ தெரியும் இம்மாளிகைக்குத்தான் போகவேண்டும்!”

“இது யாருடைய மாளிகை?”

“சேற்றில் மலரும் தாமரை மலர்போல் இவ் வீதியில் தோன்றிய உத்தமி ஒருத்தி இருக்கிருள்! வந்தால் யாவும் விளங்கும்” என்று மேலே நடந்தாள்.

முனிவர் வியப்புடன் உடன் சென்ருர். பத்திரை அவ்வளவு விரைவாகவும் ஆதுரமாகவும் சென்றது, காதற்கணிகை சயந்தியைக் காணவேதான்! அந் நகருக்குள் அவள் புகுந்தவுடன் அவள உள்ளத்தில் தோன்றிய இரண்டு உருவங்களில் சயந்தி ஒருத்தி; மற்றென்று அவள் புதல்வன் சுகதனின் வடிவம். ‘காதற்கணிகையே ஆயினும் ஸத்துகன் ஒருவனையே உண்மையாக நேசித்த உத்தமி அவள், என்றும், அவளுக்குத் தீராத பெருந் துரோகத்தைத் தான் செய்து விட்டதாகவும், அதற்கு அவளிடம மன்னிப்புக் கேட்கவேண்டும் என்றும், அவள் முற்பிறப்பில் செய்த தவத்தால் ஸத்துகனிடமாக அவள் பெற்ற மைந்தனைக் கண்டு களிகூறவேணடும் என்றுமே பத்திரை அங்கே புறப்பட்டுவந்தாள். அதற்கு முனிவரின் உதவி அவளுக்கு அத்தியாவசியமாக இருந்தது.

சயந்தியின் மாளிகைக்குள் புகுந்தாள் அவள்; முனிவரும் புகுந்தார். வாயிற்கதவு தாழிட்டிருந்தது. கதவை மெல்லத் தட்டினாள் பத்திரை. அவ்வொலி காதுக்கு எட்டியதும் எட்டாததுமாக அவ்வளவு விரைவில பமூரென்று கதவைத் திறந்து நின்

ருள் நாகவல்லி. பத்திரையையும் முனிவரையும் கண்டதும், "நீங்கள், யார்?" என்று கேட்டுக்கொண்டே பின் நகர்ந்தாள். பத்திரையின் வடிவத்தை மட்டும் முன்பு எப்போதோ பார்த்திருப்பதாக நினைவு வந்தது அவளுக்கு. அதற்குள் பத்திரை இதழ்கள் துடிக்க, பெருமூச்சால் விம்மியவாறே, "சயந்தி இருக்கிறாளா?" என்றாள். மேல்மாடத்தைச் சுட்டிக் காட்டி, ஒன்றும் தோன்றாதவளாக இருக்கிறாள் என்ற குறிப்புத் தோன்றத் தலையசைத்தாள் நாகவல்லி. பத்திரை மின்னற் கொடியெனத் திரும்பி அருக்கசந்திரரை வணங்கி, "இவ்விடம் அமருங்கள்; பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு மேல்மாடத்தை நோக்கிப் பாய்ந்தாள். நாகவல்லி வியப்புடன் நின்றாள். அவளுடன் ஏதோ பேசியவாறே, முனிவர் ஆலோசனையுடன் அங்கே அமர்ந்தார்.

புத்ததேவனின் பிரதிமைக்கு முன்பு மண்டியிட்டு வணங்கியவாறே, வாடியுலர்ந்த பூங்கொடியெனத் தோன்றினாள் சயந்தி. தனக்கு அருகில் யாரோ ஆரவாரத்துடன் வந்து நிற்பதை, நீர்வார்ந்த கண்களுடன் துணுக்குற்று நோக்கினாள் அவள். சட்டென்று எழுந்து அகல நின்றாள். "யார் நீர்...?" என்று அயிர்த்தவாறே பதைபதைத்தாள் சயந்தி. கனவிலே பலமுறை தான் கண்ட பெண்பேயின் வடிவம் இது தானோ என்று பிரமித்தாள். கண்களில் நீர் துளும்ப, இருதயம் விம்மித் துடிக்கச் சயந்தியின் இருதளிர்க் கரங்களையும் பிடித்துக்கொண்டு மன்னிப்புக் கேட்கும் பாவனையோடு, தழுதழுத்த குரலில் ஏதேதோ கூறினாள் பத்திரை: "சயந்தி, உன் காதலரைக் காதலித்த பெண்பாவி, பத்திரை நான்தான்! அவரை வஞ்சகமாகக் கொலைபுரிந்த பாதகி நான்தான். உன்னைப்போல் உத்தமி ஒருவரும் இந்த நகரில் இல்லை. என்னைப்போல பாதகியும் இவ்வுலகில் இல்லை. என்னை மன்னித்துவிடு!......" என்று புலம்பினாள்.

பத்திரையின் வாத்தைகள் அவளேப் பிரமிக்கச் செய்தன. உண்மையை உணர்ந்தாள். 'அவரை வஞ்சகமாகக் கொலைபுரிநத பாதகி நான்தான்' என்ற வார்த்தைகள் சயந்தியின் இருதயத்தில் வேல்போல் பாயந்தன. கண் இருண்டு உடல் பதறி நின்ருள். "ஆம்! அவர் மாய்ந்தாரா? மாய்ந்தாரா?" என்று கதறியவளாகப் பத்திரையை இறுகப் பிடித்தாள். அவள் கதறலால் மாளிகையே கிடுகிடுத்தது. "மணி பல்லவத்தில் மாய்ந்தார் அவர்" என்ருள் இதழ்கள் துடிக்க.

சயந்தி செய்கையற்றவளாய்ப் பத்திரைமீது சாய்ந்து சோர்வுற்ருள். பத்திரை அவளே அணைத்த வாறே கட்டிலில் படுக்கவைத்தாள். சயந்தியின் முகத்திலே அவள் கள்ளங் கபடற்ற தூய தன்மை பிரதிபலிப்பதையும் ஸத்துகனின் பிரிவால் அவள் இருதயமே ஓட்டமற்றுத் தவிப்பதையும், அவள் மேனியில் சட்டென்று ஏற்பட்ட நடுக்கத்தையும் வாட்டத்தையும் கண்டு பத்திரை மனம் பதறிஞள். சயந்தியின் புலம்பல் அம்மாளிகையே அழுது ஓல மிடுவதுபோல எங்கும் கேட்டது. அதைக் கேட்ட நாகவல்லி முனிவரிடம் பேசுவதைவிட்டு மாடம் சென்று சயந்தியின் நிலையைக் கண்டு பதை பதைத் தாள். அருக்கசந்திர முனிவரின் உபதேசத்தால் அமைதியுற்றிருந்த பத்திரையின் உள்ளமும் கொந்தளித்துச் சுழன்றது. எனினும் விரைவில் தன் வருத் தத்தை அடக்கிக் கொண்டாள் பத்திரை. சயந்தியின் துக்கத்தை மாற்றப் பல வழியிலும் ஆறுதல் கூறிஞள் அவள்! அவள் வார்த்தைகளால் சிறிதும் சயந்தி ஆறுதலடையவில்லை. அவள் மனம் அலே வாய்ப்பட்ட துரும்புபோல் அலேந்து சுழன்றது.

அவர் மாய்ந்த பின்பும் நான் உயிரோடிருக்கி றேனே! ஐயோ! என் உயிர் இன்னும் இவ்வுலகில் தங்கியிருக்கிறேதே! அவரைப் பிரிந்து உயிர் வாழும்

நான் மாபாவி! என் உயிரும் உடலும் ஒருங்கே மாய்ந்து ஒழிவுற வேண்டும்! அவர் இல்லாத உலகில் நான் உயிர் வாழ்வது பெரிய பாதகம். என் செய்வேன்! தெய்வமே! என்னிடமிருந்து அவரை ஏன் பிரித்தாய்? ஐயோ! அவர் உயிருக்காக அரசனுடன் போராடி அவர் உயிரை மீட்ட நீயும் அவரை இழந்தாயே! பத்திரை! அன்று சுகதனுடன் கொஞ்சிக் குலாவிச் சென்ற உன்னை அப்புறம் இக் கோலத்துடனு காணவேண்டும்? விதியின் கொடுமை சகிக்க முடியவில்லையே! பத்திரை, நீ எவ்வாறு, அவரை இழந்துவந்தாய்" என்று அரற்றினுள்.

அரற்றி அரற்றிச் சோர்வுற்ற அவள் உள்ளம் ஒடுங்கியபின் பத்திரை நடந்தவற்றையெல்லாம் மெல்ல மெல்லக் கூறினுள். பத்திரை கூறி முடிந்ததும் இடி விழுந்தாற்போல் ஏங்கி மதி மயங்கிப் போனுள் சயந்தி. "ஐயோ! நீயே அவரைக் கொன்ருயா? உன் துணிவுதான் என்ன? பத்திரை, நீ பெண்ணு, பேயா? நினைக்கவும் பயமாக இருக்கிறதே உன் செய்கை! அவரைக் கொன்றபின் இரங்கும் நீ உண்மை அறிவு உடையவளா? பித்துடையவளா? என்ன காரியம் செய்தாய்? அவர் உயிரை ஒரு காலத்தில் மீட்ட நீயே அவர் உயிருக்கு அழிவைத் தேடினுயே! என்ன விந்தை? ஐயோ விதியின் விளைவு இதுவோ?" என்று அரற்றினுள். பத்திரை பலவாறு சமாதானம் கூறினுள். சயந்தியின் ஒவ்வொரு வார்த்தையும் பத்திரையின் உள்ளத்தை ஊடுருவித் துளைத்தன. ஸத்துகன் மாய்ந்த பிறகு நடந்தவற்றையெல்லாம் உரைத்துப் பின்னர் அங்கே முனிவர் வந்திருப்பதையும் கூறினுள் பத்திரை.

உடனே, சயந்தி பரபரப்புடன் எழுந்தாள். பத்திரையும் சயந்தியுமாக விரைந்து கீழிறங்கி முனிவர் இருந்த இடம் சென்று வணங்கினர். முனிவரின் பாதங்

களில் படிந்து வணங்கி அழுத வண்ணமாக இருந்தாள் சயந்தி. முனிவர் அவள் நிலையைக் கண்டு இரங்கி, உலக நிலையாமையையும் இன்ப துன்பங்களின் நிலையாமை யையும், விதியின் விளைவையும் எடுத்து உணர்த்தி ஆறுதல் கூறினார். சயந்தியைப் பற்றி நாகவல்லியின் மூலமாக அவர் உணர்ந்திருந்தார் என்றாலும் சயந்தி யைப்பற்றியும் அவளுக்கும் ஸத்துகனுக்கும் இருந்த தொடர்பைப்பற்றியும் பத்திரை, விளக்கிக் கூறினாள். அது கேட்ட முனிவர் மனம் இரங்கினார். அவர்கள் வரலாற்றை நினைக்க நினைக்க முனிவருக்கு வியப்பு உண்டாயிற்று. முனிவரின் ஆறுதல் வார்த்தைகளா லும் தரும உரைகளாலும், சயந்தியின் உள்ளம் ஒரு வாறு அமைதி பெற்றது.

அப்போது, விளையாடச் சென்றிருந்த சுகதன் வெளியிலிருந்து அங்கே ஓடி வந்தான். சுகதனைக் கண்டவுடன் ஓடி வாரி அணைத்துக் கொண்டாள் பத் திரை. இளஞ் சிறுவனாகிய அவன் பத்திரையை வெறிக்க வெறிக்க நோக்கினான். பத்திரை அவனை இறுகத் தழுவி முத்தம் அளித்து மெய்சிலிர்த்தாள். சயந்தி வாடிய முகத்துடன் கருணையோடு நோக்கி னாள் பத்திரையையும் சுகதனையும். சுகதன் ஸத்துக னுக்குச் சயந்தியிடமாகப் பிறந்தவன் என்பதை முனிவருக்கு உணர்த்தினாள் பத்திரை. முனிவர் சுகத னின் முகப் பொலிவையும் ஊக்கத்தையும் கண்டு பேரன்புடன் அவனைத் தைவந்து, "சுகதா, உன் பெயர் எம்பெருமான் புததேவனுடையது. ஆதலால் நீயும் எம்பெருமான்போல் புகழும் புண்ணியமும் பெறுவாய். உன் தந்தை எவ்வளவு தீய குணம் உடையவனாக இருந்தானோ அவ்வளவு நற்குணம் உடையவனாக விளங்குவாய் நீ; வாழ்க! சயந்தி, இப் புதல்வன் உனக்குப் பெரும் புண்ணியத்தால் பிறந்தவன். இவனைக் காப்பது உன் கடமை!" என்று கூறினார்.

முனிவர் சிறுவனுக்கு அளித்த ஆசியால் மனம் மகிழ்ந்தாள் சயந்தி. அப்போது பத்திரை உவகைக் கண்ணீருடன், "சயந்தி, என் மாளிகையும், மற்றுமுள்ள உரிமைச் செல்வங்கள் யாவும் சுகதனுடையனவே. என் அன்பின் நிதியாகிய இவனுக்கே யாவற்றையும் அளித்தேன்! இவன் நல்லறிவு பெற்று உயர்ந்தோன் ஆகும்வரையில் இவனைக் காப்பது உன் கடமை. நான் இம்முனிவர் பெருமானால் துறவு பூண்டேன். இப்போதே இந்திரவிஹாரம் சென்று பிக்ஷுணிகளுள் ஒருத்தியாகச் சேர்ந்துகொள்வேன். நீ இவனைக் காக்கும்பொருட்டு இங்கேயே வாழ்தல் வேண்டும்" என்று கூறிவிட்டு முனிவரை நோக்கினாள்.

தானும் துறவு மேற்கொள்வதாகச் சயந்தி கூறவே முனிவர் மறுத்து, "புதல்வனைக் காக்கும் நிமித்தமாக இன்னும் சில நாட்கள் நீ இங்கே இவனுடன் வாழவேண்டும். அதன்பின் நீ துறவுகொள்ளும் காலம் தானே வரும்" என்று ஆறுதல் கூறினார்.

மீண்டும் வருவதாகக் கூறிவிட்டுப் பத்திரையும், முனிவரும் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டனர். அப்போதுதான் பத்திரையின் உள்ளம் அமைதி பெற்றது. சயந்தியைக் கண்டதிலும், சுகதனைத் தழுவி மகிழ்ந்ததிலும் அவள் உள்ளம் ஆறுதலுற்றது. ஸத்துகனைக் கண்டதுபோன்ற பெருமகிழ்ச்சி கொண்டாள் பத்திரை. முனிவர் பத்திரையுடன் இந்திர விஹாரம் நோக்கிச் சென்றார். மேலாடையால் நன்கு போர்த்துக்கொண்டு நிலத்தை நோக்கியவாறே நடந்து சென்றாள் பத்திரை. அவள் நிலையைக் கண்டு முனிவர் மிகவும் இரங்கினார். இவ்வாறு உடல் சிணுங்கி உள்ளம் நாணிச் செல்லும் அவளையும் முனிவரையும் இந்திரவிஹாரம் போகும்வரையில் யாரும் நோக்காமல் இல்லை. அது ஏன்?

## 38

## குண்டலகேசி

பௌத்த மஹாசங்கத்தில் நூற்றுக்கணக்கான பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் முன்பாகக் கண்ணீர்த் துளியுடன் கைகுவித்து வணங்கி நின்றாள் பத்திரை. பிக்ஷுக்கள் யாவரும் துணுக்குற்றனர். அருக்கசந்திரர், பத்திரையின் நிலையை அங்குள்ளவர்களுக்கு விவரித்தார். அவரிடமுள்ள மதிப்பால் யாவரும் அமைதியுடன் இருந்தனர். பத்திரையைப்பற்றி, யாவரும் நன்கு அறிந்தவர்களாதலால், அவள் செய்த கொடுஞ் செயலைக் கேட்டவுடன் ஆரவாரித்தனர். பத்திரையைப் பலவாறு மேன்மைப்படுத்திக் கூறி அவளைப் பௌத்த மஹாசங்கத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று மன்றாடினார் அருக்கசந்திரர். அருக்கசந்திரரின் வார்த்தைகளை மறுத்தற்கு அஞ்சி மஹாபிக்ஷுவாகிய புத்தசத்துவர் மனம் கலங்கினார்; உடன்படவும் இல்லை.

ஆனால் அருக்கசந்திர முனிவருடைய பெருமுயற்சியால், பத்திரை, இந்திரவிஹார மஹாசங்கத்தில், பௌத்தபிக்ஷுணியாகச் சேர்த்துக் கொள்ளப் பெற்றாள்.

இந்திரவிஹாரத்து மகாபிக்ஷுவாகிய புத்தசத்துவர் முதலில் அதற்கு எளிதில் இணங்கவில்லை. ஆனால் அருக்கசந்திரரின் வார்த்தைகளுக்காகவும் அவரிடமுள்ள பெருமதிப்பிற்காகவுமே உடன்பட்டு, பத்திரையைப் பிக்ஷுணியாகச் சேர்த்துக் கொண்டார். பத்திரையைப்பற்றிப் புத்தசத்துவர் அறிவார் எனினும், ஸத்துகனின் அழிவு முதலியவற்றை அருக்கசந்திரர் கூறிய பின்பே தெரிந்துகொண்டார். ஸத்துகனின் அழிவு அவருக்கு ஒருவாறு ஆறுதலைத் தந்தது என்றாலும், காதலனைக் கொன்ற காதலியாகிய பத்திரை விஷயத்தில் வெறுப்பும் சினமுமே கொண்

டார், பத்திரையைப் பற்றி, அருக்கசந்திர முனிவர் கூறிய அச்சமயத்தில்மட்டுமே அவருக்கு வெறுப்பும் கோபமும் இருந்தன. ஆனல் அடுத்த கணத்தில் அருக்கசந்திரரின் வாய்மொழியைக் கொண்டே அவளிடம் அநுதாபமும், அருளும், அன்பும் ஏற்பட்டன அவருக்கு. பத்திரை, ஜைனமதத்தைச் சார்ந்து ஒழுகியதையும், பின்னர்த் தாம சென்று அறவுரை கூறி அறிவுறுத்தியதால், பௌத்தமத உண்மைகளை உணர்ந்து தெளிந்து, மத ஆராய்ச்சியில் திறமை பெற்று, எம்மதத்தினும் பௌத்தமதமே உயர்ந்தது என்பதைக் கண்டு தெளிந்தாள் என்பதையும் அருக்கசந்திரர் கூறினர்.

புத்தசத்துவர் பெரிதும் வியப்புற்று, பத்திரையைப் பல கேள்விகள் கேட்டு, அவள் தயக்கமின்றி விடை பகர்வதைக் கண்டு மனம் உவந்தார். பத்திரையின் திறமையைக் கண்டு, அங்கிருந்த பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் வியப்புற்றார்கள். 'வணிகன் மகளாகிய பத்திரையா இப்படியானள்? காளன் காதலியாகிய பத்திரையா இவள் ? இந்த முனிவராலேயே இவளுக்கு இவ்வளவு பயிற்சியும் திறமையும் ஏற்பட்டிருக்கின்றன ; பாவம், விதியின் விளைவாலேயே இவள் கள்வனை மணந்தாள் ! விதியின் விளைவாலேயே கணவனென்றும் கருதாமல் காதலனைக் கொன்றாள் !' என்று பலவாறு, பலரும் தமக்குள் சொல்லிக்கொண்டனர். யாவருக்கும் பத்திரையிடம் பெருமதிப்பு ஏற்பட்டது. நீண்ட நாட்களாகத் தவத் திறம கொண்ட நூற்றுக்கணக்கான பிக்ஷுக்களுக்கும் பிக்ஷுணிகளுக்கும் மேலாகப் பத்திரை பெரிதும் மதிக்கப் பெற்றாள் ! நினைக்க, நினைக்கப் புத்தசத்துவருக்கும் மற்றையோருக்கும் வியப்புண்டாயிற்று. இதுவும் விதியின் விளைவுதானே !

'எப்படி இருந்தவள் எப்படி ஆனள் ?' என்று புத்தமித்திரர் முதலியவர் திகைப்புக் கொண்டனர்.

"பிக்ஷுக்களே! இது விதியின் விளைவேயன்றி இவள்மீது, சிறிதும் குற்றமில்லை; தூய்மையால், அக்கினிக்குச் சமமாக இப்போது இவள் விளங்குகிறாள். இவள் பத்திரையாக இருந்த நிலை போய்விட்டது. பிக்ஷுணியாகிவிட்டாள். இங்குள்ள பிக்ஷுணிகள் யாவரிலும் இவள் மேம்பட்டவள். இவளே மஹாபிக்ஷுணி! இன்றுமுதல் இவளுக்குப் பத்திரை என்ற பெயர் மறைவதாக! வாரி முடிக்காது அவிழ்ந்து குழற்சியுடன் சுழன்று தொங்கும் இவ்வழகிய கூந்தலையுடைய இவளுக்கு இதே காரணத்தால் இன்று முதல் 'குண்டலகேசி' என்ற பெயர் வழங்குவதாக! குண்டலகேசி! உன் பெயரும் புகழும் வரலாறும் உலகில் என்றும் நிலைபெறுவதாக! பிறமதத்தினரையெல்லாம் வாதில் வென்று நாடெங்கும் பௌத்தமதத்தைப் பரவச் செய்வாயாக! இதுவே உன் கடமை!" என்று கம்பீரமாகச் சொன்னார், சபையை நோக்கி அருக்கசந்திரர்.

"துறவை மேற்கொண்ட இவளுக்கு, 'குண்டலகேசி' என்பது பிக்ஷுணிநாமமாக விளங்கட்டும். இப்பெயரே இவளுக்குப் பொருத்தமானது. இல்லறவாழ்வை ஒழித்துத் துறவறவாழ்வு பூண்ட இவள் புனர்ஜன்மம் பெற்றவள்தான். ஆதலால், பத்திரை என்ற பெயரை ஒழித்து, குண்டலகேசி என்ற பெயரையே வழங்கவேண்டும்" என்று உடன்பட்டுக் கூறினார் புத்தசத்துவர்.

அவ்வளவில், குண்டலகேசி, புத்தசத்துவரையும் அருக்கசந்திரரையும் வணங்கி, "யான் இந்நிலை பெற்றது முற்பிறவியில் செய்த புண்ணியப் பயனாலேதான்! என் குற்றங்களை மன்னித்து என்னை ஆட்கொண்ட போதிசத்துவருக்கு நான் என்றும் கடமைப் பட்டவள்! புத்தன் காட்டிய நெறியே நன்னெறியாகக் கொண்டு யாவரும் நடக்கவேண்டும் என்று நாடெங்கும் அவன் நெறியை நிலைநாட்டு

வேன்! இதை நிறைவேற்றியபின்பே மீண்டும் இந் நகர் திரும்புவேன்" என்று பணிவுடன் மொழிந்து அமர்ந்தாள். அருக்கசந்திரமுனிவர் அங்குள்ளவர் விருப்பத்திற்கு இணங்கி, 'புத்தனின் பரோபகார சிந்தனை' என்பதுபற்றிப் பிரசங்கித்தார்.

பத்திரை, அருக்கசந்திரமுனிவருடன் வீதியிலே முதல் நாள் சென்றதைக் கண்டவர்கள் அவளைப்பற்றிப் பலவாறு பேசிக்கொண்டனர். அதற்கு மேல் அவள், ஸத்துகனைக் கொன்றது முதலிய விஷயங்களையும், அருக்கசந்திரரால் மேன்மையுற்றுப் பௌத்தபிக்ஷுணியாகிக் குண்டலகேசி எனப் பெயர் பெற்றதையும் கூறக் கேட்டு ஆச்சரியமுற்றனர். பத்திரை குண்டலகேசியான வரலாறு மெல்ல மெல்ல நகரெங்கும் பரவியது. ஸத்துகன் மாய்ந்த செய்தியே யாவருக்கும் திகைப்பையும் உவகையையும் அளித்தது. அவன் அழிவுக்குக் காரணமான குண்டலகேசி மீது எவருக்கும் கோபமோ வெறுப்போ உண்டாகவில்லை. அதற்குப் பதிலாகப் பெருமதிப்பே ஏற்பட்டது. அதற்குக் காரணம் அருக்கசந்திரரால் அவள் மேல்நிலை பெற்றதுதான். ஸத்துகனின் அழிவும் குண்டலகேசியின் விவரமும் சோழவேந்தன்வரையில் எட்டிவிட்டன. பிரமிப்புற்று நிலைகலங்கினான் அரசன். பொன்குடுமிக்கு மனம் துணுக்குற்றது முதலில். 'ஸத்துகன் வாழ்வுக்காகப் பாடுபட்ட இவளே, அவன் மாய்வுக்கும் காரணமானாளா?' என்று மனம் கலங்கினான். 'கணவனைக் கொல்ல என்ன துணிவு இந்தப் பெண் பேதைக்கு?' என்று அரசன் வியந்தான்; 'இளந்தத்தன் உயிரோடிருந்தால் எவ்வளவு மகிழ்ந்திருப்பான்!' என்றும் நினைத்தான் அவன்.

குண்டலகேசியைப் பற்றிய பேச்சே எங்கும் உலவியது. நகரெங்கும் பரவிய இந்தப் பேச்சு, அந் நகருக்குள் அடங்கிய கணிகையர் வீதிக்குள் புகாம

லும் பரவாமலும் இருக்குமா ? கணிகையர் பேச்சுக்கு வரம்புண்டோ! கணிகையர் யாவரும் குண்டல கேசியின் விஷயத்தில் பொறாமையும் வெறுப்பும் கொண்டனர். "ஸத்துகன் தான மாய்ந்துபோனானே! இனிமேல் சயந்தி என்ன செய்வாள். வேறு யாரை யேனும்...' என்று கணிகைமகளிர் இகழ்ந்து கூறிக் கொண்டனர்.

'ஸத்துகன்தொடர்பால் கர்வம் பிடித்திருந்த சயந்தியை நன்றாக அவமானப் படுத்தவேண்டும்' என்று அவர்கள் முடிவு செய்தனர். குறும்புத் தனமே குடிகொண்ட அவர்கள் உள்ளம் ஸத்துகன் அழிவுக்கும் சயந்தியின் வருத்தத்துக்கும் மனம் மகிழ்ந்தது. அன்றுவரையில் சயந்தியிடம் அவர்கள் கொண்டிருந்த அச்சமும் மதிப்பும் ஸத்துகன் மாய் வால் எங்கோ பறந்தோடின. அன்றுவரையில் சயந் தியின் மாளிகையையே எட்டிப்பாராத அவர்கள் அன்றுமுதல் மாளிகைக்குள் எளிதாகப் புகுந்து ஒவ் வொருவராக உபசாரம் கேட்கலாயினர். சிலர் குறும்பாகப் பல கேள்விகள் கேட்டனர். சிலர் இடித் துக கூறினர். ஆறாத ஏக்கத்தால் கண்ணீரும் கம்ப லையுமாக உணர்வற்றிருந்த சயந்தி அவர்களுக்கு மறு மொழி தர முடியாதவளாக மயங்கியிருந்தாள்; கணி கைமகளிர் கருத்து இன்னது என்பதை எளிதில் உணர்ந்தே பேசாமல் இருந்தாள். சிலருக்கு ஒருவாறு மறுமொழி கூற அவள் தயங்கவில்லை. குலமகளிர்க்கு உரிய குணம் வாய்ந்த சயந்தி அரங்கமேறி ஆடல் பாடலால ஆடவரை மயக்கி இன்புறுத்தும கணிகை மகளிர்க்குச் சமமாக எங்ஙனம் பேசுவாள்? கற்புச் சால் மகளிர்க்கு இயல்பாயுள்ள பெருங்குணம் யாவும் சயந்தியிடம விளங்கின. நாணமே நல்லணியாகவும் நல்லொழுக்கமே மங்கல நாணாகவும் கொண்ட சயந்தி உடலை விலைபேசிச் சுடலையில் வேகும்வரையில் தீ யொழுக்கமே குடிகொண்ட கணிகைமகளிருக்கு

மறுமொழி கூருமல் பேசாமடந்தையாக, சிலைப்பெண்ணுக இருந்தது ஒரு வியப்பா? 'இவர்கள் இவ்வாறு இடித்துக் கூறும் நிலைக்கு நான் ஆளானேனே! என் உடல் எரிந்து கருகவில்லையே! காதலனை மாய்த்தாள் எனினும் கடு நோன்பு கொண்டு உயர்நிலை பெற்ருள் குண்டலகேசி! ஆனால் என் நிலை இவ்வாறு இகழுமாறு ஆகிவிட்டதே! நான் செய்த பெரும்பாவம்!' என்று தன்னைத்தானே நொந்துகொண்டாள் சயந்தி. 'பத்திரை பெரும் புண்ணியம் செய்தவள்! உயர் குடியில் பிறந்த அவளுக்கு உயர்நிலை கிடைத்தது. இல்லையேல், பலர் அஞ்சுகுதற்கரிய பௌத்தமஹா சங்கத்தில் பௌத்தபிக்ஷுணியாகிக் குண்டலகேசி என்று புகழப் பெறுவாளா! அவள் நிலைக்கு நான் மகிழ்வதல்லாமல் மனம் பொருமுவது எதற்கு?' என்று ஆறுதலுற்ருள்.

எவ்வகையிலும் சயந்தியின் மனம் மாறவில்லை என்பதைக் கண்ட கணிகையர், வேறுவகையில் அவளை இடித்துக் கூறலாயினர். 'குலத் தொழிலை விட்டு வேறு வழியில புகுந்தால் இந்தக் கதிதான் வரும்! இதற்கு வருந்தி என்ன செய்வது?' என்ருள் இளநங்கை ஒருத்தி 'ஏன், இப்போதுதான் என்ன கெட்டுவிட்டது! இந்நகரில் வேறு யாரும் இல்லையா?' என்று வேருெருத்தி சொன்ஞள். ஆமாம; இருந்தால் ஆகிவிடுமா? கைக்கு எட்டியதை எட்டி உதைத்தாளே! இளந்தத்தனை இகழ்ந்து தள்ளிஞளே! இப்போது ஸத்துகனும் போய்விட்டான். அவனும் போய்விட்டான். வருந்தி அழைத்தால்கூட இனி யார் வருவார்கள்?' என்று மிடுக்குடன் பேசிஞள மங்கை ஒருத்தி. ஒருவனையே சேர்ந்திருந்தால் கற்புடையவள் ஆகிவிடலாம்; உலகம் தனனைப் புகழும; பெருமையடையலாம் என்று கனவு கண்டாள் போல் இருக்கிறது! இப்போது என்ன செய்வாள்? நாம சொன்னபோது கேட்டாளா?' என்று ஏளனம்

புரிந்தாள் இன்னொருத்தி சயந்திக்கு நேராக. 'அதனால் என்ன! இனியாவது நம்முடன் சேர்ந்துகொண்டால் கவலையில்லாமல் இன்பமாக வாழலாமே! இன்னுங்கூட இவள் மனம மாறவில்லையே! சயந்தி, நாங்கள் சொல்வதைக் கேள்...' என்று அவள் அருகில் போய் நின்றுள் பருவ மங்கை ஒருத்தி. சயந்தி கோபத்துடன் எழுந்து அகல நின்றுள.

"நீங்களே பெருமையும் இனபமும் அடையுங்கள். உங்கள் பெருமையும் இன்பமும் எனக்கு வேண்டாம். எனக்கு உபதேசம் செய்ய உங்களை யார் அழைத்தார்கள்? உங்கள் மாளிகைக்குப் போய்விடுங்கள். என்னைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். போங்கள்! நாகவல்லி, கதவைத் தாழிடு. நான் போதிநாதனை வணங்கப் போகிறேன்" என்று வெடுக்கென்று சொல்லி மறைந்தாள் சயந்தி உள்ளே சென்று.

சட்டென்று வெட்கமுற்றவர்களாய்த் தங்கள் நோக்கம் நிறைவேருததைக் கண்டு அவ்விடத்தை விட்டு அகன்றனர் கணிகையர். போகும்போதே சயந்தியைப் பலவாறு இகழ்ந்து சென்றனர். அவர்கள் சென்றபின் நாகவலலி கதவைத் தாழிட்டுவிட்டாள்.

சயந்தி சிறிது நாழிகை புத்தஸ்மரணை செய்தாள் மனச் சாந்திக்காக. அவள மனம் பலவாறு அலைப்புண்டது. 'இருந்தாலும் இறந்தாலும் ஸத்துகர் ஒருவரே என் வாழ்க்கைத் துணைவர். பத்திரையைப் போல் நானும் துறவுபூண்டு தவம் செய்வதே தகுதியாகும்' என்று எண்ணினுள். குண்டலகேசியின் நினைவு அவளுக்கு வரவே, 'ஆம்; அவள மீண்டும் வருவதாகச் சொன்னளே! ஏன் வரவில்லை? இனி என்னைக் காணமாட்டாளோ? நானே நேரில் சென்ருயினும் கண்டு வருவேன்! நானும் அவளுடன் ஏன் பிக்ஷுணியாகச் சேர்ந்துகொள்ளக் கூடாது? அவள்

இங்கே எப்பொழுது வருவாள்?, என்றெல்லாம் அவள் சிந்தனை ஓடியது. அவளை அறியாமல் அவள் கண்கள் நீரைக் கக்கின்றன. ஸத்துகனை நினைத்து உள்ளம் புழுங்கினாள். சுகதனை இறுகத் தழுவி, 'அந்தோ, யான் துறவுற்றால் இவன் கதி என்ன ஆகும்! இருதலைக் கொள்ளி எறும்புபோல் ஆயிற்றே என் நிலை!' என்று கசிந்து உருகினாள். எரியுறு தளிரென அவள் மாந்தளிர் மேனி வாடிக் கருகியது. கண்கள் இடையறாது நீரைக் கான்றவண்ணமாக இருந்தன. இந்நிலையில் வாசற்கதவை யாரோ தட்டும் ஒலி கேட்டது. நாகவல்லி ஓடிச்சென்று கதவைத் திறந்தாள். குண்டலகேசி நான்கு ஆடவருடன் உள்ளே புகுந்து மேல்மாடம் சென்றாள்.

குண்டலகேசியைக் கண்டதும் துணுக்குற்று எழுந்து நின்றாள் சயந்தி. அவளுடன் வந்த ஆடவர்கள் ஒருபுறமாக நின்றனர். குண்டலகேசி சயந்தியின் அருகில் சென்று சுகதனை அழைத்து அணைத்துக் கொண்டாள். அதுகாறும் வாய்பேசாது வருத்த மிகுதியால் விம்மியிருந்த சயந்தி பத்திரையின் கைகளைப் பற்றிக்கொண்டு முகத்தைக் கவிழ்த்து விம்மி அழலானாள். குண்டலகேசியின் மனம் இளகியது. ஆசை வேர் அறுத்து அமைதியுற்ற அவள் மனமும் உருகியது; கண்ணீர் துளித்தாள்.

"சயந்தி, வருந்தாதே; உன் மனத்தில் உள்ளதை வெளியிடக் கூடாதா?" என்றாள் அவள் முகத்தை நிமிர்த்தி. ஒருவாறு ஆறுதலுடன் சயந்தி நிமிர்ந்து குண்டலகேசியைப் பார்த்தாள்.

"புண்ணியவதி, என் நிலை இவ்வாறு ஆயிற்றே! இந்தக் கணிகையர் கூட்டத்தில், அல்லற்பட்டு வாழ என்னால் ஆகாது! நானும் உன்னுடன் துறவு பூண்டு வருகிறேன். என்னையும் சேர்த்துக்கொள்!

என் வாழ்வு அப்போதுதான் புனிதமடையும்" என்ருள்.

குண்டலகேசிக்குச் சயந்தியின் கருத்துப் புலப்பட்டது. அவளை நன்னிலையில் இருக்கச் செய்யவேண்டும் என்று எண்ணிஞள்.

"சயந்தி, என்னைக் காட்டிலும் நீயே பெரும் புண்ணியவதி! அது எனக்கும் தேவனுக்கும் தெரியும். இவ்வுலகம் அறியவேண்டிய அவசியம இல்லை. நான் சொல்வதைக் கேள். இதோ வந்திருப்பவர்கள் நால்வரும என் தந்தையின் காரியப் பெயர்கள் (காரியஸ்தர்கள்). இவர்களே என் மாளிகைச் செல்வம் யாவற்றையும் காத்துவருகின்றனர். அவை யாவற்றையும் உன் மகன்—என் மகன்—சுகதனுக்கே உரிமையாக்கிவிட்டேன். இவர்கள்மூலம் என் கருத்தை அரசனுக்கு உணர்த்தி அநுமதியும் பெற்றுக் கொண்டேன. இன்று முதல் இவன்—சுகதன்—என் உடைமைகள் யாவுக்கும் அதிபதி. இவன் பொருட்டு நீ இன்னும் சிலகாலம் இவனுடன் வாழவேண்டும். இவன் நன்கு உலகமறிந்தபின், நீ துறவு கொள்ளலாம். இது என் வேண்டுகோள். இவ்வீதியில் நீ இருக்கவேண்டாம். இப்போதே சுகதனுடன் புறப்பட்டு என் மாளிகையில் வந்து வாழ்ந்திரு. அங்கே உன் மனம் சாந்தியடையும். நான் இன்றே அருக்க சந்திரருடன் யாத்திரைபோகிறேன்" என்ருள் குண்டலகேசி.

"உன் விருப்பம்போல் இப்போதே புறப்பட்டுவிட்டேன்" என்று புறப்பட்டாள் சயந்தி. அதைக் கண்டு மனம் உவந்தாள் குண்டலகேசி. சுகதன், சயந்தி, காரியப் பெயர் முதலியவர்களுடன் குண்டலகேசி வணிகவீதிக்குப் புறப்பட்டாள். நாகவல்லியும் மாளிகையின் கதவைத் தாழிட்டுப் பூட்டிவிட்டு, அவர்களுடன் சென்ருள். சிறையினின்றும் விடுதலை

பெற்றதுபோல் சயந்தியின் மனம் ஆறுதலும் அமைதியும் பெற்றது.

## 39

### நீலகேசி

குண்டலகேசிக்குக் காவிரிப்பூம்பட்டினத்தில் எல்லையற்ற மதிப்பும், புகழும் உண்டாயின. அவள் செய்கை யாவருக்கும் மகிழ்ச்சியையே அளித்தது. காதற்கணிகையாகிய சயந்தியின் புதல்வன் சுகதனுக்குத் தன் உடைமை யாவற்றையும் உரிமையாக்கியதையும், சயந்தியைத் தன் மாளிகையில் வாழ்ந்திருக்கச் செய்ததையும் நகர மக்கள் யாவரும் அறிந்து ஆச்சரியமுற்றனர். குண்டலகேசியைவிடப் பன்மடங்கு அதிகமாகவே சயந்தி மதிக்கப் பெற்ருள். அவள் புகழ் குண்டலகேசிக்கு இருந்ததைவிடப் பன்மடங்கு மிகுதியாயிற்று; இதற்குக் காரணம்: குலத்தால் இழிவுடையவளாயினும் ஸத்துகன் ஒருவனையே காதலனுகக் கொண்டு கற்புநெறி வழுவாது விளங்கினுள் என்பதே. குண்டலகேசியே அவளை நன்கு மதித்தாள் என்ருல் பிறர் மதிக்கும் பெருமையை அளவிட முடியுமோ? உண்மையில் சயந்தி கற்பிற் சிறந்த பொற்பினள் என்பதை யார்தாம் மறுப்பர்? குண்டலகேசியைவிட எத்தனையோ வகையில் சயந்தி உயர்வுடையவள் என்று ஏன் சொல்லக் கூடாது? அத்துணை மதிப்புடைய அவளைப் புகார் நகரம் போற்ருது இருந்திருக்குமாஞல் அந்நகருக்கே அது இழுக்கல்லவா? ஆதலின் சயந்தியை அந்நகர் புகழ்ந்தது ஒரு வியப்பல்ல. காதற்கணிகை குலத்தில் பிறந்தும் கற்புடைய மங்கையாகச் சயந்தி விளங்கினுள் என்பதே பெரும் வியப்பு.

குண்டலகேசி, சயந்தியிடமும் சுகதனிடமும் விடைபெற்றுப் புறப்பட்டாள். அவர்களுக்கு ஆசி

யும் அளித்துவிட்டு அருக்கசந்திர முனிவர், குண்டலகேசியுடன் வெளிக்கிளம்பினார். கண்ணீர்த் துளியைத் தரையில் சிந்தியவாறே, சயந்தி மாளிகையில் தங்கிவிட்டாள். குண்டலகேசியும் அருக்கசந்திரரும் அவ்விடம் விட்டு இந்திரவிஹாரம் சென்று பௌத்த பிக்ஷுக்களிடம் விடைபெற்றுக்கொண்டு காவிரிப் பூம்பட்டினத்தை விட்டு வெளியேறினர். புத்தசத்துவர், புத்தமித்திரர் முதலிய பிக்ஷுக்களும், பிக்ஷுணிகள் பலரும் சிறிது தூரம் உடன்சென்று வழியனுப்பினர்.

"குண்டலகேசி! பௌத்தமதக் கொள்கைகளை நாடெங்கும் பரவச் செய்து நிலைநாட்டியபின் மீண்டும் இந்நகருக்கே வந்து வாழவேண்டும். உன்னுடைய நோக்கம் எம்பெருமான் போதிசத்துவரால் இனிது நிறைவேறுவதாக! வாழ்க நீ! உன் அஞ்ஞானத்தை அகற்றி அருள் செய்த அருக்கசந்திர முனிவரும் நீடூழி வாழ்க!" என்று ஒருங்கே யாவரும் வாழ்த்தி வேண்டிக்கொண்டனர்.

அருள் ததும்ப, அன்பு கனிய அவர்களை நோக்கிவிட்டு அருக்கசந்திர முனிவரும் குண்டலகேசியும் மேல் நடந்து செல்.றனர். பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் உவகையுடன் நகர் திரும்பினர்.

ஒரு நாளைக்கு ஓர் ஊராக யாத்திரை தொடங்கினர் இருவரும். அங்கங்கே பௌத்தமதப் பிரசாரம் செய்து, பலரையும் பௌத்தமதத்தினராகச் செய்து உபதேசம் புரிந்து சென்றனர். இவ்வாறே பல ஊர்களையும் கடந்து காஞ்சி நகரை அடைந்தனர். அங்கே பலவகைச் சமயத்தினர்களும் பௌத்தர்களும் வாழ்ந்தனர். எனினும் யாவற்றுள்ளும் ஜைனமதமே மேன்மையுடன் விளங்கியது அந்நகரில். பௌத்த மதத்தினர் அங்கே வாழ்ந்தனராயினும் பலவகையிலும் ஜைனமதத்தினரால் துன்புறுத்தப்பட்டு வருந்

திக்கொண் டிருந்தனர் அவர்கள். அந் நகருக்கு 'ஜின கச்சி' என்ற பெயர் வழங்கியது. ஜைனத் தவசிகள் வாழ்வதற்கு நூற்றுக் கணக்கான மடங்கள் அங்கே இருந்தன. எங்கும் ஜினர்களின் கூட்டம். வானை அளாவ, கொடி அசையப் பொன்மயமாக விளங்கியது அருகதபரமேஷ்டியின் கோயில்.

ஜினகச்சிக்குள் சென்றதும் ஜைனர்களின் வியாபகத்தைக் கண்டு குண்டலகேசியும் அருக்கசந்திர முனிவரும் வியப்பும் கோபமும் கொண்டனர். அங்கே தங்கிய சில நாட்களிலேயே இவ்விருவருக்கும் ஜைனர்களுக்கும் சமயப் போர் மூண்டது. ஆயிரக்கணக்கான ஜைனர்கள் மிகச் சிறிய கூட்டத்தினராகிய பௌத்தர்களைச் சூழ்ந்துகொண்டனர். பௌத்தர்களின் குழுவில் விளங்கிய குண்டலகேசியும், அருக்கசந்திரரும், ஜைன தீர்த்தங்கரருடனும் அவரைச் சேர்ந்தவருடனும் வாதம் புரிந்தனர். இரு திறத்தாரும் தத்தம் மதக்கோட்பாடுகளை எடுத்துக் கூறினர். எவரும் வெற்றி பெறவில்லை. பௌத்த மதத்தின்மீது பல குற்றங்களை எடுத்துக் கூறி இழிவு படுத்தினர் ஜின முனிவர்கள். பௌத்த மதத்தின் ஒரு பகுதியினரால் கைக்கொள்ளப்பட்ட சில தீய கொள்கைகளுக்காகப் பௌத்தமதத்தின்மீது குறைகூறுவது தவறு என்று அருக்கசந்திரர் வாதித்தார். 'குற்றம் குற்றமே' என்று கூறி ஏளனம் செய்து தம்மிடம் புகுந்தனர் ஜைன முனிவர்கள்.

"பௌத்த மதத்தை இந் நகரில் நிலை நாட்டி, ஜைனர்களை வென்று ஜினகச்சி என்ற பெயரை மாற்றியல்லாது இந்நகரை விட்டுப் போகேன்! குண்டலகேசி! நீ வடநாடு சென்று அங்குள்ள ஜைனர்களையும் பிற சமயிகளையும் வென்று புத்தனின் கொள்கைகளை நிலை நாட்டுவாயாக! நான் என் வாழ்நாளை இந் நகரிலேயே கழிப்பதாக உறுதி கொண்டேன்" என்று வஞ்சினம் கூறினர் அருக்கசந்திர முனிவர்.

அவர் கட்டளைக்கு இணங்கிக் குண்டலகேசி ஜினகச்சியைவிட்டு வெளியேறினாள். ஒவ்வோர் ஊராகக் கடந்து வடநாட்டில் யாத்திரை தொடங்கினாள். அங்கங்கே உள்ள பிறமதத்தினரை வாதில் வென்றாள். குண்டலகேசியின் புகழ் மேன்மேலும் பெருகிற்று. ஆவனம் என்னும் நகரை அடைந்து, அங்கே பிரபலமுற்று விளங்கிய நாதகுப்தனார் என்ற ஜைன முனிவரையும் வாதில் வென்றாள்.

புகழும் பெருமையும் பெற்ற நாதகுப்தனாரைக் குண்டலகேசி வெல்லவே, அவள் மதிப்பு இன்னும் மிகுதியாயிற்று. அவள் வருகையைக் கண்ட ஒவ்வொரு மதத்தினரும் அஞ்சிப் பதுங்கலாயினர். குண்டலகேசி உவகை மிக்கவளாய் ஒவ்வொரு நகரையும் கடந்து வெற்றிப் புகழுடன் தென் பாஞ்சால தேசத்தை நோக்கிச் சென்றாள். அங்கே பிரதான பட்டினமாக விளங்கிய காம்பிலி நகரை அடைந்து அங்குள்ள பிற சமயிகளை வாதில் வென்றாள். தன்னோடு வாதம் புரிபவர் எவரும் இல்லை என்பதை அறிந்த அவள் அந்நகரிலேயே தங்கிவிட எண்ணினாள். காம்பிலி நகரத்து அரசனும் அதற்கு இணங்கினான். குண்டலகேசிக்கு மாறாக நடப்பதற்கு எவரும் துணிந்திலர். அரசனே அவள் சொற்படி நடக்கலானான்.

குண்டலகேசி தன் கருத்து நிறைவேறுவதற்கு ஓர் உபாயம் கண்டறிந்தாள். காம்பிலி அரசனுடைய அரண்மனை வாயிலைத் தன் இருப்பிடமாகக் கொண்டாள். அதன் முகப்பில் ஒரு நாவல் மரத்தைக் கொணர்ந்து நட்டுத் தன்னுடைய வெற்றித் தூணாக அதைக் கொண்டாள்.

அரண்மனைக்குள், எந்தச் சமய வாதியையும் புகவிடாமல் தன்னுடன் வாதம் செய்து வெல்பவரே உள்ளே புகலாம் என்று கட்டளையிட்டாள். அவள்

ஆணையைக் கடக்க அரசனும் அஞ்சினான். அவள் விருப்பப்படியே கட்டளையிட்டான். குண்டலகேசி இருந்த அரண்மனைவாயில்வழியே யாரும் புகமுடியாமல் ஆகிவிட்டது. அரசனுடைய பரிவாரங்கள் கூட அவ்வழியே போக்குவரவு இன்றித் தடைப் பட்டன. இதைக்கேட்டுப் பல நகரங்களிலிருந்து எத்தனையோ சமயவாதிகள் வந்து குண்டலகேசியை வெல்லமுடியாமல் தோற்றுத் தம்மிடம் திரும்பினர்.

இவ்வாறாகப் பல நாட்கள் ஆயின; மாதங்கள் பல கடந்தன; வருஷங்கள் பல தாண்டின. குண்டலகேசியை வெல்பவர் எவரும் இல்லை. நகர் வாயிலில் தழைத்து ஓங்கிய நாவல் மர நிழலில் புத்த ஸ்மரணை செய்தவாறே மஹாபிக்ஷுணியாகி விளங்கினாள் குண்டலகேசி. நாடெங்கும் பரவியது அவள் வெற்றிப் புகழ். பௌத்தமதத்திற்கே பெரும் புகழ் உண்டாகிவிட்டது குண்டலகேசியால். பிற மதங்கள் இருந்த இடம் தெரியாமல் பதுங்கியிருந்தன. நாவலந்தீவில் உள்ள பலவகை மதத்தினரும் குண்டலகேசியை வாதில் வெல்லமுடியாதவராகத் தோற்றோடினர். வருஷங்கள் பல கடந்தும் தான் கைக்கொண்ட விரதத்தைக் கைவிடவில்லை அவள். அவளுடன் இருந்து அவளைப் பாதுகாத்துப் பணிவிடை புரிந்துவந்தனர் நூற்றுக்கணக்கான பிக்ஷுணிகள். காம்பிலி மன்னன அவள் இட்ட கட்டளையைச் சிரமேல் தாங்கிச் செய்துவந்தான்.

இந்நிலையில் ஒரு நாள், குண்டலகேசி இருந்த வாயிற்புறத்தே ஒரு பெண் நின்றாள். தவக்கோலம் தாங்கி நின்ற அவளைக் கண்டதும் வாயிற்காவலர் திடுக்குற்று, "நீ யார்? எங்கே வந்தாய்?" என்று கேட்டனர், "காவல, என் பெயர் நீலகேசி; கந்தர்வ மகள் யான். என் வரவை அரசனுக்கு உணர்த்த வேண்டும்" என்றாள்.

"நீலகேசி! இதோ இருக்கும் பௌத்த பிக்ஷுணி குண்டலகேசியைப் பார். இவளை வென்றவர்களே உள்ளே புகமுடியும். ஆதலால் உன் வரவை நான் தெரிவித்தல் முடியாத காரியம்" என்றனர் அவர்.

நீலகேசி திகைப்புற்றவளாகக் குண்டலகேசியின் அருகில் சென்று அவள் நிலையை நோக்கினாள்.

"பகவதி, நீ இவ்வாறு இங்கிருந்து அரண்மனைக்குள் போகின்றவர்களை விலக்கும் காரணம் என்ன?" என்று நீலகேசி கேட்டாள்.

"வாதம் செய்தலில் திறமையுள்ள தவசிகளை வரவழைப்பதற்கு வேண்டி, இந்நாவல் நாட்டில் விரதம் பூண்டு வாழ்கிறேன். இதுவரையில் என்னை எவரும் வென்றாரில்லை. உன்னால் முடியுமானால் என்னோடு வாதம் தொடங்கலாம்" என்றாள் குண்டல்கேசி.

"பகவதி, என்பெயர் நீலகேசி; நான் ஜைன மதத்து ஆர்யாங்கனைகளுள் ஒருத்தி. இப்போதே உன்னுடன் வாதம் தொடங்குகிறேன்" என்றாள்.

குண்டலகேசி அதைக் கேட்டு உவந்து அரசனுக்கு அதை உணர்த்தினாள். உவகையுற்றவனாய் அரசன் அங்கே வந்து குண்டலகேசிக்கும் நீலகேசிக்கும் சமயவாதம் நிகழ்வதை நகரில் யாவருக்கும் முரசறைவித்து உணர்த்தினான். அச்செய்தியைக் கேட்டு மக்கள் பிக்ஷுக்கள், பிக்ஷுணிகள் பலவகைச் சமயத்தவர்கள் யாவரும் அங்கே வந்து சேர்ந்தனர். அரசன் அவரவர்களுக்கு உரிய ஆசனம் அளித்துச் சபை கூட்டினான். எள் விழுற்கும் இடமின்றிச் சபையில் மக்கள் நிறைந்திருந்தனர். குண்டலகேசியும் நீலகேசியும் நேருக்கு நேராக நடுவே உயர்பீடத்தில் அமர்ந்து வாதம் தொடங்கினர்.

அப்போது, "மன்னவ, நாங்கள் இப்போது வாதம் தொடங்குகிறோம். ஒன்று கூறுவேன். வாதத்தில் வென்றவருக்குச் சிறப்பும் தோற்றவருக்குப் பெருந் துன்பமும் நீ செய்தல் வேண்டும்; இது என் விருப்பம்!" என்றாள் குண்டலகேசி. அரசன் அது கேட்டுச் சம்மதித்தான்.

"குண்டலகேசி, உன் விருப்பம்போல், வென்றவருக்கு மிக்க சிறப்புச் செய்வேன்; தோற்றவரை அவமதித்து இந்நகரைவிட்டு அப்புறப்படுத்துவேன்" என்றான்.

குண்டலகேசி, பௌத்தக் கொள்கைகளை எடுத்துக் கூறத் தொடங்கி, முதலில் ஆப்த, ஆகம, பதார்த்த, பிரவிருத்திகளை (தலைவன், நூல், பொருள் நிகழ்ச்சி) மொழியலானாள்.

"ஆதியிலே பெருமையுடையனாய், ஒன்றும் இல்லையாகிய மோக்ஷத்தைத் தான் அடையும்வரையில், பிறருக்கு நன்மையை உபதேசித்தான். பிராணிகளுக்கும் தர்மத்தையே உரைத்தான். தான் ஒரு நலத்தையும் விரும்பாதவனாய்ப் பிறர்க்கு நன்மை உண்டாகவே உழைத்தான். தன்னைச் சரண் அடைந்தோரைக் காப்பாற்றினான். அத்தன்மை வாய்ந்த எம்பெருமான் புத்தனே நமக்கு இறைவன்; ஆப்தன். அவன் அருளிச் செய்த விநய பிடகம், சுத்திர பிடகம், அபிதர்ம பிடகம் என்ற மூன்றுமே நமக்கு உறுதி பயக்கும் ஆகமங்கள். இவற்றில் கூறப்பட்ட முடிவுடைய பொருள்களாகிய ரூபஸ்கந்தம், வேதனாஸ்கந்தம், விஞ்ஞான ஸ்கந்தம், ஸஞ்ஞா ஸ்கந்தம், ஸம்ஸ்கார ஸ்கந்தம் என்ற ஐந்துமே உறுதியளிக்கும் பொருள்கள். அவற்றின் பிரவிருத்தி (நிகழ்ச்சி) உண்டாதலும் அழிதலுமாகிய அநித்தியத்துவமேயன்றி, நித்தியத்துவம் இல்லை" என்பது முதலிய

கருத்துக்களைக் கூறி யாவற்றையும் விரித்துரைத் தாள்.

அவள் கூறிய ஒவ்வொன்றையும், நீலகேசி முறையே விவரித்து மறுத்துக் கூறினாள். கொலை, களவு, காமம் முதலிய பாவங்களைச் செய்ததால் புத் தன் ஆப்தன் அல்லனென்றும் அவனால் பிறருக்குத் துன்பமே விளைந்ததென்றும், கர்மவசத்தாலேயே பல பிறப்புக்கள் பிறந்து அவன் வருந்தினானென்றும், க்ஷணபங்கம் கூறிய அவன் முற்ற உணராமையால் அவனால் கூறப்பட்டது ஆகமம் ஆகாதென்றும், அதில் கூறப்பட்ட பஞ்ச ஸ்கந்தங்கள் அறிவில் பின் னமாகையால் அவை பதார்த்தம் ஆகா என்றும் அவன் கூறிய பிரவிருத்தியாகிய க்ஷணபங்கம், அவன் முன்பே கெட்டமையால் பொருந்தாதென்றும் எடுத்து விவரித்தாள் நீலகேசி. அதைக் கேட்ட சபையிலுள்ளோர் குண்டலகேசி தோற்றாள் என்று எண்ணி மகிழ்வுற்றனர். அப்போது குண்டலகேசி, புத்தனுடைய தான மகிமையைக் கூறி அவன் ஆப் தனே என எடுத்துரைத்தாள். பரோபகாரார்த்தமாக ஒவ்வொரு பிறவியிலும் அவன் ஒவ்வொரு தியாகம் செய்தான் என்பதையும் தன் கண்களை ஒருவனுக்கு அளித்ததையும், புலிக்குத் தன்னை அளித்ததையும் தன் உடம்பையே உவந்து பிறர்க்கு அளித்ததையும், தன் பூமி, பிள்ளை, மனைவி யாவற்றையும் வேண்டி யோர்க்கு அளித்ததையும் மற்றும் பல அற்புதச் செயல்களையும் எடுத்துக் கூறினாள். பரதுக்க துக்கி யாகிய புத்தன், முப்பத்திரண்டாயிரம் கற்பகாலம் பிறருக்காகப் பிறவியெடுத்து உழன்ற சரிதங்களை விரி வாக மொழிந்தாள்.

புத்தனைப்பற்றிக் குண்டலகேசி கூறிய கதைக ளைக் கேட்டுச் சபையோர் மெய்ம்மறந்திருந்தனர். நீலகேசி, சிறிது யோசித்தபின், குண்டலகேசி கூறிய ஒவ்வொன்றையும் விவரித்து மறுத்துரைத்

தாள். எண்ணிறந்த பாபங்களைச் செய்தமையா லேயே புத்தன் முப்பத்திரண்டாயிரம் கற்பகாலம் பிறவியெடுத்து வருந்தினுன் என்றும் அவன் பல வகையிலும் துன்பமே அடைந்தானென்றும் நீலகேசி கூறி முடித்தாள். அவள் வார்த்தைகளைக் கேட்ட குண்டலகேசி மறுமொழி ஒன்றும் கூற முடியாமல் பேச்சவிந்திருந்தாள். நீலகேசி வென்ருள் என்றே யாவரும் முடிவு செய்தனர்.

"குண்டலகேசி, உன் வாதம் தோற்றது. இனி வேறு வழி இல்லை. செயற்கரிய காரியங்களைச் செய் தால் யாவரும் மதிப்பார்கள் என்று அவன் எண்ணினுன்போல் இருக்கிறது. ஆதலால் நீ அவன் வழி மேன்மையுடையது என்று கூறுவது பொருந்தாது. இனி அதைப் பற்றி நீ சிந்திப்பது வீணே!" என்ருன் அரசன்.

உடனே நீலகேசிக்குப் பலவிதச் சிறப்புக்களைச் செய்வித்தான். குண்டலகேசியின் வார்த்தையின்படி வாயிலில் இருந்த நாவல் மரம் வெட்டி வீழ்த்தப்பட் டது. சபையோர் ஆர்ப்பரித்துக் குண்டலகேசியைப் பலவாறு எள்ளி நகையாடினர். அரசன் குண்டலகேசி தோற்றதை நகரெங்கும் முரசறைவித்து அவளை யும் நகர்வலம் செய்வித்து, நகரைவிட்டு வெளியேறும் படி கட்டளையிட்டான். வாய் திறவாதவளாகக் குண்டலகேசி காம்பிலி நகரைவிட்டு வெளியேறி ஞள். வாதத்தில் தோற்றுப்போனமைக்காக அவள் சிறிதும் வருந்தவில்லை. அதனுல் சிறிதும் அவளுக்குப் புத்தனிடம் பக்தி குறையவில்லை. புத்தஸ்மரணை செய்தவாறே மனமகிழ்ச்சியோடு பல ஊர்களைக் கடந்து சென்ருள். அவள் யாத்திரை புறப்பட்டுப் பல நாட்கள் ஆகிவிட்டமையால் காவிரிப்பூம்பட்டி னம் போகவேண்டுமென்று முடிவு செய்தாள். இரவு பகலாகப் பல நகரங்களைக் கடந்து காவிரிப்பூம் பட்டினத்தை நோக்கிச் சென்ருள்.

# 40

## மோக்ஷம்

'ஒளியும் இருளும் சந்திக்கும் காலம்; ஒளியை இருள் விழுங்கவும் இருளை ஒளி விழுங்கவும் மாறி மாறிப் போரிடும் காலம். அந்த இருள் ஒளிப் போரில் வெற்றியும் தோல்வியும் இரு சார்பிலும் உண்டாவது இயற்கையாகிவிட்டது. அந்தப் போராட்டத்திற்கு ஒப்பாக எதையுமே கூறமுடியாது. இருள் மயமாகி அந்தகாரம் தாண்டவம் புரியும் இருள் உலகிற்கும் ஒளிமயமாகி யாவற்றையும் ஜோதிமயமாக்கும் ஒளி உலகிற்கும் ஒப்பாக எதைக் கூறமுடியும்? தமக்கு உவமையில்லாத பெருமையுடையவை அவை! ஆனால் அவற்றின் போராட்டத்தைத் தடை செய்யவோ அதற்கு உதவி புரியவோ யாராலும் முடியாது. போராட்டத்தின் முடிவு என்ன ஆகும்? எப்போது நிற்கும் என்பதற்கு விடையே காணமுடியாது. அதற்கு எல்லை ஊழின் இறுதியோ? அந்த இருள் ஒளிப் போரின் வெற்றியும் தோல்வியுமே நம் வாழ் நாளை எண்ணி நமக்கு எல்லை கட்டுவனவாக இருக்கின்றன. நமக்குமட்டும் அல்ல; யாவற்றுக்குமே. இவ்வித எல்லையற்ற வன்மைசான்ற இருள் ஒளியின் ஆட்சிக்கு அடங்கிய நம் வாழ்வில் உண்டாகும் வெற்றியும் தோல்வியும் அத்தன்மையனவே!

வானப்பரப்பு முற்றும் எல்லையின்றிப் பரவி உலகெங்கும் ஒவ்வோர் அணுவாக ஊடுருவிச் சென்ற இருள் காவிரிப்பூம்பட்டினத்தின் அகநகரிலும் புகுந்தது. இருள் பரவிய அந்நகரில், தற்காப்புக் காரணமாக யாவரும் விளக்கேற்றியிருந்தனர்; இருள் ஒளிப் போரின் உண்மையை உணர்ந்தோ உணராமலோ தெரியவில்லை. அவ்விருட்பொழுதில், காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் வீதியின்வழியே மேற்கூறிய வாறு இருள் ஒளிப்போரைச் சிந்தனை செய்தவாறே

தளர் நடையுடன் வந்துகொண் டிருந்தது ஓர் உருவம்.

இருட்பொழுது எனினும், விளக்குகளின் ஒளியால் அவ்வடிவத்தின் முழுத் தோற்றமும் நன்கு தெரிந்தது. அவ்வடிவம் ஒல்கி நடந்துவரும் நடையில் தளர்வு இருப்பினும் அதற்கு உரிய தன்மையால் மெல்லெலன அசைந்துவரும் பூங்கொடி போலவே தோற்றியது. அவ்வடிவத்தைக் கண்டவர் யாவரும் திகைப்புறுமல் இல்லை. அவ்வடிவத்தைப் பன்முறை அவர்கள் கண்டிருந்தவராதலின், இப்போது முற்றும் மாறுதலடைந்த அவவடிவத்தைக் கண்டவுடன் பெரிதும் திகைப்புற்றனர். ஆனால் அவர்கள் யாரையும் தளர் நடையுடன் செல்லும் அவ்வடிவம் மதிக்கவில்லை. அதற்குக் காரணம் எதுவும் இல்லை. பற்றற்றான் பற்றினைப்பற்றிய அப் பெண்வடிவம் யாரை மதிக்கவேண்டும்? ஆனால் அவள் யாருக்காகவோ எண்ணி ஏங்கித்தான் அவ்வாறு சென்றிருக்க வேண்டும்.

வணிகர் வீதியின் நடுவில் அமைந்த பத்திரையின் மாளிகைக்குள்தான் அவ்வடிவம் புகத் தலைப்பட்டது. அப்போது அம்மாளிகை வாயிலின் முகப்பில் நின்று கதுப்பில் கைவைத்து யாரையோ நினைத்து ஏங்கி நின்றது ஒரு வடிவம். இருள் ஒளி கலந்த அச்சமயத்தில் இருவடிவங்களும் சந்தித்தன. ஒரு கணம் பிரமித்து நின்றன. ஒன்றை ஒன்று பருகிவிடுவதுபோன்ற பார்வை! வியப்பால் உண்டாகிய ஓர் விதிர்ப்பு!

"குண்டலகேசி! குண்டலகேசி!!" என்றது வாயிலில் நின்ற வடிவம். "சயந்தி!" என்று கூறியவாறே அவளை அணைத்துக் கொண்டது வந்த வடிவம்.

பல வருஷங்களுக்குப் பின்னர் ஏற்பட்ட சந்திப்பு! எதிர்பாராத சந்திப்பு! குண்டலகேசி மீண்டும் வருவாள் வருவாள் என்று ஏங்கி ஏங்கி இளைத்த சயந்தியின் மேனி, அவளைக் கண்டவுடன் பெருமழையால் தளிர்த்த பூங்கொடிபோல் பூரிப்புற்றது. 'சயந்தியை இனிச் சந்திப்போமா? அவள் உயிருடன் இருப்பாளா?' என்று ஏங்கிச் சாம்பிய குண்டலகேசி அவள் காட்சியால் ஏமாப்புற்றாள். வழிநடந்த வருத்தமெல்லாம் அக்கணமே மாய்ந்தது. விழிகளில் நீர் சோர அன்பால் ஒன்றுபட்ட இருவரும் விம்மிதமுற்றனர். வாய் திறந்து ஒன்றும் பேசாவிடினும் அவர்கள் உள்ளங்கள் குமுறிக் கொந்தளித்தன. அவர்கள் அன்பின் திறத்தை எவ்வாறு விவரிப்பது!

"குண்டலகேசி, குண்டலகேசி" என்ற வார்த்தைகள்தாம் சயந்தியின் வாயிலிருந்து எழுந்தன. அதற்குமேல் பேச அவளால் இயலவில்லை. அவள் தடுமாற்றத்தைப் போக்கக் கருதிய குண்டலகேசி அமைதியுடன் அவளை அமர்ந்து நோக்கினாள். அதற்குப்பின்பே சயந்திக்கும் உள்ளத்தில் அமைதி உண்டாயிற்று. இருவரும் மாளிகைக்குள் நுழைந்தனர்.

இருவரும் ஒருவரை ஒருவர் கண்டு வியப்பும் இரக்கமும் கொண்டனர். பல வருஷங்களாகப் பிரிந்திருந்த அவ்விருவர் வாழ்விலும் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. உருவம் முற்றும் மாறுபட்டிருந்தது இருவருக்கும். வயதின் முதிர்ச்சி மட்டும் இதற்குக் காரணம் அன்று. அவர்கள் உள்ளங்களே தூய்மையால் முதிர்ச்சி பெற்று விளங்கின. தூய வெள்ளாடை உடுத்துத் தவக்கோலமே கோலமாகக் கொண்டு விளங்கினர் இருவரும். இளமையின் மதனை அடக்கி ஆளும் திறம் அவர்கள் இருவரிடமும் திகழ்ந்தது. பின்னே வரப்போகும் முதுமையை முன்னேயே மேற்கொண்டு அம்முதுமையை வளர்த்து, அதற்கு வளம் கொடுத்திருந்தனர் இருவ

ரும். அதனுல் அவ்விருவர் வடிவங்களும் முற்றும் மாறியிருந்தன. பனியால் கருகிய தாமரைபோல் வாடியிருக்கும் சயந்தியைக் கண்ட குண்டலகேசி வியந்தாள். கடுங் காற்று, பெரு மழை, கடும் வெயில் இவற்ருல் அலைப்புண்ட ஒரு பூங்கொடிபோல நிற்கும் குண்டலகேசியின் நலிந்த உடலத்தைக் கண்டு சயந்தி கழிவிரக்கம் கொண்டாள்.

அலை அடங்கிய கடலென அகத்தில் அமைதி நிலைபெற்றபின் இருவரும் அளவளாவினர். பல வகையிலும் இளமையை வருத்தி மாய்த்து முதுமையைப் போற்றும் தம் வாழ்வைப் போற்றிக் கொண்டனர் இருவரும். முன்பிருந்த இளமையின் பெருமிதம் போய் இப்போது முதுமையின் பெருமையை அகம் குளிரப் புகழ்ந்தனர் இவர். எனினும் இயற்கைத் தெய்வம், அவ்விருவர்க்கும் அளித்த எழில் நலத்தை முற்றும் மாற்றுவது இயலுமா? இளமையின் வளம் அவர்கள் மேனியில் தேங்கிக் கிடந்த போதிலும் அவர்கள் உள்ளத்தே முதுமை சான்ற அறிவு பற்றற்று மேலோங்கி நின்றது.

குண்டலகேசியின் யாத்திரையைப்பற்றிக் கேட்கவேண்டுமென்று சயந்திக்கு ஆவல் மூண்டது. சயந்தியின் வாழ்க்கை அமைதியாகக் கழிந்ததா என்று கேட்கக் குண்டலகேசிக்கும் பேராவல். இருவரும் தத்தம் கருத்தை வெளியிட்டு அளவளாவினர். யாத்திரையில் நிகழ்ந்த சம்பவங்கள் ஒவ்வொன்றையும் சயந்திக்குக் குண்டலகேசி கூறினுள். கடைசியாக நீலகேசி என்பவளுடன் வாதிட்டுத் தோற்றதையும் உரைத்தாள். அவள் செய்கைகள் யாவும் சயந்திக்கு வியப்பை உண்டாக்கின.

"எனக்கு இந்த மாளிகை மிக்க அமைதியைத் தருகிறது. துக்கத்தால் நொந்த என் உயிரை அமைதிகொள்ளச் செய்கிறது! அதுவும் இதோ இருக்

கும் அவர் வடிவம் எனக்கு எப்போதும் காட்சியளித்து இன்பம் ஊட்டுகிறது. என் வாழ்க்கையே இங்கே வந்தபின் புதிய மாறுதலைப் பெற்றது. நரகத்திலிருந்து சுவர்க்கம் புகுந்ததுபோல் வாழ்கிறேன். ஆனால் இனி இவ்விடம் எனக்குத் தகுந்ததல்ல. சுகதனும் நல்லறிவு பெற்று வளர்ந்து விட்டான். தகுந்த ஆசிரியரால் அவன் கல்வியறிவிலும் வளர்ச்சியுற்று வருகிறான்" என்று கூறிக் கொண்டேயிருந்தாள் சயந்தி.

"அம்மா!" என்ற குரலுடன் பதினான்கு வயதுப் பாலகன் சுகதன் அப்போது அங்கே காட்சியளித்தான்; குண்டலகேசியைக் கண்டு துணுக்குறறான். குண்டலகேசி அவனைத் தழுவி அருகில் இருத்தி உச்சி மோந்தாள். "இவள் உன் அன்னையப்பா!" என்று சயந்தி அவனுக்கு விரிவாக அறிவு புகட்டினாள். குண்டலகேசி தனக்குத் தாய்முறையுடையவள் என்பதை முன்னரே சயந்தியால் உணர்ந்திருந்தான் சுகதன். அதனால் உண்மையை ஒருவாறு உணர்ந்து மருண்டு நின்றான் இளங்காளை. பிறகு நாணத்துடன் அவளை வணங்கினான். குண்டலகேசிக்கு அப்போது அன்பு எல்லை மீறியது. அவனை அருகில் அழைத்து அமர்ந்து நோக்கி, "சுகதா, அதோ தெரிகிறதே உன் தந்தை படம்! அவரைப் போன்று இருப்பாயா? உன் பெயருக்கு ஏற்பப் புகழ் பெறுவாயா?" என்று கேட்டாள். குண்டலகேசியின் கேள்வி அவனைத் திகைக்கச் செய்தது. பொலிவு மிகுந்த அவன் மதி வதனத்தில் புன்னகை மிளிர்ந்தது. முத்தன்ன பற்கள் ஒளிவீசின. கவர்ச்சி நிறைந்த தன் பார்வையைச் சயந்திமீது செலுத்தினான். அவள் குறுமுறுவலுடனும் கண்ணீர்த் துளியுடனும், "ஏன், சொல், அன்னையின் கேள்வி புரிந்ததா?" என்றாள். ஸத்துகனைப்பற்றியும் குண்டலகேசியைப்பற்றியும் சயந்தி அவனுக்குப் பன்முறை விரிவாக ஒரு கதைபோல்

கூறியிருக்கிறாள் ஆகையால் சுகதன் யோசனை சிறிதும் செய்யாமல் விடையளிக்க முற்பட்டான். அவன் என்ன விடை தருவானோ என்று வியந்து நோக்கினாள் குண்டலகேசி.

"அம்மா, என் பெயருக்குத் தகுந்த புகழைப் பெறுவேன் நான்" என்றான்.

அந்த விடையைக் குண்டலகேசி கேட்டவுடன் பெருவியப்புற்றாள். அவன் அவ்வாறு கூறியதிலிருந்து அவன் ஸத்துகளைப்பற்றி நன்கு அறிந்துகொண்டிருக்கிறான் என்பதை உணர்ந்தாள். உடனே அவனை இறுகத் தழுவிப் புகழ்ந்தாள்.

"சயந்தி! உன் பாக்கியமே பாக்கியம்" என்றாள் பெருமிதத்தோடு.

வாய்பேசாது அன்பு கனிய நோக்கியிருந்தாள் சயந்தி. 'எப்படி இருந்து எப்படி யானோம்!' என்று சயந்தி உள்ளூற நினைத்தாள். 'எப்படியிருந்த நான் எப்படியானேன்?' என்று ஏங்கினாள் குண்டலகேசி. அதை வாய் திறந்து எவ்வாறு கூற முடியும்? இவ்வாறு யோசித்திருந்த குண்டலகேசியின் உள்ளத்தே சிந்தனைகள் பலவாறு மின்னி எழுந்தன.

சயந்தி பல நினைவுகளால் மயங்கியிருந்தாள். இரவு நெடுநேரம் ஆயிற்று. அதன் பிறகு நாகவல்லி கொணர்ந்த பழங்களைச் சிறிதே அருந்திவிட்டு யாவரும் கண்ணுறங்கினர். பேச்சவிந்து இருந்தனரேயன்றிக் குண்டலகேசியும் சயந்தியும் சிறிதும் உறங்கவில்லை. 'என் நிலைக்கு நானே காரணம்; வருந்தி என் செய்வது?' என்று ஆறுதல் சொல்லிக்கொண்டாள் குண்டலகேசி. அது உண்மைதானே!

இருள்கெடுத்து ஒளி பரவியது. குண்டலகேசி இந்திரவிஹார சங்கத்திற்குப் போகப் புறப்பட்டாள். பலாறு தடுத்துக் கூறியும் கேளாமல் சயந்தி

யும் கூடவே புறப்பட்டாள். தான் துறவு மேற்கொள் ளாவிடில் உயிர் விடுவது திண்ணம் என்று அவள் உறுதி கூறினாள். குண்டலகேசி மிகவும் மனம் கலங் கினாள். 'சுகதன் வளர்ச்சிக்கு இன்றியமையாதவளா யிற்றே நீ. உன்னைப் பிரிந்து அவன் எவ்வாறு உயிர் வாழ்வான்?" என்று கேட்டாள் குண்டலகேசி.

"சுகதன் தன்னைத்தானே காத்துக்கொள்வான். நான் செய்யும் உதவியை நாகவல்லி செய்வாள். என் துறவுக்குச் சுகதனே உடன்பட்டிருக்கிறான்!" என் றாள் சயந்தி.

குண்டலகேசி சிறிது யோசித்தாள். சுகதனை அழைத்துக் கண்ணீர் ததும்ப நோக்கி, "குமாரா! சயந்தி துறவு கொண்டால் அவள் பிரிவை நீ பொறுத்துக்கொள்வாயா? அதற்கு உடன்படுகிறாயா? வருத்தம் சிறிதும் உனக்கு இல்லையா?" என்றாள்.

"இல்லை; தாயின் விருப்பத்தைத் தடை செய் வது எப்படி? ஆதலால் அதற்கு உடன்படுகிறேன். வருந்தவில்லை நான்" என்று கூறியபோது அவன் குரல் தழுதழுத்தது. கண்கள் நீர் கான்றன. சட் டென்று சயந்தியை அணுகி அவள் பாதத்தில் முகத் தைப் பதித்துக்கொண்டான். இடையறாது நீர் காலும் கண்களுடன் சயந்தி அவனை எடுத்துத் தழுவி, "உன்னைக் காக்கத் தேவன் இருக்கிறான். நான் எப்படியோ அப்படியே இருப்பாள் நாகவல்லி. காரியப் பெயர்களும் உள்ளனர். நீ கவலையின்றி வாழ்ந்து வா! சுகதா உவகையோடு விடை தா!" என்றாள் சயந்தி.

"அம்மா, போய் வாருங்கள்! நான் இருக்கிறேன்" என்று விடைதந்தான் அவன்.

"நீ பார்க்க விரும்பியபோதெல்லாம் இந்திர விஹாரம் வந்து போகலாம். சுகதா சுகமே வாழ்வா யாக நீ" என்றவளாகச் சயந்தி குண்டலகேசியுடன்

புறப்பட்டாள். அன்பு கனிய ஆர்வத்துடன் ஒரு முறை நோக்கிவிட்டுச் சட்டென்று நகர்ந்தாள் சயந்தி. அப்போது சேடி நாகவல்லியின் கண்களிலிருந்தும் இரு நீர்த்துளிகள் சிதறின. சுகதன் தன்னினைவற்றுக் கட்டிலில் சாய்ந்தான்.

குண்டலகேசியும் சயந்தியும் வெள்ளாடை தரித்துத் தவக்கோலம் தாங்கி இந்திரவிஹாரத்தை நோக்கிச் சென்றனர். விழிகள் பூத்துப் போகும்படியாக வீதியில் உள்ளவர்கள் அவ்விருவரையும் நோக்கி வியப்பும் இரக்கமும் கொண்டனர். தமக்குள் பலவாறு பேசிக்கொண்டனர். அவர்கள் பேசிக்கொள்வது இவ்விருவர் செவிகளிலும் சிறிதே விழாமற் போகவில்லை. 'காதலனைக் கொன்ற கடும்பாவிக்குத் துறவு என்ன?' கணிகையாகப் பிறந்த கள்விக்குக் கற்பும் துறவும் உண்டோ? எத்தனை விபரீதம்!' இவ்வித வார்த்தைகள் இரும்பைக் காய்ச்சி ஊற்றுவன போல் இருந்தன அவ்விருவர் காதிலும். அந்தச் சுடு சொற்களைப் பொறுக்கமுடியாமல் விரைந்து சென்றனர் இருவரும்.

குண்டலகேசியின் வருகையைக் கண்டதும் பௌத்தபிக்ஷுக்கள் வரவேற்றனர். குண்டலகேசி சயந்தியுடன் இந்திரவிஹாரத்துக்குள் புகுந்து, பிக்ஷுக்களின் கூட்டத்தே விளங்கும் புத்தசத்துவரை வணங்கினாள். சத்துவர் இருவரையும் இருக்கச் செய்து குண்டலகேசியின் யாத்திரையைப் பற்றிக் கேட்டார்.

குண்டலகேசி முதலிலிருந்து யாவற்றையும் உரைககலானாள். புத்தசத்துவர் புன்முறுவலுடன், "குண்டலகேசி, உன் யாத்திரைச் செய்திகள் பலவற்றை, இங்கே வந்தவர்களிடம் கேட்டிருக்கிறேன். ஆனால் காம்பிலி தேசத்தில் நீ தங்கிய பின் நடந்தது

ஒன்றும் எனக்குத் தெரியாது; அதைக் கூறவேண்டும்'' என்றார்.

குண்டலகேசி, அங்கே தான் மேற்கொண்ட நோன்பையும் நீண்ட நாட்கள் பலருடன் வாது செய்து வெற்றி பெற்றதையும் நீலகேசியின் வாதத்தையும் அவளிடம் தான் தோற்றுப் போனதையும் உரைத்தாள்.

அதைக் கேட்டதும் புத்தசத்துவர் திடுக்கிட்டு, "என்ன, நீலகேசி வெற்றிபெற்றாளா?'' என்று கேட்டார். "ஆம், வெற்றி அவளுக்குத்தான்; நான் உடனே நாடுகடத்தப்பட்டேன். அதுதான் நேர்மை!'' என்றாள் குண்டலகேசி. "ஆனால் அவள் வெற்றி, நமக்கு அவமானம் அல்லவா?'' என்றார் புத்தசத்துவர்.

"இல்லை, சிறிதும் அவமானம் இல்லை. வெற்றியும் தோல்வியும் யாவருக்கும் இயற்கைதானே; வெற்றியினாலோ தோல்வியினாலோ ஒரு முடிவு எப்போதும் ஏற்படாது. ஒளியும் இருளும் நாள்தோறும் மாறி மாறி அடைகின்றனவே! அவற்றுக்கு எல்லையுண்டோ? அதேபோலத்தான் நம் வாழ்விலும் வெற்றி தோல்விகள் இயற்கையாகின்றன. நீலகேசியின் வெற்றியால் நம் மதத்திற்கு ஒரு குறையும் இல்லை. நான் இப்போது வெற்றி தோல்விகளுக்கும் அப்பாற்பட்ட நிலையில் சென்றுகொண்டிருக்கிறேன். ஆதலால் எனக்குத் தோல்வியால் வருத்தமே இல்லை. சமயவாதம் செய்வது வீண் என்றே முடிவு செய்துவிட்டேன். ஒவ்வொருவரும் புத்தனின் நல்வழியைப் பின்பற்றி மோக்ஷித்தலையே பிரதானமாகக்கொண்டு தவம் செய்வதே நேர்மையாகும். வாதத்தால் அகங்காரமும் கோபமும் தற்பெருமையுமே வளர்கின்றன. இதோ சயந்தி, என் உயிர்த்தோழி, சங்கத்தில் பிக்ஷுணியாகச் சேர்ந்து துறவு மேற்கொள்கிறாள். நான் என் லக்ஷ்யம் நிறைவேறுவதற்காகக் கடற்கரையிலுள்ள புத்ததேவ

கோயிலை அடைந்து தவம் மேற்கொள்கிறே
என்று கூறி வணங்கிவிட்டுப் புறப்பட்டாள்.
போதே சயந்தி சங்கத்தில் சேர்த்துக்கொ
பெற்ருள். குண்டலகேசியை யாவரும் போற்ற

மூன்று மாதங்கள் கடந்தன. "கடற்கரைச்
யில் உள்ள புத்ததேவன் பிரதிமைக்குமுன்னர்
சிலாதலத்தில் அமர்ந்து குண்டலகேசி கடுந்
செய்கிருள்; ஊண் உறக்கமில்லை. இவ்விதத் தவ
யாரும் மேற்கொண்டதே இல்லை. சுற்றிலும் பு
கள் வளர்ந்துவிட்டன" என்று யாவரும்
கொண்டனர். நகர மக்கள் யாவரும் குண்டல
யின் தவத்தை நாள்தோறும் கண்டு வியந்தனர்.
டலகேசியின் ஆன்மா புத்ததேவனுடைய அரு
பிறவாத பேரின்பத்தை எய்தியது.

புத்தஸ்மரணையுடன் நிருவாண நிலைபெ
மோக்ஷித்த குண்டலகேசியின் புற்றுடலத்தைக்
பதற்கு இந்திரவிஹாரத்துப் பிக்ஷுக்களும் பிக்ஷ
களும் வந்தனர்; சயந்தியும் வந்தாள். புற்று
யிருப்பதைக் கண்டு கண்ணீர் துளித்தாள். மும்
வலம் வந்து வணங்கினுள்.

பௌத்த சமய தீபமாக விளங்கிய குண்
கேசிக்கு அவ்விடத்திலேயே ஒரு பூர்ணிமை நாள
கோயில் எடுப்பித்தார்கள், இந்திரவிஹார ச
தினர். குண்டலகேசியின் குற்றங்களை மறந்து அ
அகங்குளிரப் போற்றிப் புகழ்ந்தனர் நகரமக்

அன்றுமுதல் அந்நகரத்திற்கு வருபவர்கள்
டலகேசியின் கோயிலைக் கண்டு வழிபட்டுச்
லத் தவறுவதில்லை. தெய்வமாகவே அவளைக் கொ
டாடினர்.




முற்றும்